# கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள்

நான்காம் பாகம்

## விவேக சூடாமணி
## அஞ்ஞவதைப் பரணி
## ஈசுவர கீதை



கோவிலூர் ஆதீனம்

கோவிலூர்

# கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள்

## நான்காம் பாகம்

**விவேக சூடாமணி**

**அஞ்ஞவதைப் பரணி**

**ஈசுவர கீதை**

வெளியீடு

**சீர்வளர்சீர் நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள்**

*கோவிலூர் ஆதீனம்*

**கோவிலூர் மடாலயம்**

**கோவிலூர் – 630 307**

**2009**

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலஉ லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவோம்.

வானவ ரசமாந் தொடர்பினால் உலகோர் வழுத்துறும் வன்னி ஐங்கரனை
வாநவ ரதந மணியறு முகனை மாசறு கொற்றவாள் இறையை
வானவர் முதுவன் பாலன வலவன் வணங்குநற் றிருநெலை மாதை
வானவ ரதனா முத்திரா மேச வள்ளலை வணங்கி வாழ்த் திடுவாம்.

தந்தைதாய் ஆவானும் சார்கதிஇங் காவானும்
அந்தமிலா இன்பநமக் காவானும் – எந்தம்உயிர்
தான்ஆகு வானும் சரணாகு வானும் அருட்
கோனாகு வானுங் குரு.

உ

சிவமயம்

## ஆசியுரை

## கோவிலூர் ஆதீனம்
## ஸ்ரீ ல ஸ்ரீ நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள்

பாரத நாட்டின் தலையாய பெருமை நமது ஆன்மீக உயர்வு பற்றியதாக உள்ளது. ஆன்மீகத்தில் தலையாயது வேதாந்தம். நாமனைவரும் 'இன்பம் எங்கே உள்ளது' எனத் தேடுகிறோம். 'அது உனக்குள்ளேயேதான் இருக்கிறது' என்பது வேதாந்தம். இன்பமும் மன அமைதியும் பெற்று, அவற்றை நிரந்தரமாக்கிக் கொள்வதில் தொடங்கி, உண்மையான தேடுதல் யாது என அறிவுறுத்தி, 'உயிருடன் உள்ளபோதே முத்தி' என்பதற்கான வழிகாட்டலை அருளுவது வேதாந்தம் மட்டுமே. இவற்றையெல்லாம் வாழ்வில் நடைமுறைப்படுத்த உதவுவன வேதாந்த சாத்திர நூல்கள்.

ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக வேதாந்த நூல்கள் சமஸ்கிருத மொழியில் கற்றுக் கொடுக்கப்பட்டன. வேதாந்த விருப்ப முடையவர்களில், தமிழ் மட்டுமே அறிந்தோர், சமஸ்கிருதம் பயிலுவதில் உச்சரிப்பு இடர்ப்பாடுகள் உண்டு. சாமான்ய மக்களும் புரிந்து கொள்ள வேண்டும் என்ற உயரிய நோக்கோடு, இக் கருத்துக்களை எளிமையாக்கிக் கொடுத்த பல பெரியோர்களும் உண்டு. சுமார் 700 ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த தவத்திரு தத்துவராய சுவாமிகள் இத்தகையவர். தமிழ்மற்றும் சமஸ்கிருத மொழிகளில் வல்லவரான சுவாமிகள், அவரது குருவை மகிழச்செய்ய, சங்கரரின் அத்வைத வேதாந்தக் கருத்துக்களையெல்லாம் திரட்டி, அவற்றை தமிழ்ச்செய்யுட்களாக உருவாக்கினார். இவ்வாறு பல ஞான நூல்கள் சுவாமிகளால் இயற்றப்பட்டன. இந்நூல்களைக் கற்றவர்கள், பின்னர், தமிழ் வழி வேதாந்த மரபு ஒன்றை உருவாக்கினர்.

சுமார் 180 ஆண்டுகளுக்கு முன், நகரத்தாரான முத்திராமலிங்கர், தமிழ் வழியில் வேதாந்தம் முழுமையும் பயின்று, அதனை மற்றோருக்கு கற்றுக்கொடுக்க விரும்பி இத் திருமடத்தினை உருவாக்கினார். வேதாந்தக் கருத்துக்களனைத்தையும் உள்ளடக்கிய தமிழ் நூல்களைத் தேர்வு செய்து கோவிலூரில் கற்பித்து வந்தார். "கற்க வேண்டியவை அனைத்தையும் தாய் மொழியிலேயே கற்கவேண்டும்' எனவும், 'கற்க விரும்புபவனுக்கு, ஏழ்மை, சாதி வேறுபாடுகள் தடையாகாது' என்பதையும் வற்புறுத்தும்

ஒக்காலத்தவருக்கு முன்னோடியாகத் திகழ்ந்து, இதற்காகவே தம் வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணித்தவர் முத்திராமலிங்க ஞானதேசிக சுவாமிகள் ஆவார்.

இத்திருமடத்தில் கடந்த 180 ஆண்டுகளாகக் கற்பிக்கப்பட்டுவருவது 16 வேதாந்த நூல்கள் ஆகும். இந் நூல்களெல்லாம் மொழிபெயர்ப்பாக அமையாது, தமிழ்ச் செய்யுட்களாக இயற்றப்பட்டதால், இவை மூலத்திற்கு இணையெனப் போற்றப் படுகின்றன. ஆனால் அக்கால வழக்கிற்கேற்ப மணிப்பிரவாள நடையில் அமைந்துள்ளன. உண்மைப் பொருளான பிரம்மத்தைப் பற்றி நூல்கள் மூலமாகப் படித்தறிந்து கொள்வதற்கும் மேலாக, பிரம்மத்தையே உணர்வதற்குப் பயன்படுமாறு இந்நூல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

இங்கு கற்பிக்கப்படும் தமிழ்வழி வேதாந்தப் பாடத்திட்டம் கல்லூரிப் படிப்பிற்கு இணையானது. 'கோவிலூர் மரபு' எனப் பெயர்பெற்றது. வேதாந்தம் மிகுதியாகக் கற்பிக்கப்படும் வடமாநிலங்களிலேயே, இப்பாடத்திட்டம் மற்றும் மரபுதனை அங்குள்ள முறைக்கு ஒப்பாகக் கருதப்பட்டு, 'கோவிலூர் மண்டலி' எனப் பெருமைப் படுத்தப்பட்டுள்ளது.

தற்கால மாணவர்களுக்கு எளிதில் புரியும்படி அமைய வேண்டும் எனும் பேரவாவினால், இந் நூல்களின் மூலம் பதம் பிரித்தும் மற்றும் பதவுரைகளின் மணிப்பிரவாள நடையை மாற்றி தமிழில் எளிய உரையாகச் செய்தும் மறுபதிப்புச் செய்யப்பட்டுள்ளன.

இந்நூல்கள் வெளிவர பெரிதும் உதவியாக இருந்த கவிஞர் மீனவன், திருமதி ஆனந்தி இராமச்சந்திரன், ஸ்வாமி சாக்ஷாத் க்ருதானந்த சரஸ்வதி மற்றும் சாது குருநாதன் அவர்களுக்கும் நம்முடைய பாராட்டுடன் ஆசிகள்.

இந்நூல்களைத் துறவியர் மட்டுமின்றி, குடும்பத்தவரும் கற்கலாம். இலவச உணவு, உடை, இருப்பிடத்துடன், உலகியல் கவலைகளற்ற சூழலில் இந் நூல்களைக்கற்றுப் பயனடைய விரும்புவோர் வரவேற்கப்படுகிறார்கள்.

மேலும் இந்நூல்கள் நாம் மடாதிபதியாகி 10ஆம் ஆண்டு விழா கொண்டாடப்படும் சமயத்தில் வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சி அடைகிறோம். இதை நமது திருமடத்தை நிறுவிய ஸ்ரீ ல ஸ்ரீ முத்திராமலிங்க ஞான தேசிக சுவாமிகளின் திருப்பாதக் கமலங்களில் சமர்ப்பித்து அவரது பேரருளை நம் அனைவருக்கும் அருளப் பிரார்த்திக்கிறோம்.

ஓம் தத் சத்

ஸ்ரீ சற்குருநாதன் துணை

உ

சிவமயம்

## அணிந்துரை

அயன் படைப்பாம் இவ்வுலகில் ஏழு வகைப் பிறப்புச் சீவர்கள் உள்ளனர். இவர்களுள் மனித சரீரம் படைத்த சீவர்களே மேலோர் ஆவார்கள்.

மனித சரீரத்தில் தான் இகலோக பரலோக அறிவு உள்ளது. இந்த அறிவினால், இறைவனால் செய்யப்பட்ட சுருதி(வேத)ப் பிராமாணம் உண்டாகிறது. இப்படிப் பல பிறவிகள் அடைந்தும், சுவர்க்காதிப் பதவிகளும் இவ்வுலகில் போக பாக்கியம் பெற்றும் மனித சீவனுக்குத் திருப்தி உண்டாகவில்லை. அவன் இலட்சியமான மாறாத பெரிய, துக்க கலப்பில்லாத பேரின்பம் கிடைக்கவில்லையே என்று ஏமாற்றம் கொள்கிறான். சுருதியை ஆராய்கிறான். அதில் கர்மம், பக்தி, ஞானம் என்னும் மூன்று பிரிவுகளில் தத்துவ ஞானமே சர்வதுர்க்க நிவர்த்திப் பரமானந்தப் பிராப்தி ரூப முத்தியைக் கொடுக்குமே அல்லாது, வேறு எதுவும் கொடுக்காது என்று தெரிந்து கொள்கிறான். அப்படித் தெரிந்து விவேகம் உடையவர்கள் சற்குருவைத் தேடிச் செல்கின்றனர். இவர்களைத்தான் ஜிஞ்ஞாசு (ஞான விருப்பம் உடையவன்) முமூட்சு (மோட்ச இச்சையுடையவன்) என்று சாத்திரங்களில் சொல்லப்பட்டுள்ளது. இத்தகைய முமூட்சுகளைத்தான் காரைக்குடி கோவிலூர் வேதாந்த மடம் வருக! வருக! என வரவேற்கிறது.

காரைக்குடி கோவிலூர் வேதாந்த மடம் சுமார் 180 ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ ல ஸ்ரீ முத்திராமலிங்க ஞானதேசிக சுவாமிகளால் திருநெல்லை அம்மையின் பேரருள் கொண்டு ஆரம்பிக்கப்பட்டது. இம்மடத்தில் தமிழ் வழி வேதாந்த பாடங்கள் நடத்தப்படுகின்றன. அந்தச் சாத்திரங்களின் வரிசை வருமாறு:—

1. நாநா சீவ வாதக் கட்டளை
2. கீதாசாரத் தாலாட்டு
3. சசிவன்ன போதம்
4. மகாராஜா துறவு
5. வைராக்கிய சதகம்
6. வைராக்கிய தீபம்
7. இலட்சணா விருத்தி
8. வேதாந்த சூடாமணி
9. கைவல்லிய நவநீதம்
10. விவேக சூடாமணி
11. அஞ்ஞவதைப் பரணி
12. பஞ்ச தசி
13. ஈசுவர கீதை
14. பிரம்ம கீதை
15. பகவத் கீதை
16. ஞான வாசிட்டம்

மேற்படி நூல்களுக்கு ஆதாரமாக முதலில் படிக்கவேண்டிய நூல்கள், குட்டித்திருவாசகம், சீடாச் சாரம், கோவிலூர் குசுமாஞ்சலி, பட்டினத்தார் பாடல்கள் ஆகும். இக்கிரம நூல்களைக் குருமுகமாகக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்ற முறையில் முமூட்சுகளின் வாழ்க்கை அமையும்.

இந்நூல்களைக் கற்க வரும் முமூட்சுகளுக்கு விவேகம், வைராக்கியம், சமாதி சட்க சம்பத்தி, முமூட்சுத்துவம் ஆகிய நான்கு சாதனங்கள் வேண்டும். இவைகளே தகுதியாகும். ஆனால் மேற்படி சாதனங்களை முழுதும் பெற்றிருக்கவில்லை என்றாலும் எட்டில் ஒரு பாகம், அதாவது 1/8 பாகமாவது, பெற்றிருந்தால் கூட அவரை பரிசீலனை செய்து சேர்த்துக்கொண்டு முழுமை பெறச் செய்வர். மற்றபடி கல்வி, வயது, திருமணம் ஆனவரா அல்லது ஆகாதவரா என்ற தகுதிகளைக் கொள்வதில்லை. இன்னும் இந்து மதத்தின் உட்பிரிவுகளான சைவம் முதலிய சமய, ஜாதி, இனம் இவைகளையும் தகுதிகளாகக் கொள்வதில்லை. மேற்படி சாதனங்கள் பெற்றவர்கள், இல்லறத்திலும் உள்ளனர். அவர்களும் இங்கு பாடங்களைக் கேட்டு ஞானம் பெற்றிருக்கின்றனர். இனியும் பெறலாம்.

நமது சந்நிதானம் அவர்கள் மேற்படி நமது கோவிலூர் சம்பிரதாய நூல்களை அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள். அதாவது, இப்போது முதல் ஆறு நூல்கள் மட்டும் இரண்டு பாகங்களாக வெளிவருகின்றன. பிறகு மற்ற நூல்களும் வெளிவரத் தீவிரமான ஏற்பாடுகளைச் செய்துள்ளார்கள்.

இந்த நூல்களில் நாநாசீவவாதக் கட்டளைக்கு விளக்கமான முன்னுரை எழுதப்பட்டுள்ளது. அப்படியே மற்ற ஐந்து நூல்களுக்கும் அமைக்கப்பட்டுள்ளது. இதில் முதல் நூல் நமது அத்வைதக் கொள்கைக்கு ஆதாரமானது. அதனை மனனம் செய்வது நல்லது. இல்லையேல் தினசரி பாராயணம் செய்வது போல தொடர்ந்து படித்து வரலாம். அவ்வாறு செய்தால் மேல் சாத்திரங்கள் படிக்கும் போது விளக்கம் பெறப் பெரிதும் உதவும்.

முதல் மூன்று நூல்கள் பிரம்ம ஞானத்தைச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பவைகளாகும். நான்காவது, ஐந்தாவது, ஆறாவது ஆகிய நூல்கள் வைராக்கியத்தை திடப்படுத்தப் பெரிதும் உதவும் அற்புத நூல்கள் ஆகும்.

ஆக இந்த ஆறு நூல்களும் மூலமும் பொழிப்புரையுமாக அமைக்கப்பட்டுள்ளன. இதைப் படிப்பவர்கள் வேதாந்தக் கருத்துக்களை நன்கு அறிய முடியும். இப்படிப் பட்ட நூல்களை வெளிவர உதவுமாறு, அமரர் கல்கியின் மகளான திருமதி ஆனந்தி ராமச்சந்திரன் அம்மையாருக்கு நமது சந்நிதானம் அவர்கள் அருளாணை பிறப்பித்தார்கள். அதற்கு அவ்வம்மையார் தமக்கு உதவியாக யாரை அனுப்புவீர்கள் என வினவ, தமது சீடரும் குமாரபாளையம்—ஆனந்த ஆஸ்ரமத்தில் கோவிலூர் வேதாந்த மடம் சம்பிரதாயப்

பாடங்களைக் கிரமமாக மனனம் செய்து பாடம் கேட்டவருமான திரு. குருநாதன் அவர்களை அனுப்புவோமெனக் கூறி அனுப்பினார்கள். ஆக மேற்படி இருவர் முயற்சியினால் மேற்படி ஆறு நூல்கள் வெளிவந்துள்ளன.

நமது 12–வது பட்டம் மகா சந்நிதானம், திருப்பெருந்திரு நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகளின் பத்தாண்டுகள் அருளாட்சியில் கோவிலூர் வேதாந்த மடம் கர்மம், பக்தி, ஞானம் என்று சொல்லப்படும் நமது வேதாந்தத்தின் மூன்று பிரிவுகளில் சீரும் சிறப்புமாக வளர்ச்சி அடைந்துள்ளது.

*அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்*
*அற்குப ஆங்கே செயல்,*

என்ற திருக்குறளின்படி நிலையில்லாத தமது செல்வத்தை எல்லாம் நிலையான தரும காரியங்களைச் செய்வதற்கே சுவாமிகள் செலவிட்டுக்கொண்டிருக்கிறார்கள். இம்மனப்பரிபாகம் பெரிதும் பாராட்டுக்குரியதாகும். இந்த அணிந்துரையில் நமது சந்நிதானம் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். பாராட்டுவதற்குச் சொற்கள் கிடைக்கவில்லை என்பது மிகையாகாது.

நமது மகா சந்நிதானம் அவர்கள் இன்னும் பல்லாண்டுகள் வாழவும், திடகாத்திரமாக இருக்கவும் எல்லாம் வல்ல மாயா விஷிட்ட காரணப் பிரம்மம் பேரருள் புரிவதாகுக.

திருமதி. ஆனந்தி ராமச்சந்திரன் அம்மையாருக்கும், திரு. குருநாதன் அவர்களுக்கும், குமாரபாளையம் ஆனந்தாஸ்ரம முமுட்சுக்கள் சார்பாகப் பெரிதும் பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

நமது மகா சந்நிதானம் அவர்கள் வாழ்க! வளம் பெறுக!

கோவிலூர் வேதாந்த மடம் வாழ்க! வளம் வளர்க!

மேற்படி மடத்துச் சம்பந்தப்பட்ட அனைவரும் வாழ்க! வளம்பெறுக!

இப்படி ஒரு அணிந்துரை எழுத வாய்ப்புக் கொடுத்த மகா சந்நிதானம் அவர்களுக்கும் திருவருளுக்கும், குருவருளுக்கும் நன்றி! வணக்கம்! வாழ்த்து!

சுபம்

வேணும் ஸ்ரீ சற்குருநாதன் துணை

தவத்திரு. சோம. சச்சிதானந்த சுவாமி,
அத்வைத ஆசிரியர்,
குமாரபாளையம்.

## கோவிலூர் மரபில் பாடத்திட்டமாக உள்ள 16 வேதாந்த நூல்கள்

1. **நாநாசிவ வாதக் கட்டளை**
(சேஷாத்திரி சிவனார் இயற்றியது)

2. **கீதாசாரத் தாலாட்டு**
(திருவேங்கட நாதர் இயற்றியது)

3. **சசிவன்ன போதம்**
(எறும்பூர் தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

4. **மகாராஜத் துறவு**
(விருத்தாசலம் குமார தேவர் இயற்றியது)

5. **வைராக்கிய சதகம்**
(பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)

6. **வைராக்கிய தீபம்**
(பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)

7. **இலட்சணா விருத்தி**
(கருணாநிதி என்னும் சிதம்பர ஞான தேசிகர் இயற்றியது)

8. **வேதாந்த சூடாமணி**
(துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றியது)

9. **கைவல்ய நவநீதம்**
(நன்னிலம் தாண்டவராய சுவாமிகள் இயற்றியது)

10. **விவேக சூடாமணி**
(திருவிடைமருதூர் உலகநாத சுவாமிகள், இயற்றியது)

11. **அஞ்ஞவதைப் பரணி**
(எறும்பூர், தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

12. **பஞ்ச தசி**
(நித்தியானந்த சுவாமிகள் வீர. சுப்பையா சுவாமிகள் இயற்றியது)

13. **ஈசுவர கீதை**
(எறும்பூர், தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

14. **பிரம்ம கீதை**
(எறும்பூர், தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

15. **பகவத் கீதை**
(பட்டனார் இயற்றியது)

16. **ஞான வாசிட்டம்**
(வீரை. ஆளவந்தார் இயற்றியது)

# பொருளடக்கம்

## நான்காம் பாகம்

# முகவுரை

வேதத்தில், 'சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி' ஆகிய மோட்சம் அடைதற்கு முக்கிய சாதனமாக ஞானம் கூறப்பட்டுள்ளது. அந்த ஞானத்திற்குச் சாதனமாகக் கரும உபாசனையாதிகள் கூறப்பட்டுள்ளன. அக் கருமங்களை விதிப்படி ஈசுவர அர்ப்பணமாக, பயனை விரும்பாமல் செய்யின் உள்ளத்திலுள்ள மலம் (பாபம்) நீங்கும். விதிப்படி உபாசனைகளைச் செய்யின், மனம் அசை வற்று ஒரு நிலைப்படும். இதனையே விக்ஷேப நீக்கம் என்பர். இவ் விரண்டின் சித்தியே சித்த சுத்தி யாம்.

இச்சித்த சுத்தி வந்த பின், விவேகம், வைராக்கியம், சமாதி சட்க சம்பத்தி, முமுக்ஷுத்துவம் என்னும் நான்கு சாதகங்களையும் அவதி (முடிவு) வரை பெற்றவனே தீவிர அதிகாரி. அவற்றினை அரை குறையாகப் பெற்றவன் மந்த அதிகாரி. அதிகாரிகள் சற்குருவை அடைந்து சிரவண, மனன, நிதித்தியாசனங்கள் செய்தல் வேண்டும். அங்ஙனம் செய்யின் தத்துவ ஞானம் உண்டாம். மந்த அதிகாரிக்கு வேதத்தின் முக்கிய சித்தாந்தத்தைச் சொல்லின் விளங்காது; அதில் நம்பிக்கையும் உண்டாகாது. ஆகையால், அவர்கட்குக் கீழ்படிகளைக் கூறி, அவற்றின் வாயிலாய் அவர்களை மேல் நிலைக்குக் கொண்டு வர வேண்டும்.

மந்த அதிகாரிகளை நோக்கித் தைத்திரீய உபநிடதத்தில் நாநா சீவ வாதம் சொல்லப்பட்டுள்ளது. அதனை அநுசரித்துச் சேஷாத்திரி சிவனார் என்னும் பெரியார் இந் நூலைச் செய்தார். அவர் வட மொழி, தென் மொழிகளில் வல்லுனர். திட அபரோட்ச ஞானி, தீன தயாளு. சற்குண சம்பன்னர். இவரிருந்த காலம், இடம் முதலியன அறியப்பட வில்லை. தாம் ஐயந்திரிபின்றி அடைந்த அபரோட்ச (பிரத்தியட்ச) அநுபவத்தைக் கருணையின.ால், மந்த அதிகாரிகளும் அடைந்துய்யுமாறு செய்யத் திரு உள்ளம் கொண்டார்.

சாம வேதத்தின் முடிபாயுள்ளது சாந்ததோக்கிய உபநிடதம். அதில் ''தத்துவமசி' என்னும் மஹாவாக்கியம் கூறப்பட்டுள்ளது. அதனால் போதிக்கப்படும் அரிய பொருள் சீவப் பிரம்ம ஐக்கிய மாகிய அத்துவித சொரூபமே. அதனை அத்தியாரோப அபவாதக் கிரமமாகிய யுக்தியால் ஆசிரியர் இந் நூலில் கூறியுள்ளார். (அத்தியாரோபம் என்பது பொய்யாகத் தோற்றுவித்தல், அபவாதம் என்பது பொய்யென்று நிச்சயித்து ஒடுக்கல்)

இதில் தானாக தோற்றும் தேகம், இந்திரியம் முதலிய அநாத்ம வஸ்துக்கள் இத்தனை வகையானவை, இன்ன இயல்புடையன, இன்னவாறு ஆரோபமாய்த் தோன்றின, பின்னர்த் தம்தம் காரணங்களில் இன்னவிதம் ஒடுங்குகின்றன என்பது நன்கு விளக்கப்பட்டுள்ளன.

மேலும், காரிய மெல்லாம் ஒடுங்கிவிட, இறுதியில் ஒடுங்காமல் எஞ்சியிருக்கும் ஆத்ம தத்துவம் இன்ன இயல்புடையது என்றும், அதுவே சீவனது யதார்த்த வடிவம் என்றும், அதுவே பிரம்ம சொரூபம் என்றும் காட்டுகிறது.

இவ்விதம் அதிகாரிக்குத் தத்துவ ஞானத்தை ஐயம் திரிபின்றி உண்டு பண்ணி முத்தி நிலையை அளிப்பது இந்நூலாகும். ஆகவே, 'சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி' வடிவ மோட்சத்தினை அடைய விரும்பும் ஒவ்வொருவர் கையிலும் இந்நூல் அத்தியாவசியம் இருக்கத் தக்கது. இந்நூலினை வாங்கித் திரிகரண சுத்தி யோடு சற்குரு வாயிலாகக் கேட்போர் யாவரும் பொய்யினை அகற்றி மெய்ந்நிலையாகிய முத்தி உறுவர் என்பது திண்ணம்.

உ

சிவமயம்

# ஸ்ரீ உலகநாத சுவாமிகள் அருளிய விவேக சூடாமணி

## பாயிரம்

1. **எவ்விநா யகனை முன்னம் யாவரும் பூசை செய்து**
**தவ்வுஅறத் தங்கள் இட்டம் தரணியில் தாம்அு டைந்தார்**
**செவ்விய கருணை கூர்ந்த சிவன்அருள் குமரன் ஆன**
**அவ்விநா யகனை என்றும் அகத்தினுள் அநுசந் திப்பாம்**

எந்த விநாயகனை முன்னம் அனைவரும் உலகில் வழிபாடு செய்து விரும்பியவற்றைத் இடையூறு இன்றிப் பெற்றார்களோ, அருள்மிகுந்த சிவன் அருளிய புதல்வரான விநாயகக் கடவுளை மனத்தில் எப்போதும் தியானம் செய்வோம்.

2. **அம்பிகா சகிதன் ஆகி ஆனந்த நடனம் செய்து**
**நம்பினோர் துன்பம் நீக்கிநற்சுகம் நல்கா நின்ற**
**எம்பிதா ஆன ஈசன் இருபதக் கமலம் தன்னை**
**நம்புவாம் துன்பம் நீங்கி நற்சுகம் அடைவ தற்கே**

சிவகாமி அன்னையோடு கூடி, அனந்த நடனத்தை மேற் கொண்டு நம்பிய அன்பர்களின் துன்பத்தை நீக்கி, நல்ல இன்பத்தை அளிக்கும் எம் தந்தையாகிய நடராஜசப் பெருமானின் தாமரை மலர் போன்ற இரண்டு திருவடிகளையும் இன்னல் நீங்கி மேலான இன்பம் அடையும் பொருட்டு நம்பி வணங்குவோம்.

3. **போற்றிய நடன ராசன் பொருவிலா உருவம் தானே**
**ஏற்றிய குரவன் ஆக இங்ஙனே வந்து உதித்து**
**மாற்றிட ஒணாத எம்மின் மாகஎலாம் மாற்றிற்று அன்றோ**
**தோற்றிய அந்த ஆசான் துணைபடி தொழுதல் செய்வாம்**

யான் போற்றி வணங்கும் நடராசப் பெருமானுடைய ஒப்பற்ற உருவமே இவ்வுலகில் மேலான குருவாக வந்து தோன்றி, எம்முடைய போக்குவதற்கு அரிய மலம், விட்சேபம், ஆவரணம் ஆகிய குற்றங்கள் அனைத்தையும் அழித்தது அல்லவா? இவ்வாறு குருவாகத் தோன்றிய இறைவனின் இரு திருவடிகளையும் வணங்குவோம்.

**4. சகத்தின் உற்பத்தி ஆதி செய்திடும் ஏது வேனும்**
**அகண்டதன் வடிவி னின்றும் அற்பமும் பேதி யாதாய்ப்**
**புகழ்ந்துநன்று உணர்ந்தோ ருக்குப் பூரண ஆன்மா வாகத்**
**திகழ்ந்த ஆனந்த உண்மைத் தெளிவினைத் தியானம் செய்வாம்**

உலகின் தோற்றத்தையும் காத்தலையும், அழித்தலையும் செய்வதற்குக் காரணமாய் இருப்பது ஆயினும் எங்கும் நிறைந்தே தன் பூரணத் தன்மையில் இருந்தும், சிறிதும் மாறுபடாமல், நன்கு ஆராய்ந்து அறிந்துள்ள பெரியோருக்கு பூரண ஆத்மாவாக விளங்கும் சத்து சித்து ஆனந்த வடிவாய் இருக்கும் பிரம்மத்தைத் தியானம் செய்வோம்.

**5. சுத்தவே தாந்தம் எல்லாம் சொல்லிய பொருள்கள் தம்மை**
**மெத்தவும் கருணை யாலே மேன்மைசேர் பாடி யாதி**
**தத்துவ நூல்கள் கொண்ட தடையறத் தெரிய வைத்த**
**உத்தமச் சங்க ராசான் உண்மையை உளத்துள் வைப்பாம்.**

தூய வேதாந்த நூல்கள் யாவும் கூறிய கன்மம், பக்தி, ஞானப் பொருள்களை மிக்க அருளால் சிறப்புப் பொருந்திய பானியம் முதலான புகட்டும் தத்துவஞானத்தை நூல்களினால் ஐயமும் மாறுபாடும் இன்றி விளங்க வைத்த உயர்ந்த சங்கர குருவானவர் ஆராய்ந்து நிலைநிறுத்திய உண்மையாண அத்துவித கருத்துக்களை மனத்தில் கொள்வோம்.

**6. அருள்மிகு சங்கரா சான் அருளினால் அமைத்த தான**
**மருள்அறு விவேக சூடா மணிஎனும் கிரந்த நூலைக்**
**கருதரு நடந ராசன் கருணையாம் திறமை கொண்டே**
**வரதமிழ்க் கவிதை யாக வழுவற அமைக்கல் உற்றேன்**

அருள் மிக்க சங்கர குரு அருளினால் இயற்றி அருளிய, பிறவி மயக்கத்தைப் போக்கும் விவேக சூடாமணி என்னும் பெயர் கொண்ட வடமொழி நூலை, எண்ணுதற்கு

அரிய நடராசப் பெருமானின் கருணை ஆகிய வலிமையைக் கொண்டு சிறந்த தமிழ்க் கவிதைகளாகக் குற்றம் இன்றி இயற்றத் தொடங்கினேன்.

7. **ஈனம்இல் சங்க ராசான் இசைத்தஇங் ஞான நூலை**
**ஊனமாம் என்தன் வாக்கால் உரைத்திடும் நீதி ஓரின்**
**வான்அமர் பானு தானே வையகம் விளக்கி வைப்ப**
**ஊனமின் மினியும் நான்ஈது ஒளிர்ப்பன்என்று உரைத்தல் போலாம்**

குற்றம் இல்லாத சங்கர குரு இயற்றிய இந்த ஞான நூலை என்னுடைய மொழிகளால் விளக்கும் முறையை ஆராய்ந்தால் வானத்தில் உள்ள சூரியன் பூமியை விளக்கமுறச் செய்து கொண்டிருக்க குறைவான மின்மினிப் பூச்சியும் நான் இந்தப் பூமியை விளக்கம் பெறச் செய்வேன் என்று கூறுவதைப் போன்றது ஆகும்.

8. **ஆதியில் வேத மும்தான் அச்சம்உற்று அன்பி னோடே**
**நேதி நேதிஎனும் வாக்கால் நிகழ்த்திய நுண்மை யான**
**போதஆ னந்த உண்மைப் பொருளினை யான்உ ரைக்கும்**
**நீதிதான் எவ்வி தத்து நிலைமை யாய்ப்புகு வதற்கே**

அநாதியான வேதமும் தான் பரம்பொருளைச் சொல்லிக் காட்ட இயலாமல் வெட்கம் அடைந்து அன்போடு இஃது அன்று (நேதி நேதி) என்ற தொடரால் கூறிய நுட்பமான சத்தாயும் சித்தாயும் ஆனந்தமாயும் உள்ள பரம்பொருளை நான் சொல்லி விளக்கும் முறை எத்தகைய அற்பத் தன்மை உடையது.

9. **பரவுசா தனசம் பத்தி பாங்குடன் குரவன் சேவை**
**சிரவண மனனம் தியானம் சீர்பெறும் சமாதி ஞானம்**
**இருவித வீடுஉ ரைக்கும் இந்தநூல் கவிஇ லக்கம்**
**அரியநற் பாயிரத் தோடு அறுநூற்றி எழுபத்து ஒன்றாம்**

அனைவரும் புகழும் விவேகம் முதலிய நான்கு சாதனங்களையும், அன்புடன் குருவுக்கும் செய்யும் பணிவிடையையும் கேட்டல், சிந்தித்தல், தியானித்தல் ஆகிய இம்மூன்றையும் சிறப்புற்ற சமாதி நிலையையும், மெய்யறிவையும், சீவன் முத்தி, விதேக முத்தி என்னும் இருவகை முத்திகளையும் விளக்கிக் கூறும் இந்த நூலில் உள்ள செய்யுள்களின் மொத்த எண்ணிக்கை பாயிரச் செய்யுளோடு கூடி அறுநூற்று எழுபத்து ஒன்றாகும்.

# விவேக சூடாமணி நூல்

**1. சகலவே தாந்த நூலில் சார்ந்தசித் தாந்தம் எல்லாம்**
**மிகவுமே கோச ரிக்கும் மெய்ம்மையாய் மற்ற மானம்**
**அகிலமும் சோச ரிக்கா அகண்டஆ னந்தம் ஆகி**
**நிகழுநம் கோவிந் தாசான் நிலைமையைப் போற்றல் செய்வாம்**

அனைத்து வேதாந்த நூல்களிலும் பொருந்தி விளங்கும் முடிவான கருத்துக்கள் யாவும் மிகவும் நன்கு குறிப்பிடும் உண்மைப் பொருள் ஆகி விளங்கி, ஏனைய பார்த்தல், கேட்டல், அனுமானம் முதலிய அனைத்து வகையான அளவைகளாலும் அறிய இயலாததாய் வியாபகமாய் ஆனந்த வடிவாய் விளங்கும் நம்முடைய கோவிந்த பகவத் பாதர் என்னும் குரு பிரம்ம வடிவாய் நிலைத்து நிற்கும் நிலைமையை வணங்குவோம்.

**2. சீவருக்கு இங்கு மாந்தர் சென்மமே அரிதாம் அத்தின்**
**மேவுதற்கு அரிதுஆம் ஆண்மை மேவினும் மறையோன் தன்மை**
**ஆவதற்கு அரிதுஆம் அத்தை அடையினும் வேதம் தானே**
**ஓவல்அற்று ஓது மார்க்கம் ஒன்றுவது அரியது ஆகும்**

இவ்வுலகில் ஏழுவகைப் பிறப்பில் மனிதராகப் பிறப்பதே அரிது. அப்பிறவியிலும் ஆண்மகனாகப் பிறப்பது அரிது. அவ்வாறு ஆண்மகனாகப் பிறந்தாலும் வேதம் ஓதும் அந்தணன் ஆகப் பிறப்பது அரிது. அவ்வாறு அந்தணர் பிறவியை அடையினும் வேதங்களை கற்று ஓதி வாழும் வாழ்க்கை பொருந்துவது அரியதாகும்.

3. **அத்தினும் வித்து வானாய் அமைவதுஇங்கு அரிதுஆம் அத்தின்
வித்தர ஆன்மஅ நான்ம விவேகம்மெத்த அரிதே அத்தின்
சுத்தமா ஞானம் உற்றே சொரூபமாய் நிற்கும் முத்தி
புத்திசேர் அநந்த சன்மப் புண்ணியம் அன்றி எய்தா**

அவ்வாறு நல்வழிகளில் வாழும் வாழ்க்கையிலும் இவ்வுலகில் வேதப் பொருள்களின் சிறப்பை உணர்ந்த வித்துவானாய் ஆதல் அரிது. அவ்வாறு இருப்பினும் எங்கும் நிறைந்த ஆன்மா இது, இவை ஆத்மா அல்ல என்ற பகுத்தறிவைப் பெறுவது மிகவும் அரிது. அவ்வாறு பெற்றாலும் தூய்மையான பிரம்ம ஞானம் பெற்று விளங்குதல் மிக அரிது. பிரம்ம வடிவாய் இருக்கும் வீடுபேற்று நிலை அளவற்ற பிறவிகளில் மக்களால் செய்யப்படும் நல்ல புண்ணியங்கள் இல்லாமல் வந்த அடையாது.

4. **பேசிய அடைவாய் யாவும் பெற்றிட ஓணாதது ஏனும்
ஈசன்நல் அருளி னாலே இசைவதாய் அருமை யான
மாசுஇலா மனுடத் தன்மை மன்னிய முமுட்சுத் தன்மை
தேசிக ராசன் சேவைத் திறமைஇம் மூன்றும் போதும்**

முன் செய்யுள்களில் கூறில் கூறில் தகுதிகள் அனைத்தும் முறையாக ஒருவன் பெறவில்லை என்றாலும் ஈதவசனின் நல்லஅருளினாலே குற்றம் இல்லாத மனிதத் தன்மையும், நிலையான வீடுபேற்றில் விருப்பமும், உயர்ந்த குருவை அடைந்து அவருக்குச் செய்யும் பணிவிடையும் ஆகிய இம்மூன்று சிறப்பான தகுதிகளை ஒருவன் பெற்றால் மெய்யறிவைப் பெறுவதற்குப் போதியவை ஆகும்.

5. **எத்திற ஏது வாலோ எய்தியும் மநுடத் தேகம்
அத்திலும் ஆர ணார்த்தம் அறிவ தற்குஏது வாக
ஒத்தஆண் மையை அடைந்தும் உண்மையாம் முக்தி சேர
எத்தனம் செய்யா மூடன் என்றும்ஆன் மாவைக் கொன்றோன்**

எவ்வகை நல்வினையால் ஆவது மானிடப் பிறவியை அடைந்தும், அதில் வேதங்களின் பொருளை அறிவதற்குத் துணையாக பொருத்தமான ஆண் பிறவியைப் பெற்றும், என்றும் அழிவு இல்லாத முத்தியைப் பெற முயற்சி செய்யாத அறிவிலி எப்போதும் ஆன்மாவாகி தன்னக் கொன்றவனே ஆவான்.

**6. பின்னம்இல் ஆன்ம ரூபம் பிரிவுஅறத் தானாய் நின்றும்**
**அன்னவன் அசத்தாம் தேகம் ஆதியை அபிமா னித்துஇங்கு**
**உன்னிய ஆன்ம ரூபம் உணர்ந்துதான் அடையா தத்தால்**
**தன்னுடை ஆன்ம ரூபம் தன்னையே கொன்ற வன்தான்.**

தனக்கு வேறாக இல்லாத ஆன்ம வடிவமாய் எப்போதும் தான் இருப்பதை அறியாதவன் மித்தையான உடல் முதலியவற்றை இப்பிறவியில் என்னுடையவை என்று எண்ணம் கொண்டு, தன் உண்மை வடிவினை ஆன்றோர் துணையினால் அறிந்து அவ்வடிவமாகவே தான் இருக்கும் நிலையை அடையாமையால் ஆத்ம வடிவமான தன்னை கொன்றவன் போல ஆவான்.

**7. அருமையாம் மநுடத் தேகம் அடைந்துஅதில் ஆண்மை தன்னை**
**மருவியும் யாவன் தான்சேர் மாசுஇலாப் பயனை வேண்டித்**
**தரணியில் முயன்றி டாமல் தவிருவன் அவனை அன்றி**
**ஒருவனும் மூடன் உண்டோ உள்ளவாறு ஓரும் காலை**

பூமியில் அரிய மனிதப் பிறவியை அடைந்து அதில் ஆண் பிறப்பினைப் பெற்றும் எவன் தான் அடைவதற்கு உரிய குற்றம் இல்லாத முத்திப் பயனை விரும்பி முயற்சிக்காமல் விடுவானோ அராய்ந்து பார்த்தால் அவனன்றி அறிவற்றவன் ஒருவன் இருக்கின்றானோ? இல்லை.

**8. ஓதிய பலவாம் நூலை ஒழுங்குறப் படித்தும் என்ன**
**தீதுஇலாத் தேவர் தம்மைத் தினமும் அர்ச்சித்தும் என்ன**
**நீதியாம் கன்மம் யாவும் நித்தமும் செய்தும் என்ன**
**கோதுஇலாத் தேவர் தம்மைக் குறித்து உபாசித்தும் என்ன**

முன்னோர் உரைத்த பல நல்ல நூல்களை முறையாகப் படித்தும் என்ன பயன்? தீங்கு செய்யாத தெய்வங்களை நாள்தோறும் அர்ச்சனை செய்தும் என்ன பயன்? கடமை ஆக உண்டான நற்செயல்களை நாள்தோறும் செய்தும் என்ன பயன்? குற்றம் இல்லாத தெய்வங்களைக் குறித்துத் தியானம் செய்தும் என்ன பயன்?

**9. ஈதலால் இன்னம் இங்ஙன் எத்தனை இயற்றி என்ன**
**ஆதியாம் பரசீ வைக்கியம் அறிந்திடும் அறிவால் அன்றி**
**ஓதொணாக் கற்ப கோடி உற்றகா லத்தி னாலும்**
**கோதுஇலா முக்தி சித்தி கூடுவது என்றும் இல்லை.**

மேலே கூறிய நற்செயல்களைத் தவிர இவ்வாறு எவ்வளவு நல்ல செயல்களைச் செய்தாலும் என்ன பயன்? முதன்மையான சீவப்பிரம்ம ஐக்கியத்தை அறிந்து கொள்ளும் மெய்யுணர்வால் அன்றிக் கணக்கிட்டுக் கூற இயலாத கோடிக் கணக்கான கற்ப காலங்கள் வந்து சென்ற போதிலும் குற்றம் இல்லாத வீடுபேறு ஆகிய பயனை அடைவது என்பது எக்காலத்திலும் இல்லை.

**10. வித்தம்ஆ தியினால் என்றும் விமலமாம் முக்தி ஆசை**
**வைத்திட வேண்டாம் என்னும் வரமான சுருதி தானே**
**மெத்திய கன்மங் கட்கு மெய்முத்தி ஏதும் தன்மை**
**சுத்தமாய் இல்லை என்று துலங்கவே சொல்லும் அன்றோ.**

பணம், புதல்வன், நற்செயல்கள் முதலியவற்றால் என்றும் தூயதாய் இருக்கும் முத்தியைப் பெற ஆசை கொள்ள வேண்டாம் எனக் கூறும் சிறந்த வேதமானது பிறவிப் பிணியைத் தரும் நல்வினைகளுக்கும் அழியாத முத்திக்குக் காரணமாக இருக்கும் தன்மையானது அறவே இல்லை என்ற மக்களுக்கு விளங்கும்படி கூறும் அல்லவா?

**11. ஆகையால் வித்து வான்தான் அமலமாம் முக்தி சேர**
**வாகிய சுகவி ருப்பம் வரையற விடுத்து மேலோன்**
**ஆகிய நல்ஆ சானை அடைந்தவன் உபதே சித்த**
**ஏகமாம் பொருளில் சித்தம் இருத்தியே முயல வேண்டும்.**

தத்துவஞானத்தைத் தவிர வேறு எதனாலும் வீடு பேறு கிடைக்காது ஆகையால் அதிகாரி ஆனவன் குற்றம் இல்லாத முத்தியை அடைவதற்கு வெறி விடயங்களால் உண்டாகும் இன்பங்களில் விருப்பங்களை அறவே நீக்கி, சிறந்த குணங்களை உடைய சற்குருவினை அடைந்து அவர் உபதேசித்த பொருளான ஒன்றேயான ஆத்மாவில் சித்தத்தை நிலைக்கச் செய்து ஞானம் பெற முயல வேண்டும்.

**12. அநிசம்இப் பவமாம் பவ்வம் அமிழ்ந்திடும் தன்னைத் தானே
இனியயோ கத்தி னாலே எய்திய சொரூப ஞானம்
எனும்மகா நாவாய் கொண்டே இப்பவ வாரி நின்றும்
கனபரப் பிரமம் ஆகும் கரையின்மேல் ஏற்ற வேண்டும்.**

எப்போதும் இந்த உலக வாழ்க்கை ஆகிய கடலில் அமிழ்ந்து கொண்டுஇருக்கும் தன்னைத் தன் முயற்சியினால் ஒருவன் இனிய ஆத்மாவில் மனதை நிலை நிறுத்தி தான் அடைந்த ஆத்ம ஞானம் ஆகிய பெரிய ஒடத்தின் துணை கொண்டு இந்த பிறவி கடலில் இருந்தும் மேலான பிரம்மம் ஆகிய கரையினில் ஏறச் செய்ய வேண்டும்.

**13. புத்திரர் மாதர் வித்தம் பொருந்தும் ஏடணையை விட்டுஇவ்
அத்திர மான கன்மம் அனைத்தையும் அறவே தள்ளிப்
புத்திமான் ஆன தீரன் பொருந்திய பவத்தை விட்டு
முத்தியாம் பேற்றைச் சேர முயற்சிசெய் திடவே வேண்டும்.**

மனதை வென்ற அறிஞன் மகன், பெண், செல்வம் அகியவற்றில் தனக்கு உள்ள ஆசைகளை நீக்கியும், இந்த நிலையற்ற எல்லாக் கருமங்களையும் அடியோடு விலக்கியும் பிறவிப் பிணியில் இருந்து விடுபட்டும், வீடு பேற்றினை அடைய இடைவிடாது முயற்சி செய்ய வேண்டும்.

**14. சித்தசுத் தியினைச் சேரச் செய்தகன் மங்கள் அன்றி
வத்துவின் ஞானம் சேர வகுத்த கன்மங்கள் அன்று
வத்துவின் ஞானம் சேரல் வரவிசா ரத்தி னாலே
சித்தியாம் கோடி கன்மம் செய்யினும் சித்தி ஆகா.**

மனத் தூய்மைக்காகவே கருமங்கள் செய்யப்படுவது அல்லாமல் நாம் செய்த அந்த கருமங்கள் உண்மைப் பொருள் பற்றிய ஞானம் அடைவதற்கு அல்ல. உண்மைப் பொருள் பற்றிய ஞானம் ஏற்படுவது நன்கு செய்யப்படும் விசாரத்தினால் சித்திக்கும். கோடிக் கணக்கான கர்மங்கள் செய்தாலும் அந்த ஞானம் சித்திக்காது.

**15. அருவிசா ரத்தி னாலும் ஆத்தனின் வாய்மை யாலும்
பிரமையால் வந்த சர்ப்பப் பீதிதுன் பங்கள் போக்கும்
பரிகடைப் பழுதை ஞானம் பாரினில் வருவது அன்றி
மருவிய மற்றுஒன் றாலும் மற்றது வாரா தேபோல்.**

கயிற்றைப் பாம்பு என்று எண்ணும் மயக்கத்தினால் உண்டான அச்சத்தையும் அதனால் ஏற்படும் நடுக்கத்தையும் போக்கும் கயிற்றின் உண்மைத்தன்மையின் அறிவு இப்பூமியில் சிறந்த ஆராய்ச்சியாலும், நல்ல நண்பனின் உண்மையான விளக்கத்தாலும் எற்படுமே அன்றி, தான் மேற்கொண்ட எச்செயலினாலும் அவ்வறிவு ஏற்படாது அது போல்.

**16. அறவிசா ரத்தி னாலும் ஆத்தனின் வாய்மை யாலும்
அறிபொருள் உண்மை தன்னை அறியலாம் அதை அன்றிச்
செறியும்நீர் ஆடல் தானம் செய்திடும் பிரானா யாமம்
உறுசெயல் யாதி னாலும் உண்மையை உணர ஒண்ணா**

அறிய வேண்டிய பொருளின் உண்மை நிலையை நல்ல ஆராச்சியாலும், சிறந்த குருவின் உபதேச மொழிகளாலும் அறிந்து கொள்ளலாம். அந்த முறையால் அல்லாமல் நல்ல இடங்களில் உள்ள புண்ணிய நதிகளில் மிகுதியாக நீராடல், கொடை செய்தல், பிராணாயாமம் செய்தல், புண்ணியம் தரும் வேறு செயல்கள் ஆகிய இவற்றுள் யாது ஒன்றாலும் பொருளின் உண்மையை அறிய இயலாது.

**17. தீதுஇலா அதிகா ரிக்குத் திரவிசா ரத்தி னாலே
கோதுஇலா ஞான சித்தி கூடிடும் செவ்வி தாக
வேதம்இல் தேசம் காலம் ஈசன்நல் அருளே ஆதி
ஓதிய ஞானம் சேர உறுதுணைக் கார ணம்தான்**

உறுதியான ஆராய்ச்சியால், மலம், விட்சேபம் முதலிய தீனம் இல்லாத அதிகாரிக்கே குற்றம் இல்லாத ஞானத்தின் பயன் உண்டாகும். தேசம், காலம், ஈசனின்அருள் முதலியன யாவும் வேதங்களில் சிறப்பாகக் கூறப்பட்ட ஞானம் உண்டாகப் பொருத்தமான துணைக் காரணங்களே ஆகும்.

**18. ஆதலால் ஆன்ம ரூபம் அறியஇச் சித்த தீரன்**
**காதல்தீர் பிரம வித்தாய்க் கருணைவா ரிதியாம் ஆசான்**
**பாதமே அனுச ரித்துப் பரமமாம் ஆன்மா தன்னின்**
**கோதுஇலா நல்வி சாரம் குறைவுஅறச் செய்ய வேண்டும்.**

ஆகையால் ஆத்மாவின் உண்மை வடிவை அறிய வேண்டும் என உறுதி பூண்டவன் மூவாசைகளை நீக்கியவராயும் பிரம்மத்தை நன்கு அறிந்தவராயும், கருணைக் கடலாக விளங்குபவரும் ஆகிய குருவை அடைந்து அவருக்குப் பல வகைகளில் தொண்டு புரிந்து மேலான ஆத்மாவைப் பற்றிய குற்றம் இல்லாத நல்ல ஆராய்ச்சியை குற்றம் இல்லாதவாறு செய்ய வேண்டும்.

**19. மேதையின் மிக்கோன் ஆகி மிகுந்துஉள சாரஅ சாரம்**
**யாதுமே கூட்டத் தள்ள இயல்புறும் சதுரன் ஆகி**
**ஏதம்இல் நூல்உ ரைத்த இலக்கணம் யாவும் பெற்றோன்**
**ஆதியாம் ஆன்ம வித்தைக்கு அதிகாரி ஆவன் அன்றே.**

கேட்பதை மறவாமல் நினைவில் வைத்துக்கொள்ளும் திறமை மிக்கவன் ஆகியும், உலகிலே உள்ள பயன் அற்றவை பயன் உள்ளவை ஆன பொருள்கள் அனைத்தையும் எடுக்கவும் தள்ளவும் வேண்டிய அறிவுத் திறன் கொண்டவன் ஆகியும், குற்றம் இல்லாத நூல்களில் சொல்லப் பட்ட அனைத்து இலக்கணங்களையும் பெற்றவனே அழிவில்லாத ஆத்மவித்தைக் கற்பதற்கு உரிய தகுதி பெற்றவன் ஆவான்.

**20. உத்தம விவேகி ஆகி உள்ளுற விரக்தன் ஆகி**
**நித்தமும் சாந்தி ஆதி நின்மலக் குணம்நி றைந்த**
**உத்தம முமுட்சு வுக்கே உண்மையாம் வத்துத் தன்னின்**
**உத்தம விசாரம் செய்ய யோக்கியத் தன்மை உண்டால்.**

உயர்ந்த விவேகம் உடையவன் ஆகவும், மனத்திலே உள்ள அனைத்து ஆசைகளைத் துறந்தவன் ஆகவும், எப்போதும் புலனடக்கம் முதலான குற்றம் அற்ற குணங்கள் நிறைந்தவனாகவும் உள்ள சிறந்த வீடு பேற்றில் விருப்பம் உள்ளவனுக்கே உண்மைப் பொருள் ஆகிய ஆத்மாவைப் பற்றிய மேலான ஆராய்வை நடத்தத் தகுதி உண்டு.

**21. சாதனம் நான்க தாகச் சாற்றலாம் மேலோ ராலே**
**ஓதிய அதிகாரிக்கு இங்கு உரைத்தஈது இருக்கும் காலே**
**போதமாம் பிரம நிட்டை பொருந்தலாம் ஈதுஇ லாக்கால்**
**கோதுஇலா அந்த நிட்டை கூடுவது என்றும் இல்லை.**

சான்றோர்களால் சாதனம் நான்கு என்று சொல்லப் பட்டுள்ளன. ஞானம் பெற விரும்பும் அதிகாரிக்கு இங்கே கூறப் பட்ட நான்கு தகுதிகளும் இருந்தால் தான் அறிவே வடிவாகிய பிரம்மத்தில் மனம் அசைவின்றி இருக்கும் நிலை பொருந்தும். இத்தகுதிகள் இல்லையானால் குற்றம் அற்ற அந்த சமாதி நிலை எப்போதும் கை கூடாது.

**22. நித்தியஅ நித்தி யங்கள் நிகழ்த்திய விவேகம் ஒன்றாம்**
**இத்திலும் பரத்தி லும்சேர் இன்பிடை விரதி ஒன்றாம்**
**சத்தியம் சமதம ஆதி சட்கசம் பத்தி ஒன்றாம்**
**சுத்தமாம் முமுட்சுத் தன்மை சொல்லலாம் மற்றுஒன்று ஆக.**

நிலையுள்ளதும் நிலையற்றுதுமான பொருள்களை பிரித்துக் காணும் விவேகம் ஓர் தகுதி ஆகும். இம்மையிலும் மறுமையிலும் கர்மத்தின் பயனாக வந்து அடையும் இன்பத்தில் ஆசையற்று இருப்பது மற்று ஒரு தகுதி ஆகும். சமம், தமம், திதிட்சை, உபரதி, சிரத்தை, சமாதானம் ஆகிய ஆறு குணங்களையும் உண்மையாகப் பெற்று இருப்பது மற்றொரு தகுதி ஆகும். மிகத் தூய்மையான முத்தியில் அவா மற்றொரு தகுதியாகக் கூறலாம்.

**23. சத்தியம் பிரம மேஆம் சகம்இது மித்தை யாம்என்று**
**இத்திறம் சாத்தி ரத்தால் எய்திய நிச்ச யந்தான்**
**நித்தியஅ நித்தி யங்கள் நிகழ்த்திய விவேகம் என்று**
**சுத்தமாமம் மேலோ ராலே சொல்லிடல் ஆகும் அன்றே.**

பிரம்மம் சத்தியம். இந்த உலகம் மித்தையாம். (பொய்) இந்த உண்மை இயல்பை நுல்களின் மூலம் உறுதியாக அறிவதே நித்திய அநித்திய மெய்யறிவு உடைய சான்றோர்கள் சொல்லி உள்ளனர்.

**24. அத்திர மான தேகம் ஆதியாய் அயனை ஈறாய்**
**நித்தியம் இலாத தான நிகிலமாம் போக்கி யத்தின்**
**அத்திறம் காண்டல் கேட்டல் ஆதியால் அறிந்த வற்றின்**
**மெத்தவும் அருசி தானே மேன்மைசேர் விரதி ஆகும்.**

அழியும் தன்மை உள்ள சரீரம் முதல் பிரம்மாவின் வரையில் நிலையில்லாத எல்லா போகப் பொருள்களிலும் காண்பது கேட்பது முதலியவற்றால் மிகவும் உறுதியான மிக்க வெறுப்பை அடைவது மேலான வைராக்கியம் ஆகும்.

**25. துன்னிய விடயம் எல்லாம் தோடம்என்று எண்ணும் திட்டி**
**தன்னினால் அஃதி னின்றும் தடையிலா விரதி பெற்று**
**மன்னிய இலக்கி யத்தில் மாசுஅற மனதை வைத்தல்**
**பன்னிய சமமாம் என்றே பகருவர் மேலோர் எல்லாம்.**

வினைப் பயனால் தம்மை வந்து சேரும் அனைத்துப் விடயங்களிலும் இவை தீங்கு தருபவை என்று ஆராய்ந்து அறிந்து விடயங்களின் கூட்டத்தில் நின்றும் தடையற்ற வைராக்கியத்தை அடைந்து தன் குறிக்கோள் ஆகிய ஆத்மாவில் தன் மனத்தைக் குற்றம் இல்லாது நிலைக்கச் செய்தல் நூல்களில் கூறிய சமம் என்னும குணம் ஆகும் என்று கூறுவர்.

**26. பரவிய விடயக் கூட்டம் பற்றியே தாவா நின்ற**
**இருவகை இந்தி யத்தை இந்திரன் நின்று மீட்டு**
**மருவுதம் கோள கத்தில் மாறாது நிற்க வைத்தல்**
**பொருவிலாத் தமம்ஆம் என்றே புகலுவர் பெரியோர் எல்லாம்.**

அனைத்துப் பெரியோர்களும் எங்கும் காணப்படும் விடயங்களை பின்பற்றிக் கொண்டு தாவி ஓடுகின்ற ஞானேந்திரியங்கள் கன்மேந்திரியங்கள் ஆகிய இருவகை இந்திரியங்களையும் விடயங்களில் இருந்து மீளச் செய்து, ஆது அதற்கு உரிய இருப்பிடத்தில் (கோளகம்) நிலைபிறழாது நிற்க வைப்பது ஒப்பற்ற தமம் என்ற குணமாய்ச் சொல்லுவர்.

**27. உரைதரு சமத மத்தின் உறவினால் சித்தம் மற்றும்
பரவிய பாகி யத்தைப் பற்றாது தன்யினல் தானே
திரமதாய் ஊன்றி நின்று திரம்இலாக் கன்மம் எல்லாம்
வரையற விடுத்தல் தானே வரஉப ரதியாம் அன்றே.**

மனமானது மேலே கூறிய சமம் தமம் என்ற குணங்களின் தொடர்பினால் வெளியே பரவி உள்ள விடயங்களை பற்றாமல் ஆத்மாவிலேயே நிலைத்து உறுதியாய் நின்று நிலையில்லா அனைத்துச் செயல்களையும் விட்டு விடுவது சிறந்த உபரதி என்ற குணம் ஆகும்.

**28. எத்துயர் எய்தி னாலும் ஏங்கியே அழுதி டாமல்
அத்துயர் நீங்கு உபாயம் அற்பமும் செய்தி டாமல்
புத்தியின் தயிரி யத்தால் பொருந்திய துயரை எல்லாம்
மெத்தவும் சகிக்கும் தன்மை மேன்மைசேர் திதீட்சை ஆகும்.**

எத்தகைய துன்பங்கள் வந்தாலும் கவலைப்பட்டு அழாமலும், அத்துன்பங்களை நீக்கும் வழிகளைச் சிறிதும் செய்யாமலும், தனக்கு வந்த அனைத்துத் துன்பங்களையும் தன்னுடைய புத்தியின் வலிமையால் மிகப் பொறுத்துக் கொள்ளும் தன்மை மேலான பொறுமை (திதிட்சை) ஆகும்.

**29. சுத்தவே தாந்த நூலும் சூக்குமக் குரவன் சொல்லும்
சத்தியம் என்ப தாகச் சார்ந்திடு நிச்ச யத்தை
வத்துவின் சாட்சாத் காரம் வருவதற்கு ஏது வான
உத்தமச் சிரத்தை என்றே உரைப்பர்உண் மையைஉ ணர்ந்தோர்.**

தூய வேதாந்த சாத்திரங்களும் குருவின் நுட்பமான உபதேச மொழிகளும் உண்மையே என்று நாம் கொள்ளும் உறுதியான நம்பிக்கையே ஆத்ம அனுபவம் தோன்றுவதற்குக் காரணமான மேலான சிரத்தை என்று உண்மை உணர்ந்தோர் சொல்லுவர்.

**30. சுத்தமாம் பிரமத் தின்கண் சுழல்உறும் சித்தம் தன்னை**
**ஏத்தனம் யாதி னாலும் என்றுமே ஊன்ற வைத்தல்**
**சத்தியச் சமாதி என்றே சாற்றலாம் அஃதை அன்றிச்**
**சித்தம்ஏ கின்ற வாறே செல்வது சமாதி அன்றால்.**

சுத்தமான பிரம்மத்தை நினைத்தும் மறந்தும் அசையும் மனத்தை அனைத்து முயற்சிகளாலும் எப்போதும் பிரம்மத்தில் நிலை நிற்கும்படி செய்தல் உண்மையான சமாதி என்றே கூறலாம். அவ்வாறு நிலைபெறச் செய்வது அன்றி மனம் போனபடி செல்வது சமாதி அன்று.

**31. ஆதியில் அஞ்ஞா னத்தால் ஆகிய அகங்கா ராதி**
**ஏதமாம் தேகம் ஈநா எய்திய பந்தம் எல்லாம்**
**தீதுஅறு ஞானத் தாலே தீர்ப்பதற்கு இச்சை செய்தல்**
**ஏதம்இல் முமுட்சுத் தன்மை என்றுகூ றிடலாம் அன்றே.**

அநாதியாக அஞ்ஞானத்தால் தோன்றிய துன்பம் தருவதான அகங்காரம் முதல் சரீரம் வரையிலும் உள்ள பந்தங்களை எல்லாம் பிறவிப் பிணி நீக்கும் தத்துவ ஞானத்தால் நீக்கிடவேண்டுமே என்ற அவா விரும்புதல் குற்றம் இல்லாத முமுட்சுத்வம் என்று கூறிடலாம்.

**32. மருவிய முமுட்சுத் தன்மை மந்தமத் திமம்அ தேனும்**
**பருகிய விரதி யாலும் பெருஞ்சமம் ஆதி யாலும்**
**குருவரன் அருளி னாலும் குறைவுஅற வளர்ந்து காலம்**
**பருவம்எய் திடில்வா ளாகாப் பயனையே நல்கும் அன்றே.**

முத்தியில் அவா ஆகிய முமுட்சுத்வம் தீவிரமாய் இல்லமால் மந்தமாயும் மத்திமமாயும் இருந்தாலும் தீவிரமான வைராக்கியத்தினாலும் பெருமை வாய்ந்த சமம் முதலிய குணங்களாலும் குருவின் அருளினாலும் குறையாது வளர்ந்து பெருகி பக்குவம் எய்திய காலத்தில் வீணாகாமல் பயனைக் கொடுக்கும்.

**33. ஓதிய விரதி யோடே உத்தம முமுட்சுத் தன்மை**
**தீதுஇலாது எவன்இ டத்தில் தீவிர மாய்இ ருக்கும்**
**கோதுஇலாது அவன்இ டத்தே கூடிய சமதம ஆதி**
**நீதியாம் தன்ப லத்தை நிகழவே நல்கும் அன்றே.**

மேலே கூறிய வைராக்கியத்தோடு முமுட்சுத்வமும் எவன் இடத்தில் குற்றம் இல்லாது தீவிரமாக இருக்குமோ குற்றம் இல்லாத அவனிடத்தில் தான் சமம் தமம் முதலிய புலன் அடக்கங்கள் முறையாகத் தன் பலனை நன்கு தரும்.

**34.** **பன்னிய விரதி யோடே பற்றிய முமுட்சுத் தன்மை**
**மன்னிடாது எவனி டத்தில் மந்தமாய்த் தான்இ ருக்கும்**
**அன்னவன்இ டத்தில் சாந்தி ஆதிஆ பாசம் ஆகத்**
**துன்னிடும் மருதே சத்தில் தோன்றிய தோய மேபோல்.**

மேலே கூறிய வைராக்கியத்தோடு ஒருவன் மேற்கொண்ட முமுட்சுத்துவமும் எவனிடம் மிகுதியாக இல்லாமல் மந்தமாக இருக்குமோ அவனிடத்தில் சமம்தமம் முதலியன கானலில் தோன்றும் நீரைப் போல பயன் தராத தோற்றம் மாத்திரமாகவே இருக்கும்.

**35.** **முத்தியின் ஏது வாக மொழிஉபா யங்க ளுக்குள்**
**பத்தியே மிகவும் மேலாய்ப் பகரலாம் அஃதுஏது என்னின்**
**நித்தமும் சொச்சொ ரூபம் நிகழ்த்திய அனுசந் தானம்**
**பத்திதான் ஆகும் என்றே பகருவர் பரம்உ ணர்ந்தோர்.**

முத்தி அடைவதற்குக் காரணமாகக் கூறிய சாதனங்களுள் பத்திதான் மிகவும் சிறந்தது என்று கூறலாம். பத்தியாவது யாது என்றால் எப்போதும் தன் உண்மை வடிவத்தை என்றும் தொடர்ந்து சிந்தித்தலே பத்தி ஆகும் என்று மெய்ப்பொருள் அறிந்த சான்றோர் கூறுவர்.

**36.** **ஓதுசா தனசம் பத்தி உள்ளவாறு உற்ற தீரன்**
**தீதுஇலா ஆன்ம ரூபம் திகழவே உணர வேண்டி**
**யாதுமே உணர்ந்து தன்னை எய்தினோர் பவபந் தத்தைக்**
**கோதுஅறத் தீர்ப்போன் ஆன குருவிடைச் செல்லல் வேண்டும்.**

மேலே கூறிய தகுதிகள் அனைத்தையும் பெற்ற மாணவன் அழிவிலாத தன் உண்மை வடிவினை ஐயமும் மாறுபாடும் இன்றி அறியும் பொருட்டு அனைத்து வேதாந்த நுட்பங்களையும் அறிந்து தன்னை அணுகினோர்களின் பிறவிப் பிணியைக் குற்றம் இன்றி நீக்க வல்ல குருவிடம் செல்ல வேண்டும்.

37. **சுருதியே முதல்மா னத்தால் சொல்லியது அனுட்டா னித்துப்**
**பரவிய பாவம் அற்றுப் பற்றுஎலாம் அற்றோன் ஆகிப்**
**பிரமவித்து ஆகி அந்தப் பிரமமே சார்ந்து காட்டம்**
**மருவிடா வன்னி போல மாசுஅறச் சாந்தன் ஆகி.**

வேதங்கள் கூறிய நல்ல செயல்களை சிறந்த முறையில் பயனில் விருப்பம் இன்றிச் செய்து அதனால் தன் மனத்தில் பரவி உள்ள பாவங்களை எல்லாம் அழித்து மூவகை ஆசைகளையும் நீக்கி பிரம்ம வடிவைக் கேட்டு அறிந்து, பிறகு அனுபவத்தால் அந்தப் பிரம்மமும் தானாகி, எக்குற்றமும் இன்றி விறகு இல்லாத தீயைப் போல அமைதி பெற்றவன் ஆகி.

38. **காரணம் யாதும் இன்றிக் கருணைவா ரிதியே ஆகிப்**
**பாரினில் தன்னைப் பற்றிப் பணிந்தசா துக்க ளுக்குப்**
**பூரணப் பந்து வாகிப் பொருந்திய ஆசான் தன்னைச்**
**சேரல்உற்று அன்பி னோடே சீடன்சே விக்க வேண்டும்.**

காரணம் ஏதும் இன்றி, கருணைக் கடலாக விளங்கி பூமியில் தன்னைப் பணிந்த சாதுக்களுக்கு முழுமையாக உறவினன் ஆகிப் பொருத்தமான ஒருவரைக் குருவாய் அடைந்து மாணவர் பத்தியோடு வணங்க வேண்டும்.

39. **பத்தியால் வணங்கிச் செய்த பலவிதச் சேவை யாலே**
**மெத்தவும் தன்னி டத்தில் மெய்அருள் மேவா நின்ற**
**உத்தமக் குருவை நோக்கி உணரவேண் டியதை எல்லாம்**
**புத்திமான் அன சீடன் போற்றியே வினவல் வேண்டும்.**

அறிவில் சிறந்த சீடன் குருவை அன்புடன் வணங்கித் தான் செய்யும் பல வகையான தொண்டுகளால், தன்னிடம் உண்மையான கருணையை அதிகமாகக் கொண்டிருக்கும் உயர்ந்த குருவைப் பணிவுடன் நோக்கி, போற்றிப் புகழ்ந்து வணங்கி உணர வேண்டியிவை அனைத்தையும் கேட்டு உணர வேண்டும்.

40. **நாதநின் சரணம் போற்றி நல்அருள் கடலே போற்றி**
**பாதமே பணிந்தோ ருக்குப் பந்துவே பவமாம் பவ்வம்**
**ஈதினுள் மூழ்கும் என்னை இனியநல் கருணை கூர்ந்த**
**கோதுஇல்நின் திட்டி நாவாய் கொண்டுமேல் ஏற்றி வைப்பாய்.**

சுவாமி உம்முடைய திருவடிகளுக்கு வணக்கம். நன்மை தருகின்ற அருட்கடலாக இருப்பவரே வணக்கம், உமது திருவடியை வணங்கியவர்களுக்கு உறவாக இருந்து துன்பம் நீக்குபவரே பிறவி ஆகிய இக்கடலில் மூழ்கி வருந்தும் என்னை, இன்பம் தருகின்ற, கருணை மிக்க, குற்றம் இல்லாத பார்வை ஆகிய ஓடத்தில் ஏற்றிக் கரை ஏறச் செய்வீராக.

**41. படர்ந்ததீ வினையே ஆகும் பவனனால் உலர்த்தப் பட்டுக்**
**கடந்திடாப் பவமே ஆகும் கானவன் னியினால் வெம்பித்**
**தொடர்ந்தபீ தியினால் நீயே துணைஎன நம்பும் என்னை**
**முடிந்திடா மரணம் ஆதி முடிவுறச் செய்து காப்பாய்.**

பல பிறவிகளில் தொடர்ந்து வரும் தீய ஊழ்வினை ஆகிய காற்றினால் நன்கு துன்பம் அடையும்படி செய்யப் பெற்று தாண்ட இயலாத துன்ப வாழ்வு ஆகிய காட்டுத் தீயினால் மிகவும் வெம்பி, மேலும் மேலும் தொடர்ந்து வரும் பயத்தினால் நீயே துணை செய்ய வேண்டும் என்று நம்பி வந்த என்னை, முடிவு இல்லாத பிறப்பு இறப்பு முதலியவற்றை அழியும்படி செய்து பாதுகாக்க வேண்டும்.

**42. சாதுவாய்ப் பூன்றர் ஆகிச் சாந்தராய் வசந்த கால**
**நீதிபோல் உலகர்க்கு இட்டம் நினைப்பராய்ப் பவமாம் சிந்துப்**
**பீதியைக் கடந்து மற்றோர் பீதியும் கடப்பிப் போராய்**
**ஓதிய நீதி சேர்ந்த ஒத்தமே லோர்கள் உண்டால்.**

மறைகளில் சொல்லப் பெற்ற நல்ல வழிகளை மேற் கொண்டு அனைவரிடமும் சம நோக்கு உடைய சான்றோர்கள் சாதுவாகவும், நிறைந்த அருள் உடையயோர் ஆகவும், சாந்தம் உடையவராகவும் வசந்த காலத்தின் தன்மையைப் போல் மக்களுக்கு நல்லவற்றையே எண்ணுபவராகவும் இருந்து கொண்டு, தாம் பிறவிப் கடலினால் தோன்றும் அச்சத்தை நீக்கி, மற்றவர்களின் அச்சத்தையும் நீக்குபவராய் வாழ்வார்கள்.

**43. கருதிய சூரியன்வெங் கதிரினால் எரிக்கப் பட்ட**
**தரணியை இந்து தானே தண்கதிர் கொண்டு காக்கும்**
**பரிசுபோல் பற்றி னோரின் பவத்துயர் தீர்க்கும் சக்தி**
**சொரூபவித்து ஆன மேலோர் சுபாவமே ஆகும் அன்றோ.**

உலகச் செழிப்புக்குக் காரணம் என்று பெரியோர் எண்ணுகின்ற சூரியனின் வெய்யிலினால் வெப்பம் அடைந்த பூமியை சந்திரன் தானாகவே தன்னுடைய குளிர்ந்த ஒளியால் துயர் நீக்கும் தன்மை போலத் தம்மை வந்து அடைந்த அறியாத மக்களின் பிறவித் துன்பத்தைப் போக்கும் திறமை உண்மை உணர்ந்த பெரியோரின் இயல்பு ஆகும் அல்லவா?

**44. நாதனே உன்னை அல்லால் நான்ஏதும் சரணாய்க் காணேன்**
**யாதுமே ஏது அன்றி எய்தினோர் தம்மைக் காக்கும்**
**நீதிதான் தம்ஒத் தோர்க்கு நித்தமும் நிறைந்தது அன்றோ**
**ஆதலால் அருளால் என்னை ஆளுவது உன்பொ றுப்பே.**

குருவே உம்மை அன்றி வேறு எவரையும் சரண் அடைவதற்கு உரியவராக எண்ணவில்லை. ஒரு காரணமும் இல்லாமல் சரண் அடைந்தவரைப் பாதுகாக்கும் நேரிய பண்பு, தம்மைப் போன்ற பெரியோர்களிடம் நிறைந்து இருக்கும் அல்லவா? ஆதலால் கருணை கொண்டு என்னை அடிமை கொள்வது உன்னுடைய கடமையே ஆகும்.

**45. பிரமஇன் பஅனு பூதி பெற்றதால் சீதம் ஆகி**
**நிருமலம் ஆகித் தூய்தாய் நின்முகக் கலசம் நின்று**
**வருவதாய்ச் சுகமே செய்யும் வாக்கியச் சுதையி னாலே**
**விரிபவக் கானத் தீயால் வெதும்பிய எனைந னைப்பாய்.**

தாங்கள் பிரம்மானந்த அனுபவத்தைப் பெற்றுள்ளமையால் மிகக் குளிர்ந்தும், குற்றம் இன்றி மிகத் தூய்மை பெற்றும், உம்முடைய முகம் ஆகிய குடத்திலே இருந்து வெளி வருவதாயும் இன்பமே தருவதாயும் உள்ள சொற்றொடர் ஆகிய அமுதத்தால் மேலும் விரிவு அடையும் பிறவி என்னும் காட்டுத் தீயால் துன்பம் அடைந்த என்னை நீராட்டுக.

**46. நாதநின் கடாட்ச திட்டி நாடிடும் கண்பார் வைக்குக்**
**கோதுஇல்பாத் திரரே ஆகிக் குமரன்என்று ஒப்பப் பட்டோர்**
**ஏதம்இல் பாக்கி யத்தை இங்ஙனே எய்தி னோராய்க்**
**கேதம்ஆம் யாவும் விட்டுக் கேவலர் ஆவார் அன்றோ.**

தலைவ, உனது அருள் நோக்குடன் பொருந்திய குற்றம் இல்லாத கண்களின் பார்வைக்கு இலக்கு ஆகி இருப்பவர் சீடரெனச் சிறப்பிக்கப் படுவார்கள். இவ்வாறு குற்றம்

இல்லாத பெரு பேற்றை அவர்கள் அடைந்தவராய்த் துன்பம் தருகின்ற மூவாசைகளையும் விட்டுப் பிரம்மமாய் ஆகி விடுவார் அல்லவா?

**47. இப்பவச் சிந்து தன்னை எவ்விதம் யான்க டப்பேன்**
**எப்படி இங்கு உபாயம் ஏதுதான் கதிஎ னக்காம்**
**இப்படி என்றுஇ வற்றை எவளவும் உணர்கி லேன்யான்**
**அப்பனே அருளால் இந்த அரந்தைதீர்த்து என்னை ஆள்வாய்.**

இந்தப் பிறவிக் கடலை நான் எவ்வாறு தாண்டுவேன்? இப்போது இதற்கு வழி யாது? உய்யும் வழி எனக்கு ஏது? மேலே கூறிய உபாயம் கதி முதலியவற்றை எந்தச் சிறிய அளவிலும் நான் உணரவில்லை. தந்தை போல் இருக்கும் குருவே, உன் அருளால் இத்துன்பத்தை நீக்கி என்னை ஆட்கொள்ளுக.

**48. இவ்விதம் உரைத்துத் தன்னை இயல்புடன் சரணாய் எய்தி**
**வெவ்விய பவதா பத்தால் வெதும்பிய சீடன் தன்னைச்**
**செவ்விய கருணை கூர்ந்த சீதள திட்டி யாலே**
**அவ்விதக் குரவன் நோக்கி அபயமே அளிப்பான் அன்றே.**

தன்னை முறையாகச் சரண் அடைந்து இவ்வாறு பணிவான மொழிகளைக் கூறிக் கொடிய பிறவித் துன்பத்தால் வாடி நிற்கும் மாணவனை, நல்லியல்புகளை உடைய ஆசான் நோக்கி அருள் செய்து அப்பொழுதே அவனுக்கு அபயம் அளிக்க வேண்டும்.

**49. வித்துவான் ஆன ஆசான் விதியுடன் தனைஅ டைந்து**
**முத்தியை மிகவி ரும்பி மொழிந்ததை நன்றாய்ச் செய்யும்**
**சத்தி உள்ள வனாய்ச் சித்த சாந்திசேர் சீட னுக்குத்**
**தத்துவ உபதே சத்தைத் தயையினால் தானே செய்வான்.**

பிரம்மஞானி ஆன ஆசிரியன் தன்னை முறையாக நெருங்கி வீடுபேற்றை மிகவும் விரும்பித் தாம் கூறியவற்றை நன்கு நிறைவேற்றும் நம்பிக்கைத் திறம் உள்ளவனாய் மனத்திலே அடக்கத்தை மேற்கொண்டுள்ள சீடனுக்குக் கருணையுடன் தானாகவே ஆத்மாவைப் பற்றி உபதேசிக்க வேண்டும்.

கள் எதனால் இதன் இந்தப் பிறவியைக் கடந்தார்களோ அந்த
னக்குக் கூறுவோம்.

**யத்தை விரைவிலே நாசம் செய்யச்**
**உ பாயம் சகத்தினில் மேலாய் உண்டு**
**ால் நீயும் புகல்பவக் கடல் கடந்து**
**ா நந்த நிலைமயை நண்ணி நிற்பாய்.**

பெரிதான பிறவிபயத்தை விரைவாக நாசம் செய்ய வலிமையான
லகில் உண்டு. அதனால் நீயும் பிறவிக் கடலைக் கடந்து எப்போதும்
 அடைந்து வாழ்வாய்.

**த நூலில் சொல்லிய பொருள்கள் தம்மின்**
**த் தாலே உதித்திடும் உண்மை ஞானம்**
**றினாலே பொருந்திய பவதுன் பங்கள்**
**னு மின்றி இறந்திடும் இங்குத் தானே.**

ந்த நூல்கள் கூறுகின்ற பொருள்களின், கருத்தை ஆராய்வதால்
வு உண்டாகும். அந்த அறிவினால் உன்னிடம் உள்ள பிறவித்
ல்லாமல் இங்கேயே அழிந்துவிடும்.

**தை பத்தி மாசிலாத் தியானம் யோகம்**
**சுவுக்குப் பரமமாம் முத்தி சேரத்**
**வென்றே துகளிலா வேதம் தானே**
**இவற்றைப் பற்றினோர் பந்தம் பற்றார்.**

**ணர ஒண்ணா இயல்புறும் அவித்தை செய்த**
**் பந்தம் பெயர்ந்திடும் பின்னும் கேளாய்.**

று பெரியோர்கள் நினைக்கும் சிரத்தை முதலான உயர்ந்த தளர்ச்சி இன்றிக் குற்றம் இன்றிப் பயின்று அடைபவர்களுக்கே லாத தன்மை வாய்ந்த அவித்தையால் தோன்றிய சரீரமாகிய கட்பாய்.

**ான் மாவாம் உன்தனக்கு அஞ்ஞா னத்தால்**
**ாம பந்தம் இசைந்ததால் இச்சம் சாரம்**
**ன்மஅ நான்ம வருவிவே கத்துஉ தித்த**
**ல்இம் மூலஅஞ் ஞானகா ரியம்ள ரிக்கும்.**

பரமாத்மாவாகிய உனக்கு அஞ்ஞானத்தால் இழிந்ததான திகளுடன் பந்தம் வந்தது. அதனால் இந்தப் பிறவி நோய் ல காரணம் ஆன அஞ்ஞானத்தின் செயலை இது ஆந்மா, இது ச்சியால் தோன்றும் பகுத்தறிவால் தோன்றிய ஞானத்தீ அழிந்து

**ா நோக்கி அந்தநற் சீடன் சொல்வான்**
**ாலி னாவல் ஈசனே அருளால் கேட்பாய்**
**ுத்தின் நின்றும்உத்தரம் இதற்குக் கேட்டு**
**ன நண்ணி நான்துயர் தீர்வ தற்கே.**

ர நோக்கி நற்பண்பு வாய்ந்த அந்த சீடன் சொல்லத் ப, உன்னுடைய நல்ல முகத்தில் இருந்து உண்டான வாக்கினால் பதிலைக் கேட்டு மிக நல்ல பேற்றினை அடைந்து நான் பிறவி

நோயை ஒழிப்பதன் பொருட்டு இப்போது நான் கேட்டும் கேள்வியைக் கருணையுடன் கேட்டு அருளல் வேண்டும்.

**57. ஏதுதான் பந்தம் ஆகும் எவ்விதம் ஈது வந்தது**
**ஏதுதான் இருப்புஇ தற்காம் எவ்விதம் ஈதுஇ றக்கும்**
**ஏதுதான் ஆன்மா ஆகும் ஏதுஅ நான்மா ஆகும்**
**ஏதுதான் ஆன்மஅ நான்ம இயல்புஉணர் விவேகம் சொல்வாய்.**

பந்தம் என்பது என்ன? இது எவ்வாறு வந்தது? இதற்கு இருப்பு எவ்விதம்? இது எவ்வாறு அழியும்? ஆத்மா என்பது யாது? ஆத்மா அல்லாதது யாது? ஆத்மாவின் இயல்பினையும் ஆத்மா அல்லாத பொருள்களின் இயல்பினையும் அறியும் பகுத்தறிவு யாது? கூறியருளுங்கள்.

**58. ஈதுகேட்டு ஆசான் சொல்வான் இவ்வவித் தையினால் வந்த**
**வேதமாம் பந்தம் விட்டுஇங்கு ஏகசித் பிரமம் ஆகச்**
**சாதுவே இருப்ப இச்சை சாரலால் தந்தி யன்நீ**
**நீதொழில் யாவும் செய்தோன் நின்குலம் தூய்தே நின்னால்.**

சீடனின் வினாக்களைக் கேட்ட ஆசிரியர் சொல்லத் தொடங்கினார். நல்லவனே, இந்த அவித்தையினால் உண்டான துயர் தருகின்ற பந்தத்தை விட்டு, இப்போது ஒன்றேயான ஆத்ம வடிவமாக நீ இருப்பதற்கான விருப்பத்தை மேற்கொள்ளலால் நீ மிகவும் நற்பேறு பெற்றவன் ஆவாய். நீ செய்ய வேண்டிய தொழில்களை எல்லாம் செய்தவன் ஆவாய். உன்னால் உன்குலத்தோர் அனைவரும் தூய்மை பெற்றார்கள்.

**59. தந்தைகொள் ருணத்தைத் தீர்த்துத் தளர்வுஅறச் செய்வ தற்கு**
**வந்ததன் மைந்தர் ஆதி வையகம் தன்னில் உண்டு**
**சிந்தைசேர் பந்தம் தன்னைச் சீக்கிரம் சிதைப்ப தற்குப்**
**பந்துவாய்த் தன்னை அன்றிப் பாரினில் ஆரும் இல்லை.**

பூமியில் தந்தை வாங்கிய கடன்களைத் திருப்பிக் கொடுத்துக் கடனால் ஏற்பட்ட வாட்டம் நீங்கும்படி செய்வதற்குத் தனக்குப் பிறந்த புதல்வர் முதலியோர் உண்டு. இப்பூமியில் தன் மனம் அடைந்த பந்தத்தை விரைவாக அழிப்பதற்குத் துணையாய் இருப்பவர் தன்னைத் தவிர வேறு எவரும் இல்லை.

60. **சென்னிசேர் பாரம் ஆதி செய்ததுன் பம்வி டுக்க**
**அந்நியர் உலகில் உண்டுஇங்கு அடைந்ததன் பசியே ஆதி**
**தன்னினால் வந்த துன்பம் தவிர்த்திடத் தன்னை அல்லால்**
**அந்நியர் இல்லை பந்தம் அகற்றலும் இந்த வாறே.**

இந்த உலகத்தில் தலையில் வைத்துள்ள கனமான பொருள் முதலியவை உண்டாக்கிய இன்னல்களைப் போக்கப் பிறர் இருக்கிறார்கள். உடலில் நான் அடைந்த பசி முதலியவற்றால் உண்டான துன்பத்தை நீக்கிக் கொள்ளத் தன்னைத் தவிர வேறு எவரும் இல்லை. பந்தத்தை போக்கலும் அதைப் போன்றது ஆகும்.

61. **பரவிய மருந்தை உண்டு பத்தியம் பெய்வோ னுக்கே**
**அரியனே பிணிகள் நீங்கும் அன்றியற்று ஆரும் செய்த**
**கருமம் யாதுஒன்றி னாலும் கருதிய பிணிகள் நீங்கா**
**உரவிய பந்த நீக்கம் உரைத்தஇந் நீதி போலாம்.**

அரிய சீடனே, அனைவராலும் சிறந்தது என்று போற்றும் மருந்தினை உண்டு அதற்கு ஏற்பப் பத்தியமான உணவை உண்பவனுக்கே நோய்கள் நீங்கும். அல்லாமல் மேற்கொண்ட எச்செயலாலும் மக்கள் துன்பம் என்று எண்ணிய நோய்கள் நீங்க மாட்டா. மிக்க வலிமை வாய்ந்த சம்சார பந்தத்தின் அழிவும் மேலே கூறிய முறையைப் போல் பிறரால் அழியாது.

62. **ஞானநல் விழியால் தன்னால் நற்பொருள் உணர வேண்டும்**
**ஏனையோர் ஞானி யைக்கொண்டு இப்பொருள் உணர ஒண்ணாது**
**ஈனம்இல் தனது கண்ணால் இந்துவை உணர்வது அன்றி**
**ஏனையாது ஒன்றி னாலும் இந்துவை உணர லாமோ**

குறைவற்ற தனது கண்ணால் சந்திரனைக் காண்பது அல்லாமல் வேறான யாதாலும் திங்களைக் காண இயலுமோ? அது போலத் தானாகவே அறிவு ஆகிய கண்ணால் உண்மைப் பொருளை உணர்ந்து கொள்ள வேண்டும். வேறு ஒரு ஞானியைக் கொண்டு இந்த மெய்ப்பொருளை உணர இயலாது.

63. **கருதிய அவித்தை காமம் கன்மமே ஆதி ஆகப்**
**பரவிய பவம்ஆ கின்ற பலம்உறும் பாசம் தன்னைக்**
**கருதுஒணாக் கற்ப கோடி காலம்ஒ டிடினும் இந்தத்**
**தரணியில் தன்னை அல்லால் தவிர்ப்பதற்கு இயாவர் வல்லோர்.**

தனது சுய வடிவத்தை மறைக்கின்ற அவித்தை, ஆசை, கர்மம் முதலியன காரணமாக, அனைவர் மனத்திலும் பரவி உள்ள சம்சாரம் ஆகிய மயக்கக் கட்டினை தவிர்க்க இந்தப் பூமியில் எண்ண இயலாத கோடிக் கணக்கான கற்ப காலங்கள் சென்றாலும் தன்னைத் தவிரத் திறம் உடையோர் யார் இருக்கின்றார்கள்?

**64. ஓங்கிய பரசீ வைக்கியம் உணர்ந்திடும் உணர்வால் அன்றிச்**
**சாங்கிய மதத்தி னாலும் சார்ந்திடும் யோகத் தாலும்**
**வீங்கிய கன்மத் தாலும் வேறுஉபா சனையி னாலும்**
**ஓங்கிய முத்திப் பேற்றை ஒன்றுவது என்றும் இல்லை.**

சீவனும் பிரமமும் ஒன்றே என்று அறியும் மிகச்சிறந்த மெய்உணர்வால் அன்றி, சாங்கிய மதக்கொள்கையாலும் மனவடக்கம் கருதி மக்கள் மேற்கொள்ளும் யோகத்தினாலும், மிகப்பெரிய வலிமை பொருந்திய யாகம் முதலிய செயல்களினாலும், வேறு உபாசனையினாலும் சிறப்பான வீடுபேற்றை அடைவது என்றைக்கும் இல்லை.

**65. தன்னுடை வீணை ரூபத் தகைமையும் தந்தி யாலே**
**பன்னிய கரனம் செய்யும் பான்மையும் சபையின் கண்ணே**
**மன்னிய ஜனங்கள் தம்மில் மனமகிழ் மாத்தி ரத்தைத்**

துன்னிடச் செய்யும் அன்றித் தோன்றலாம் தன்மை செய்யா. ஒருவனுடைய வீணையின் வடிவழகும், வீணைத் தந்தியைக் கொண்டு அனைவரும் புகழத் தக்க இசை பாடும் திறமையும், சபையிலே கூடி இருக்கும் மக்களிடையே மனமகிழ்வை மட்டும் உண்டாக்குமே அன்றி அது அவனுக்கு அரசனாக விளங்கும் சிறப்பைத் தர மாட்டா.

**66. ஈதுபோல் உயர்ந்த வாக்கும் இசைந்தசொற் சாது ரியம்**
**ஓதிய நூல்கள் தம்மின் உரைசெயும் சத்தப் பாங்கும்**
**பூதமா வித்தை உந்தன் போகத்தின் பொருட்டால் அன்றி**
**ஏதம்இல் முத்திப் பேற்றை இசைவதின் பொருட்டால் அன்றால்.**

இதுபோல் நன்கு பேசும் தன்மையும், அவனுக்கு உள்ள சொல் திறனும், பெரியோர் கூறிய நூல்களுக்கு விரிவுரை கூறும் திறமையும், ஐம்பூதங்களைப் பற்றி நிறைந்த கல்வியும், வீணை வாசிப்பவனின் திறமையான வாசிப்பைப் போல், தன்னுடைய போகத்திற்காக இருப்பனவே அன்றி, குற்றம் இல்லா வீடுபேற்றினை அவனுக்குத் தரும் பொருட்டு இல்லை.

**67. பரமம்ஆம் தத்து வத்தைப் பார்த்து நன்றுஉ ணர்ந்தி டாக்கால்**
**பரவிய நூல்கள் ஓதல் பலம்ஏதும் இலாதது ஆகும்.**
**பரமம்ஆம் தத்து வத்தைப் பார்த்து நன்றுஉ ணர்ந்தி டுங்கால்**
**பரவிய நூல்கள் ஓதல் பலம்ஏதும் இலாத தேகாண்.**

உயர்ந்த உண்மைப் பொருளை நன்றாக அறிந்து அனுபவம் பெறாவிடில் பல நூல்களைப் படித்து அறிந்து என்ன பயன்? ஒரு சிறிதும் இல்லை. உயர்ந்த உண்மைப் பொருளை நன்கு அறிந்து அனுபவம் பெற்று விட்டால் பல நூல்களைப் படிப்பதால் பயன் சிறிதும் இல்லை.

**68. ஆதலால் மனம் யக்கம் அடைவதற்கு ஏது வான**
**காதல்செய் சப்த ஜாலக் கானகம் தன்னை விட்டுத்**
**தீதுஇலாப் பிரம வித்தாம் தேசிகன் தன்பால் சென்றுஇங்கு**
**ஏதம்இல் பிரமம் தன்னை இலங்கவே உணர வேண்டும்.**

பயனற்ற நூல்கள் நன்மையைத் தரமாட்டா. ஆகையால் மனத்திற்கு மயக்கம் தரும், ஆசையை வளர்க்கும் சொற் கூட்டம் ஆகிய காட்டை விட்டு நீங்கி, தீய செயலை எண்ணியும் பார்க்காத பிரம்மத்தை அறிந்த குருவினிடம் சென்று, அழிவற்ற பிரம்மத்தை ஐயமும், வேறுபாடும் இன்றி அறிய வேண்டும்.

**69. பரவும்அஞ் ஞானம் ஆகும் பாம்பினால் கடிக்கப் பட்டோர்க்கு**
**அருமையாம் பிரம ஞானம் ஆகிய மருந்தை அன்றி**
**மருவிய மறைக ளால்என் மற்றுள நூல்க ளால்என்**
**பரவிய மருந்தி னால்என் பகருமந் திரங்க ளால்என்.**

எவரும் நீக்க இயலாதது எனக் கூறும் அவித்தை ஆகிய பாம்பினால் கடிக்கப்பட்டவர்களுக்கு மிக உயர்ந்தது ஆன பிரம்ம ஞானம் ஆகிய மருந்தே பயன் தரும் அல்லாமல் பல யாகங்களைக் கூறும் வேதங்களால் என்ன பயன்? மற்றும் உள்ள நூல்களால் என்ன பயன்? அனைவரும் புகழும் உடல் நோய் தீர்க்கும் மருந்தால் என்ன பயன்? சொல்லக் கூடிய பல மந்திரங்களால் என்ன பயன்?

**70. மருந்தினைப் புசித்திடாது மருந்துஎனும் வசனத்தாலே**
**பொருந்திய தனது ரோகம் போகுவது எங்கும் உண்டோ**

**திருந்திய பிரம ஞானத் திறமையைச் சேர்ந்திடாது**
**பரிந்து நான் பிரமம் என்று பகரலால் பந்தம் போமோ.**

ஒருவனுக்கு வந்த நோயானது மருந்தைப் பருகாமல் மருந்தினுடைய பெயரை உச்சரிப்பதால் போகுவது எங்காவது உண்டா? இல்லை. அதுபோல் திடமாக பிரம்ம ஞானத்தை அபரோட்சமாய் அடையாமல் அபிமானத்துடன் நான் பிரம்மம் என்று சொல்வதால் மட்டும் பிறவிப்பிணி அழியுமோ? அழியாது.

**71. வீரர்ஆம் பகையோர் தம்மை வென்றிடாது அகில மான**
**பாரினுள் பாக்கி யத்தைப் பாங்குறப் பற்றி டடாதுஇங்கு**
**ஆகும் நான் அரசன்என்று அறைந்திடும் வசனத் தாலே**
**தீரன்ஆம் அரசன் ஆகித் திகழயோக் கியனோ சொல்வாய்**

வீரர்கள் பகைவர்களை வெற்றி கொள்ளாமலும், விரிந்த உலகில் உள்ள செல்வத்தை செம்மையாக அடையாமலும், இவ்வுலகில் யாவரும் நான் அரசன் என்று கூறுவதால், மனஉறுதி படைத்த அரசனாவதற்குத் தகுதி வாய்ந்தவனோ? நீயே கூறுவாய்.

**72. திருசிய நாசந் தன்னைத் திறம்உறச் செய்திடாமல்**
**பிரமமாம் ஆன்மரூபம் பிறங்கவே உணர்ந்திடாமல்**
**பரமமே நான்என்று ஓதும் பகரல் மாத்திரமேயான**
**உரையினால் பிரமமாக ஒன்றிடும் முக்தி உண்டோ.**

காணப்படும் பிரபஞ்சத்தின் நாசத்தை உறுதியாகச் செய்யாமலும், பிரம்மமே ஆத்மாவாக உள்ளது என்பதை விசாரத்தால் அறியாமலும், நான் பிரம்மமே என்று கூறுவதால் மட்டும் சீவபிரம்ம ஐக்கிய ஞானமாகிய முத்தி உண்டோ? இல்லை.

**73. தரணியுன் தனத்தைச் சேரத் தகைமை சேர் ஆப்தனின் சொல்**
**தரணியைப் பிளத்தல் அந்தத் தனத்தின் மேல் சிலையைத் தள்ளல்**
**மருவியே எடுத்தல் இந்த (வாறு—எலாம்) யாதும் இன்றி**
**விரிவுறு வாக்கால் தானே வெயியுற அது தான் வாரா.**

பூமியின் உள்ளே இருக்கும் புதையலை அடைய, அதைச் சொன்ன நண்பனின் சொல்லைக் கேட்டு, பூமியைத் தோண்டுதல், பிறகு அதன்மேலுள்ள கற்பாறைகளை

அகற்றல் முதலியவற்றைச் செய்து புதையலை எடுக்க வேண்டும் இந்தக் கிரமமாக எதுவும் செய்யாமல், புதையல் புதையல் என்று சொல்வதால் மட்டும் அப்புதையல் தானகவே வெளியில் வராது.

**74. ஈதுபோல் பிரம வித்தின் இடத்தின்நல் சிரவ ணத்தோடு**
**ஏதம்இல் மலனம் தியானம் ஏகமாம் சமாதி ஞானம்**
**ஈதுஎலாம் அன்றி மாயை இருளினால் மறைக்கப் பட்ட**
**கோதுஇலாத் தன்சொ ரூபம் குதர்க்கமே கொண்டு மேவார்.**

இவ்வாறே பிரம்மத்தை அறிந்த குருவினிடம் நன்கு கேட்டு அறிந்து அதனுடன் மாசற்ற ஆராய்ச்சி, தியானம், இரண்டு அற்ற ஞானம் சமாதி, ஆகிய இவற்றை எல்லாம் மேற்கொள்ளாமல், தர்க்க வாதங்களையே மேற்கொண்டு, மாயை என்னும் இருளில் மறைந்துள்ள குற்றம் இல்லாத தன்னுடைய உண்மை வடிவை அடைய மாட்டார்கள்.

**75. ஆதலால் விவேகி ஆனோர் அனைத்து உபாயத்தி னாலும்**
**தீதுஇலாத் தற்சொ ரூபம் தெரிந்துபந் தம்வி டுக்க**
**நீதியாய்த் தாங்கள் தாமே நித்தமும் முயல வேண்டும்**
**ஓதுரோ காதி நீக்கம் முயன்றிடு நீதி யேபோல்.**

இக்காரணங்களால் தமக்கு வந்த நோய் நீங்குவதற்காக ஒவ்வொருவரும் தாமே முயல்கின்ற முறையைப் போல ஆன்ம அனான்ம விவேகம் பெற்றவர்கள் அனைத்து வழிகளினாலும் குற்றம் அற்ற தன் உண்மை வடிவினை நன்கு அறிந்து பிறவி நோயைப் போக்க முறையாக நிதமும் தாங்களே முயற்சிளைத் மேற்கொள்ள வேண்டும்.

**76. பாத்திரன் ஆன மைந்தா பகர்ந்திடு நின்வி னாவல்**
**சாத்திர ஞானி கட்குச் சம்மதம் ஆகி மேலாய்ச்**
**சூத்திரம் ஒத்தது ஆகிச் சூக்குமப் பொருள்உ டைத்தாய்க்**
**காத்திரம் எடாமு முட்சு கருதிடத் தக்கது ஆகும்.**

நல்ல தகுதிகள் வாய்ந்த மைந்தனே. நீ கேட்ட வினா பல நூல்களைக் கற்று அறிந்த அறிவாளிகள் ஒப்புக் கொள்ளத் தக்கது ஆகியும், சிறப்புற்றது ஆகியும், சூத்திரம் போலச் சில எழுத்துக்களைக் கொண்டது ஆகியும், நுட்பமான பொருள் உடையதாகியும் இருந்து, சரீரத்தை எடுக்க விரும்பாத முமுட்சுவால் எண்ணத் தக்கது ஆகும்.

77. **புரிந்தஇவ் வினவ லுக்குப் பொருந்திய உத்த ரத்தைப்**
**பரிந்துநாம் இன்று உனக்குப் பகருவம் பவபந் தத்தால்**
**வருந்திய நீயி வற்றை மனத்தின்ஏ காக்கி ரத்தோடு**
**இருந்துகேள் இவற்றால் பந்தம் ஈதுதான் உடனே நீங்கும்.**

நீ கேட்ட இந்தக் கேள்விகளுக்குப் பொருத்தமான விடையை அன்பு கொண்டு நாம் இன்று உனக்குக் கூறுவோம். சம்சாரத் துன்பத்தால் வருந்திய நீ ஒரே நிலை கொண்ட மனத்தோடு இருந்து இவற்றைக் கேள். நான் கூறும் உண்மைகளால் இந்தப் பிறவி நோய் உடனே அழியும்.

78. **புத்திமான் ஆன மைந்தா பூரண முத்தி சேர**
**நித்தம்இல் லாதது ஆன நிகிலமாம் பொருள்கள் நின்றும்**
**மெத்தவும் விரதி தன்னை மேவுதல் முன்னர் ஏது**
**சித்தம்ஆர் சாந்தி தாந்தி திதிட்சையும் பின்னர் ஏது.**

நுண்மையான அறிவுடைய மைந்தனே, எங்கும் நிறைந்த பிரம்ம வடிவினை அடைய நிலை இல்லாதது ஆன, அனைத்து உலகப் பொருள்களில் இருந்தும் வைராக்கியத்தை மிகவும் அதிகமாக மேற் கொள்ளுதல் முதலாவது காரணம் ஆகும். பின்னர் மனத்தைப் பற்றி நிற்கும் சாந்தி, தாந்தி, திதிட்சை ஆகிய இவைகள் காரணம் ஆகும்.

79. **பின்புதன் கன்மம் யாவும் பேணியே துறப்பது ஏது**
**பின்புவே தாந்த அர்த்தம் பிறங்கவே கேட்டல் ஏது**
**பின்புதான் கேட்ட அர்த்தம் பிரித்துஉணர் மனனம் ஏது**
**பின்புஇடை விடாமல் என்றும் பேணிய தியானம் ஏது**

பின்னர் தனக்கு உரிய கடமைகளைச் செய்தபின் அவற்றில் பலனை துறப்பதே காரணம் ஆகும். பிறகு வேதாந்தத் தொடர்களின் பொருளை நன்கு விளக்கமாகக் கேட்பது அதற்குக் காரணம் ஆகும். பிறகு தான் கேட்ட பொருளை நன்கு விளக்கமாகக் கேட்பது காரணம் ஆகும். பிறகு தான் கேட்ட பொருளைப் பிரித்து அறியும் சிந்தனை அதற்குக் காரணம். பிறகு இடைவிடாது அப்பொருளைத் தியானம் செய்தல் அதற்குக் காரணம் ஆகும்.

80. **சத்திய நிர்வி கற்ப சமாதியால் அமைவ தான**
**வத்துவின் சாட்சாத் கார வலியினால் பரமா னந்த**
**முத்தியை இவ்வி டத்தே முமுடசுதான் பெற்று நிற்பன்**
**உத்தம முத்தி சேரும் ஒழுங்குஇதே உண்மை ஈதே.**

உண்மையான நிர்விகல்ப சமாதியால் ஏற்படுகின்ற ஆத்மாவின் அனுபவ வலிமையால் இந்த உலகத்திலேயே வீடுபேறு பெற விரும்புவோன் மேலான ஆனந்த வடிவான முத்தியைப் பெற்று நிற்பான். சிறந்த வீடுபேறு பெறுகின்ற நல்வழி இதுவே ஆகும். இதுவே உண்மையும் ஆகும்.

**81. விரிவுறும் ஆன்மஅு நான்ம விவேகம் யாதுஉறுதி ஆக**
**அரியனே இன்று நின்னால் அறிந்திடத் தக்கது அத்தை**
**உரைசெயக் கேட்டு நன்றாய் உளத்தினுள் தரிஅு வற்றில்**
**புரைஅநான் மாவை முன்னம் புகலுவாம் பொருந்திக் கேளாய்.**

சிறந்தவனே, எங்கும் நிறைந்த ஆன்மாவையும் ஆத்மா அல்லாத பொருளையும் பிரித்து அறியும் விவேகம் யாதோ? அது இப்போது உன்னால் நன்றாக அறிந்து கொள்ளத் தக்கது ஆகும். அதனை நான் மொழிய நீ கேட்டு உன் மனத்தில் நன்கு பதிய வைத்துக் கொள். அந்த ஆத்மா, அநாத்மா இவற்றில் அழியும் ஆத்மா அல்லாத பொருளைப் பற்றி முதலிலே சொல்வோம். கவனத்துடன் கேட்பாயாக.



# அநாத்ம இயல்

82. மச்சைமே தசுள லும்பு மாமிசம் உதிரம் சர்மம்
இச்சைசெய் சுக்கி லம்இவ் ஏழுதா துக்கள் உற்றுஇவ்
உச்சமாம் சிரசு பாதம் ஊருகை முதுகு மார்புஎன்று
இச்சட அங்கோ பாங்கம் யாவையும் இசைந்தது ஆகி.

இந்த சரீரம் கொழுப்பு, இளங்கொழுப்பு, எலும்பு, சதை, இரத்தம், தோல் ஆகியவைகளும், காமத்தினால் தோன்றும் வீரியமும் ஆகிய ஏழு பொருள்களுடன் பொருந்தி, மேலே உள்ள தலை, கால், தொடை, கை, முதுகு, மார்பு என்ற சடமான இந்த அங்கங்களோடும், குதிகால், முழங்கால், இடுப்பு முதலான அனைத்துத் துணை அங்கங்களோடும் பொருந்தி உள்ளது.

83. இயான்எனது என்ன எங்கும் யாவரும் அறிவது ஆகினூ
ஈனமாம் மோகம் எல்லாம் இருப்பதற்கு இடமே ஆன
ஊனமாம் இவ்வு டம்பே ஒன்றிய தூல தேகம்
ஆனதுஎன்று உரைப்பர் மைந்தா அகிலமும் அறிந்த மேலோர்.

மைந்தா. அனைத்து நூல்களையும் அறிந்த பெரியோர்கள் யான், எனது என்றும், எப்போதும் அனைவராலும் அறியப் படுவது ஆகி விளங்கும், மிக இழிந்த மயக்கத்திற்கு இடமான குற்றமான இந்த சரீரமே சீவனுடன் பொருந்தி தூலசரீரம் என்று கூறுப்படும்.

84. சுத்திய வானம் ஆதி சூக்குமப் பஞ்ச பூதம்
புத்திர ஒன்றில் ஒன்று புகுந்துபஞ் சீக ரித்து
மெத்தவும் தூலம் ஆகி மேவிய தூல ஆக்கைக்கு
ஒத்தகா ரணம்அ தாக ஒன்றிடும் மற்றும் கேளாய்.

புதல்வனே, அனைத்துப் பொருள்களையும் சூழ்ந்து உள்ள ஆகாசம் முதலான சூட்சுமமான ஐந்து பூதங்களும் ஒன்றுடன் ஒன்று சேர்ந்து பஞ்சீ கரணம் என்ற முறையில் கலந்து மிகவும் காலம் ஆகி, நாம் அடைந்துள்ள தூல சரீரத்திற்குப் பொருத்தமான காரணமாய் விளங்கும். மேலும் கேட்பாயாக.

**85. மருவிய பஞ்ச பூத மாத்திரை ஐந்தும் எங்கும்**
**புரிவிசெய் சத்தம் ஆதிப் புலன்களாய்ச் சீவ ருக்குக்**
**கருதிய சுகம்அ ளிக்கக் காரணம் போலத் தோன்றும்**
**பரவிய அவைகள் தம்மைப் பற்றினோர் கெடுவ தைக்கேள்.**

ஐந்து பூதங்களிலும் உள்ள ஐந்து குணங்களும் அனைத்து இடங்களிலும் விருப்பத்தை உண்டாக்கும். ஒலி, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்ற ஐந்து புலன்கள் ஆகி, உயிர்கள் விரும்பிய இன்பத்தைத் தருவதற்குக் காரணமாக இருப்பன போல் தோன்றும். துன்பம் தரும் என்று பெரியோர் கூறிய அப்புலன்களை உறுதியாக பற்றிக் கொண்டோர் கெடுவதை நீ அறிவாய்.

**86. பேசிய புலன்கள் தம்மில் பேதையாம் எந்த மூர்க்கர்**
**ஆசையாம் பாசத் தாலே அழுந்தவே கட்டுண் டாரோ**
**தூசுறு தங்கள் கன்மத் தூதனால் இழுக்கப் பட்டு**
**வீசசே கீழும் மேலும் வெறிதுஅவர் அலைந்து சோர்வர்.**

கூறிய புலன்களில் நல்லறிவு இல்லாத எந்த மூடர் ஆசைக் கயிற்றினால் இறுக்கிக் கட்டப் பெற்றாரோ அவர் தங்களது தீச்செயல் என்னும் குற்றம் வாய்ந்த தூதுவனால் விரைவாக இழுக்கப் பெற்று, கீழ் உலகிலும் மேல் உலகிலும் வீணாக அலைந்து களைத்துப் போவர்கள்.

**87. உலவுமான் யானை விட்டில் ஊருமீன் வண்டுஇவ் ஐந்தும்**
**ஒலிமுதல் புலன்ஒன்று ஒன்றில் உவந்ததால் இறக்கும் ஆகில்**
**புலன்இவை ஐந்தி னும்மால் பொருந்திய புருடன் சேரும்**
**பலவிதத் துன்பம் தன்னைப் பகர்ந்திட முடியு மோசொல்.**

காடுகளில் திரியும் மான், யானை, விட்டில் பூச்சி, நீரில் செல்லும் மீன், வண்டு ஆகிய இந்த ஐந்து உயிர்களும் ஓசை முதலிய விடயங்களில் ஒவ்வொன்றை விரும்பியதால் உயிரை விடும். இவ்வாறு ஆனால் இந்த ஐந்து புலன்களோடும் சேர்ந்து இருக்கும் சீவன் அடையும் பலவிதத் துன்பங்களையும் இவ்வளவு என்று கூற இயலுமோ? நீயே சொல்.

**88. தவ்விய புலன்அ னைத்தும் தன்னுடைத் துகளி னாலே**
**வெவ்விய கருநா கத்தின் விடத்தினும் கொடிதே ஆகும்**

**கவ்விய அவ்வி டந்தான் கடித்தல் உற்றவனைக் கொல்லும்**
**தவ்விய புலன்க ணால்பார்த் தவரையும் கொல்லும் அன்றோ.**

சீவரை இறுகப் பற்றிக் கொள்ளும் ஐந்து புலன்களும், தம்முடைய தீய செயல்களால், கொடிய கருநாகப் பாம்பின் நஞ்சை விடக் கொடியது ஆகும். உடலை அடைந்த அந்த நஞ்சு பாம்பால் கடிபட்டவனையே கொல்லும். கெடுக்கின்ற புலன்கள் கண்களால் பார்த்தவரையும் கொன்றுவிடும் அல்லவா?

89. **பரவிய புலன்கள் தம்மைப் பற்றிய ஆசை ஆகும்**
**உரவிய மாபா சத்தை உள்ளவாறு அறுத்த வன்தான்**
**அருமையாம் முத்திப் பேற்றை அடைந்திடச் சதுரன் மற்றோன்**
**கருதிய வாறு நூல்கள் கற்கினும் சதுரன் அன்றால்.**

ஐம்புலன்களை அனுபவிக்க வேண்டும் என்னும் விருப்பம் ஆகிய வலிய பெருங்கயிற்றினை நன்றாக அறுத்தவனே கிடைத்தற்கு அரிய வீடுபேற்றை அடைவதற்கு உரிய வீடுபேற்றை அடைத் தகுதி வாய்ந்தவன் ஆவான். அவ்வாறு இல்லாதவன் தான் கருதிய ஆறு நூல்களை (சாங்கிய தர்சனம், யோக தர்சனம், வைசேஷிக தர்சனம், தர்க்க தர்சனம், பூர்வ மீமாம்ச தர்சனம், உத்தர மீமாம்ச தர்சனம்) நன்கு கற்று இருந்தாலும் அவன் வீட்டைப் பெறத் தகுதி அற்றவனே.

90. **திடம்இலா விரதி யோடே தீர்க்கமாம் பவம் ஆகின்ற**
**கடல்உடைக் கரையில் எறக் காதல்செய் முமுட்சு தன்னை**
**அடரும்மா நக்கரந்தான் அவனுடைக் கண்டத்து ஈழ்த்துக்**
**கடல்உடை மத்தியத்தில் கடிதினின் மூழ்க வைக்கும்.**

உறுதியான வைராக்கியம் இல்லாமல் மிக ஆழமான பிறவியாகிய கடலின் கரையை அடைய விரும்பும் முமுட்சுவை விடய ஆசைஆகிய பெரிய முதலை அவனுடைய கழுத்தைப் பற்றி இழுத்து அக்கடலின் நடுவில் விரைவாக முழுகும்படி செய்யும்.

91. **ஆதலால் விடய ஆசை ஆகிய நக்க ரத்தை**
**யாதொரு முமுட்சு ஆனோன் இலங்கிய விவேகம் ஆகும்**
**கோதுஇலா அசியி னாலே கொய்வன்அன் னவனே யாதும்**
**வாதகம் இலாமல் இந்த வாரிதி கடக்க வல்லோன்.**

ஆதலால் விடய ஆசை ஆகிய முதலையை எந்த முமுட்சு மிகச் சிறந்த விவேகம் ஆகிய குற்றமில்லாத வாளினால் அழிப்பானோ, அவனே சிறிதும் தடங்கல் இல்லாமல் இந்தப் பிறவிக் கடலைத் தாண்டும் திறமை உயையவன் ஆவான்.

**92. சுத்தமாம் புத்தி இன்றிச் சூழ்புலன் நெறியில் சென்றோன்**
**மெத்தவும் துன்பம் துஞ்சல் மேவுவன் மேலும் மேலும்**
**உத்தம புத்தி யோடே உயர்ந்தவன் ஆசான் சொல்லி**
**வைத்தநல் னெறிநடந்தோன் வரமான பயனே சார்வன்.**

தூய்மையான அறிவு இல்லாமல் தன்னைச் சூழ்ந்துள்ள விடயங்களை நுகருவதில் ஈடுபட்டவன், மேன்மேலும் துன்பங்களையும் மரணத்தையும் அடைவான். சிறந்த அறிவொடு நல்லொழுக்கம் உடையவன், குரு கூறிய நல் வழியில் ஒழுகுபவனாகி மேலான மயன்களைப் பெறுவான்.

**93. நிச்சயம் ஈதே மைந்தா நினக்குநன் முத்திசோ**
**இச்சையே இருக்கும் ஆகில் இப்புலன் அனைத்தை யும்நீ**
**துச்சமாம் விடத்தைப் போலத் தூரவே போகத் தள்ளி**
**உச்சமாம் நற்குணத்தை ஒழிவற உவந்த சார்வாய்.**

முத்தி அடைய உனக்கு விருப்பம் இருக்கும் ஆனால், நீ இந்த விடய நுகர்வுகளை எல்லாம் அற்ப விழத்தைப் போல தொலைவில் விட்டுவிடு. உயர்ந்த நல்ல குணங்களை விரும்பி எப்பொழுதும் மேற்கொள்வாய். மைந்தனே, இதுவே நிச்சயமாகும்.

**94. நித்தமும் அருள் களிப்பு நேர்நடை பொறுமை மற்றும்**
**சுத்தமாம் சாந்தி தாந்தி சூக்கநூல் உரைத்த மற்ற**
**உத்தம குணம் அனைத்தும் ஓங்கிய சுதையைப் போலப்**
**புத்திர அன்பினோடே புந்தியில் பொருந்து வாயே.**

சீடனே, தினந்தோறும் கருணை, சந்தோஷம், நேர்மையான ஒழுக்கம், பொறுமை முதலியவற்றையும், மேலும் மனவடக்கம், பொறியடக்கம், சிறந்த நூல்கள் கூறும் பிற மேலான குணங்கள் அனைத்தையும், சிறந்த அமுதத்தைப் போல ஊக்கத்துடன் உன்னுடைய புத்தியை ஈடுபடச் செய்வாய்.

**95. சாதுவே சந்ததம்நீ சகலகா ரியமும் விட்டே**
**ஆதிஇல் லாஅ வித்தை ஆக்கிய பந்தம் தன்னின்**
**கோதுஇலா முத்தி தன்னைக் குறைவறத் தேடுவாய்இல்**
**ஏதமாம் தேகம் தன்னை எவளவும் நம்பிடாதே.**

சாதுவே, நீ எப்போதும் எல்லாச் செயல்களையும் துறந்து, அநாதியான அவித்தையினால் ஆகிய பந்தத்திலிருந்து விடுபடுவாய். குற்றமே இல்லாத முத்தியை முழுமையாகத் தேடி அடைவாய். இந்தத் துன்பம் தரும் சரீரத்தை சிறிதளவும் நான் என நம்பாமல் இருப்பாயாக.

**96. மோதிய இந்தத் தேகம் முடிவிலே பரார்த்த மேயாம்**
**ஈதினை யாவன் காப்ப இச்சைசெய்து அபிமா னிப்பன்**
**ஓதிய அவன்தே கத்தில் ஒன்றிய அபிமா னத்தால்**
**கோதுஇலாத் தன்ஆன் மாவைக் குமரனே கொன்ற வன்தான்.**

குழந்தாய், இன்ப துன்பங்களுடன் மோதும் இந்த சரீரம் முடிவில் பிறருக்காகவே இருப்பது ஆகும். இந்த சரீரத்தை எவன் பாதுகாக்க விரும்பி இதில் அபிமானம் கொள்வானோ அவன் கூறிய சரீரத்திலே தான் என வைத்த மயக்க எண்ணத்தால், குற்றம் இல்லாத ஆன்மாவை அழித்தவன் ஆவான்.

**97. மருவிய தேகம் காக்கும் மதிஉடைத்து ஆகி யாவன்**
**அருமையாம் ஆன்ம ரூபம் அறிந்திடக் காதல் செய்வன்**
**உரவிய நக்க ரத்தை ஒன்றிய தெப்பம் என்று**
**கருதியே கடக்க அன்னோன் காதல்செய் கின்ற வன்தான்.**

எவன் தன்னுடைய சரீரத்தை பாதுகாக்கும் எண்ணம் உடையவன் ஆகி, அரிய ஆத்ம வடிவினை அறிய விரும்புகிறானோ அத்தகையவன் வலிய ஒரு முதலையைப் பொருத்தமான தெப்பம் என்று எண்ணி, அதனால் நதியைத் தாண்ட விரும்புகின்றவன் போல் ஆவான்.

**98. தேகமே ஆதி யான திரளிலே தியங்கா நின்ற**
**மோகமே பெரிய காலன் முமுட்சுவாம் புருட னுக்குச்**
**சோகம் ஆர்அம் மோகத்தைச் சுத்தமாய் வென்ற வன்தான்**
**ஏகமாம் முத்திப் பேற்றை எய்திடச் சதுரன் ஆனோன்.**

சரீரம் முதலிய பொருள்களிலே மயக்கமாக வந்துள்ள மோகமே வீடு பெற விரும்புவோனுக்கு எமன் ஆகும். துன்பம் தரும் அந்த மோகத்தை அடியோடு அழித்தவனே ஒன்றாக இருக்கும் வீடு பேற்றை அடைவதற்குத் திறமை உடையவன் ஆவான்.

**99. மோகம்யா தினைமுன் உள்ள முனிவர்கள் வென்று நன்றாய்**
**ஏகபூ ரணஆன் மாவின் ஏத்திய பதம்அ டைந்தார்**
**தேக தாரமசு தாதித் திரளிலே இசைந்த அந்த**
**மோகமா காலன் தன்னை முழுதும் வென்றுஅப் பதம்சேர்.**

முற்கால முனிவர்கள் எந்த மோகத்தை நன்கு அழித்து உயர்ந்த எங்கும் நிறைந்த ஒன்றான ஆன்மாவின் பதத்தை அடைந்தார்களோ அந்த சரீரம், மனைவி, புதல்வன் முதலிய கூட்டத்தில் பொருந்திய அந்த மோகம் ஆகிய பெரிய எமனை மிச்சம் இன்றி அழித்து அடைவாய்.

**100. மெத்திய தொக்கு மேதை மேதசு மச்சை அத்தி**
**சுத்திய நரம்புஇ ரத்தம் சுழல்மல மூத்தி ரங்கள்**
**இத்தனை வகைநி ரம்பி இருக்கும்இத் தூல தேகம்**
**இத்தினும் வைய கத்தில் இகழ்ந்திடும் பொருள்வேறு உண்டோ.**

மிகுதியான தோலும் சதையும் கொழுப்பும், ஊன் நீரும் எலும்பும், உடலைச் சூழ்ந்து இருக்கும் நரம்புகளும், இரத்தமும், நாற்றம் உள்ள மலமும், நீரும் இவ்வளவு பொருள் களும் இப்பரு உடலில் நிரம்பி இருக்கும். பூமியில் இதனைக் காட்டிலும் வெறுக்கத் தகுந்த பொருள்கள் உண்டோ. இல்லை.

**101. முந்திய கன்மத் தாலே முன்சொன தூல பூதம்**
**தந்தஇத் தூல தேகம் தடைஇலா ஆன்மா வுக்குத்**
**தொந்தபோ கம்பு சிக்கத் தொடர்ந்தஓர் இடமே ஆகும்**
**இந்தஆக் கையின் அவத்தை இலங்குசாக் கிரமே ஆகும்**

முன்பு கூறிய தூலமான ஐந்து பூதங்களில் இருந்து முற்பிறவிகளில் செய்த வினைகளினால் ஏற்பட்டது இந்த தூல சரீரம். சீவான்மாவிற்கு உலகபோகங்களை தடையின்றி அனுபவிக்க அமைந்த ஓர்இடமாகும். இந்த தூல சரீரத்தில் போக அனுபவம் நிகழ்கின்ற நிலை சாக்கிரம் ஆகும்.

**102. பெருகிய கந்தம் மாலை பெண்முதல் விவித தூலப்**
**பொருள்களின் போகம் தன்னைப் புறத்துஉள பொறிக ளாலே**
**கருதும்இத் தேகத் தோடே கவ்வுதா தான்மி யத்தால்**
**பரவிய ஆன்மா உண்ணும் பகர்ந்தசாக் கிரம்ஈ தேயாம்.**

மணம் கமழும் சந்தன மலர் மாலை பெண் முதலிய பல வகையான தூலமானப் பொருள்களின் போகத்தை சரீரத்தில் இருக்கும் சீவாத்மா இழிவாகக் கருதும் இந்த சரீரத்துடன் பொருந்திய நான் என்ற மயக்கத்தால், வெளிப்பொறிகளின் உதவியால் அனுபவிக்கும் மேலே கூறிய சாக்கிர நிலை இதுவே ஆகும்.

**103. ஆகையால் சாக்கி ரத்தில் அறியலாம் இந்தத் தேகம்**
**வாகிய பவம்அ னைத்தும் வந்தது புருடர்க்கு இத்தால்**
**ஆகும்ஓர் இல்வாழ் வோனுக்கு அமைந்தஓர் இல்லாம் போலப்**
**போகஆ லயமே ஆகும் புகல்உடல் ஆன்மா விற்கே.**

ஆதலால் இந்த தூல சரீரம் சாக்கிர நிலையில் உள்ளது என்று அறியலாம். இந்த சரீரத்தினாலேயே சீவனுக்கு வெளியிலே உள்ள சம்சாரம் அனைத்தும் வந்தது ஆகும். இல்லறத்தான் ஒருவனுக்கு இருப்பிடமாக போக துகர்விற்கான இடமே ஆகும்.

**104. ஓதிய இத்தே கத்திற்கு உற்பவம் சரைம ரித்தல்**
**சாதுவே பெருத்தல் ஆதி சகலமும் தருமம் ஆகும்**
**ஏதமாம் சைச வம்மற்று எய்திய கௌமா ராதி**
**யாதுமே இத்தே கத்தில் இசைந்துள அவத்தை ஆகும்.**

நல்லவனே மேலேகூறிய இந்த தூலசரீரத்திற்குப் பிறப்பு, மூப்பு, இறப்பு, பருப்பது முதலிய எல்லா தருமங்களும் இயல்பாக இருக்கும். மேலும் துன்பம் தரும் குழந்தைப் பருவம், குமரப் பருவம் வாலிபப்பருவம், முதலிய யாவும் இந்த சரீரத்தில் அமைந்து உள்ள நிலைகள் ஆகும்.

**105. வன்னம்ஆச் சிரமம் ஆதி வகுப்புஇதன் நியமம் ஆகும்**
**முன்னும் மானஅ வமானம் முதல்இதன் விசேடம் ஆகும்**
**இன்னல்செய் பிணிகள் எல்லாம் இருப்பிடம் இந்தத் தூலம்**
**துன்னிய சூக்க தேகத் தொடர்பினை இனிஇ சைப்பாம்.**

நான்கு வர்ணங்கள், நான்கு ஆச்சிரமங்கள் ஆகிய பருப்புகள் இந்த தூல சரீரத்திற்கு பொருந்திய நியமம் ஆகும். மானம், அவமானம் முதலாக எண்ணுகின்றவைகளும் இந்த சரீரத்திற்கு உரிய இயல்புகள் ஆகும். இந்ததூலசரீரம் துன்பம் தரும் அனைத்து நோய்களும் தங்கும் இடம் ஆகும். இனிமேல் தூலசரீரத்துடன் நெருங்கிய சூக்கும சரீரத்தின் இயல்புகளைக் கூறுவோம்.

**106. சிரவணம் தொக்குச் சட்சுச் சிங்குவை நாசி ஐந்தும்**
**பொருள்களை அறிவ தாலே போதஇந் திரியம் ஆகும்**
**பரவிய வாக்குப் பாணி பாத பாயுருவு பத்தம்**
**கருமமே செய்வ தாலே கருமஇந் திரியம் ஆகும்.**

சுரோத்திரம், துவக்கு சட்சு சிங்கவை, ஆக்கிராணம் ஆகிய இவை ஐந்தும் பொருள்களை அறிவதாலே ஞானேந்திரியங்கள் எனப்படும். சரீரத்திலே பரவி உள்ள வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபத்தம் ஆகிய ஐந்தும் செயல்களைச் செய்வதால் கன்மேந்திரியங்கள் எனப்படும்.

**107. துன்னும்உள் கரணம் ஒன்றே தோன்றிய விருத்தி யாலே**
**மன்னிய மனது புத்தி மற்றுஅகங் காரம் சித்தம்**
**என்னவே நான்க தாக இசைந்ததாம் எவ்வி டத்தும்**
**பன்னிய இதன்வி ருத்திப் பகுப்பினைப் பகரக் கேளாய்.**

சரீரத்தினுள் பொருந்திய அந்தக் கரணம் ஒன்றே. தன்னிடம் தோன்றிய விருத்திகளாலே பெருமை வாய்ந்த மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் நான்கு வகையாகப் பொருந்தி உள்ளது. எல்லா இடங்களிலும் மேலே கூறிய இந்த அந்தக் காரணத்தின் செயல் வேறு பாட்டினை நான் கூறக் கேள்.

**108. விரிவுறு சங்கற்ப ஆதி விருத்தியால் மனம்இது ஆகும்**
**பொருள் உணர் நிச்ச யத்தால் புகன்றபுத் தியும்இது ஆகும்**
**பரவிய அபிமா னத்தால்பகர்அகங் கரமும் ஈதுஆம்**
**பொருள்அனு சந்தா னத்தால் புகன்றசித் தமும்ஈது ஆமே.**

அப்படியோ இப்படியோ என்று எண்ணுதல், சந்தேகப்படுதல் முதலியனவாக விரிவதால் இது மனம் ஆகும். பல பொருள்களை நிச்சயமாக அறிவதால் சொல்லும்

புத்தியும் இதுவே ஆகும். சபரத்தில் பரவிய நான் என்னும் அபிமானத்தினால் அனைவராலும் கூறப்படும் அகங்காரமும் இதுவே. தான் அனுபவித்த பொருளைப் பற்றி எண்ணுவதால் அனைவராலும் இது சித்தம் என்று கூறப்படும்.

**109. விரிவுஉறும் பிராணன் ஒன்றே விருத்தியின் பேதத் தாலே**
**பரவிய பிராணஅ பாநன் பகர்வியா நன்உ தாநன்**
**உரவிய சமாநன் ஐந்தாம் உதகசொன் மதி தானோ**
**பரவிய விருத்தி யாலே பலவிதம் ஆவ தேபோல்.**

சூட்சும சரீரத்தில் ஒரே வாயுவே தன்னுடைய செயல் வேறுபாடுகளினால் பரவிநிற்கும் ப்ராணன் என்றும் அபாநன் என்றும் வியாநன் என்றும், உதாநன் என்றும் வலிமை மிக்க சமாநன் என்றும் ஐந்து விதமாக ஆகும்.

**110. சிரவணம் ஆதி ஐந்தும் செறிந்தவாக்கு ஆதி ஐந்தும்**
**வருபிராணாதி ஐந்தும் மருவும்வான் ஆதி ஐந்தும்**
**இருதயம் ஆதி நான்கும் எய்திய அவித்தை காமம்**
**பரவுகன் மம்இவ் எட்டும் பகர்புரி அட்ட கம்காண்.**

சூட்சும சரீரத்திலே பொருந்திய சுரோத்திரம் முதலிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாக்கு முதலிய கன்மேந்திரியங்கள் உள்ளும்புறமும் சென்று வரக் கூடிய பிராணன் முதலிய வாயுக்கள் ஐந்தும், நுட்பமாய் எங்கும் பரவி இருக்கும் ஆகாசம் முதலிய சூட்சுமபூதங்கள் ஐந்தும். மனம். புத்தி, அகங்காரம், சித்தம் ஆகிய நான்கும், பொருந்திய அவித்தை, காமம் நல்வினை தீவினைகைள் ஆகிய இந்த எட்டும் கூறுகின்ற புரியட்டகம் (எட்டின் கூட்டம்) என்று அறிக.

**111. ஈதுதான் சூக்க தேகம் ஈதுஅ பஞ்சீக ரித்த**
**பூதமே தந்தது ஆகும் பொருந்துவா தனைஉ டைத்தாம்**
**சாதம்ஆர் கன்ம போக சாதனம் ஆன்மாவிற்கு ஈது**
**ஓதிய அஞ்ஞூழ னம்செய் உபாதியாம் அநாதி ஈதுஆம்.**

இதுதான் சூட்டிமசரீரம் ஆகும். இந்த சரீரம் பஞ்சீகரணம் ஆகாத ஐம்பூதங்களும் உண்டாக்கியது ஆகும். பல பிறவிகளில் உண்டான வாசனைகளை உடையது ஆகும். சரிரம் வினைகளைச் செய்து அவற்றின் பயன்களை நுகர்வதற்குக் கருவி ஆகும்.

ஆன்மாவிற்கு இன்னதுஎன விளக்க இயலாதது என்று கூறிய மாயையால் உண்டான உபாதி ஆகும். இந்த சரீரம் என்போது தோன்றியது என்று கூற இயலாததால் அநாதி ஆகும்.

**112. கனவுஇதன் அவத்தை யாம்இக் கனவினில் உள்ளம் ஒன்றே**
**நனவுகா லத்துஅ நேக நாடுவா தனைக ளாலே**
**தனியதாய்க் கர்த்தி ராதித் தன்மையை அடைந்து தோன்றும்**
**சொனஅவத் தையிலே ஆன்மா சுத்தசிற் சோறி ஆகும்.**

இந்த சூட்சுமசரீரத்தின் நிலை சொப்பன நிலை ஆகும். இந்த சொப்பனத்தில் மனம் ஒன்று மட்டும் தனியாக இருந்து கொண்டு சாக்கிரத்திலே பல பொருள்களை நுகர்ந்த வாசனைகளால் செய்தல், அனுபவித்தல் முதலிய இயல்புகளைப் பெற்றது போல் தோன்றும் கூறிய சொப்பனத்தில் தூயதான அறிவு வடிவான ஆத்மா சுயமாய் பிரகாசித்துக் கொண்டு விளங்கும்.

**113. சருவசான் றான ஆன்மா சாற்றிய அவத்தை தன்னில்**
**ஒருமனோ மாத்தி ரத்தை உபாதியாய் உடைத்தாய் அங்குப்**
**பரவிய பாவம் ஆதிப் பலவித கன்மத் தோடும்**
**மருவிடான் தானே ஆக மாசுஅற இலங்கா நிற்பன்.**

அனைத்திற்கும் சாட்சியாக இருக்கும் ஆன்மா, மேலே கூறிய சொப்பனத்தில் மனத்தை மட்டும் உபாதியாகக் கொண்டு அங்கு தீவினை முதலிய பலவித செயல்களையும் சிறிதும் அடையாது குற்றமின்றி தானே சுயம் பிரகாசமாய் விளங்குவான்.

**114. யாதினால் இந்த ஆன்மா என்றுமே அசங்கம் ஆகும்**
**ஆதலால் அவத்தை ஈதில் அம்மன உபாதி யாலே**
**சாதமாம் கன்மம் எல்லாம் சற்றுமே சார மாட்டாது**
**ஆதியாம் சோதி ஆகி அகிலமும் விளக்கி வைக்கும்.**

சாட்சியாக இருக்கும் காரணத்தினால் இந்த ஆன்மா எப்போதும் எப்பொருள் களுடன் தொடர்பு அற்று இருக்கும். ஆகையால் இந்த சொப்பனத்தில் அந்த மனத்தை உபாதியாகக் கொண்டு செய்கின்ற அனைத்துச் செயல்களையும் சிறிதும் பொருந்தாது. சுயம் பிரகாசமாய் இருந்து கொண்டு அனைத்துப் பொருள்களையும் விளங்கச் செய்யும், காரணமாய் இருக்கும்.

**115.** **அறிவுறும் ஆன்மா விற்குஇங்கு அகிலமாம் தொழிலும் செய்யச்**
**செறியும்இச் சூக்க தேகம் சேர்ந்தஓர் கரணம் ஆகும்**
**முறிஉளி வாச்சி ஆதி முற்றும்ஓர் தச்ச னுக்குஇங்கு**
**உறுதொழில் யாவும் செய்ய ஒன்றிய கரண மேபோல்.**

அறிவு வடிவமான ஆன்மாவிற்கு இவ்வுலகில் அனைத்துத் தொழில்களையும் செய்ய தச்சு வேலை செய்யும் ஒருவனுக்கு இங்கே உளி, வாள் தேய்ப்பதற்கு வாச்சி முதலிய அனைத்துக் கருவிகளும் அவனுடைய தொழிலைச் செய்வதற்கான கருவிகளைப் போலப் பல பொருள்கள் சேர்ந்த இந்த சூட்சும சரீரம் பொருந்திய ஒரு கருவி ஆகும்.

**116.** **ஓதிய கரணம் தானே உள்ளகன் மங்கள் எல்லாம்**
**நீதியாய் ஆன்மா முன்னர் நித்தமும் செய்வ தாலே**
**சாதுவே சகலத் திற்கும் சாட்சியாம் ஆன்மா எந்தப்**
**போதுமே அசங்கள் ஆகும் பொருந்திடாது ஒருவி காரம்.**

சாதுவே, முன்னர்க் கூறிய மனம் முதலிய கருவிகள் தம்மால் செய்ய முடிந்த அனைத்துச் செயல்களையும் முறையாக ஆத்மாவின் முன்னிலையில் எப்போதும் செய்வதால் ஆத்மா கரணங்களின் அனைத்துத் தொழில்களுக்கும் சாட்சியாக இருக்கும். எப்போதும் தொடர்பற்று இருக்கும். எவ்வித மாறுபாட்டினையும் அடைய மாட்டாது.

**117** **மெத்தவும் பார்க்கும் தன்மை மெதுவதாய்ப் பார்க்கும் தன்மை**
**சுத்தமாய்ப் பாராத் தன்மை சுழன்றகண் குணதோ டத்திற்கு**
**ஒத்ததாய் வருவ தாலே உரைத்தவை கண்ணின் தாமம்**
**சுக்கமாம் ஆன்மா விற்குச் சொன்னவை கர்மம் ஆகா**

நன்கு பார்க்கும் தன்மையும் மந்தமான பார்வையும் முழுதுமாய்ப் பார்க்க இயலாத தன்மையும், அசையும் கண்களின் குற்றத்திற்கும் குணத்திற்கும் ஏற்றபடி வருவதால் மேற் சொல்லிய பார்வைகள் கண்களின் இயல்பான தன்மை ஆகும். மேற் கூறிய கண்ணின் இயல்புகள் தூய ஆத்மாவிற்கு இயல்புகள் ஆகா.

**118.** **ஈதுபோல் செவிட்டுத் தன்மை எய்திய மூகத் தன்மை**
**ஆதிய சோத்தி ராதி அடைந்ததர் மங்கள் ஆகும்**
**போதபூ ரணமாய் யாதும் பொருந்திடா ஆன்மாவிற்கு இங்கு**
**ஓதிய விகாரம் எல்லாம் ஒன்றிய தர்மம் அன்றால்.**

இந்தக் கண்களின் இயல்பைப் போல ஒருவனுக்கு உண்டான செவிட்டுத் தன்மை, ஊமைத் தன்மை முதலியவைகள் சுரோத்திரவோக்கு முதலியவற்றின் இயல்புகள். நிறைந்த அறிவுடன் எவ்வியல்புடனும் சேராத ஆன்மாவிற்கு இங்கு கூறிய அனைத்து இந்திரியங்களின் இயல்புகளும் பொருந்திய தர்மங்கள் ஆக மாட்டா.

**119. பின்னும்உள் புறம்ஆர் மூச்சுப் பெற்ற கொட்டாவி தும்மல்**
**மன்னிய மரணம் ஆதி மற்றுஉள சலனம் யாவும்**
**துன்னும் பிராணாதி தர்மம் துயர்தரு பசிதா கங்கள்**
**பன்னிய பிராணன் ஒன்றின் பரவுதர் மங்கள் ஆகும்.**

மேலும் உள்ளேயும் வெளியேயும் பொருந்தி உள்ள மூச்சும் பெற்ற கொட்டாவியும், தும்மலும், மற்றும் உள்ள வாந்தி பண்ணுவித்தல், இமைத்தல் ஆகிய அசைவுகள் அனைத்தும் பிராணன் தேவதத்தன் முதலிய வாயுவிற்கு உரிய இயல்புகள் ஆகும். துன்பத்தைத் தருகின்ற பசியும், தாகமும் பிராணன் ஒன்றினுடைய தர்மங்கள் ஆகும்.

**120. ஆடும்உள் கரணம் ஒன்றே அமைசிதா பாசத் தோடே**
**கூடிஇச் சட்சு ஆதிக் கூட்டமாம் அவய வத்தில்**
**ஓடிநான் என்ப தாக உரமதாய் அபிமா னிக்கும்**
**பாடும்அவ் அபிமா னந்தான் பகைஅகங் காரம் ஆகும்.**

விடயங்களில் ஓடும் அந்தக் கரணம் மட்டுமே தன்னுடன் அமைந்த பிரதிபிம்ப அறிவுடன் கூடி, இந்தச் சட்சு முதலியவற்றின் கூட்டம் ஆகிய அவயவங்களில் பரவி திடமாக, நான் என்னும் அபிமானத்துடன் இருக்கும். கேடு செய்யும் அந்த அபிமானம் தான் பகையைத் தரும் அகங்காரம் எனப்படும்.

**121. அகங்கரம் கர்த்தா போக்தா அதுவேதான் சத்து ஆதி**
**மிகுந்தமும் குணவ சத்தால் மேவிய அவத்தை மூன்றும்**
**வகுத்துத்தான் அனுபவிக்கும் வந்துஉள விடயம் நன்றேல்**
**சுகிக்கும்அவ் விடயம் தீங்கேல் சோர்ந்திடும் அதுதான் காணே.**

செய்பவனாகவும், அனுபவிப்பவன் ஆகவும் அகங்காரமே உள்ளது. அந்த அகங்காரமே தன்னிடம் மிகுந்துள்ள சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று நிலைகளிலும்

வருகின்ற சுகதுக்கத்தை அனுபவிக்கும். தான் அனுபவிக்கும் பொருள் நல்லதாக இருந்தால் இன்பத்தை அடையும். அந்தப் பொருள் தீயதாக இருந்தால் அது துன்பத்தை அடையும்.

**122. ஆதலால் இன்ப துன்பம் அகங்காரத் தர்ம மேயாம்**
**சாதுவே அகண்ட அனந்த சாகர ஆன்மா விற்குஈது**
**ஏதுமே இல்லை என்றும் எய்திய விடய எல்லாம்**
**ஓதும் ஆன்மாப் பொருட்டால் ஒன்றிடும் பிரிய மாக.**

சாதுவே, அகங்காரமே போகங்களை அனுபவிப்பதால் இன்பமும் துன்பமும் அகங்காரத்தின் இயல்புகள். அளவிட இயலாத ஆனந்தக் கடல் ஆகிய ஆன்மாவிற்கு இன்ப துன்பம் என்றைக்கும் சிறிதும் இல்லை. நாம் அனுபவிக்கும் பொருட்டு அமைந்த அனைத்துப் விடயங்களும் ஆத்மாவின் பொருட்டாகவே பிரியமாக இருக்கும்.

**123. ஓதிய விடயம் தானே உள்ளவா பிரியம் ஆகாது**
**ஏதம்இல் ஆன்மாத் தானே எவர்க்கும்நற் பிரியம் ஆகும்**
**ஆதலால் ஆன்மா என்றும் அகண்டஆ னந்த மேயாம்**
**தூயதாம் ஆன்மா விற்குத் துன்பம்ஓர் காலும் இல்லை.**

விடயங்கள் தானாகவே மிக்க விருப்பத்தைத் தராது. குற்றம் இல்லாத ஆத்மாவே அனைத்து சீவர்களுக்கு நல்ல பிரியத்தைத் தரும் பொருள் ஆகும். ஆதலால் ஆத்மா எப்பொழுதும் அளவற்ற ஆனந்த வடிவாகவே இருக்கும். அது தூய தன்மை உடையதும் ஆகும். ஒரு போதும் ஆத்மாவிற்குத் துன்பம் என்பதே இல்லை.

**124. புரிவுசெய் சுழுத்தி யின்கண் புலன்இலா ஆன்மாஆ னந்தம்**
**திரம்அதா யாவ ராலும் தினம்அனுபவிக்கல் ஆகும்**
**சுருதிதான் பிரத்யட் சம்தான் சொல்லிய ஐதிகம்தான்**
**பரவிய அனுமா னந்தான் பகர்ந்ததில் பிரமா ணங்கள்.**

நல்ல தூக்கத்தில் விடயங்களே இல்லாத போது ஆத்ம ஆனந்தத்தை உறுதியாக அனைவரும் நான் தோறும் அனுபவிப்பர். இப்பொழுது கூறிய ஆத்மா ஆனந்த வடிவம் என்பதில் சுருதி, பிரத்யட்சம் காட்சி, ஐதிகம், அனுமானம் ஆகியன பிரமாணங்கள் ஆகும்.

**125. அரியனே கார ணஆக்கை அடைவுஇனி அறையக் கேளாய்**
**இருள் அவ்வி யத்த மாயை ஏதம்ஆம் அவித்தை பேராய்த்**
**திரிகுண வடிவம் ஆகித் திருசியங்கட்கு மேலாய்ப்**
**பரவியே அநாதி ஆம்ஓர் பரசிவ சத்தி உண்டால்.**

சிறந்தவனே, இனிமேல் காரண சரீரம் பற்றி நான் முறையாகக் கூறுவேன், நீ கேள். ஒப்பற்ற மேலான ஈசுவரனது ஒரு சக்தியானது துன்பம் தரும் அவ்வியத்தம் என்றும், மாயை என்றும், குற்றம் உடைய அவித்தை என்றும் பெயர் உடையதாய் சத்துவம், இராசதம், தாமசம் என்ற முக்குண வடிவு உடையதாய், காணப் பெறும் உலகப் பொருள்களுக்கு முதற் காரணமாய் இருப்பதால் மேலானதாய் அநாதியாய் இருக்கின்றது.

**126. தரணியில் அந்தச் சத்தி தன்னுடைக் காரி யம்கொண்டு**
**அருமையாம் புத்தி மான்கள் ஆகினோர் அநுமா னிக்கும்**
**உருவமாய்ச் சகம்அ னைத்தும் ஒழுங்குறப் படைப்பது ஆகி**
**ஒருவிதம் ஈதுஆம் என்ன உரைத்திட ஒணாதது ஆகும்.**

பூமியில் அந்த மாயை தன்னால் தோன்றும் காரியப் பொருள்களால் சிறந்த அறிஞர்கள் அனுமானம் செய்து அறிந்து கொள்ளும் உருவம் உடையதாய் அனைத்து உலகங்களையும் முறை தவறாமல் உண்டாக்கிக் கொண்டு, இப்பொருள் இப்படிப் பட்டது என்று சொல்லுவதற்கு இயலாததாய் இருக்கும்.

**127. ஈதுசத்து ஆனது அல்ல ஈதுதான் அசத்தும் அல்ல**
**ஈதுமற்று உபயம் அல்ல ஈதுதான் பின்னம் அல்ல**
**ஈதுமற்றுஅ பின்னம் அல்ல ஈதுதான் உபயம் அல்ல**
**ஈதுசா வயவம் அல்ல இதுநிர வயவம் அல்ல.**

இந்த மாயை எப்போதும் இருப்பதும் அன்று. இது இல்லாததும் அன்று. இது சத்து அசத்து இரண்டும் அன்று. இது பிரம்மத்திற்கு வேறானது அன்று. இது பிரம்மத்திற்கு வேறு படாததும் அன்று. இது பிரம்மத்துடன் பின்னம் அபின்னம் என்ற இரண்டையும் உடையது அன்று. இது அவயவங்களோடு கூடியதும் அன்று. இது அவயவங்கள் இல்லாததும் அன்று.

**128. ஈதுமற்று உபயம் அல்ல இதுவிசித் திரமே ஆகி**
**யாதுஇதுஎன்று உணர ஒண்ணா அநிர்வச நீயம் ஆகும்**
**தீதுஇலாப் பரசீ வைக்யத் தெரிவுதான் இதைஅ ழிக்கும்**
**சாதுவே பழுதை ஞானம் சர்ப்பமால் அழிப்ப தேபோல்.**

சாதுவே, இது அவயவமும் அல்ல நிரவயவமும் அல்ல, இது வியப்பைத் தருவதாய், எத்தகையது என்று அறிய இயலாத எப்படிப் பட்டது என்று கூற முடியாதது ஆகும். கயிறு என்று அறிவால் பாம்பு என்ற மயக்ம் அழிவதே போல் உறுதியான சீவப்பிரம்ம ஐக்கியஞானமே இந்த மாயையை அழிக்கும்.

**129. சகலமும் அறிவ தான தன்னுடைக் காரி யத்தால்**
**மிகவும்எங் கும்பிர சித்தம் மேவிய முக்கு ணந்தான்**
**புகல்பரன் சத்திக்கு உண்டு புகன்றஇம் முக்கு ணத்தில்**
**அகல்இரா சதகு ணத்தால் ஆகும்விட் சேப சத்தி.**

அனைவரும் அறியும் தன்னுடைய காரியத்தால் மேவிய எல்லா இடங்களிலும் மிகப்புகழ் பெற்ற ஈசுவரனுடைய மாயைக்கு கூறும் சத்துவம் இராசதம் தாமசம் என்ற மூன்று குணங்களும் உள்ளன. கூறிய இந்த மூன்று குணங்களில் விரிந்த இரசோ குணத்தினால் விட்சேப (சுருங்கி விரியத் தக்க) சத்தி தோன்றும்.

**130. கிரியையே வடிவம் ஆகிக் கிட்டும்ர விருத்தி எல்லாம்**
**தருவதற்கு ஏது வாகத் தங்கும்விட் சேப சக்தி**
**பரவிய காமம் ஆதிப் பலதுயர் ஆதி ஆன**
**இருதய விகாரம் எல்லாம் ஈதினால் இசையும் என்றும்.**

விட்சேபம் என்ற சக்தி ஆனது செயலையே வடிவமாகக் கொண்டு, அனைத்து முயற்சிகளையும் செய்வதற்கும் காரணமாக இருக்கும். இந்த சக்தியால் பல துன்பங்களுக்கும் காரணமான ஆசை முதலான மனவேறுபாடுகள் யாவும் எப்போதும் தோன்றும்.

**131. உரவிய காமம் கோபம் உலோப டம்பம் அகந்தை**
**மருள்உறும் அசூயை ஈர்ஷை மச்சர முதல்வி காரம்**

**தரணியில் ராச தத்தின் தர்மமாம் இக்கு ணம்தான்**
**புருடரில் பிரவிர்த்தி செய்யும் புரையினால் பந்த ஏது.**

மிகுதியான ஆசை, கோபம், உலோபித்தனம், டம்பம், அகங்காரம், மயக்கம் தரும் அசூயை ஈர்ஷை, மச்சரம் முதலிய குணங்கள் இராசத குணத்தின் செயல்கள் ஆகும். இந்தக் குணம் மக்களிடம் செயல்களில் ஈடுபடுத்தும் குற்றத்தால் சம்சாரத் துன்பத்திற்குக் காரணம் ஆகும்.

**132. இருள்உறு தமகு ணத்தால் ஈன்றதுஆ வரண சத்தி**
**பரமம்ஆம் வத்து இத்தால் பார்க்கலாம் மேறே ஆகப்**
**பிரிவுறு விட்சே பத்தைப் பெற்றஏ துவினால் ஈதே**
**புருடரின் பவத்தி னுக்குப் பூருவ கார ணம்காண்.**

அறியாமை நிறைந்த தமோ குணத்தினால் ஆவரணம் சத்தி உண்டாக்கப் பெற்றது. இந்த ஆவரண சத்தியால் மேலான பிரம்மம் வேறு பொருளாகப் பார்க்கப் படுகிறது. இந்த ஆவரண சத்தியே விட்சேப சத்திக்குத் காரணமாக இருப்பதால் இதுவே சீவர்களின் சம்சாரத்திற்கு முதன்மையான காரணம் ஆகும்.

**133. பெரிதுபண் டிதன்ஆ னாலும் பிரக்ஞைஉள் ளவன்ஆ னாலும்**
**அருமையாம் சூக்க மார்த்தம் அறஅறிந் தவன்ஆ னாலும்**
**சருவவல் லவன்ஆ னாலும் சாற்றும்ஆ வரண சக்தி**
**இருளினால் மூடப் பட்டோன் இயல்வினை இயம்பக் கேளாய்.**

ஒருவன் சிறந்த நூல் அறிவு பெற்றவனாக இருப்பினும், நல்வ திறமை பெற்றவன் ஆயினும், மிக அரிய நுட்பமான பொருள்களை தெளிவாக அறிந்தவனாக இருந்தாலும் அனைத்தையும் செய்திறன் பெற்றவனாக இருந்தாலும் கொடிது என்ற கூறும் ஆவரணசத்தி இருளால் மூடப்பெற்ற அவனுடை இயல்பினை நான் கூற நீ கேட்பாயாக

**134. அருமையாம் குரவன் மேலோர் ஆன்ம ரூபத்தை அன்பால்**
**உரம தாய் வெகுவி தத்தால் உணர்த்தினும் உணரான் அன்னோன்**
**பிரமத்தால் ஆரோ பித்த பேதம்ஆம் பொருளைத் தானே**
**திரம்எனும் நன்றுஇது என்னும் தியங்கியே அவலம் பிப்பன்.**

ஆவரண சத்தியால் மறைக்கப்பட்டவன், பெறுவதற்கு அரிய குரு சான்றோர் ஆகியவர்கள் அன்புடன் ஆன்ம வடிவத்தைப் பல முறைகளில் உறுதியாக உபதேசித்தாலும் நன்கு அறிய மாட்டான். மயக்கத்தால் ஆத்மாவிடம் இன்பம் தருவன என்பான். மயக்கத்தால் அபபொருள்களை அனுபவிக்க முற்படுவான்.

**135. ஆதலால் பொல்லாங் காக அமைந்ததா மதகு ணத்தில்**
**சாதமாய் உரமே ஆகச் சார்ந்தஆ வரண சத்தி**
**சாதுமே அற்ப ராலே சாலவும் கடக்கஒண் ணாது**
**ஈதுடை வல்ல பத்தை என்னஎன்று உரைப்பம் அந்தோ.**

சாதுவே, ஆதலால் தீமை தருவதாக உள்ளதும், தாமத குணத்தால் தோன்றியதும், மிக உறுதியாக மனத்தைச் சார்ந்து உள்ளதும் ஆகிய ஆவாண சத்தி மிகவும் அற்பரால் தாண்ட இயலாதது ஆகும். இதன் திறமையை என்ன என்று கூறுவோம்.

**136. ஈதினோடு இசைந்தோன் தன்னை ஏதுமே அறியாத் தன்மை**
**ஓதினும் உணராத் தன்மை உணரினும் ஐயம் சேர்கை**
**பேதமாய் அறியும் தன்மை பேசிய இவைகள் தீரா**
**ஏதவிட் சேப மும்தான் என்றுமே இழுத்துஅ லைக்கும்.**

இந்த ஆவரண சத்தியோடு கூடியவனை எதையும் அறியாமையும், எது சொன்னாலும் தெரிந்து கொள்ளாமையும், அறிந்தாலும் ஐயம் கொள்ளாமையும், அறிந்தாலும் ஐயம் கொள்ளுதலும் நேர்மாறுதலாக அறியும் தன்மையும் ஆகிய இந்தக் குணங்கள் விட்டு நீங்கா. துன்பம் தரும் விட்சேப சத்தியும் எப்போதும் இழுத்துச் சென்று வருத்தும்.

**137. நித்திரை சோம்பல் வெண்மை நிகிலமும் தவிர்தல் மோகம்**
**புத்தியின் சாட்டி யாதிப் புகல்தமோ குணவி காரம்**
**இத்தினோடு இசைந்தோன் யாதும் எவளவும் உணரா வண்ணம்**
**நித்தமும் துயில்வோன் போலும் நீண்டதூண் போலும் நிற்பன்.**

தீயது என்று கூறும் தமோ குணத்தால் எற்படும் விகாரங்கள், தூக்கம், சோம்பல், பகுத்தறிவு இன்மை, செய்ய வேண்டியது அனைத்தையும் செய்யாமை ஒன்றினை மற்றொன்றாக உணர்தல், மந்த புத்தி முதலியன ஆகும். இதனை உடையவன் எதையும் எவ்வளவும் உணராதவாறு எப்போதும் தூங்குபவனைப் போலும், பெரிய தூணைப் போலும் இருப்பான்.

**138. சத்துவ குணம்ச லம்போல் சாலவும் சுத்த மேனும்**
**தொத்திய இருகு ணத்தைத் தொடர்ந்ததால் பவத்திற்கு ஏது**
**நித்தமும் ஆன்மா இத்தின் நிகழ்வுறப் பதிபிம் பித்துச்**
**சுத்திய ஜடம்அ னைத்தும் சூரியன் போல்வி ளக்கும்.**

சத்துவ குணம் ஆனது நீரைப் போல் தூய்மையானது என்றாலும், மற்ற இரசசு தமசு என்ற குணங்களோடு தொடர்பு உடையதால் பிறவிப் பிணிக்கும் காரணம் ஆகும். ஆன்மா எப்போதும் இந்த சத்துவ குணத்தில் நன்கு பிரதிபவித்துக் கொண்டு, நம்மைச் சூழ்ந்து உள்ள அனைத்துச் சடப் பொருள்களையும் சூரியனைப் போல விளங்கச் செய்யும்.

**139. புருடன்நன் முயற்சி யாலே பூருவம் போல மெத்த**
**இருகுணம் மிகுந்தி டாமல் இயங்கிய சத்து வத்தின்**
**மருவிய தருமம் கேளாய் மானம்இல் லாமை ஆதி**
**வரியம நியமம் ஆதி வரன்மிகு சிரத்தை பக்தி.**

முமுட்சுவின் நல்ல முயற்சியால் தொடக்கத்தில் இருந்தது போல மிகுதியான இரசோ குணமும் தமோ குணமும் மேலோங்கி விடாமல் உள்ளபோது சத்துவ குணத்தின் பொருத்தமான விளைவுகளைக் கேள். பெருமை இல்லாமை முதலியவைகளும் மேற்கொள்ளத் தக்க யமம், நியமம் முதலியவைகளும் மிகுதியான சிரத்தையும் பக்தியும்.

**140. திரம்உறு முமுட்சுத் தன்மை தெய்வசம் பத்தி மற்றும்**
**புரையுறு செய்கை யின்கண் பொருந்திடா மீட்சி ஆதி**
**சருவமும் மிசிரம் ஆன சத்துவ குணத்தின் தர்மம்**
**சர்வதா சுத்த மான சத்துவ மகிமை கேளாய்.**

முத்தியில் உறுதியான விருப்பமும், தெய்வ சம்பத்தும், மேலும் குற்றம் உள்ள செயலை விட்டு நீங்கல் முதலியவையும், இந்த எல்லாமும் மிசிரமான சத்துவ குணத்தின் தர்மங்களாம். எப்போதும் தூய்மையான சத்துவ குணத்தின் பெருமையைக் கேள்.

**141. சுத்தி சத்துவ குணத்தின் சூக்குமத் தெளிவி னாலே**
**நித்தியஆன் மஅனு பூதி நிகழ்ந்திடும் பரம சாந்தி**
**சித்தியாம் திருப்தி மேவும் சேர்ந்திடும் மிகக்க ளிப்பு**
**நித்தமும் ஆனந் தம்செய் நின்மல நிட்டை கூடும்.**

பிற குணங்களுடன் கலப்பு இல்லாத சத்துவ குணத்தினால் நுட்பமான தெளிந்த அறிவால் அழிவு இல்லாத ஆன்ம அனுபவம் எற்படும். மேலான அமைதியும் கூடும். போதும் என்ற உறுதியும் ஏற்படும். மகிழ்ச்சியும் மிகுதியாக வந்து சேரும், எப்போதும் ஆனந்தத்தைத் தரும் தூய நின்விகில்ப சமாதி கைகூடும்.

**142. இவ்விதம் முக்குணத் தோடு இசைந்தஅவ் வியத்த சத்தி**
**செவ்விய ஆன்மா விற்குச் சேர்ந்தகா ரணஉ டம்பாம்**
**விவ்விதப் பொறிம னங்கள் விருத்திஇல் லாச்சு ழுத்தி**
**எவ்வம்ஆர் இவ்வு டம்பின் இசைந்துள அவத்தை ஆகும்.**

இவ்வாறு முக்குணங்களோடு கூடிய அவ்வியத்தம், தூய்மையான ஆன்மாவிற்குப் பொருந்திய காரண சரீரம் ஆகும். வேறு வேறான எல்லாப் பொறிகளும் தொழிற்படும் சாக்கிரமும் அந்தக் கரணம் களின் தொழிற்படும் சொப்பனமும், விருத்திகள் ஒடுங்கி இருப்பதான சுழுத்தியும், துன்பம் தரும் இந்த சரீரத்திற்கு பொருந்தி உள்ள அவத்தைகள் ஆகும்.

**143. அகிலம்ஆம் விதமும் ஆன அறிவுஇலாச் சுழுத்தி யின்கண்**
**இகல்மனம் வித்தாய் நிற்கும் ஏதுமே உணர்கி லோம்யாம்**
**சுகமதாய்த் துஞின்றோம் என்று சொலும்பிர சித்தி யாலே**
**மிகுசுக ஆன்மாத் தானே மிஞ்சியே இதில்வி ளங்கும்.**

எல்லா வகையும் ஆன அறிவுகளும் இல்லாத சுழுத்தி நிலையில் மாறுபடும் மனம் விதை வடிவாய் அடங்கி இருக்கும். நான் எதுவும் அறியவில்லை என்றும், சுகமாக உறங்கினேன் என்றும் கூறும் அனுபவத்தினால் ஆன்மா மட்டுமே மிஞ்சி இருந்து கொண்டு இந்த சுழுத்தி நிலையில் மிகுந்த ஆனந்த வடிவாகவே விளங்கும்.

**144. உடல்உயிர் பொறிபு லன்கள் உலைமனம் அகங்கா ராதி**
**இடர்தரும் விகாரம் யாவும் இன்பதுன் பதி யும்மற்று**
**அடர்தரு வானம் ஆதி ஆகிய சகம்அ னைத்தும்**
**இடர்அவ்வி யத்தம் ஈறுஆம் இவைஎலாம் அநான்மா ஆகும்.**

சரீரமும், பிராணனும், ஞானேந்திரியங்கள் கருமேந்திரியங்களும், விடயங்களும் அலைகின்ற மனமும், அகங்காரம் முதலிய துன்பம்தரும் விகாரங்களும், இன்ப துன்பம்

முதலானவைகளும், மேலும் எங்கும் நிறைந்து இருக்கும் ஆகாசம் முதலிய ஐம்பூதங்களும், அனைத்து உலகங்களும், துன்பம் தருகின்ற அவ்வியத்தம் என்ற இறுதியாகக் கொண்டஅனைத்துப் பொருள்களும் அநான்மப் பொருள்கள் ஆகும்.

**145. மாயைகா ரியமே ஆன மகத்தத்துவ ஆதி ஆய்இக்**
**காயம்ஈது ஆன யாவும் கலங்கிய பொய்யே ஆகும்.**
**தூயனே சொன்ன எல்லாம் தொகுத்துஅநான் மாவும் ஆகும்**
**நீஇதைக் கானல் நீரின் நிகர்என நினைதி என்றும்.**

மாசில்லாதவனே, நான் மேலே தொகுத்துச் சொன்ன பொருள்கள் யாவும் அநான்மப் பொருளும் ஆகும். மேலும் மாயையின் காரியமாக இருக்கும் மகத்தத்துவம் முதலாக, இந்த சரீரம் பருவுடல் ஈறு ஆகு உள்ள அனைத்தும் சீவர்ளைக் கலங்க வைக்கும் பொய்ப் பொருளே. இவை அனைத்தும் கானல் நீருக்குச் சமம் என்று எப்போதும் எண்ணுவாயாக.



# ஆத்ம இயல்

**146. எத்தைநன்று உணர்ந்தோன் பந்தம் இகந்துகே வலன்ஆம் என்று**
**பத்தனே இனிஉ னக்குஅப் பரமான்ம சொரூபம் கொல்வாம்**
**நித்தமும் நான்நான் என்று நிகழ்ந்திடும் அனுபூ திக்குஇம்**
**மெத்திய பொருளே ஆகி மெய்ம்மையாய் நிற்கும் ஆன்மா.**

அன்பனே, எதனை நன்றாக அறிந்தவன் பிறிவித் தொடர்பை நீக்கி, எப்போதும் பிரம்ம வடிவாய் இருப்பானோ, அந்தப் பரமான்ம வடிவினை இனிமேல் உனக்குச் சொல்லப் போகிறோம். ஆத்மாவானது நாள்தோறும் நான் நான் என்று விளங்கிக் கொண்டு, இந்த அனுபவத்திற்குப் பொருத்தமான பொருளாய் உண்மைப் பொருளாய் விளங்கும்.

**147. திரிவித அவத்தை கட்கும் திருந்திய சாட்சி ஆகி**
**விரிவுறு பஞ்ச கோச விலட்சணம் ஆகி யாது**
**மருவிய மனவி ருத்தி மற்றதின் பா்வஅ பாவம்**
**கருதிய அவத்தை மூன்றில் கண்டிடும் அஃதே ஆன்மா.**

எப்பொருள் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி ஆகிய மூன்று அவத்தைகளுக்கும் மேலான சாட்சியாய் இருந்தும், அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் என்ற ஐந்து கோசங்களுக்கும் வேறுபட்டவன் ஆய் இருந்தும், விடயங்களுடன் பொருந்திய மனத்தின் செயல்களையும், அம்மனத்தின் இருப்பையும், இன்மையையும் கூறிய மூன்று அவத்தைகளிலும் அறிகிறதோர் அதுவே ஆன்மாவாகும்.

**148. யாதுஅ னைத்தி னையும் காணும் யாதினை அனைத்தும் காணா**
**யாதுதான் புத்தி ஆதி யாவுமே சித்தாய்ச் செய்யும்**
**யாதினைப் புத்தி ஆதி யாவுமே சித்தாய்ச் செய்யாது**
**ஓதிய அதுதா னே உன் னுடையஆன் மாவாம் மைந்தா.**

புதல்வனே, எப்பொருள்களையும் எது விளக்குமோ எப்பொருளை எல்லாப் பொருளும் விளக்க மாட்டாவோ, எப்பொருள் புத்தி முதலியவைகளை அறிவுஉடையது போலத் தோன்ற வைக்குமோ, புத்தி முதலியவைகள் ஏப்பொருளை விளங்கச் செய்யாவோ அப்பொருள்தான் உன்னுடைய ஆத்மாவாக உள்ளது என்று அறிக.

**149. யாதினால் சகம்அ னைத்தும் எங்குமே பரவல் ஆகும்**
**யாதினைச் சகம்அ னைத்தும் எவளவும் பரவ மாட்டா**
**யாதொரு போத ரூபம் இசைந்துஇச் சடம்அ னைத்தும்**
**நீதியாய் நிகழும் ஈதே நின்னுடை ஆன்மா என்றும்.**

எந்தப் பொருள் உலகம் முழுமையும் பரவி உள்ளதோ, உலகம் யாவும் எப்பொருளில் சிறிதளவும் பரவி இல்லையோ, எந்த அறிவு வடிவப் பொருளுடன் பொருந்தி இருப்பதனால் சடமான எல்லாப் பொருள்களும் முறைப்படி தம் செயல்களைப் புரியுமோ அதுவே எப்பொழுதும் உன்னுடைய ஆன்மாவாக உள்ளது.

**150. தீதுஉடல் இந்தி யங்கள் தியங்கிய மனது புத்தி**
**ஈதுதன் செய்கை யின்கண் ஏவிடப் பட்ட தேபோல்**
**சாதுவாம் மைந்த யாதின் சந்நிதி மாத்தி ரத்தால்**
**நீதியாய்ச் செல்லும் ஈதே நின்னுடை ஆன்ம ரூபம்.**

சத்தவகுணம் உடைய புதல்வனே, எப்பொருளின் முன்னிலையாலேயே தீமை தரும் தூலசரீரமும் பொறிகளும் கலங்கிய மனமும் இந்தப் புத்தியும் தத்தம் தொழில்களில் கட்டளை இடப்பட்டவை போல முறை தவறாமல் ஈடுபடுமோ அதுவே உன்னுடைய ஆத்ம வடிவம் ஆகும்.

**151. தொத்திய அகங்கா ராதித் தூலம் ஈறான யாவும்**
**சுத்திய புலன்அ னைத்தும் சுகாதியும் கடமே போல**
**நித்திய போதம் ஆகி நிலைமையாய் நிகழா நின்ற**
**எத்தினால் அறிய லாகும் ஈதுநின் ஆன்மா ஆகும்.**

சீவர்களை பற்றிய அகங்காரம் முதல் தூலசரீரம் முதலான அனைத்துப் பொருள்களும் சூழ்ந்துள்ள அனைத்து விடயங்களும் இன்ப துன்பங்கள் ஆகிய பிறவும் ஆகிய இவற்றைக் குடத்தை அறிவது போல அழிவு இல்லாத அறிவாயும் உண்மையாயும் நிலைத்து விளங்கும் எந்த அறிவினால் அறியப் படுகின்றதோ அதுவே உனது ஆத்மா ஆகும்.

**152. யாதினால் உயிரும் வாக்கும் யாவுமே இயங்கும் அந்தப்**
**போதமாம் அந்த ரான்மாப் பூரணன் புராணன் என்றும்**

**பேதம்இல் அகண்டா னந்தன் பெருகிய ஏக ரூபன்**
**சாதம்ஆர் விருத்தி தோறும் சாட்சியாய்ச் சார்ந்து நிற்பன்.**

எந்த ஆத்மாவினால் பிராணன் வாக்கு முதலான யாவும் இயங்குமோ அந்த அறிவு வடிவமான அந்தராத்மா. எங்கும் நிறைந்தவன். மிகப்பழைமை ஆனவன். எப்போதும் மாறுதல் இல்லாத பேரானந்தம் உடையவன். ஒரே வடிவுடன் எங்கும் நிறைந்தவன். புதிது புதிதாய்த் தோன்றும் ஒவ்வொரு மனா விருத்தியிலும் சாட்சியாக விளங்குபவன்.

**153. சாதுவே இத்தே கத்தில் கத்தில் சார்மனக் குகையின் கண்ணே**
**ஓதும்அவ் வியத்த விண்ணில் ஒளிர்ந்திடும் இந்த ஆன்மா**
**பேதமாம் பொருளை எல்லாம் பெருகிய தன்தே சாலே**
**நீதியாய் விளக்கும் விண்ணில் நிகழ்ந்திடும் இரவி யேபோல்.**

சாதுவே, இந்த சரீரத்தில் உள்ள மனக்குகையில் அவ்வியத்தமாகிய ஆகாசத்தில் பிரகாசித்துக் கொண்டு விளங்கும் இந்த ஆன்மா தன்னுடைய மிகுந்த பிரகாசத்தினால் வேறுபாடான பொருளை எல்லாம் ஆகாசத்திலே பிரகாசிக்கும் சூரியனைப் போல முறையாக விளங்கச் செய்யும்.

**154. அடர்மன அகங்கா ரங்கள் ஆக்கிய விகாரம் யாவும்**
**உடல்பொறி உயிர்கள் செய்யும் உலைத்தலும் உணரும் ஆன்மா**
**சுடுகனல் அயப்பிண் டம்போல் சொல்லிய அனைத்தி னோடும்**
**தொடரினும் விகாரம் மேவான் சொற்பமும் செய்தோன் ஆகான்.**

துன்பம் தரும் மனமும் அகங்காரமும் உண்டாக்கும் அனைத்து மாறுதல் களையும் சரீரம் இந்திரியங்கள் பிராணன் செய்யும் செயல் களின் வருத்தத்தை அறியும் ஆன்மாவானது நெருப்பு கூடிய இரும்பின் வடிவம் அடைவது போல மேற் கூறிய அனைத்துச் செயல்களுடனும் தொடர்ந்து இருந்தாலும் மாறுதல் அடைவதில்லை, செயலை சிறிதும் செய்தவன் ஆகான்.

**155. சாதுவே இந்த ஆன்மா சனனம்ஆ கான்ம ரிக்கான்**
**ஏதுமே வளர்வு றான்மற்று இளைத்திடான் விகாரி ஆகான்**
**ஏதமாம் இந்தத் தேகம் இறக்கினும் இறவான் இத்தன்**
**பேதமாம் கடம்இ றக்கின் பெருகுவான் இறப்பது உண்டோ.**

சாதுவே, இந்த ஆத்மா பிறப்பதில்லை, இறப்பதில்லை. சிறிதும் வளர்வதில்லை மற்றும் இளைப்பதில்லை. வேறு மாறுவதில்லை. துன்பம் தரும் இந்த சரீரம் அழிந்தாலும் தான் அழிவதில்லை. இந்த ஆத்மாவின் வேறான குடம் அழிந்தால் அதில் உள்ள ஆகாசம் அழிவது உண்டோ? இல்லை. (அதுபோல சரீரம் அழிந்தாலும் ஆத்மா அழிவதில்லை.

**156. பத்தனே பகுதி ஆதிப் பகுப்பினுக்கு எல்லாம் வேறாய்ச்**
**சுத்தசிற் சொரூபம் ஆகிச் சுழல்வுறும் சதசத்து எல்லாம்**
**நித்தமும் விளக்கி வைத்து நிருவி டம்பொ ருந்தும்**
**சத்தியப் பரமான் மாவே சாக்கிரா தியில்இ லங்கும்.**

அன்பனே பிரகிருதி அதன் காரியங்கள் இவற்றிற்கு வேறுபட்டதாய், தூய அறிவு வடிவம் ஆகி, அழியும் தன்மை உடைய தூலமாகவும் சூட்சுமமாகவும் உள்ள உலகம் அனைத்தையும் எப்போதும் விளங்கச் செய்து, குணம் இல்லாத தன்மையோடு கூடி இருக்கும் அழியாத பரமாத்மாவே சாக்கிரத்திலும் சொப்பனத்திலும் சுழுத்தியிலும் விளங்கும்.

**157. நித்தமும் நான்நான் என்றே நிலைமையாய் நிகழா நின்று**
**புத்தியின் சாட்சி ஆகப் பொருந்திய பரமான் மாவைச்**
**சித்தஏ காக்கி ரத்தைச் செறிந்துநான் பிரமம் என்றே**
**புத்தியின் தெளிவி னாலே புலன்உற உணர்தி மைந்தா.**

புதல்வனே, எப்போதும் நான் நான் என்று அனுபவமாக உணரப்படுவதாய் நிலைத்து விளங்கிக் கொண்டு புத்திக்கு சாட்சியாக இருக்கும் பரமான்மாவை, மன ஒருமைப் பாட்டை உறுதியாகப் பெற்று, தெளிவடைந்த புத்தியால் நானே பிரமம் என்று பிரத்தியட்சமாய் அறிவாய்.

**158. நித்தமும் நின்ஆன் மாவை நின்இ டைநீஉ ணர்ந்து**
**தத்திய சனனம் ஆதித் தரங்கமாய்ப் பாரம் அற்ற**
**கத்துவம் சாரம் ஆகும் கடலினைக் கடந்து நன்றாய்ச்**
**சத்தியப் பிரமம் ஆகிச் சார்பயன் சார்ந்து நிற்பாய்.**

எப்போதும் உனது உண்மையான ஆன்ம வடிவத்தை நீ உன் புத்தியால் ஆராய்ந்து அறிந்து, மேலும் பெருகி வரும் பிறப்பு இறப்பு ஆகியவற்றை அலைகளாக உடையதும்,

அரவாரம் நிறைந்ததும் ஆகிய கரை இல்லாத சம்சாரம் ஆகிய கடலை நன்றாகத் தாண்டி உண்மையான பிரமம் ஆகி, அடைய வேண்டிய பயனை அடைந்து இருப்பாயாக.

**159. அந்நிய அநான்மா வின்கண் அகம்எனும் பந்தம்**
**இன்னது புருடர்க்கு எல்லாம் ஏதமாம் அஞ்ஞா னத்தால்**
**துன்னிய சனனம் ஆதித் துயர்தரும் ஏது வாக**
**மன்னும்இவ் அஞ்ஞா னத்தின் மயலினை மற்றும் கேளாய்.**

வேறான ஆத்மா அல்லாத பொருளினிடம் நான் என்ற எண்ணம் கொள்வது பந்தம் ஆகும். இந்த மயக்க எண்ணம் சீவர்ளுக்கு எல்லாம் தன்னை அறியாமையால் வந்த துன்பம் ஆகும், நெருங்கிய பிறப்பு இறப்பு முதலியவற்றைத் தந்திடக் காரணம் ஆகும். இந்த அறியாமையால் உண்டாகும் மயக்க விளைவுகளை மேலும் கேட்பாயாக.

**160. புத்திர வெண்மை யால்இப் பொய்உடல் மெய்என்று எண்ணி**
**இத்தினில் ஆன்ம புத்தி இசைந்துஇதைப் புலன்க ளாலே**
**நித்தமும் வெகுவாய்க் காப்பர் நிகிலரும் கோச காரம்**
**எத்துவாய் நூல்க ளாலே மேனியைக் காப்ப தேபோல்.**

புதல்வா, அறியாமையால் இந்தப் பொய்யான சரீரத்தை அழியாதது என்று எண்ணி, இந்த சரீரத்தை ஆத்மா என்று நினைத்து, அனைவரும் விடயங்களை நுகர்ந்து நாள்தோறும் மிகவும் காப்பர். கோச காரம் (பட்டுப்பூச்சி) என்ற பூச்சி தன் வாயிலே தோன்றும் எச்சிலால் ஆன நூல்களால் தன்னுடைய உடலைக் காப்பதே போல்.

**161. சதுரனே அவிவே கத்தால் சர்ப்பமே ரச்சு என்னும்**
**மதிநிகர் தமசி னாலே மறைந்திடப் பட்டோர்க்கு எல்லாம்**
**அதுஅலாப் பொருள்இ டத்தில் அதுஎனும் உண்டாம்**
**அதனினால் அசத்தின் மாலே அநர்த்தமாம் பந்தம் ஆமே.**

திறமையாளனே, தமோகுணத்தால் பருத்து அறியாமல் புத்தி மறைக்கப் பட்டவர்கள் அது அல்லாத பொருளிடம் அது என்ற மயக்க எண்ணம் தோன்றும். அதனாலேயே பகுத்தறிவு இன்மையால் பாம்பைக் கண்டு இது கயிறே என்று அறியாதவன் கூறுவான். ஆகையால் இல்லாத பொருள் இருக்கிறது என்ற மயக்க அறிவே பல இன்னல்களைத் தருகின்ற பந்தம் எனப்படுவதாம்.

**2. அகண்டமய் நித்தம் ஆகி அவிநாசி ஆன போதம்**
**மிகுந்ததன் மகிமை யாலே மிகவுமே விளங்கி மெத்தத்**
**தகுந்ததன் ஆன்மா வைஇத் தமமயஆ வரண சத்தி**
**இகழ்ந்திட மறைப்பது ஆகும் இராகுதான் இரவி யைப்போல்.**

எங்கும் நிறைந்ததாய் என்றும் இருப்பதாகி, நாசம் இல்லாத அறிவு வடிவமானது குந்த தன் சிறப்பினால் மேலாக விளக்கம் அடைந்து அனைவராலும் போற்றத் தக்கதாய் ள்ள ஆத்மாவை இந்த இருள் வடிவமான ஆவரண சத்தி, இராகுவாகிய பாம்பு சூரியனை றைப்பது போல் அனைவரும் இகழும்படி மறைத்து விடும்.

**63. நிருமலத் தேசி னாலே நிகழ்ந்திடும் தன்ஆன் மாவை**
**இருளும்ஆ வரண சத்தி இவ்விதம் மறைத்த லோடும்**
**புருடன்இவ் அநான்மா வான பொய்உடல் நானே என்று**
**கருதுவன் மோகத் தாலே காமம்ஆ தியினைச் சேர்வன்.**

இருளைப் போல மறைக்கின்ற ஆவரண சத்தி ஆனது, குற்றம் அற்ற பிரகாசத்தோடு விளங்கிக் கொண்டு இருக்கும் தன் ஆத்மாவை இராகுவைப் போல் இவ்வாறு மறைத்தவுடன் ஆத்மா அல்லாத பொருளான இந்தப் பொய்யான உடலை தான் ஆகிய ஆத்மா என்று நினைப்பான். பிறகு மயக்கம் காரணமாகக் காமம், வெகுளி முதலியவற்றை மேற்கொள்வான்.

**164. பின்னர்அக் காமம் ஆதிப் பெந்தஏ துக்க ளாலே**
**துன்னுவிட் சேப சத்தி துயர்தரும் புருட னுக்கு**
**முன்னுமா மோகம் ஆகும் முதலையால் விழுங்கப் பட்டுத்**
**தன்னுடைச் சொரூப ஞானம் தவிர்ந்தவன் தளர்வ தைக்கேள்.**

பின்னர் பந்தத்திற்குக் காரணமான காமம் முதலான பெரிய காரணங்களால் நெருங்கிய விட்சேப சத்தி சீவதனுக்குத் துன்பத்தைக் கொடுக்கும். உடனே அனைவரும் கொடிது என்று எண்ணுகின்ற பெரிய மோகம் ஆகிய முதலையால் விழுங்கப்பட்டுத் தன்னுடைய உண்மையான ஆத்ம வடிவின் அறிவைத் தவற விட்ட சீவன் துயரம் அடைவதைக் கேள்.

**165. அனையவன் மனஅ வத்தை அகிலமும் தன்னது என்றே**
**நனிஅபி மானம் செய்து நாடிய விடயம் என்னும்**

**நினைவுறு விடங்க ளாலே நிரம்பிய அபாரம் ஆன**
**கனபவக் கடலின் மூழ்கிக் கலங்குவன் கதிகெட் டோனாய்.**

மோகம் அடைந்த அவன் மனத்திலே தோன்றும் எல்லா விதமான இன்ப துன்பங்களையும் தன்னுடையது என்று மிகவும் அபிமானம் கொண்டு தான் விரும்பி அனுபவிக்கும் விடயங்களால் மனத்தில் தோன்றும் வாசனை ஆகிய நஞ்சுக்களால் நிறைந்ததும், கரை அற்றதும் ஆழமானதும் ஆன பிறவிக் கடலில் மூழ்கி நல்ல கதியைப் பெறாமல் மிகவும் மனக்கலக்கம் அடைவான்.

**166. பானுவின் கிரணத் தாலே படைத்துஉள முகிலின் பந்தி**
**பானுரூ பம்ம றைத்துப் பரவியே வளரு மாபோல்**
**ஆனதன் ஆன்மா வின்கண் ஆகிய அகங்கா ரம்தான்**
**மானம்இல் ஆன்ம ரூபம் மறைத்துஉடன் வளரும் அன்றே.**

சூரியனின் கிரணங்களால் உண்டாக்கப் பெற்ற மேகக் கூட்டம் சூரியனின் உருவத்தை மறைத்து வானிலே பரவிப் பெருகுவது போல ஆத்மாவிடம் காரியம் ஆகித் தோன்றிய அகங்காரம் அளவின்றி எங்கும் நிறைந்துள்ள ஆன்ம வடிவை மறைத்தவாறு பெருகி வரும்.

**167. அநகனே ஆன மைந்தா அழுந்திய மழைக்கா லத்தில்**
**கனமுகில் திரளி னாலே கதிரவன் மறைக்கப் பட்ட**
**தினம்அதில் பனிமி குந்து தியங்கிய கொடிய காற்று**
**நனிபுவி இருக்கின் றோரை நண்ணியே துயர்செய் மாபோல்.**

பாவம் அற்ற புதல்வனே சூரிய ஒளியில்லாத மழைக் காலத்தில் நீருண்ட மேகங்களின் கூட்டத்தால் சூரியன் மறைக்கப் பெற்ற நாளில் குளிர் மிகுந்து வீசும் கொடிய புயல் காற்று, பூமியில் நன்கு வாழ்ந்து கொண்டு இருப்பவரை நெருங்கித் துயரம் தருகின்ற தன்மை போல.

**168. அகலும்ஆ வரண சத்தி அமலமாம் தன்ஆன் மாவை**
**இகழவே மறைக்கும் போதில் ஏதவிட் சேப சத்தி**
**மிகவுமே மூட புத்தி மேவிய புருடன் தன்னை**
**வெகுவிதத் துயர்க ளாலே விவிதமாய் வருத்தம் செய்யும்.**

விரிவு அடையும் ஆவரண சத்தி ஆனது தன் தூய ஆன்மாவை அனைவரும் வெறுக்குமாறு மறைக்கும் போதில் துன்பத்தைத் தருகின்ற விட்சேப சத்தி, மோக புத்தி அதிகம் உடைய சீவனைப் பலவகையான துன்பங்களால் பலவகைகளில் வருத்தப் படுத்தும்.

**169. சாதுவே சாற்று கின்ற சத்திஇவ் இரண்டி னாலும்**
**ஏதமாம் இந்தப் பந்தம் இசைந்ததாம் புருடனுக்கு இங்கு**
**ஈதினால் மோகம் உற்றே எவனும் இவ் அனான்மா வாக**
**ஓதிய உடல்ஆன் மாஎன்று உன்னியே மயங்க லாலே.**

சாதுவே, நான் கூறிய இவ்விரு சத்திகளாலும் துன்பம் தருகின்ற இந்த பந்தம் இப்பூமியில் சீவனுக்கு வந்ததேயாம். அனைவரும் இந்த பந்தத்தினால் மோகம் அடைந்து ஆன்மா அற்றது என்று கூறப்படும் சரீரத்தை ஆத்மா என்று எண்ணி மயக்கம் (அடைவார்).

**170. விரிவான தருவி னுக்கு வீங்கிய தமசே வித்தாம்**
**மருவுதே கான்ம புத்தி மற்றுஅதன் முளையாம் காமம்**
**தருஅதன் அளிர்ஆம் கர்மம் தாக்கிய சலம்ஆம் தேகம்**
**உரம்அடிக் கட்டை ஆகும் உயிர்களே பணைகள் ஆகும்.**

விரிவான பிறவி என்னும்மரத்துக்குப் பெரிய தமோ குணமே விதை ஆகும். சரீரத்தில் ஆன்மா என்ற புத்தி அந்த மரத்தின் முளை ஆகும். ஆசையே அம்மரத்தின் தளிர் ஆகும். நல்வினையும் தீவினையும் அம்மரத்தைத் தாங்கி வளர்க்கும் நீர் ஆகும் சரீரமே வலிமை பெருந்திய அடிமரம் ஆகும் வாயுக்கள் ஐந்தும் பெருங்கிளைகள் ஆகும்.

**171. பொறிநிரை நுனிகள் ஆகும் புலன்களே மலர்கள் ஆகும்**
**செறியல வான கன்மம் செய்ததுன் பங்கள் யாவும்**
**உறுபலம் அப்ப லத்தை உண்பது சீவன் என்னும்**
**பறவையே இவித மாகப் பவத்தரு பரவல் ஆகும்.**

பொறிகளின் கூட்டம் கிளைகளின் நுனிகள் ஆகும். அனுபவிக்கும் விடயங்களே மலர்கள் ஆகும். பல செயல்களால் உண்டான துன்பங்கள் யாவும் மரத்தில் தோன்றும்

பழங்கள் ஆகும். அந்தப் பழத்தை உண்பவன் சீவன் ஆகிய பறவை ஆகும். இவ்வாறு சம்சார மரம் பரவி வளர்தலை உடையது ஆகும்.

**172. ஓதீய அநான்ம பந்தம் மூலஅஞ் ஞான மூலம்**
**ஈதுதான் அநாதி யேனும் ஏகஞா னத்தில் ஈறுஆம்**
**சாதுவே சனனம் துஞ்சல் சரைபிணி முதலாம் துன்பம்**
**யாதுமே இவற்றி னாலே இசைந்ததாம் சீவர்க்கு எல்லாம்.**

சாதுவே, கூறிய அனாத்மா பந்தம் அடிப்படையான அறியாமையைக் காரணமாகக் கொண்டது ஆகும். இது எப்போது தோன்றியது என்று சொல்ல முடியாவிடினும் ஞானத்தினால் அழியும். அனைத்து சீவர்களுக்கும் இந்த அஞ்ஞானத்தினால் பிறப்பு, மூப்பு, நோய், மரணம் முதலிய எல்லாவகைத் துன்பங்களும் தோன்றுவனவாம்.



# மோட்சவியல்

**173. கரணம்ஆர் தெளிவி னாலே கறைஅறத் தீட்டப் பட்ட
அருமையாம் ஞானம் என்னும் அசியினால் சிதையும் பந்தம்
பரவிய அத்தி ராதி படைகள்மற்று அநிலம் வன்னி
உரவிய கன்ம கோடி ஒன்றிலும் சிதைய மாட்டா.**

மனத்திலே நிறைந்துள்ள தெளிவால் நன்கு தீட்டப்பட்ட அரியஞானம் என்ற கத்தியினால் பந்த மானது அழியும். மிக அதிகமான அம்பு முதலிய படைக் கருவிகளாலும் ஏனைய காற்று தீ முதலிய ஐந்து பூதங்களாலும் வலிமை வாய்ந்த கோடிக் கணக்கான நற்செயல்களாலும் வேறு யாதொன்றாலும் அழிய மாட்டா.

**174. சுருதியை நம்பி னோர்க்குச் சொன்னதம் கன்ம நிட்டை
மருவிடும் அவற்றி னாலே மன்னிடும் சித்த சுத்தி
பரவும்அச் சுத்தி யாலே பரம்உணர் ஞானம் உண்டாம்
விரிவுறும் பவம்அ வற்றால் வேருடன் க்கும் அன்றே.**

வேதத்தை நம்பும் சீவர்களுக்குச் செய்யமாறு கூறப் பெற்ற நற்செயல்கள் அவரவர்க்கு உரியனவாகப் பொருந்தி இருக்கும். அச்செயல்களாலே மனச்சுத்தி உண்டாகும். பெருகி வரும் அத்தூய்மையால் பிரமத்தை அறியும் அறிவு உண்டாகும். அந்த அறிவால் விரிவு அடைந்து கொண்டே செல்லும் சம்சார பந்தம் அடியோடு அழிவும்.

**175. அந்நியம் இலாத ஆன்மா அடைந்ததன் சக்தி யாலே
மன்னிய அன்னம் ஆதி மயம்அதாம் பஞ்ச கோசம்
தன்னினால் மூடப் பட்டுத் தடைஅற விளங்க வில்லை
முன்னிய பாசிக் கொத்தால் மூடிய வாவி நீர்போல்.**

தனக்கு வேறு ஆகாத இந்த ஆன்மா அடைந்த தனது சக்தியாலே தோன்றிய அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் ஆகிய ஐந்து கோசங்களாலும் மறைக்கப் பட்டு உள்ளதால் மேலே உள்ள பாசிக் கூட்டத்தால் மூடப்பட்ட குளத்து நீர் போலத் தடையின்றி விளங்காமல் இருக்கின்றது.

**176. ஓதிய பாசிக் கொத்தை உதகம்நின்று ஒதுக்கும் காலை**
**சாதுவே புருட னுக்குச் சலிலமே தூய்தாய்த் தோன்றித்**
**தூதுற தாகம் தாபம் தீர்ப்பதாய்ச் சுகம்அ ளிக்கும்**
**ஏதுவாய் உதவு கின்ற இயல்பினை இங்குக் கண்டோம்.**

சாதுவே சீவனுக்கு மேலே கூறிய பாசிக் கூட்டத்தை நீரில் இருந்து விலக்கும் போது நீர் தூயதாகத் தோன்றி துன்பம் தரும் நீர் வேட்கையையும், வெப்பத்தையும் போக்கி இன்பம் தரக் காரணமாய் உதவும் தன்மையை இக்குளத்திலே கண்டு அறிவோம்.

**177. இந்தவா பஞ்ச கோவம் இவற்றினை அபவா தித்தால்**
**சந்ததஆ னந்தம் ஆகிச் சாலவும் இலங்கா நின்ற**
**பெந்தம்இல் பரமான் மாவும் பிரத்தியக் கான்மா வாக**
**மைந்தனே தூய்தாய்த் தோன்றி மாசுகம் அளிக்கும் அன்றே.**

புதல்வனே, இது போல ஐந்து கோசங்களையும் பொய் என்று நிச்சயித்தால் எப்போதும் ஆனந்த வடிவம் ஆக மிக்க சுயம்பிரகாசமாய் விளங்கும், பிறவிப் பிணி இல்லாத மேலான பிரம்மமும் அனைத்து சீவர்களின் உள்ளேயும் இருக்கும் ஆத்ம வடிவாக விளங்கி மிகுந்த ஆனந்தத்தைத் தரும்.

**178. ஆகையால் விவேகி ஆனோன் அடைந்ததன் பந்தம் நீக்க**
**வேகமாய் ஆன்மஅ நான்ம விவேகமே செய்ய வேண்டும்**
**ஊகமாம் விவேகத் தாலே உண்மைஆ னந்த சித்தாய்**
**ஏகமாம் பரமான் மாவை இங்குஅறிந்து இன்பம் சார்வான்.**

ஆதலால் அறிஞன் ஆனவன் தன்னை வந்து அடைந்த பந்தம் நீக்கும் பொருட்டு, மன ஒருமைப்பாட்டுடன் மிக விரைவாக இது ஆன்மா இவை ஆத்மா அல்லாதவை என்று பிரித்து அறிந்து கொள்ள வேண்டும். உத்திகளுடன் கூடிய அறிவினால் சத்தாயும் ஆனந்தமாயும் சித்தாயும் இரண்டற்றதாம் மேலான பிரம்மத்தை அனுபவ வாயிலாக அறிந்து இங்கே இன்பத்தை அடைவான்.

**179. மருவிய முஞ்சிப் புல்லின் மத்தியுள் ஆணி யைப்போல்**
**திருசியத் திரளின் நின்றும் திகழ்ந்திடும் தன்ஆன் மாவை**
**அருமையாம் புத்தி யாலே அசங்கமாய் அசலம் ஆக**
**மருவியது என்று கண்டு மாகஅற வகுக்க வேண்டும்.**

பூமியில் தோன்றிய முஞ்சி என்ற புல்லின் நடுவில் இருந்து ஆணி போன்ற நுண்ணிய பொருளைத் தனியே பிரித்து எடுப்பது போல் சுயம் பிரகாசமான தன் ஆத்மாவை நாம் காணும் நாம வடிவப் பொருள்களில் இருந்து அரியதான தூய புத்தியால் பிற பொருள்களுடன் தொடர்பு அற்றதாாகவும், யாதொரு தொழிலும் அற்றதாகவும் அந்த ஆன்மா நாம வடிவங்களுடன் பொருந்தி உள்ளது என்று ஐயமும் மாறுபாடும் இன்றி அறிந்து தனியே பிரித்து அறிதல் வேண்டும்.

**180. இவ்விதம் வகுத்த பின்னர் இங்குஉள திருசி யங்கள்**
**அவ்வித ஆன்மா என்றே அநிசமும் பிரவிலா பித்து**
**தவ்வற ஆன்மா வாகத் தரணியில் இருப்ப வன்தான்**
**செவ்விய முத்திப் பேற்றைச் சேர்ந்தவன் அநக மைந்தா.**

பாவம் இல்லாத புதல்வனே, இவ்வாறு பிரிந்து அறிந்த பின்னர் இங்கு காணப்படும் பொருள்கள் யாவும் அத்தகைய ஆத்மாவே ஆகும் என்று, எப்போதும் தெளிந்து தவறு இன்றி, பூமியில் தான் ஆத்ம வடிவாக இருப்பவனே மிகச் சிறந்த வீடு பேற்றினை அடைந்தவன் என்று கருதப் படுவான்.



# பஞ்சகோச இயல்

**181.** **அந்நமே செய்த தூல ஆக்கையே அந்த கோசம்**
**அந்நம்உண் டால்அஃது உய்யும் அஃதுஇ லாதேல்இ றக்கும்**
**துன்னிய மேதை அத்தி தோல்முதல் கூட்டம் ஆன**
**அன்னது நித்த சுத்தம் ஆகிய ஆன்மா ஆகா.**

உண்ணும் அன்னத்தினால் தோன்றிய தூலசரீரமே அன்னமய கோசம் ஆகும். அது உணவை உண்பதால் வாழும். உணவு இல்லை எனில் இறந்து விடும். நெருங்கிய கொழுப்பு, எலும்பு, தோல் முதலிய பல பொருள்களின் தொகுதியாக இருக்கும், தூலசரீரம் அழிவு அற்றதும் தூய்மை ஆனதும் ஆகிய ஆன்மாவாக ஆகாது.

**182.** **ஈதுமுன் பின்இ லாதாய் இடையில்உண் டாய்க்க ணத்தில்**
**பேதம்ஆய் விகாரம் உற்றுப் பேசும்ஓா நியமம் அற்றுத்**
**தீதுஅதாய்க் கடமே போலத் திருசியம் ஆன தாலே**
**ஆதியாய் அறுவி காரம்அறிந்திடும் ஆன்மா ஆகா.**

இந்த சரீரம் உண்டாவதற்கு முன்பும், இறந்த பின்பும் இல்லாததாய், நிகழ் காலத்தில் மட்டும் இருப்பது ஆகி, ஒவ்வொறு கணத்திலும் வேறுபட்டு பலவகை விகாரங்களை அடைந்து, இவ்வாறுதான் இருக்கும் என்று கூறக் கூடிய ஒழுங்கு முறை இல்லாததாய், தீமை தருவதாய் குடம்போலக் காண்பதற்கு உரியது ஆகும். ஆதலால் இந்த சரீரம் அடைகின்ற கருவுறுதல், பிறத்தல், வளர்தல், பருத்தல், குறைதல், மரித்தல் முதலிய ஆறு வேறுபாடுகளை அறிந்து கொள்ளும் ஆத்மாவாக ஆகாது.

**183.** **அத்தபா தாதி ஆன அவயவம் கெடினும் ஆன்மா**
**உய்த்துஇருக் கின்ற தாலும் ஒன்றிய அந்த அந்தச்**
**சத்திகள் நசியா தாலும் சந்ததம் ஏவப் பட்ட**
**இத்துனித் தேகம் என்றும் ஏவிடும் ஆன்மா ஆகா.**

கை, கால் முதலான உறுப்புக்கள் அழிந்தாலும் ஆத்மா அழியாமல் விளங்கிக் கொண்டு இருக்கின்றது. சரீரத்தால் பொருந்திய உறுப்பின் சக்திகள் அழியாமல் இருப்பதாலும் எப்போதும் ஏவல் கொள்வதற்கு எற்ற இந்த வெறுக்கத் தக்க சரீரம் எப்போதும் பிற பொருளை ஏவல் கொள்ளும் ஆன்மா ஆகாது.

**184. மோதிய மேதை அத்தி மூத்திரம் மலமே ஆதி**
**யாதுமே நிரம்பி மெத்த ஈனமாய் ஊழல் ஆன**
**தீதுஉடல் எவ்வி தத்தில் திகழ்ந்திடும் ஆன்மா ஆகும்**
**ஈதினை உணரும் ஆன்மா இதனில் நியமே என்றும்**

சரீரத்துடன் பொருந்திய கொழுப்பு, எலும்பு, சிறுநீர், மலம் முதலிய அனைத்து பொருளாலும் நிரம்பி, மிக இழிந்ததாய நாற்றம் உடைய தீமை தரும் சரீரம் எவ்வாறு சுயம் பிரகாசமாக விளங்கிடும் ஆத்மா ஆகும். இந்த சரீரத்தை உணரும் ஆத்மா எப்போதும் சரீரத்தைக் காட்டிலும் வேறு பட்டதே ஆகும்.

**185. ஓதிய உடலம் தன்னில் ஒன்றிய தர்மம் கர்மம்**
**ஈதுடை அவத்தை யாதி யாதுமே அறியும் சாட்சி**
**ஆதலால் சாட்சி ஆகு அமைந்தஇவ் ஆன்மாவிற்கு இங்கு**
**ஈதினில் வேறாம் தன்மை என்றுமே சுபாவ சித்தம்.**

சரீரத்தில் பொருந்திய உயரம் குட்டை முதலிய இயல்புகள், அதற்கு சொல்லும் போதல் வருதல் முதலிய பலவகையான செயல்களையும், இந்த சரீரத்தில் உண்டாகும் பலவகையான நிலைகள் அனைத்தையுமே சாட்சி ஆகிய ஆத்மா அறியும். ஆதலால் அனைத்துப் பொருள்களுக்கும் சாட்சியாக இருக்கும் இந்த ஆன்மாவிற்கு இங்கே இந்த சரீரத்தைக் காட்டிலும் வேறாக இருக்கின்ற தன்மை எப்பொழுதும் இயல்பாகவே அமைந்துள்ளது.

**186. மேதை தொக்குஅத் தியாதி மேவிய கூட்டம் ஆன**
**ஏதமாம் தேகம் நான்என்று எண்ணுவன் மூடன் ஆனோன்**
**கோதுஇலா விசார சீலன் குரம்பையின் வேறே ஆன**
**ஆதியாம் ஆன்ம ரூபம் அகம்என அறிவன் மைந்தா.**

மைந்தனே, அறிவு இல்லாதவன் கொழுப்பு, தோல், எலும்பு முதலியவை பொருந்திய கூட்டம் ஆன துன்பம் தரும் சரீரத்தையே ஆத்மா என்று நினைப்பான். குற்றம் இன்றி ஆராயும் இயல்பு உடையவன் சரீரத்தைக் காட்டிலும் வேறு பட்ட பிறப்பு அற்ற ஆன்ம வடிவினை நான் என்று அறிந்து கொள்வான்.

**187. உடல்இது நானேஎன்று இங்கு உன்னுவன் மூடன் ஆனோன்**
**உடல்உயிர் இரண்டும் நான்என்று உன்னுவன் கரும ஞானி**

**திடம்உறு விவேக ஞானத் திறம்உடைத் தான மேலோன்**
**இடர்இலாச் சொரூபம் நான்என்று எண்ணுவன் தன்னை என்றும்.**

அறிவு இல்லாதவன் இப்பூமியில் இந்த சரீரத்தையே ஆத்மா என்று நினைப்பான். வேதங்களில் கூறப்படும் கருமங்களை அறிந்தவன் சரீரத்தையும் சீவனையும் நான் என்று நினைப்பான். மிக உறுதியான விவேகத்தால் பிரித்து அறியும் திறமையை உடைய சான்றோன் துன்பம் இல்லாத ஆத்ம வடிவமாகவே நான் என்றும் இருக்கின்றேன் என்று தன்னைப் பற்றி எண்ணுவான்.

**188. மேதைதொக்கு என்பே ஆதி மேவிய யாக்கை யின்கண்**
**சாதுவே ஆன்ம புந்தி சற்றுமநீ சார்ந்தி டாதே**
**போதஆ னந்த உண்மைப் பூரண சொரூபம் நான்என்று**
**ஈதினைச் சார்ந்தே என்றும் எய்திடும் பரம சாந்தி.**

சாதுவே. கொழுப்பு, தோல், எலும்பு முதலியன பொருந்திய சரீரத்தில் ஆத்மா என்ற நிச்சயத்தைச் சிறிதும் நீ அடையாதே. அறிவு, ஆனந்தம், உண்மையான பூரண வடிவம் ஆகி எங்கும் நிறைந்த வடிவம் ஆத்மா என்று எப்போதும் எண்ணுக, இந்த ஆன்மாவை உணர்வதாலேயே மேலான அமைதி தோன்றும்.

**189. மொழியும் வேதாந்த நீதி முழுவதும் தெரிந்தோ னேனும்**
**அழிஉடல் ஆதி யின்கண் அத்தியா சத்தி னாலே**
**எழும்அகம் புந்தி தன்னை எவன்விடான் எம்மட்டு அம்மட்டு**
**ஒழிவுஇலா முத்தி என்றுஇங்கு உரைத்தலும் அவனுக்கு இல்லை.**

முன்னோர் கூறிய வேதாந்த நூல்கள் முழுவதையும் ஒருவன் அறிந்தவனாக இருப்பினும், அழியும் சரீரம் முதலியவற்றில் மயக்கத்தால் எழும் நான் என்னும் எண்ணத்தை எதுவரையில் எவன் விடவில்லையோ அதுவரை அவனுக்கு இங்கு முத்தி என்று கூறிய எதுவும் இல்லை. அவனுக்கு இவ்வுலகில் வீடுபேறு என்ற சொல்லுக்கே இடம் இல்லை.

**190. உன்னுடைச் சாயா தேகம் உன்பதி பிம்ப வாக்கை**
**உன்னுடைக் கனவு தேகம் உன்மனோ ராச்சி யாக்கை**
**இன்னதில் ஆன்ம புந்தி ஏதும்நீ இயற்றா தேபோல்**
**இன்னதூ லாக்கை மீதும் இதனைநீ இயற்றி டாதே.**

உன்னுடைய சரீரத்தின் நிழலிலும், கண்ணாடியில் தோன்றும் பிரதிபிம்ப சரீரத்திலும், உன்னுடைய கனவு சரீரம், உன்னுடை மனோராச்சிய சரீரம் ஆகிய இந்த சரீரங்களில் நீ ஆத்மா என்ற எண்ணத்தைச் சிறிதும் கொள்ளாமல் இருப்பது போல் இந்தத்தூல சரீரம் மீதும் ஆத்மா என்ற எண்ணத்தை நீ கொள்ள வேண்டாம்.

**191. ஓதுதே கான்ம புந்தி உணர்வுஇலா மூடர்க்கு எல்லாம்**
**ஏதம்ஆம் சனனம் ஆதி இன்னல்செய் வித்தே ஆகும்**
**ஆதலால் முயற்சி யாலே அதனைவிட்டு உளத்தின் நாசம்**
**தீதுஅறச் செய்இ வற்றால் திரும்பஇப் பவமே சாராய்.**

கூறுகின்ற சரீரத்தை ஆத்மா என்று எண்ணுவது அறிவற்ற மூடர்களுக்கு எல்லாம் துன்பம் தரும் பிறப்பு இறப்புக்கள் முதலானவற்றை உண்டாக்குகின்ற விதை ஆகும். ஆகையால் முயற்சி செய்து அந்த எண்ணத்தை நீக்கி, உள்ளத்தில் குற்றமில்லாமல் அந்த எண்ணத்தை நாசம் செய்வாய். இவற்றால் மீண்டும் நீ இந்த உலக வாழ்வை அடைய மாட்டாய்.

**192. ஐந்துகன் மேந்தி யத்தோடு அமைபி ராணன்க லந்து**
**மைந்த முன்சொல் பிராண மயம்எனும் கோசம் ஆகும்**
**இந்தக்கோ சத்தி னால்முன் இசைத்தகோ சம்நி றைந்து**
**வந்ததன் செய்கை எல்லாம் வலிஉறச் செய்யா நிற்கும்.**

மைந்தா, கர்மேந்திரியங்கள் ஐந்துடன் சரீரத்திலே அமைந்துள்ள பிராணன் கூடி முன்னர்ச் சொன்ன பிராணமய கோசம் ஆகும். இதனால் முன்சொன்ன அன்னமய கோசம் ஆனது நிறைவு பெற்று, தனக்கு ஏற்பட்ட அனைத்துச் செயல்களையும் வலிமையாகச் செய்யும்.

**193. உன்னிய வாயு வைப்போல் உள்ளிலும் வெளியி லும்போய்**
**இன்னதின் விகாரம் ஆகி எங்குமே இட்டஅ நிட்டம்**
**அன்னியம் தனதுஇது என்ன அணுவுமே அறியா தத்தால்**
**பின்னரும் பரவ சத்தால் பேசும்ஈது ஆன்மா ஆகா.**

விரைந்து எழுகின்ற காற்றைப் போல, சரீரத்தின் உள்ளேயும் வெளியேயும் செல்வதாய், வாயுவினுடைய காரியம் ஆகி, எல்லா இடங்களிலும் தனக்கு விருப்பம் ஆனதையும் விருப்பம் இல்லதவற்றையும், வேறு பொருளையும் தன்னையும் இப்படிப்

பட்டது என்று சிறிதும் அறியாத, இக்காரணத்தாலும் மேலும் பிற வசமாய் இருப்பதால் கூறும் இந்தப் பிராணமய கோசம் ஆத்மா ஆகாது.

**194. அநகஞா னேந்தி யங்கள் ஐந்துடன் மனங்க லந்து**
**மனமய கோசம து மமதைசெய் விகற்ப ஏது**
**கனபல விருத்தி பேதம் கலந்ததாய் வலியு டைத்தாய்**
**முனம்இசை கோசம் தன்னை முற்றுமே பரவல் ஆகும்.**

குற்றம் இல்லாதவனே ஞானேந்திரியங்கள் ஐந்துடன் மனம் கூடி மனோ மயகோசம் ஆகும். இக்கோசம் ஆனது நான் எனது என்று வேறுபாடான அபிமானங்களை அடைவதற்குக் காரணமாக உள்ளது. அழுத்தமான பல வேறுபட்ட விடுத்திகளுடன் கூடியதாம் மிகவும் வலிமை உடையதாய் முன்னர்க் கூறிய பிராணமய கோசத்தை முழுவதும் பற்றி இயக்கும்.

**195. ஓதிய பொறிகள் என்னும் ஓமகர்த் தாக்க ளாலே**
**வாதனை விறகி னாலும் வருபுலன் நெய்யி னாலும்**
**தீதுஉற வளர்க்கப் பட்டுத் திறம்உறச் சொலிக்கா நின்ற**
**ஓதிய மனம யத்தீ உலகம்எல் லாம்த கிக்கும்.**

கூறிய ஐந்து ஞானேந்திரியங்கள் என்னும் ஓமம் செய்பவர்களால் வாசனைகள் ஆகிய விறகினாலும், தீமைதரும் புலன்கள் ஆகிய நெய்யினாலும் தீமை உண்டாகும்படி வளர்க்கப் பெற்று நன்றாகப் பற்றி எரிகின்ற கூரிய மனோமய கோசம் ஆகிய நெருப்பு உலகம் முழுவதையும் வருந்தச் செய்யும்.

**196. மனதினை அன்றி வேறாய் மற்றுஒரு அவித்தை இல்லை**
**மனதுதான் அவித்தை ஆகும் மற்றுஇதே பந்த ஏது**
**மனதுதான் வளரும் போது மற்றுதும் வளர்ந்தது ஆகும்**
**மனதுதான் நசிக்கும் போது மற்றதும் நசித்தது ஆமே.**

மனத்தினை அன்றி வேறாக ஒரு அவித்தை என்பது இல்லை. மனமே அவித்தை என்று வழங்கப் பெறும். மேலும் இதுவே சம்சார பந்தத்திற்குக் காரணம் ஆகும். மனம் வளரும் போது பிறவிப் பிணியும் வளர்ந்து விடும். மனம் அழியும் போது பிறவி நோயும் அழிந்து விடும்.

**197. மனதுதன் சத்தி யாலே மற்றும்ஒரு பொருளும் இல்லாக்**
**கனவினில் போக்து ராதிக் கற்பனை யாவும் செய்யும்**
**அனையவா சாக்கி ரத்தும் அகிலமும் செய்வ தாலே**
**மனதுடை வளர்வே ஆகும் மன்னிய சகம்அ னைத்தும்.**

மனம் ஆனது தன்னுடைய வாசனா பலத்தால் வேறு எப்பொருளும் இல்லாத கனவிலே அனுபவிப்பவன் ஆகவும், செய்பவன் ஆகவும் தன்னைப் பலவாறு கற்பித்துக் கொள்ளும். அவ்வாறே விழிப்பிலும் எல்லாக் கற்பனைகளையும் செய்வதால் நிலைபெற்ற அனைத்து உலகமும் மனத்தின் வளர்ச்சியே ஆகும்.

**198. சாதுவே சுழுத்தி யின்கண் சலமனம் ஒடுங்கும் போது**
**யாதுமே அணுவும் இல்லை யாவரும் அறிவர் இத்தை**
**ஆதலால் புருட னுக்குஇவ் அசத்திய பவசம் பந்தம்**
**ஓதிய மனத்தால் உண்டாம் உண்மையில் பவமே இல்லை.**

சாதுவே, உறக்கத்தில் அசைகின்ற மனம் அடங்கிய காலத்தில் எப்பொருளும் சிறிது கூட இல்லை. அனைவருமே இந்த நிலையை அறிவார்கள். ஆதலால் சீவனுக்கு இந்தப் பொய்யான பிறவிசம்பந்த மானது கூறிய மனத்தாலேயே உண்டாகும். உண்மையை ஆராய்ந்து பார்க்கும் போது பிறவி என்பது இல்லை.

**199. வீசிய காற்றே முன்னர் விண்மிசை முகிலைச் சேர்த்துப்**
**பேசிய அஃதே பின்னும் பெருமுகில் தீர்ப்ப தேபோல்**
**தூசுறு மனமே முன்னம் துன்பம்ஆர் பந்தம் செய்யும்**
**மாசுஅறு மனமே மற்று மாசுக வீடுஅ ளிக்கும்.**

வேகமாக வீசும் காற்று ஆனது முன்னர் வானத்தில் மேகங்களை ஒன்று சேர்த்து விட்டுப் பின்னர் கூறிய அந்தக் காற்றே பெருத்த மேகங்களைச் சிதறச் செய்கின்ற செயல், போல், தீய குணங்களால் மாசு அடைந்த மனமே முதலில் துன்பம் நிறைந்த பந்தத்தை தரும். பிறகு குற்றம் இல்லாத தூய மனமே மிகவும் இன்ப வடிவான வீடுபேற்றை அளிக்கும்.

**200. விரிமனம் தேகம் ஆதி விவிதமாம் விடயத் தின்கண்**
**புருடனுக்கு ஆசை யைமுன் புரிந்ததால் பந்தம் செய்யும்**
**மருவும்அவ் விடயத் தின்கண் மற்றதே நஞ்சி னைப்போல்**
**விரதியைத் திடமாய்ச் செய்து விடுத்திடும் பந்த நின்றும்.**

விரிவு அடையும் இயல்பு கொண்ட மனம், சரீரம் முதலிய பலவகையான விஷயங்களில் சீவனுக்கு முதலில் ஆசைகளை உண்டாக்குவதால் பிறவித் துன்பத்தைத் தரும். பிறகு அந்த மனமே தன்னை அடைந்த அந்தப் விஷயங்களினிடம் நஞ்சினை வெறுப்பது போன்ற வெறுப்பை உறுதியாக உண்டாக்கிப் பிறவிப் பிணியினின்றும் விடுதலை பெறச் செய்யும்.

**201. பெருகிய கயிற்றால் ஆவைப் பிணிப்பதும் விடுவ தும்போல்**
**திரிவிதக் குணங்கள் தம்மின் திறமையால் சீவனுக்கு இங்கு**
**உரைதரு மனது தானே உபயமும் செய்வ தாலே**
**பரவிய பந்த மோட்சம் படைப்பதற்கு ஏது ஈதே.**

உறுதி மிக்க கயிற்றினால் பசுவைக் கட்டுவதும் விடுவதும் போல மூன்று வகையான குணங்களின் திறமையால் இவ்வுலகில் சீவனுக்குக் கூறிய மனமே பந்தம் வீடு ஆகிய இரண்டையும் செய்வதனால் பந்ததையும் வீடு பேற்றையும் உண்டாக்குவதற்கு இதுதான் காரணம் ஆகும்.

**202. இதுதமோ ரசகு ணங்கள் இசைந்துதான் மலினம் ஆகித்**
**திதம்உறு பந்த ஏது திகழ்ந்திடும் சத்து வத்தைய**
**நிதமும்ஈது அனுச ரித்து நிருமல வடிவம் ஆகி**
**அதிசய முத்தி ஏதுஆயிடும் அநக மைந்தா.**

குற்றம் அற்ற புதல்வனே, இந்த மனம் தமோ ரசோ ஆகிய இரண்டு குணங்களோடும் பொருந்தித் தான் குற்றத்தை அடைந்து நிலையான பந்தத்திற்குக் காரணம் ஆகி விடும். நன்மையுடன் விளங்கும் சத்துவம் என்ற குணத்தை. இந்த மனம் எப்போதும் மேற்கொண்டு குற்றம் இல்லாத வடிவம் உடையதாய்ச் சிறந்த வீடுபேற்றுக்குக் காரணம் ஆகி விடும்.

**203. கோதுஇலா விவேகத் தாலும் குறைவுஇலா விரதி யாலும்**
**ஈதுதான் சுத்தம் ஆக இன்ப வீட்டுன் பொருட்டாம்**
**ஆதலால் புத்தி மானாய் அமைந்துள முமுட்சு ஆனோன்**
**ஓதும்இவ் இரண்டை யும்முன் உரம்அதாய் அடைய வேண்டும்.**

இந்த மனம் குற்றம் இல்லாத விவேகத்தாலும் குறைவற்ற வைராக்கியத்தாலும் தூய்மை பெற்று, இன்ப வடிவான வீடு பேற்றை அடைய உதவும் ஆதலால் நல்ல புத்தியும்

வீடுபேற அடையும் நோக்கமும் உடையவன் முதலில் கூறிய இந்த இருகுணங்களையும் மிக உறுதியாகப் பெற வேண்டும்.

**204. மனம்எனும் பெயர்உ டைத்தாய் மகத்தான புலிஒன்று இந்தக்**
**கனம்உறு விடயம் என்னும் கானகத் தேசத் தின்கண்**
**அனுதினம் சஞ்சு ரிக்கும் ஆதலால் அத்தே சத்தில்**
**அநிசமும் நன்மு முட்சு அற்பமும் அணுக வேண்டா.**

மனம் என்ற பெயரை உடைய பெரும்புலி ஆனது நிறைந்த விடயங்கள் ஆகிய இக்காட்டில் நாள்தோறும் சுற்றித் திரியும். ஆதலால் அவ்விடத்தில் நல்ல முமுட்சு ஆனவன் எப்போதும் சிறிதும் நெருங்கிப் போக வேண்டாம்.

**205. முன்னிய தூலம் சூக்கம் முதலிய விடயம் யாவும்**
**வன்னம்ஆச் சிரமம் ஆதி வகுப்புடன் உடலம் கன்மம்**
**துன்னிய குணங்கள் ஏது தொடர்பயன் இவைஅ னைத்தும்**
**மன்னிய சீவனுக்கு மனம்இதே படைக்கும் என்றும்.**

இந்த மனமே அனைவருக்கும் சாக்கிரத்தில் தூலமாயும் சொப்பனத்தில் சூச்சுமமாயும் தோன்றும் எல்லாப் பொருள்களையும் நான்கு வர்ணங்கள், நான்கு ஆச்சிரமங்கள் முதலிய பல பிரிவுகளில் சாரங்கள் செய்யப்படும் கர்மங்களையும், ஒலி, ஒளி, ஊறு முதலிய விடயங்களையும் புண்ணியம், பாவம் முதலிய காரணங்கள், அவற்றால் வந்த சுகத்துக்கங்கள், இவ்வாறு கூறிய எல்லாப் பொருள்களையும் நிலைபெற்ற சீவனுக்கு என்றும் உண்டாக்கித் தரும்.

**206. சிறுமனம் அசங்க போதச் சீவனை மோகிப் பித்துக்**
**குறுகுஉடல் இந்தி யாதிக் குணங்களால் பந்திப் பித்து**
**வறிதுதன் செய்கை யாக மருவிய பலபோ கத்தில்**
**வெறிதுநான் எனதுஇது என்றே விவிதமாய் மயக்கும் என்றும்.**

அற்ப மனம் ஆனது பற்று இல்லாதவனும், அறிவு வடிவானவனும் ஆகிய சீவனை சிறிய சரீரம் இந்திரியங்கள் முதலியவற்றாலும் அவற்றின் குணங்களாலும் பந்திப்பித்து தன் அற்பமான செயல்களால் பொருந்திய பல வகையான போகங்களில் வீணாக நான் அனுபக்கிறேன் இது என்னுடையது என அபிமானம் கொள்ளச் செய்து பலவாறு மயங்கச் செய்து துன்பம் தரும்.

**207. துனிஉறும் அத்தி யாசத் துகளினால் மனதே இந்தக்**
**கனம்உறு பவபந் தத்தைக் கற்பனை செய்வது ஆகும்**
**நனிதமோ ரசவி கார நண்ணிநல் விவேகம்அற றோர்க்கு**
**இனையதே சனனம் ஆதி இன்னல்செய் கின்ற ஏது.**

ஒன்றை மற்றொன்றாகப் பார்க்கும் குற்றத்தினால் துன்பம் அடைகின்ற மனமே உறுதியாக இந்த பிறவிப் பிணிப்பைக் கற்பித்துக் கொண்டதே ஆகும். தமோ குணம் ரசோ குணம் ஆகிய இவற்றின் காரங்களை அடைந்து நல்ல விவேகம் இல்லாதவர்களுக்கு இந்த மனமே பிறவி முதலிய துன்பங்களைச் செய்வதற்குக் காரணம் ஆகும்.

**208. ஆதலால் ஆன்ம ரூபம் அறிந்தபண் டிதர்கள் எல்லாம்**
**ஓதிய மனதே என்றும் ஓங்கிய அவித்தை என்பர்**
**மோதிய காற்றி னாலே முகில்திரள் சுழல்வ தேபோல்**
**ஈதினால் இந்த ஞாலம் யாவுமே சுழலும் அன்றோ.**

மனம் பிறவி முதலிய இன்னல்களுக்குக் காரணம் என்பதால் ஆத்ம அறிவைப் பெற்ற சான்றோர் யாவரும் எப்போதும் கூறிய மனமே பெரிய அவித்யை ஆகும் எனபர். வீசியடிக்கும் காற்றினால் மேகக் கூட்டம் சிதறுவதைப் போல இந்த மனத்தால் உலக மக்கள் அனைவரும் பிறந்தும் இறந்தும் சுழல்வார்கள் அன்றோ.

**209. ஆதலால் முமுட்க ஆனோன் அலைவுறும் தன்ம னத்தைச்**
**சூதுஇலா முயற்சி யாலே சோதிக்க வேண்டும் ஈது**
**சோதனை செய்யப் பட்டுச் சுத்தமா நிற்கும் காலை**
**ஓதிய முத்தி சித்தி உளங்கையில் கனிநே ராமே.**

ஆதலால் வீடுபெறும் விருப்பம் உடையவன் அலைந்து கொண்டு இருக்கும் தன்னுடைய மனத்தை வஞ்சகம் இல்லாத முயற்சியால் சோதித்து தூயதாகச் செய்ய வேண்டும். இந்த மனத்தின் குற்றங்கள் நீக்கப் பெற்றுத் தூயதாய் இருக்கும் போது அனைவரும் புகழ்ந்து கூறிய வீடுபேறு உள்ளங்கை நெல்லிக்கனி போல் நன்கு விளங்கும்.

**210. வீடுஉறும் விருப்பத் தாலே விவிதமாம் விடயத் தின்கண்**
**ஏடணை விட்டுக் கன்மம் யாவையும் துறந்துஅன் போடே**
**நீடுஉறும் சிரவ ணாதி நிட்டையில் நிற்ப வன்தான்**
**மூடிய மனோவி காரம் முழுவதும் விடுத்தோன் ஆவன்.**

வீடு பெற வேண்டும் என்னும் ஆசையால் பலவகையான வெளிப் பொருள்களின் மேல் உள்ள ஆசையை விட்டு, அனைத்துச் செயல்களையும் நீக்கி, ஊக்கத்தோடும் சிறப்புப் பொருந்திய சிரவணம், மனனம், நிட்டை ஆகிய நிலைகளில் நிற்பவனே அத்ம வடிவை மறைத்துக் கொண்டு இருக்கும் மனத்தில் உள்ள எல்லா மாறுதல்களையும் விட்டவன் ஆவான்.

**211. பரவியே ஒடுங்க லாலும் பரிணாமி ஆத லாலும்**
**விரிதுயர் வடிவ தாலும் விடயமாம் தன்மை யாலும்**
**உரைமனோ மயகோ சந்தான் உணர்வுறும் அன்மா ஆகா**
**தெரிவுரு வான ஆந்மாத் திருசியப் பொருள்ஆ மோசொல்.**

கூறிய மனமானது தோன்றி மறைவதாலும் மாறுபாடு உள்ளது ஆகையாலும், மிக்க துன்ப வடிவாக உள்ளது ஆகையாலும், அறியப்படும் தன்மை கொண்டதாக இருப்பதாலும் அறிவு வடிவவான ஆத்மா ஆகாது. பார்ப்பவனாக இருக்கும் ஆன்மா பார்க்கப்படும் பொருள் ஆகுமோ? சொல்.

**212. போதஇந் திரியம் ஐந்தும் பொருந்திய புந்தி யேஇங்கு**
**ஓதுவிஞ் ஞான கோசம் உரைத்தஇக் கோசம் தானே**
**காதல்செய் விருத்தி யோடே கலந்ததாய்க் கர்த்தா ஆகிச்**
**சாதுவே புருட னுக்குச் சம்சார ஏது ஆகும்.**

சாதுவே, இந்த சரீரத்தில் ஞானேந்திரியங்களுடன் கூடிய புத்தியே அனைவரும் கூறுகின்ற விஞ்ஞானமய கோசம் ஆகும். மேற் கூறிய இந்தக் கோசம் ஆனது விரும்பிய விருத்தியோடு கூடியதாய்ச் செய்பவன் ஆகி சீவனுக்கு உலக பந்தத்திற்குக் காரணம் ஆகும்.

**213. பகுதியின் விகாரம் ஆகிப் பரமசிற் பதிபிம் பத்தின்**
**திகழ்வினைத் தொடர்வுஅ தாலே தியங்கிய கிரியை ஞானத்**
**தகைமையை உடையது ஆகித் தாக்குதே காதி யின்கண்**
**அகம்அகம் எனவே என்றும் அறவும்ஈது அபிமா னிக்கும்.**

இந்தப் புத்தி ஆனது அவித்தையின் காரியம் ஆகி, மேலான அறிவுவடிவமான பிரம்மத்தின் பிரதி பிம்பத்தை உடையதாய் தொடர்ந்து இருப்பதால், செயல் புரிபவனும்,

அறிபனும் ஆகியவற்றை உடையதாய், நான் நான் என்று தாக்கும் சரீரம் இந்திரியம் முதலியவற்றில், எப்போதும் மிகவும் அபிமானம் கொண்டு இருக்கும்.

**214. அகம்எனும் சுபாவம் ஆகி அநாதியாம் கோசம் ஈதே**
**நிகிலமாம் விவகா ரத்தை நிருவகிக் கின்ற சீவன்**
**புகல்அறம் பாவம் யாவும் பூருவ வாத னைக்குத்**
**தகுவதாய்ச் செய்து அவற்றால் தாக்கிய பயன்பு சிக்கும்.**

எப்போது வந்தது என்று கூற முடியாத தன்மை வாய்ந்த இந்தக் கோசம் ஆனது, நான் என்று எண்ணும் இயல்பு கொண்டது ஆகி, அனைத்து வகையான விகாரங்களையும் நிர்வாகிக்கின்ற சீவனாகும். பெரியோர் கூறும் அறம் பாவங்களையும் முற்பிறவி வாசனைக்கு ஏற்றபடி செய்து அவற்றால் உண்டான பயன்களை அனுபவிக்கும்.

**215. விரிவுறும் கோசம் ஈது விசித்திர யோனி கட்குள்**
**மருவியே கீழும் மேலும் மாறாது திரியும் மற்றும்**
**பரவிய சாக்கி ராதிப் பலவித அவத்தை மேவும்**
**பிரிவுரு சுகதுக் கங்கள் பெருகவே புசிக்கும் ஈதே.**

ஆசை பெருகிவரும் இயல்பு கொண்ட இந்தக் கோசம் ஆனது பலவகையான பிறப்புக்களை அடைந்து, கீழ் நிலைகளிலும் மேல்நிலைகளிலும் மாறி மாறி வந்து கொண்டு இருக்கும். மேலும் ஆசை முதலியன பரவுதற்குக் காரணமான விழிப்பு, கனவு முதலிய பலநிலைகளை அடையும். மிகுந்து வரும் வேறு வேறான இன்ப துன்பங்களை இந்த விஞ்ஞானமய கோசமே அனுபவிக்கும்.

**216. தகவுஇல்தே காதி தம்மின் தன்ம கன்மம்கு ணங்கள்**
**அஃதின்ஆச் சிரமம் ஆதி அகிலமும் எனதே என்று**
**மிகவும்ஈது அபிமா னிக்கும் மெத்தவும் பரமான் மாவின்**
**தகைமையைக் கிட்ட லாலே தடையிலாது இதுவி ளங்கும்.**

இந்த விஞ்ஞானமய கோசம் மேன்மை இல்லாத சரீரம் இந்திரியங்களின் இயல்புகளையும், செயல்களையும், குணங்களையும், அந்த சரீரங்களின் நான்குவகை ஆசிரமப் பிரிவுகளையும், மற்றும் எல்லாவற்றையும் எனது என்று மிகவும் அபிமானிக்கும். ஆத்ம பிரகாசத்தை, நெருங்கி அடைந்து இருப்பதால் இந்தக் கோசம் வேறு எப்பொருளின் துணையும் இன்றி ஒளி வீசும்.

**217. ஆதலால் ஆன்மாவிற்கு ஈது அணுகிய உபாதி ஆகும்**
**ஓதிய கரணங் கட்குள் உளம்எனும் கரணத் தின்கண்**
**சோதியாய் இலங்கும் அன்மாச் சுத்தகூ டத்த னேனும்**
**ஈதினை மயலால் நான்என்று எண்ணியே பவத்தைச் சாரும்.**

ஆத்மப் பரகாசத்தை பெற்று விளங்குவதால் இக்கோசம் ஆன்மாவிற்கு நெருங்கிய உபாதி ஆகும். முன்பு கூறிய அந்தக் கரணங்களுள் புத்தி என்ற கரணத்தில் பிரதிபிம்ப வடிவாய் இருக்கும் ஆத்மா தூய கூடத்தனாக இருப்பினும் மயக்கத்தால் இக்கோசத்தை நான் என்று எண்ணிக் கொண்டு பிறவித் துன்பத்தை அடையும்.

**218. ஞானமெய் ஆன ஆன்மா நவைஇல் கூடத்த ளேனும்**
**ஈனவிஞ் ஞான கோசம் என்னும்இவ் உபாதி சேர்ந்தே**
**ஊனமாம்தா தான்மி யத்தால் ஒன்றுசெய் கர்த்தா போலும்**
**ஏனைஉண் போக்தா போலும் இலங்கிடும் எங்கும் மைந்தா.**

புதல்வனே, அறிவையே வடிவமாகக் கொண்ட ஆன்மா தூய்மையோடு கூடத்தனாக இருப்பினும் இழிவான விஞ்ஞானமயம் என்ற இந்த உபாதியை அடைந்து, குற்றம் உள்ளதான நானும் அதுவும் ஒன்றே என்னும் மயக்கத்தால் ஒரு செயலைச் செய்யும் கர்த்தா போலவும் அதன் பயன்களை அனுபவிக்கும் போக்தா போலவும் அனைத்து இடங்களிலும் விளங்கிக் கொண்ட இருக்கும்.

**219. நித்தமும் இந்த ஆன்மா நிகில பூரணமே யேனும்**
**புத்திதா தான்மி யத்தால் பொய்ப்பரிச் சேதம் மேவி**
**மித்தையாய்த் தன்னைத் தன்னின் மிகவுமே வேறாய்க் காணும்**
**கொத்துறு மண்ணின் வேறாய்க் குடத்தினைக் காண்ப தேபோல்.**

எப்போதும் இந்த ஆன்மா எங்கும் நிறைந்து இருக்கும் ஆயினும், புத்தியுடன் ஒன்றுபட்டு இருப்பதால் பொய்யான அளவுக்கு உட்பட்ட தன்மையை அடைந்து, தன் உண்மை வடிவைத் தன்னைக் காட்டிலும் வேறு ஆனதாக, மிக உறுதியாகத் தன்னைச் சேர்ந்து இருக்கும் மண்ணைக் காட்டிலும் குடத்தினைப் பார்பபது போலப் பொய்யாகப் பார்க்கும்.

•

**220. புத்திர ஆன்மா என்றும் பூரண ஏக ரூபம்**
**ஒத்துள சுபாவ மேனும் உபாதியின் சம்பந் தத்தால்**

**அத்துடைத் தர்மம் தன்னை அநுசரித் ததுபோல் தோன்றும்**
**மெத்திய அயோவி கார மேவிய வந்நி யேபோல்.**

புதல்வனே, ஆத்மா எப்போதும் எங்கும் நிறைந்து உள்ளது. ஒரே வடிவம் ஆனது. எங்கும் உயர்வு தாழ்வு இன்றிச் சமமாய் இருக்கும் இயல்புள்ளது. எனினும் இரும்பின் வடிவத்தால் வேறுபாட்டினை அடைந்துள்ள நெருப்பைப் போல புத்தி என்ற உபாதியின் தொடர்பால், அதனுடைய தர்மங்களைப் பின்பற்றி இருப்பதே போலத் தோன்றும்.

**221. என்னலும் குருவை நோக்கி ஈனம்இல் சீடன் கேட்பான்**
**பன்னிய ஆன்மா விற்குப் பகர்ந்தஇச் சீவ பாவம்**
**மன்னிய மயலா லேனும் மற்றுமே எவற்றா லேனும்**
**துன்னிடு மேல்இ வற்றில் தோன்றிய சங்கை சொல்வேன்.**

இவ்வாறு குரு கூறியவுடன் குற்றம் இல்லாத மாணவன் குருவிடம் கேட்கலுற்றான். தாங்கள் ஆன்மாவிற்கு வந்தது என்று கூறிய சீவபாவனை நிலையான மயக்கத்தாலாவது, மேலும் வேறு எக்காரணத்தாலாவது வந்துள்ளது எனில் இவற்றிலே எனக்குத் தோன்றிய சந்தேகத்தைக் கூறுவேன்.

**222. ஏதமாம் ஜீவ பாவத்து ஏதுவாய் இசைஉ பாதிக்கு**
**ஆதி இல்லாத தாலே அழிவுஇலாது ஆக வேண்டும்**
**நாதனே அநாதிக்கு எல்லாம் நாசமும் இல்லை அன்றோ**
**ஆதலால் ஜீவ பாவம் அழிவுஇலா நித்தம் ஆமே.**

குருவே, துன்பம் தருவது ஆகிய சீவபாவனைக் காரணமாய்ப் பொருந்திய புத்திக்கு பிறப்பு இல்லை. ஆதலால் அழிவு வராததாய் இருக்க வேண்டும். அநாதியான பொருளுக்கு அழிவு ஏற்படாது அல்லவா? ஆதலால் சீவ பாவனை அழிவு இல்லாத நித்தியப் பொருள் ஆகும்.

**223. ஈதினால் இச்சம் சாரம் என்றுமே நீங்கா தாமே**
**ஆதலால் மோட்சப் பேற்றை அடைந்திடு நீதி எங்ஙன்**
**நாதனே இந்தச் சங்கை நசிப்ப தற்குஉத் தரத்தை**
**ஓதிநீ அருளு கென்ன உத்தரம் குரவன் சொல்வான்.**

குருவே, இக்காரணத்தால் இந்த சம்சாரத் துன்பம் எப்போதும் அழியாது. ஆகையால் வீடுபேற்றை அடையும் முறை எப்படி? இந்தச் சந்தேகம் நீங்குவதற்கு உரிய பதிலை நீர் கூறி அருளுக என்று மாணவன் வினவக் குரு பதில் சொல்லத் தொடங்கினார்.

**224. விரிவுறு விவேகம் உற்றோய் விகிதமாய் வினவு கின்றாய்**
**உரைசெயும் உத்த ரத்தை உளத்துடன் ஒருமை யாய்க்கேள்**
**கருதொணா மயலி னாலே கற்பனை ஆவ எல்லாம்**
**உரியநற் பிரமா ணத்தால் ஓர்ந்திடில் உண்மை ஆகா.**

விரிவான அறிவைப் பெற்றவனே, முறைப்படி கேள்வி கேட்கின்றாய். நான் கூறப் போகும் விடையை ஒருமனத்துடன் கேள். இப்படிப்பட்டது என்று எண்ண இயலாத மயக்கத்தினால் கற்பிக்கப் பெற்ற பொருளை எல்லாம் தக்க அளவைகளைக் கொண்டு ஆராய்ந்தால் அவைகள் உண்மைப் பொருள்கள் ஆக மாட்டா.

**225. ஒருவடிவு ஒருவி காரம் ஓர்செயல் ஓர்பற்று இன்றி**
**மருவிய ஆன்மா வின்கண் மன்னிய மயலால் அன்றி**
**ஒருபொருள் புணர்ச்சி யேனும் உண்மையாய் ஒன்ற மாட்டா**
**நிருமலக் ககனத் தின்கண் நீலபீ தாதி யைப்போல்.**

எத்தகையதொரு வடிவமும் எந்த விதமான மாறுதலும், எந்தச் செய்கையும், எவ்விதமான பற்றும் இல்லாமல் எங்கும் நிறைந்துள்ள ஆன்மாவினிடத்தில் குற்றம் இல்லாத ஆகாசத்தில் நீலநிறம், பொன்னிறம் ஆகியன சேர்ந்துள்ள தன்மை போல மிக்க மயக்கத்தால் அன்றி உண்மையாக ஆன்மாவிற்கு ஒரு பொருளுடன் சம்பந்தம் பொருந்தாது.

**226. பிரிவுஅறு சாட்சி ஆகி பிரத்தியக்கு உருவம் ஆகி**
**நிருமல நிருவி கார நிர்க்குண போதா னந்த**
**சொரூபமாம் ஆன்மா விற்குச் சொல்லிய ஜீவ பாவம்**
**புரைஉறு புத்தி தன்னின் பொய்ம்மயல் அதனால் தோன்றும்.**

அனைத்துப் பொருள்களிலும் பிரிவின்றி இருந்து, அவற்றுடன் தொடர்பின்றிச் சாட்சியாக விளங்கி, உள்ளே இருக்கும் அறிவு வடிவம் ஆகி, குற்றம் இன்றியும், மாறுபாடு இன்றியும், குணம் இன்றியும் இருக்கும். அறிவு, ஆனந்தம் இவற்றின் வடிவாக விளங்கும்

ஆத்மாவிற்கு முன்னர்க் கூறிய சீவபாவனை குற்றம் பொருந்திய புத்தியில் அதுவே இது என்ற மயக்க எண்ணத்தால் உண்டாகும்.

**227. ஓதிய நீதி ஆக ஊனமாம் மயலி னாலே**
**சாதமாம் ஜீவ பாவம் சத்தியம் ஆகாது என்றும்**
**ஏதமாம் மயல்இ றக்கின் ஈதுஉடன் இறந்து போகும்**
**ஏதுஎனில் வத்து ஆகா இயல்பினால் அநக மைந்தா.**

குற்றம் இல்லாத புதல்வனே கூறிய முறையாக இழிந்த மயக்க எண்ணத்தால் உண்டாக்கிய சீவபாவனை என்றும் நிலைத்து நிற்பது அன்று. துன்பம் தரும் மயக்கம் நீங்கி விட்டால் இந்த சீவபாவமும் அழியும். எப்படி என்றால் சீவ பாவம் வெறும் தோற்றமாய் இருந்து உண்மைப் பொருளாக இல்லாத தன்மையால்.

**228. தோதக மயலி னாலே தோன்றிய பொருளுக்கு எல்லாம்**
**ஓதும்அம் மயல்எம் மட்டோ உண்மையும் அந்த மட்டே**
**மோதிய இரச்சு சர்ப்ப முதல்மயல் அளவே தோன்றிக்**
**காதுசெய் மயல்இ றக்கும் கணத்திலே இறக்கும் அன்றோ.**

வஞ்சனை செய்யும் மயக்கத்தால் வந்த அனைத்துப் பொருள்களுக்கும் காரணமாகக் கூறும் அந்த மயக்கம் எதுவரை உண்டோ, அதுவரைதான் உண்மைத்தன்மையும் உண்டு. மன மயக்கத்தினால் தோன்றும் கயிற்றிலே பாம்பும், கிளிஞ்சலில் வெள்ளியும் மயக்கம் உள்ளவரை தோன்றி விட்டுப் பிறகு துன்பம் செய்யும் மயக்கம் அழியம் காலத்தில் அழியும்.

**229. கனம்உறும் அவித்தை அத்தின் காரியம் ஆன யாவும்**
**வினவிடில் அநாதி யேனும் வித்தைநன்று உதிக்கும் காலை**
**அநகனே அணுவும்இல் லாது அழிந்திடும் ஐயம் இல்லை**
**கனவுநன் நனவுஉ றுங்கால் காணாமல் அழிவ தேபோல்.**

குற்றம் இல்லாதவனே, உறுதியான அவித்தையும் அந்த அவித்தையில் தோன்றிய அந்தக் கரணம் முதலியன யாவும் ஆராய்ந்து பார்த்தால் எப்போது உண்டாயின என்று கூற இயலாதவை என்றாலும் உண்மை அறிவு தோன்றியவுடன் சிறிதும் இல்லாமல் அழிந்து விடும். நல்ல விழிப்பு ஏற்படும் போது கனவுப்பொருள் காணாமல் அழிவது போல் இதில் சந்தேகம் இல்லை.

**230. ஆதியில் பிராக அநாதியே ஆன போதும்**
**ஓதிய அதற்கு நாசம் ஒப்பிய நீதி யேபோல்**
**சாதுவே அறித்தை ஆதி சஞ்சல உபாதி எல்லாம்**
**ஆதிஇல் லாத தேனும் அழிவதில் ஐயம் இல்லை.**

நல்லவனே, தோன்றுதல் என்பது இல்லாத பிராகபாவம் என்ற பொருள் அநாதியாக இருந்தாலும் கூறிய அதற்கு அழிவு உண்டு என்று கூறும் முறையைப் போல அவித்தை அந்தக் கரணம் முதலான நிலையற்ற உபாதிகள் யாவும் அநாதியாக இருப்பினும் அழிந்து போகும் என்பதிலே சந்தேகம் இல்லை.

**231. ஊனமாம் புத்தி என்னும் உபாதியின் சம்பந் தத்தால்**
**ஈனமாம் சீவ பாவம் ஏகமாம் ஆன்மா வின்கண்**
**கானல்நீர் நிகரே ஆகக் கற்பிதம் ஆத லாலே**
**ஆனஈது உண்மை ஆகாது அநிர்வச நீயம் ஆமே.**

இரண்டற்ற ஆன்மாவிடம் குறைவுள்ள புத்தி என்னும் உபாதியின் தொடர்பினால் இழிந்ததான சீவபாவம் கானலில் தோன்றும் நீருக்கு ஒப்பாக ஏற்றிக் கூறப் படுகின்றது, இக்காரணத்தால் சீவபாவனை உண்மையாக இருப்பது அன்று. பொய் என்றோ உண்மை என்றோ அறுதியிட்டுக் கூற இயலாத தோற்றம் ஆகும்.

**232. புத்தியோ டேபு ணர்ச்சி பூரண ஆன்மா விற்கு**
**மித்தியா ஞானத் தாலே மேவியது ஆத லாலே**
**சத்திய ஞானம் ஒன்றால் சாற்றிய புணர்ச்சி நீங்கும்**
**புத்திரமற்றுஒன் றால்அப் புணர்ச்சிதான் நீங்காது என்றும்.**

புதல்வனே, எங்கும் நிறைந்த ஆன்மாவிற்கு புத்தி என்ற கரணத்துடன் சேருதல் மயக்க அறிவால் ஏற்பட்டது. ஆதலால் உண்மை அறிவு ஒன்றினாலேயே மேலே கூறிய தொடர்பு நீங்கும். வேறு எந்த வகையாலும் அந்தப் புத்தியின் தொடர்பு போகாது.

**233. நித்தமாம் பரசீ வைக்யம் நிகழ்த்திய ஞானம் தானே**
**சத்திய ஞானம் என்று சம்மதம் சுருதிக்கு எல்லாம்**
**சுத்தமாம் ஆன்மஅ நான்ம சொரூபநல் விவேகத் தாலே**
**அத்திற ஞானம் உண்டாம் ஆதலால் விவேகம் செய்க.**

நித்தியமான ஆன்மாவும் சீவனும் ஒன்று என்று ஏற்படும் அனுபவ அறிவே மெய்யறிவு என்று அனைத்து வேதங்களுக்கும் ஒப்புக் கொள்ளத் தக்க முடிவு ஆகும். அந்த மெய்யறிவு தூயதான ஆத்மா இது தூய்மை அற்ற ஆத்மா அல்லாதது இது என்று பிரித்து அறியும் நல்ல பகுத்தறிவினாலே ஏற்படும். ஆதலால் ஆத்மா அநாத்மா விவேகத்தை நீ மேற்கொள்வாயாக.

**234. மலம்உள சலத்தில் நின்று மலத்தினை நீக்கும் காலை**
**சலம்அது நிமலம் ஆகிச் சகத்தினில் தோன்று மாறே**
**நிலையுறு தன்ஆன் மாவின் நின்றுஅகங் காரம் ஆதிப்**
**பலவித அசத்தை நீக்கின் பரமமாய் ஆன்மாத் தோன்றும்.**

அழுக்கான நீரில் இருந்து அழுக்கைப் போக்கி விட்டால், அந்த நீர் தூயது ஆகி உலகிலே தோன்றுவது போல நிலையான தன்னுடைய ஆத்மாவில் இருந்து அகங்காரம் முதல் தூல சரீரம் வரையில் உள்ள ஆத்மா அல்லாத பல பொருள்களை விலக்கினால் ஆத்மா மிக மேலாக விளங்கும்.

**235. ஆதலால் அகங்கா ராதி அகிலமாம் அசத்தை யும்நன்**
**நீதியாய் ஆன்மா நின்று நித்தமும் நீக்க வேண்டும்**
**ஓதுவிஞ் ஞான கோசம் உண்மையாய் ஆன்மா ஆகாது**
**ஏதுஎனில் அநக மைந்தா ஏதுவை இயம்பம் கேளாய்.**

குற்றம் இல்லாத மைந்தா, சென்ற செய்யுளில் கூறிய காரணத்தால் அகங்காரம் முதலிய ஆத்மா அல்லாத பொருள்களையும் நல்ல முறைப்படி ஆத்மாவில் இருந்து தினந்தோறும் நீக்கிவிட வேண்டும். மேலே கூறிய விஞ்ஞானமய கோசம் ஆனது உண்மையாக ஆன்மா ஆக மாட்டாது, எப்படியெனில் அதன் காரணத்தைக் கூறக் கேள்.

**236. சாதுவே விகாரி யாலும் சடம்அதாம் தன்மை யாலும்**
**தீதுஅளவு உடைய தாலும் திருயீசயம் ஆவ தாலும்**
**ஏதுமே நியமம் இன்றி இதுவிப சாரி யாலும்**
**ஆதியாம் ஆன்மா அகாது அநித்தியம் நித்தம் ஆமோ.**

சாதுவே, இந்த விஞ்ஞானமய கோசம் ஆனது மாறுபடுவதாலும், சடமாய் இருப்பதாலும், இகழத் தக்க அளவு உடையதாய் இருப்பதாலும், காணப்படுவதாலும், எந்த முறையும் இல்லாமல் தான் இல்லாமல் போவதாலும், எல்லாவற்றிற்கும் முதன்மையாக இருக்கும் ஆத்மாவாக ஆகாது, அழியும் பொருள் அழியாத ஆத்மா ஆகுமோ? ஆகாது.

**237. பரமமாம் ஆனந் தத்தின் பதிபிம்பம் அதனைச் சார்ந்த**
**உருவமாம் அவித்தை விர்த்தி ஓதும்ஆ னந்த கோசம்**
**பிரிய மோத ப்ரமோதப் பிரிவுடைத்து ஆகி இட்டம்**
**மருவிடும் போதுஉ திக்கும் மற்றகா லத்துஒ டுங்கும்.**

உயர்ந்த பேரானந்தத்தின் வடிவத்தை பிரதிபிம்பத்துடன் கூடிய வடிவம் ஆகிய அவித்தையின் மாறுபாடே ஆனந்தமய கோசம் என்று வேதம் கூறும். அது பிரியம் என்றும் மோதம் என்றும், பிரமோதம் என்றும் பலபிரிவுகளை உடையதாய்த் தனக்கு விருப்பமான பொருள் தன்னை அடையும் போது தோன்றும். மற்ற நேரங்களில் மறைந்து இருக்கும்.

**238. யாதுஒரு கோசம் தன்னில் யாவரும் முயற்சி இன்றி**
**ஓதும்ஆ னந்தம் மெய்யாய் ஒன்றி நித்தம்சு கிப்பர்**
**போதனே அக்கோ சத்தின் பூரண அனுப வம்தான்**
**சாதுவாம் அறிஞ ருக்கே சந்ததம் சாரல் ஆகும்.**

அறிஞனே, எந்த ஆனந்தமய கோசத்தில் எல்லா சீவர்களும் முயற்சியே இல்லாமல் மேலே கூறிய ஆனந்தத்தை உண்மையாக அடைந்து நாள்தோறும் சுகம் அடைவார்களோ, அந்த ஆனந்தமய கோசத்தின் நிறைந்த அனுபவம் நல்ல அறிஞர்களுக்கு எப்போதும் உண்டாகும்.

**239. அநகனே சுழுத்தி யின்கண் ஆனந்த மயகோ சத்தின்**
**அனுபவம் மிகவும் தோன்றும் அகிலமாம் சீவ ருக்கும்**
**இனையதின் அனுப வம்தான் இட்டநோக்கு ஆதி யாலே**
**சொனகனா நனவு கட்குள் சொற்பமாய்த் தோன்றா நிற்கும்.**

குற்றம் இல்லாதவனே, தூக்கத்தில் எல்லா சீவர்களுக்கும் ஆனந்தத்தின் அனுபவம் மிகுதியாகத் தோன்றும். முன்பு சொன்ன நனவிலும் கனவிலும், விரும்பிய பொருளைப் பார்ப்பதாலும் அடைவதாலும் அனுபவிப்பதாலும் இந்த ஆனந்த அனுபவம் மிகவும் குறைவாகவே தோன்றும்.

**240. பரவுசோ பாதி யாலும் பகுதியின் விகாரத் தாலும்**
**கருதிய புண்ணி யத்தின் காரியம் ஆத லாலும்**
**தரம்உறு விகாரக் கூட்டம் தன்னில்உட் பட்ட தாலும்**
**மருவும்ஆ னந்த கோசம் மாசுஇலா ஆன்மா ஆகா.**

உபாதிகளை உடையதாலும், அவித்தையின் மாறுபாடாய் இருப்பதாலும் புண்ணியத்தின் பயனால் தோன்றுவதாலும், தகுதி வாய்ந்த பிரியம், மோதம், பிரமோதம் ஆகியவற்றின் கூட்டமாக இருப்பதாலும் ஆனந்தமயகோசம் குற்றம் இல்லாத ஆன்மா ஆக மாட்டாது.

**241. திருசியக் கடம்உ ணர்ந்து திகழ்ந்திடும் தேவ தத்தன்**
**மருவும்அக் கடமும் ஆகான் மற்றுஅதன் தர்மம் மேவான்**
**பரிசுபோல் பஞ்ச கோசப் பகுப்பினை உணரும் ஆன்மா**
**மருவும்அக் கோசம் ஆகா மற்றுஅதன் தர்மம் மேவா.**

குடத்தைக் கண்டு உணர்ந்த தேவதத்தன் எதிரே இருக்கும் அந்தக் குடம் ஆக மாட்டான். மேலும் அக்குடத்தின் இயல்புகளையும் அடைய மாட்டான். அத்தன்மை போல ஐந்து கோசங்களையும் அறியும் ஆத்மா ஆனது பொருந்திய அந்தக் கோசங்கள் ஆக மாட்டா. மேலும் அவற்றிற்கு உரிய இயல்புகளையும் அடைய மாட்டாது.

**242. பரவிய பஞ்ச கோசப் பகுப்பினை யூகத் தாலே**
**புரைஅற அபவா தித்தால் புரிந்தஅவ் அபவா தத்தின்**
**மருவிய அவதி ஆகி மாசுஇலா அகண்ட போத**
**உருவமாய்ச் சாட்சி தானே ஒருமையாய் மிஞ்சித் தோன்றும்.**

மேலே கூறிய ஐந்து கோசங்களையும் ஊகத்தால் குற்றம் இல்லாதபடி நீக்கி விட்டால் நீ செய்த அந்த அபவாதத்தின் இறுதியில் பொருந்திய ஆதாரப் பொருள் ஆகி, சாட்சியான ஆத்மாவே குற்றம் இல்லாத அகன்ட அறிவு வடிவமாய் ஒன்றாய் மிஞ்சித் தோன்றும்.

**243. விரிவுஉறு பஞ்ச கோச விலட்சண உருவம் ஆகிக்**
**கருதிய அவத்தை மூன்றின் கரியதாய் நிருவி கார**
**நிருமல போதா னந்த நிலைமையாம் இவ்வான் மாவை**
**அரியனே விவேகி ஆனோன் அகம்என அறிய வேண்டும்.**

நற்குணம் உடையவனே நான் எனக் கருதப்படுகின்ற விரிவான ஐந்து கோசங்களுக்கு வேறான வடிவம் உடையது ஆகி சாக்கிரம் சொப்பனம், சுழுத்தி என்ற மூன்று நிலைகளுக்கும் சாட்சி ஆகி வேறுபாடு அற்றதும் மலம் அற்றதும், அறிவு ஆனந்தமாய் நிலைத்து விளங்குவதாயும் உள்ள இந்த ஆன்மாவை விவேகம் உடையவன் நான் என்று தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

# சீவப்பிரம்ம ஐக்கிய இயல்

**244. என்னஆ சானை நோக்கி ஏதம்இல் சீடன் சொல்வான்**
**சொன்னஇப் பஞ்ச கோசம் சுத்தமாய் மித்தை என்றே**
**உன்னிறான் ஊகத் தாலே ஒதுக்கிய பின்னர் ஐயா**
**மன்னுசூ னியமே அன்றி மற்றுஏதும இங்குக் காணேன்.**

இவ்வாறு கூறிய குருவினை நோக்கி குற்றம் அற்ற சீடன் கூறத் தொடங்கினான். குருவே, தாங்கள் கூறிய இந்த ஐந்து கோசங்களையும் நன்றாகவே பொய் என்று உண்ணி ஊகத்தால் நான் விலக்கிய பின்னர் நிலையான சூனியத்தைத் தவிர இங்கு வேறு எதனையும் நான் பார்க்கவில்லை.

**245. ஆதலால் விவேகி ஆனோன் அகம்என அறியும் வண்ணம்**
**ஏதுதான் வத்துஇங்கு உண்டு இதைஇசைத்து அருளு வாய்என்று**
**ஓதிய சீடனுக்குஇவ் உத்தமக் குரவன் சொல்வான்**
**சாதுவே விசாரம் ஈது சதுரன்நீ உண்மை சொன்னாய்.**

ஆதுலால் பஞ்ச கோசங்களைத் தள்ளிய பின்பு சூனியமே இருப்பததால் விவேகம் உடையவன் இப்பூமியில் நான் எண்று அறியும்படி உள்ள பொருள் எது உண்டோ அப்பொருளைக் கூறி அருள வேண்டும் என்று கூறிய சீடனுக்கு உணர்த்த குருவானவர் சொல்லத் தொடங்கினார். சாதுவே, விசாரம் செய்வதில் திறமை பெற்ற நீ இவ்வுண்மையைக் கூறினாய்.

**246. விரிவுஅகங் காரம் ஆதி விகாரம் மற்றுஅவற்ற பாவம்**
**இருமையாம் இவற்றை எல்லாம் இங்குயாது உணரும் யாதை**
**ஒருபொருள் உணராது அந்த உணர்வுஉரு வான சாட்சிப்**
**பொருளினை மிகயும் நுண்மைப் புந்தியால் உணர்தி மைந்தா.**

புதல்வனே, மிக விரிந்த அகங்காரம், முதலிய அனைத்து வகையான காரியப் பொருள்களையும் மேலும் அவற்றின் இன்மையையும் இந்த இருவகையான இப்பொருள்களை எல்லாம் இங்கு எது உணருமோ, எப்பொருளை வேறு ஒருபொருளும்

அறியாதோ, அந்த அறிவு வடிவமான சாட்சியாக உள்ள பொருளை மிக நுண்ணிய புத்தியால் அறிவாயாக.

**247. எதுஎது எதனால் இங்ஙன் இதுஎன அறியல் ஆகும்**
**அதுஅது அதனைச் சாட்சி ஆகவே அடைந்து நிற்கும்**
**எதுவுமே அறியாத அத்தில் என்றுமே சாட்சி ஆகா**
**சதுரனே இவிதம் ஆகச் சார்ந்திடும் நீதி எங்கும்.**

எப்பொருளால் எந்த எந்தப் பொருள் இது இவ்வாறு உள்ளது என்று அறியப்படுகிறதோ அந்த அந்தப் பொருள் தன்னை அறியும் அந்தப் பொருளைத் தனக்குச் சாட்சியாகப் பெற்று இருக்கும். ஒரு சிறிதும் அறியப் படாத பொருள்களில் எப்போதும் எந்தப் பொருளுமே சாட்சி ஆக மாட்டாது. திறமை உள்ளவனே, இவ்வாறு எங்கும் விதி கூறப்படும்.

**248. யாதினால் இந்த ஆன்மா என்றுமே தன்னால் தானே**
**நீதியாய் இலங்கா நிற்கும் நித்தமும் ஆத லாலே**
**சாதுவே தன்னைத் தானே சாட்சியாய் அடைந்து நிற்கும்**
**ஆதலால் சூனி யத்தை அறிந்திடும் நீயே ஆன்மா.**

சாதுவே, இந்த ஆத்மா எப்பொழுதுமே எக்காரணத்தினால் தன்னிருப்பினால் தானாகவே முறைமையாய் விளங்குமோ, ஆகையால் தனக்குத் தானே சாட்சியாக அமைந்து இருக்கும். ஆதலால் அந்த சூனியத் தன்மையை அறிந்திடும் நீதான் அந்த ஆத்மாவாக விளங்குகின்றாய்.

**249. சூனியத்து அப்பால் ஆகச் சொல்லிய ஆன்மா விற்கு**
**மேல்நிறை ஆக ஒன்றும் மேவியது இல்லை என்றும்**
**ஆனதால் அறிபொ ருட்கும் அறிபடாப் பொருளி னுக்கும்**
**மேல்நிலை அறிவே மெய்யாய் மேவிய ஆன்மா நீயே.**

சூனியத்திற்கு அப்பாற்பட்டு விளங்கும் எனக் கூறிய ஆன்மாவிற்கு மேலாக மேவிய பொருள் ஒன்றும் இல்லை. ஆகையால் பொறிகளால் அறியத் தக்க பொருள்களுக்கும், அறிய இயலாத பொருள்களுக்குக் மேலாக அறிவு வடிவமான உண்மையாய் உள்ள ஆத்மா நீயே ஆவாய்.

250. **சாதுவே எந்த ஆன்மா சாக்கிரம் ஆதி யின்கண்**
**ஓதிய பிரத்திய கான்ம உருவமாய் நான்நான் என்று**
**சோதியாய் உளத்தில் என்றும் சொலித்திடும் ஏகம் ஆக**
**ஆதியாம் அவ்வான் மாவை அகம்என அறிதிநீ என்றும்.**

சாதுவே, கூறிய எந்த ஆத்மா ஆனது சாக்கிரம, சொப்பனம், சுழுத்தி நிலைகளில் நான் நான் என்று எப்போதும் மனதில் சுயம் பிரகாசமாய் விளங்கும் ஆத்ம வடிவை, ஒன்றே ஆனதும் எல்லாவற்றிற்கும் முதன்மையானதும் ஆன அந்த ஆத்மாவை நீ எப்போதும் நான் என்று அறிவாயாக.

**251. வித்தர விகாரம் உற்று விவிதமாய்த் தோன்றா நின்ற**
**அத்திர அகங்கா ராதிஅகிலமும் நேரே கண்டு**
**நித்தியா நந்த சித்தாய் நிகழ்ந்திடும் நின்ஆன் மாவைப்**
**புத்திர சூக்கம் ஆன புந்தியால் உணர்தி நன்றாய்.**

புதல்வனே, பலவகை வேறுபாடுகளை அடைந்து, பலவாகத் தோன்றும் நிலையற்ற அகங்காரம் முதல் தூல சரீரம் வரையில் உள்ள அனைத்துப் பொருள்களையும் பார்த்துக் கொண்டு நித்தியமாய் ஆனந்தமாய், அறிவு வடிவாயும் விளங்குகின்ற உனது ஆன்மாவை நுட்பமான அறிவினால் நன்றாகத் தெரிந்து கொள்வாயாக.

**252. கோதுஇலா விவேகி ஆனோன் குடம்சலம் பதிபிம் பங்கள்**
**யாதுமே விட்டு விண்ணில் ஏகமாய்ப் பொதுவே ஆகி**
**ஓதிய இவைகள் மூன்றும் ஒளிர்விப்பவன் ஆகித் தானே**
**சோதியாம் கதிரோன் தன்னைச் சுத்தமாய்க் காண்ப தேபோல்.**

குற்றம் இல்லாத விவேகம் உடையவன் குடத்தையும், நீரையும், அதில் பிரதிபிம்பத்தையும் விட்டு விட்டு வானிலே ஒன்றாக இருந்து கொண்டு, அனைத்தையும் ஒளி பெறச் செய்யும் பொதுப் பொருளாகி, முன்னர்க் கூறிய குடம், நீர் பிரதிபிம்பம் ஆகிய இம்மூன்றையும் ஒளி பெறச் செய்பவனாய், தானே சுயம் பிரகாசமாய் விளங்கும் சூரியனை நன்றாகக் காண்பதைப் போல்.

**253. போதம்ஆர் விவேகி தேகம் புந்திசிற் பதிபிம் பங்கள்**
**யாதும்விட்டு இதய விண்ணில் ஏகமாய் யாவும் காணும்**

**சோதியாய் அகண்ட போத சொரூபமாய் சதசத் திற்குப்**
**பேதமாம் தன்ஆன் மாவைப் பிரித்துநன்று அறிய வேண்டும்.**

நல்லவிவேகம் பெற்றவன் சரீரத்தையும். புத்தியையும் அதில் தோன்றும் பிரதி பிம்பத்தையும் உண்மை அல்ல என்று விட்டு விட்டு, இதய வானில் ஒன்றாய் இருந்து, அனைத்துப் பொருள்களையும் விளக்குகின்ற பிரகாசம் உடையதாய் அகண்ட அறிவு வடிவமாய் இருப்பில்லாத தோற்றம் மாத்திரம் உடைய பொருள்களுக்கு வேறாய் தன்னைவிட வேறு அல்லாத ஆத்மாவை நன்றாக பிரித்து அறிந்து கொள்ள வேண்டும்.

**254. நித்தமாய் விபுவும் ஆகி நிகிலபூ ரணமும் ஆகி**
**மெத்தவும் நுண்மை ஆகி மேவும்உள் வெளிகள் இன்றிப்**
**பித்தியக் கான்மா வாகப் பிறங்கிய பரமான் மாவைப்**
**புத்திர விவேகி ஆனோன் புலம்உற அறிய வேண்டும்.**

புதல்வா என்றும் உளதும் எங்கும் வியாபித்தும், அனைத்துப் பொருள்களிலும் நிறைந்தது ஆகி, மிகவும் நுட்பமானது ஆகி, உள்வெளிகள் பொருந்தி இன்றி சரீரத்தின் உள்ளே ஆன்மாவாக விளங்குகின்ற மேலான பிரம்மத்தை விவேகம் உடையவன் நன்றாக அறிந்துகொள்ள வேண்டும்.

**255. நித்தமும் தன்ஆன் மாவை நிலைமையாய் அறிந்த சீவன்**
**சுத்திய பாவம் அற்றோன் சுழல்உறு விகாரம் விட்டோன்**
**மெத்திய துயரம் அற்றோன் மிகவும்ஆ னந்தம் பெற்றோன்**
**எத்தினும் பயம்இ றந்தோன் ஏகமாம் பதம்அ டைந்தோன்.**

தன்னுடைய ஆத்ம வடிவினை உறுதியாய் தெரிந்து கொண்ட சீவன் மாசற்றவனாகவும் பாவமற்றவனாகவும் சுற்றி வரும் வேறுபாடான பிறப்பினையும் இறப்பினையும் விட்டவன் ஆவான். மிக்க துயரங்களையும் விட்டு விடுவான். மிகவும் ஆனந்தத்தையும் அடைவான். எப்பொருளாலும் அச்சம் அடைய மாட்டான். ஒன்றாய் இருக்கும் ஆத்ம வடிவாய் உள்ள நிலையை அடைவான்.

**256. நல்லன முமுட்சு வுக்கு நவின்றஇவ் ஆன்ம ஞானம்**
**அல்லது பவபந் தத்தை அகற்றி ஆநந்த முத்தி**
**செல்லஓர் நெறியும் இல்லைச் செப்பினம் உண்மை யாக**
**அல்லல்தீர் ஆத்ம ஞானம் ஆதலால் அடைதி மைந்தா.**

மைந்தனே, வீடு பேறு அடைய விரும்புவோனுக்கு நல்லது எனக் கூறும் இந்த ஆத்மஞானத்தைத் தவிர வேறு எந்த வழியும் சம்சார பந்தத்தை நீக்கி, இன்ப வடிவமான முத்தியை அடைய ஏற்றதாக இல்லை, உண்மையாகவே கூறினோம். ஆதலால் பிறவிப் பிணியை நீக்க வல்ல ஆத்ம ஞானத்தை பெறுவாயாக.

**257. பிரமமே நான்என்று இந்தப் பேதம்இல் ஞானம் தானே**
**பரவிய மோட்சத் திற்குப் பரமகா ரணம்ஏது என்னில்**
**பிரமமே அறிந்த ஞானி பேதம்எல் லாம்வி டுத்துப்**
**பிரிவு இல்ஆ நந்தப் பிரமமே ஆவ தாலே.**

பிரம்மமே நான் என்று இந்த வேறுபாடு அற்ற அறிவே, அனைவராலும் புகழப்பெறும் வீடுபேற்றிற்கு மேலான காரணம் ஆகும். ஏன் என்றால் பிரம்மத்தை அறிந்த ஞானி அனைத்து வேற்றுமைகளையும் போக்கி, அழிவு இல்லாத ஆனந்த வடிவமான அந்தப் பிரம்மமே ஆகி விடுகின்றான். ஆகையால் இதுவே மேலான காரணம்.

**258. பிரமமே ஆன ஞானி பின்னர்இச் சம்சா ரத்தை**
**மருவிடான் ஆத லாலே மாசுஅற முமுட்சு ஆனோன்**
**பிரமம்நான் பிரம மேநான் பிரம மேநான்என்று இங்ஙன்**
**திரமதாய்ப் பிரமம் தன்னைத் தினமுமே அறிய வேண்டும்.**

பிரம்மமே ஆகி விட்ட ஞானி, பின்னர் இந்த சம்சாரத்தை அடைய மாட்டான். ஆதலால் வீடு பெற விரும்புவோன் நான் பிரம்மம், பிரம்மமே நான், பிரம்மமே நான் நான் என்று இவ்வாறு உறுதியாக எப்போதும் பிரம்மத்தை தியானம் செய்து அறிய வேண்டும்.

**259. சத்திய ஞானா னந்தச் சந்ததா னந்தம் ஆகி**
**நித்திய சுத்தம் ஆகி நிகழ்சொத சித்தம் ஆகிப்**
**பித்தியக்க பின்னம் ஆகிப் பிரிவுஅற நிறைந்து நின்ற**
**வத்துஏது அதுவே மைந்தா வரமான பிரமம் ஆகும்.**

புதல்வனே என்றும் உளதும், அறிவு வடிவானதும், அளவுகடந்ததும், எப்போதும் ஆனந்த வடிவாகி, எக்காலத்தும் பரிசுத்தமானதும், சீவஆத்மாவிற்கு வேறுபடாதது ஆகி, எப்பொருளையும் விட்டுப் பிரியாமல் எங்கும் நிறைந்து நின்ற பொருளாக உள்ளதோ அதுவே உயர்ந்த பிரம்மம் ஆகும்.

**260. பன்னிய பிரமம் ஈது பரமஅத் துவிதம் ஆகும்
தன்னினில் வேறாய் ஒன்றும் தான்இலாத் தன்மை யாலே
பின்னம்இல் பரமார்த் தத்தைப் பேணிநான்று அறியும் காலை
அந்நியம் எனும்அ அனைத்தும் அணுவும்இல் லாத தாமே.**

கூறிய இந்தப் பிரம்மம் தன்னைக் காட்டிலும் வேறு ஒருபொருள உண்மையில் இல்லாததால் மேலான இரண்டாவது பொருள் இல்லாதது. ஆகையால் வேறுபாடு இல்லாத பிரம்மத்தை ஆராய்ந்து நன்றாக அறியும் போது பிறபொருள் அனைத்தும் சிறிதும் இல்லாதது ஆகும்.

**261. யாதுஇது சகல ஞாலம் என்பதாய் நாநா வாகத்
தீதுசெய் அஞ்ஞா னத்தால் திருசியம் போலத் தோன்றும்
சாதுவே அவைஅ னைத்தும் சகல கற்பனையும் அற்ற
போதஆ னந்த உண்மைப் பூரணப் பிரம் மேஆம்.**

சாதுவே காணுகின்ற இந்த உலகம் அனைத்தும், பலவிதமாய் கூறப்பட்டு தீமை செய்யும் அறியாமையால் உண்மையாக இருப்பவை போலவே காணப்படும். காணப்பெறும் அப்பொருள்கள் யாவும் எல்லாவகையான கற்பனைகளும் இல்லாத அறிவாயும் ஆனந்தமாயும் சத்தியமாயும் உள்ள எங்கும் நிறைந்த பிரம்மமே ஆகும்.

**262. கனம்உடைத் தான மண்ணின் காரியம் ஆன கும்பம்
அநகனே மண்ணே அன்றி அற்பமும் பின்னம் அல்ல
வினவிடில் கும்ப ரூபம் வீங்கிய மண்ணின் ரூபம்
தனைஅலால் வேற தாகத் தான்இலாத் தன்மை யாலே.**

குற்றம் அற்றவனே திரண்ட மண்ணின் காரியமான குடம் மண்ணே அல்லாமல் மண்ணைக் காட்டிலும்சிறிதும் வேறுபட்டது அன்று. ஆராய்ந்து பார்த்தால் மண்ணைத் தவிர வேறாகத் தான் இல்லாத தன்மையால் குடம் ஆகிய தான் இல்லை. ஆகையால் பருத்த குடவடிவம் மண்ணின் வடிவமே ஆகும்.

**263. விரிவுஉறு மண்ணை அன்றி வேறதாய்க் கடத்தைக் காட்ட
ஒருவனும் சமர்த்தன் இல்லை உலகினில் அதனால் கும்பம்
கருதொணா மோகத் தாலே கற்பிதம் பொய்யே மற்று
மருவிய அதுதான் நாம மாத்திரம் மண்ணே உண்மை.**

இவ்வுலகிலே எந்த மனிதனும் குடமாக விரிவு அடைந்த மண்ணைத் தவிரக் குடத்தை வேறாகக் காட்டுவதற்கு வல்லவன் இல்லை. ஆகையால் இப்படிப் பட்டது என்று நினைக்க இயலாத மயக்கத்தால் கற்பிக்கப் பெற்ற குடம் பொய்யே ஆகும். மேலும் அக்குடம் பெயரளவே உள்ளது. மண்ணே உண்மைப் பொருள்.

**264. சாற்றிய நீதி யேபோல் சத்தியப் பிரமத் தின்கண்**
**தோற்றுகா ரியம்அ னைத்தும் துகள்இலாப் பிரம மேயாம்**
**ஏற்றிய பிரமம் அல்லால் எவளவும் வேறே இல்லை**
**தேற்ற மாய்உ சாவில் எங்கும் திகழ்வது பிரமம் தானே.**

மண்ணின் காரியம் ஆகிய குடம் மண்ணைத் தவிர வேறாக இல்லை என்பது போல, மூன்று காலங்களிலும் விளங்கும் பிரம்மத்தினிடம் தோன்றிய காரியங்கள் ஆகிய, உலகம் யாவும் குற்றம் இல்லாத பிரம்மம் ஆகும். கற்பிதப் பொருள் தோன்றுவதற்கு இடமாக இருக்கும் பிரம்மத்தைத் தவிர வேறுபொருள் எள்ளளவும் இல்லை. தெளிவோடு ஆராய்ந்தால் எவ்விடத்திலும் விளங்கிக் கொண்டு இருப்பது பிரம்மமே ஆகும்.

**265. கனபரம் பிரமம் அல்லால் கற்பிதம் ஆன ஞாலம்**
**தினைஅள வேனும் வேறாய்த் திகழும்என்று உரைப்போர்க்க எல்லாம்**
**அங்கமோ காந்த காரம் அற்பமும் அகல வில்லை**
**அனையவர் சொல்வது எல்லாம் அசத்தியம் துயில்வோர் சொற்போல்.**

குற்றம் இல்லாதவனே, அறிவு வடிவமான பிரம்மத்தைத் தவிர, அதில் கற்பித்துள்ள உலகம் சிறிது அளவாவது வேறாக இருக்கும் என்று கூறுபவர்களுக்கு எல்லாம் மயக்கம் ஆகிய இருள் கொஞ்சமும் போகவில்லை. அவர்கள் கூறுவன அனைத்தும் தூங்குபவர் கூறும் சொல்லைப் போல உண்மை அற்றவை ஆகும்.

**266. இதுஎனும் சகம்அ னைத்தும் ஏகமாம் பிரமமே என்று**
**அதர்வண உபநி டத்தின் அதிசயம் ஆன வாக்கும்**
**திதமதாய்ச் சொல்வ தாலே திருசியச் சகம்அ னைத்தும்**
**உதயம்அத் தமனம் இன்றி ஒளிர்ந்திடும் பிரம மேஆம்.**

இது என்று சுட்டிக் கூறும் உலகம் யாவும் ஒரே பிரம்ம வடிவாக இருக்கின்றன என்று கூறும் முண்டகோப நிடதத்தின் மேலான வாக்கு உறுதியாகக் கூறுவதால் நம்மால்

காணப்படும் அனைத்து உலகமும் தோற்றமும் மறைவும் இன்றி விளங்குகின்ற பிரம்மமே ஆகும்.

**267. கனமதாம் அதிட்டா னத்தில் கற்பிதம் ஆன யாவும்**
**வினவில்அவ் வதிட்டா னத்தை விட்டுவேறு உருவம் ஆகா**
**அநகஆ தலினால் ஞாலம் அகிலமும் பிரமம் என்று**
**சொனஅதிட் டன மேஆம் சொற்பமும் வேறுஆ காதே.**

குற்றம் இல்லாதவனே, பெருமை பொருந்திய அதிட்டானப் பொருளில் ஏற்றிக் கூறிய அனைத்துப் பொருள்களையும் ஆராய்ந்தால் அந்த அதிட்டானப் பொருளை விட்டு விட்டு வேறு வடிவம் கொள்ள மாட்டா. ஆதலினால் அனைத்து உலகமும் அதிட்டானம் ஆகிய பிரம்மமே ஆகும். கொஞ்சமும் வேறு பொருள் ஆக மாட்டா.

**268. சகம்இது மெய்யாம் ஆகில் சத்தியப் பிரமத் திற்குப்**
**புகல்பரி பூர ணத்வம் போயிடும் வேதத் திற்கு**
**மிகவும்அப் பிரமா ணத்வம் மேவிடும் பரசி வற்கும்**
**இகல்அசத் தியஆ தித்வம் எய்திடும் இதுநன்று அன்றே.**

இவ்வுலகம் உண்மைப் பொருளாக இருந்தால் சத்தியமான பிரம்மத்திற்கு வேதம் கூறுவதான நிறைந்து இருக்கும் தன்மை அழியும். வேதம் உண்மை அற்றது ஆகி விடும். ஈச்வரனுக்கும் பொய் பேசும் தன்மை வரும். இது நன்மைத் தராது.

**269. சாதுவே குற்றம் மூன்றும் சகித்திடார் மேலோர் யாரும்**
**ஈதுஈசன் மனத்தும் இசைந்தது அன்று எதனால் என்னில்**
**ஏதுமே அறிந்த ஈசன் எவையுமே என்னில் இல்லை**
**யாதினும் நானு இல்லை ஏகனாம் என்ப தாலே.**

சாதுவே பெரியோர் எவரும் மேலே கூறப் பெற்ற மூன்று தவறுகளையும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். உலகம் உண்மையான பொருள் என்பது பகவானின் மனக்கருத்துக்கும் ஏற்றது அன்று. எதனால் எனில் எல்லாவற்றையும் அறிந்த கண்ணன் ஆகிய பகவான் எல்லாப் பொருளும் என்னிடம் உண்மையில் இல்லை. நான் ஒருவனே உள்ளேன். எப்பொருளிலும் நான் இல்லை என்று கூறுவதால். (உலகம் பொய் என்று நாம் அறியலாம்.)

**270. பின்னரும் சகமெய் ஆனாலும் பிரிவு இலாச்சுழுத் திமின்கண்**
**அன்னது தோன்று வேண்டும் அணுவுமே தோன்றாது அத்தால்**
**பன்னிய சகம்அு னைத்து பார்க்கும்போது இலவே இல்லை**
**பின்இலாச் சொப்ப னத்தில் பிறங்சிய சகத்தி ரள்போல்.**

மேலும் உலகம் உண்மைப் பொருளாக இருந்தால் வேறுபாடுகள் இல்லாத உறக்கத்தில் அந்த உலகம் தோன்ற வேண்டும். அவ்வாறு சிறிதும் தோன்றாது கூறப்படும் அனைத்து உலகமும் ஆராய்ந்து பார்க்கும் காலையில் விழித்தி பிறகு இல்லாமல் போகின்ற கனவில் விளங்கும் உலகக் கூட்டம் போல் உறுதியாக இல்லை.

**271. ஆதலால் பிரமத் தின்கண் அந்நிய சகமே இல்லை**
**பேதமாய்த் தோன்றல் பொய்யே பெருங்கயிற்று அரவ தேபோல்**
**ஓதொணா ஆரோ பத்திற்கு உண்மையும் உண்டோ மாலால்**
**ஆதியாம் அதிட்டா னம்தான் ஆரோபம் எனவே தோன்றும்.**

கனவு போன்றதே உலகம் ஆதலால் பிரம்மத்திற்கு வேறான உலகம் இல்லை. வேறாகத் தோன்றும் உலக தோற்றம் பெரிய கயிற்றில் பாம்பு போல் இல்லாததே ஆகும். விளக்கிக் கூற இயலாத கற்பிக்கப் பெற்ற பொருளுக்கு உண்மையாக இருக்கும் தன்மை உண்டோ? முதலிலேயே இருக்கும் அதிட்டானப் பொருளே மயக்கத்தால் கற்பிக்கப் பெற்ற பொருளாகத் தோன்றும்.

**272. பித்தனாம் மூட னுக்குப் பிரமத்தால் காண்பது எல்லாம்**
**வித்தரப் பிரம மேஆம் வெள்ளிசுத் திகையே அன்றோ**
**சத்தியப் பிரமம் தானே சகம்எனக் காண்ப தாலே**
**வத்துவாய்ச் சகம்உண்டு என்னல் வாக்குமாத் திரமே ஆகும்.**

உண்மை அறியாது மயக்கம் கொண்டவனுக்கு அம்மயக்கத்தால் வெள்ளி கிளிஞ்சல் அல்லவா காணப்படுவன யாவும் எங்கும் நிறைந்த பரம்பொருளே ஆகும். அழியாத பிரம்மமே உலகமாகத் தோன்றுவதால் உலகம் உண்மையாய் உண்டு என்று கூறுவது, பேச்சளவே அல்லாது பொருள் இல்லாதது ஆகும்.

**273. சாற்றிய ஏது வாலே, சத்தியம் பிரமம் மேலாய்த்**
**தோற்றும்அத் துவிதம் ஆகும் துயசித் கனமும் ஆகும்**

**மாற்றும்ஓர் மலர் இலாதாம் ஆதி அந்தம்பெ றாதாம்**
**ஏற்றும்ஓர் செயல் இலாதாம் என்றுமே சாந்தம் ஆகும்.**

உலகிற்கு தனியாக இருப்பு இல்லை என்ற காரணத்தால் பிரம்மம் சத்தியமாக உள்ளது. அது சுயம் பிரகாசமானதால் மேலாக விளங்குவது. இரண்டு அற்றது. மாசற்ற அறிவே வடிவம் ஆகும். எத்தகைய குற்றமும் இல்லாதது. பிறப்பும் இருப்பும் அற்றது. அறியாதவர் ஏற்றிக் கூறும் எச்செயலும் இல்லாதது. என்றும் சாந்தமாய் இருப்பதும் ஆகும்.

**274. பரமஆ னந்தம் ஆகும் பங்கம்ஆர் மாயை செய்த**
**பரிவு யாதும் பெறாதாம் பேதியா நித்தம் ஆகும்**
**மருவும்அவ் வியத்தம் ஆகும் அப்பிர மேயம் ஆகும்**
**கருதும்ஓர் கலைஇ லாதாம் காட்டும்ஓர் பெயர்இ லாதாம்.**

அந்தப்பிரம்மம் ஒப்பு உயர்வு அற்ற ஆனந்த வடிவு ஆக இருக்கும், குற்றம் நிறைந்த மாயையினால் ஏற்படுகிற வேறுபாடு இல்லாத நிலைத்த பொருள் ஆகும். பொறிகளால் உணரப்படாதது ஆகும். எந்த அளவையாலும் அளவிட இயலாததாகும். கருதும் அவயவங்கள் இல்லாதது ஆகும். தன்னைக் குறித்துக் காட்ட ஒரு பெயரும் இல்லாததும் ஆகும்.

**275. ஒருமையாய் ஒருவி காரம் ஒன்றிடாப் பிரம சோதி**
**சருவதா விளங்கா நிற்கும் சஞ்சல ஞாதி ராதித்**
**திரிபுடி யாதும் இன்றித் திருசிய விகற்பம் அற்ற**
**பிரிவுஇலா அகண்ட சித்தே பிரமம்என்று அறிவர் மேலோர்.**

இரண்டு அற்றதாய் எந்த வேறுபாடும் இல்லாமல் சுயம்பிரகாசமாய் எப்பொழுதும் விளங்கிக் கொண்டு இருக்கும். மாறும் இயல்புடைய எவ்வகையான திரிபுடிகளும் (அறிபவன், அறியப்படும் பொருள், அறிதல் இந்த மூன்றின் கூட்டமே திரிபுடி) இல்லாமல் பலவகைப் பெயர்களும், வடிவங்களும் இல்லாத அகண்ட அறிவே பிரமம் என்று மேலோர் அறிந்து இருப்பர்.

**276. உரியனே தள்ளக் கூட்ட ஒணாததாய் மனது வாக்கால்**
**பரவியே கோச ரிக்கப் படாததாய் அறிவதற்கு இங்கு**

**அருமையாய் ஆதி அந்தம் அற்றஅவ் அகண்டம் ஆன**
**பிரமமே நாமும் நீயும் பிறிதுஉள சீவ ரும்காண்.**

உபதேசிப்பதற்கு உரியவனே தள்ளவும் விடவும் இயலாததாய் மனத்தாலும் மொழியாலும் அறியப்படாததாய் அறியாமை நிலையில் அறிவதற்கு அரிதாய் இருக்கும் முதலும் முடிவும் இல்லாத அந்த அகண்ட பிரமமே நானும் நீயும் மற்ற சீவர்களும் ஆவோம் என்பதை நன்கு தெரிந்து கொள்.

**277. இத்திறம் சோதிப்பு உற்ற இப்பரப் பிரம சீவர்**
**தத்துவம் பதங்க ளுக்குத் தகைமையாம் பொருள்கள் ஆகும்**
**நித்தமும் அவர்க ளுக்கு நிலைமையாம் ஐககி யத்தைத்**
**தத்துவ மசியாம் வாக்குத் தடைஅறச் சாற்றும் நன்றாய்.**

இத்தன்மையாகச் சோதிக்கப் பெற்ற இந்தப் பிரமமும், சீவனும் தத், த்வம் என்ற இருசொற்களுக்கும் ஏற்ற பொருள்கள் ஆகும். அந்தப் பிரம சீவர்களுக்கு எப்பொழுதும் நிலையாய் இருக்கும் ஒருமைப் பாட்டைத் தத்துவமசி என்ற மகா வாக்கியம் தடையின்றி நன்கு வெளிப்படுத்தும்.

**278. சாதுவே சாம வேதம் சார்மகா வாக்கி யத்தால்**
**பேதமை யாவும் போக்கப் பிரிவுஅறப் பேசப் பட்ட**
**ஏதம்இல் ஐக்கி யம்தான் இலக்கியப் பொருள்கட்கு ஆகும்**
**வாதகம் இருப்ப தாலே வாச்சியப் பொருள்களுக்கு இல்லை.**

சாதுவே, சாம வேதத்தில் உள்ள சாந்தோக்கிய உபநிடதத்தில் உள்ள தத் த்வம் அஸி' என்ற பெருமை பொருந்திய வாக்கியத்தால் அறியாமை அனைத்தையும் நீக்கும் பொருட்டு ஈசுவரசீவ வேறுபாடு நீக்கும்படி கூறிய குற்றம் இல்லாத ஐக்கியம் தத், த்வம் என்ற சொற்களின் இலட்சியப் பொருள்களுக்கே பொருந்தும். ஒன்றோடு ஒன்று மாறுபாடு உள்ளதால் வாக்கிய பொருள்களுக்கு இல்லை.

**279. பருவத அணுக்கள் போலும் பானுமின் மினிகள் போலும்**
**அரசுசே வகர்கள் போலும் ஆழிகூ பங்கள் போலும்**
**வரிவுறு வாச்சி யங்கள் விரோதமே மேவ லாலே**
**பிரிவுஇலா அயிக்கி யத்தைப் பெற்றிடா அவைகள் என்றும்.**

தத், த்வம் சொற்களின் வாக்கியப் பொருள்கள் மலை அணு ஆகிய இவற்றைப் போலவும், சூரியன், மின்மினிகள் ஆகிய இவற்றைப் போலவும், அரசன் சேவகன் ஆகிய, இவர்களைப் போலவும், கடல் கிணறு ஆகியவைகளைப் போலவும் ஒன்றோடு ஒன்று முரண் பட்டு இருப்பதால் அந்த வாக்கியப் பொருளான சீவனும் ஈசுவரனும் பிரிவு இன்றிய ஒருமைப் பாட்டை என்றும் பெற மாட்டார்கள்.

**280. அரியனே வாச்சி யார்த்தம் ஆயின பரசீ வர்க்குக்**
**கருதிய இவ்வி ரோதம் கற்பித உபாதி யாலே**
**உரைசெயும் இவ்வு பாதி ஒன்றுமே உண்மை ஆகாது**
**இருமைசெய் இவ்வு பாதி ஏதுஎனில் இயம்பக் கேளாய்.**

அரிய குணத்தை உடையவனே, தத் துவம் என்ற சொற்களின் நேர் பொருளான ஈசுவரனுக்கும் சீவனுக்கும் மேலே கூறப்பட்ட முரண்பாடான இயல்புகள் மாயையால் கற்பிக்கப் பெற்ற உபாதிகளால் வந்தவையே இந்த உபாதிகளில் ஒன்று கூட உண்மை இல்லை. இரண்டு என்ற தோற்றத்தை உண்டாக்கும் இந்தச் உபாதிகள் எவை என்று நான் கூற நீ கேட்பாயாக.

**281. காரண மாயை ஆதி கருதிய ஈசோ பாதி**
**காரிய பஞ்ச கோசம் கருதிய சீவோ பாதி**
**தூரவே இவ்வு பாதித் துவந்துவம் தள்ளும் போது**
**தீரனே ஈசன் இல்லை தியங்கிய சீவன் இல்லை.**

திறமையானவனே, ஐம்பூதங்களுக்கும் காரணமான மாயை முதல்வன் என்று அறிஞர் கூறும் ஈசுவரனின் உபாதி ஆகும். மாயையின் காரியம் ஆகிய ஐந்து கோசங்களும் சீவர்களின் உபாதி ஆகும். இவ்விரண்டு உபாதிகளையும் மீண்டும் வாராத வண்ணம் நீக்கும் போது ஈசன் என்பது இல்லை. மயக்கத்தை உடைய சீவனும் இல்லை.

**282. தரணியை ஆளும தன்மை தரணிபன் தன்உ பாதி**
**மருவிய கேட யாதி மற்றுஅச்சே வகன்உ பாதி**
**பரவிய இவ்வு பாதிப் பகுப்பினைத் தள்ளும் போது**
**தரணிபன் தானும் இல்லை தங்குசே வகனும் இல்லை.**

பூமியை ஆள்வது அரசனுடைய உபாதி ஆகும். பொருத்தமான கேடயம் முதலானவற்றை வைத்து இருப்பது அரச வேலைக்காரனின் உபாதி ஆகும். இங்கு கூறிய உபாதி பிரிவுகளை நீக்கினால் அரசனும் இல்லை, அவனுடன் சேர்ந்து இருக்கும் சேவகனும் இல்லை.

**283. நிருமலச் சுருதி தானே நேதிநே தியெனும் வாக்கால்**
**கருதொணாப் பிரமத் தின்கண் கற்பிதத் துவிதம் தன்னைத்**
**திரமதாய் அபவா திக்கும் திறமையைக் கண்டோம் அன்றோ**
**உரியனே ஆத லாலே உபாதியைத் தள்ள வேண்டும்.**

உபதேசம் கேட்பதற்கு உரியவனே, குற்றம் இல்லா வேதம் தானாகவே நேதி நேதி (இது ஆத்மா அல்ல, இது ஆத்மா அல்ல) என்ற சொற்றொடரால் பொறிகளாலும் மனத்தாலும் அறிய இயலாத பிரமத்திடம் கற்பிக்கப்பட்ட உலகப் பொருள்களை மிக உறுதியாக இல்லை என்று கூறும் முறையை அறிந்தோம் அல்லவா? ஆதலால் உபாதிகளை நீக்கி விட வேண்டும்.

**284. வேதமாம் மானத் தாலும் விளங்கி போதத் தாலும்**
**மோதிய சொப்ப னாதி உத்தம உத்தி யாலும்**
**ஈதுஇலை ஈதுஇலை மற்று ஈதுஇலை என்ப தாகப்**
**பேதமாம் உபாதி எல்லாம் பெயர்ந்திடத் தள்ள வேண்டும்.**

வேதத்தின் பிரமாணத்தைக் கொண்டு, குருவின் உபதேச அறிவைக் கொண்டும், சொப்பனத்தைத் கொண்டும் இவ்விதமாக சிறந்த உத்தியாலும் இங்கு காண்பன அனைத்தும் உண்மை இல்லை இங்கு காண்பன அனைத்தும் உண்மை இல்லை என்று பலமுறை எண்ணி பலவாறான உபாதிகளை எல்லாம் மீண்டும் வாராத வண்ணம் விலக்க வேண்டும்.

**285. இவ்விதம் திருசி யத்தை ஏகமாய்த் தள்ளிப் பின்னர்**
**அவ்விதப் பரசீ வைக்யம் அறிந்திடத் தக்க தாலே**
**செவ்விலக் கணையி னாலே செப்பிய அவர்கள் தம்மை**
**எவ்வம்அற்று உணர வேண்டும் ஏகமாய் நிற்ப தற்கே.**

மேற் கூறியபடி காணப்படும் உபாதிகளை முற்றிலும் விலக்கி, பின்னர் அந்த ஈசுவரசீவர் களின் ஒருமைப் பாட்டை அறிய வேண்டும். ஆகையால் அவர்கள் இருவரும்

ஒருவரே என்று அறிவதற்கு தத் த்வம் என்று சொற்களை இலக்கணை என்ற முறையினால் சொல்லிய அந்த ஈசுவர சீவர்களை ஐயம் முதலான குற்றங்கள் இல்லாது ஒருவரே என உணர வேண்டும்.

**286. விட்டலக் கணையும் வேண்டாம் விடாதலக் கணையும் வேண்டாம்**
**இட்டனே உபயம் ஆன இலக்கணை வேண்டும் ஈது**
**திட்டமாம் சோயம் தேவதத்தன்என் கின்ற வாக்கில்**
**தட்டிடாது அதுபோல் ஈதுஆம் தத்துவ மசியாம் வாக்கில்.**

பிரியம் ஆனவனே, இங்கு ஒருமைப் பாட்டைப் பற்றிச் சொல்லும் மகா வாக்கியத்திற்கு விட்ட லக்கணையும் வேண்டாம், விடாத லக்கணையும் வேண்டாம். விட்டுவிடா லக்கணைதான் வேண்டும். இந்த ஒருமை பற்றிய அறிவு சோயம் தேவதத்தன் என்கின்ற தொடரில் முரண்பாடு இன்றி அறியப் படுகிறது. அதுபோலத் 'தத் த்வம் அசி என்ற மகாவாக்கியத்தில் இந்த ஒருமை பற்றிய அறிவு அறியப்படும்.

**287. திருத்தமாம் சோயம் தேவ தத்தன்என் கின்ற வாக்கு**
**விருத்தமாம் தருமம் எல்லாம் விட்டவன் ஐக்கி யத்தைத்**
**தரித்திடச் சொல்வ தேபோல் தத்துவ மசிஆம் வாக்கும்**
**விருத்தம்ஆம் தருமம் எல்லாம் விடுத்துஐக் கியமே சொல்லும்.**

நன்கு திருத்தமான "சோயம் தேவதத்தன்" என்ற வாக்கியத்தில் முரண்பட்ட இயல்புகள் அனைத்தையும் நீக்கி, தேவதத்தன் ஒருவனே என்பதை மனத்தில் பதியுமாறு கூறுவதைப் போல் 'தத் த்வம் அசி' என்ற மகாவாக்கியம் சீவஈசுவரனுக்கு உள்ள முரண்பட்ட அனைத்து இயல்புகளையும் நீக்கி அவர்கள் இருவர் அல்லர் ஒருவரே என்று கூறும்.

**288. இத்திறம் விரோதம் தள்ளி இலக்கியச் சித்தே ஆன**
**சுத்தமாம் பரசீ வர்க்குச் சொல்லிய ஐக்கி யத்தை**
**நித்தமும் அறிஞர் எல்லாம் நிலைமையாய்ப் பரிச யிப்பர்**
**புத்திர நீயும் அங்ஙன் புகன்றதைப் பரிசு யிப்பாய்.**

புதல்வா, இவ்வாறு முரண்பாடான இயல்புகளை நீக்கி, இலட்சியப் பொருளாக விளங்கும் அறிவு வடிவான தூய ஈசுவரனுக்கும் சீவருக்கும் கூறிய ஒருமைப்பாட்டினைப்

பேரறிஞர்கள் பலரும் நாள்தோறும் தளர்வு இன்றி ஆராய்ந்து அனுபவம் பெற முயல்வார்கள். அவ்வாறே நீயும் நான் கூறிய இந்த ஐக்கியத்தை அனுபவிக்க முயல்வாயாக.

**289. இத்திறம் வேதம் தோறும் இசைமகா வாக்கு அநேகம்**
**அத்திர தூலம் ஆதி அசத்தின அபவா தித்து**
**சுத்தமாய் வானம் போலச் சூக்கமாய்த் தானே நின்ற**
**அத்தம்இல் இந்த சீவர்க்கு அகண்டஐக் கியமே சொல்லும்.**

இவ்வாறு ஒவ்வொறு வேதத்திலும் சொல்லப் பெறும் மகா வாக்கியங்கள் பலவாகும். நிலையில்லாத தூலமான அசத்தான பொருள்களை இல்லை என்று தள்ளினால், தூய வானத்தைப் போல நுடபமாய் எங்கும் பரவி நின்ற அழிவு இல்லாத இந்த சீவ சைதன்னியத்திற்கு அகண்ட ஒருமைப்பாட்டினைத் தானே வெளிப்படும்.

**290. ஆதலால் பொய்யே ஆகி அகம்என அறியப்பட்டு இங்கு**
**ஏதுஎது தோன்றா நிற்கும் இவைஎலாம் நன்றாய் விட்டுப்**
**போதஆ னந்த உண்மைப் பூரணப் பிரமம்நான் என்று**
**ஏதம்இல் புந்தி யாலே இன்றுஉனை உணர்தி மைந்தா.**

புதல்வனே, மகா வாக்கியங்கள் ஐக்கியத்தை உணர்த்துவதால், இப்பூமியில் பொய்யாக நான் என்று அறியப்பட்டு, எந்த எந்தப் பொருள்கள் தோன்றுமோ அவற்றை எல்லாம் நன்றாக விலக்கிக் குற்றம் இல்லாத உனது புத்தியால் நான் அறிவானந்த வடிவான எங்கும் நிறைந்த பிரமமே ஆவேன் என்று இப்போது உன்னை அறிவாயாக.

**291. கருதுமண் செய்கை ஆன கடம்முதல் யாவும் என்றும்**
**பரவும்அம் மண்ணே ஆகும் பான்மைபோல் பிரமத் தின்கண்**
**மருசிய காரி யம்போல் மயங்கிய சகம்அ னைத்தும்**
**பிரமமாத் திரமே ஆகும் பிறிதுஇதில் எதுவும் இல்லை.**

மண்ணின் செயல் என்று எண்ணும் குடம் சட்டி பானை முதலிய யாவும் எக்காலத்திலும் அக்குடம் முழுவதும் பரவி இருக்கும் மண்ணே ஆகும். அத்தன்மையைப் போல் பிரமத்தினிடம் உண்டான காரியம் போலத் தோன்றும் அனைத்து உலகமும் பிரம்மமாக மட்டுமே இருக்கும். பிரம்மத்தைத் காட்டிலும் வேறான் பொருள் ஏதும் இல்லை.

**292. யாதினால் பிரமம் அன்றி யாதுமே வேறுஇங்கு இல்லை**
**ஆதலால் அதுவே உண்மை யாதுதான் எவர்க்கும் ஆன்மா**
**யாதுஅத் துவிதம் சாந்தம் அமலமாம் பரமாம் என்றும்**
**சாதுவே அதுநீ ஆவாய் சத்தியம் ஐயம் இல்லை.**

சாதுவே, காரணத்தை விட வேறாகக் காரியம் இல்லை என்ற முறையால் இவ்வுலகில் பிரம்மத்தைத் தவிர வேறு எப்பொருளும் இல்லை. ஆதலால் பிரம்மமே உண்மைப் பொருள் ஆகும். எந்தப் பிரம்மம் எல்லா சீவர்களுக்கும் ஆத்மாவாக உள்ளதோ, எப்பொருள் இரண்டு அற்றதாக உள்ளதோ, எப்போதும் அமைதியாகவும் மலம் இன்றியும், மேலாயும் எது உள்ளதோ அந்தப் பொருள் நீயாகவே இருக்கின்றாய். இதில் சந்தேகம் இல்லை. இது உண்மையே.

**293. கனவினில் ஆரோ பித்த காலதே சம்பு லன்கள்**
**நினைவுஉறு ஞாதி ராதி நிகிலமும் பொய்யே போல**
**நனவிலும் அஞ்ஞா னத்தால் நம்மிடை ஆரோ பித்த**
**கனஉடல் முதலே ஆகக் கண்டஇச் சகமும் பொய்யே.**

சொப்பனம் காணும்போதுநாம் கற்பித்துக் கொண்ட காலமும், இடமும், விடயமும் அறிகிறவனும் நினைக்கின்ற யாவும் பொய்த் தோற்றங்களே. அதுபோல சாக்கிரத்திலும் அறியாமையால் நம்மிடத்தில் பொய்யாக கற்பித்துக் கொண்டு தூல சரீரம் முதலாக நாம் பார்த்து அறியும் இந்த உலகமும் பொய்யே ஆகும்.

**294. யாதினால் பிரமம் அல்லாது இவ்வுடல் கரணம்பி ராணன்**
**ஏதமாம் அகங்கா ராதி இச்சகம் யாவும் பொய்யாம்**
**ஆதலால் பிரமம் சாந்தம் அமலம்அத் துவிதம் என்றும்**
**சாதுவே அதுநீ ஆவாய் சத்தியம் ஐயம் இல்லை.**

இந்த சரீரம் இந்திரியங்கள் பிராணன் துன்பம் தரும் அகங்காரம் முதலிய இந்த உலகம் யாவும் எக்காரணத்தால் பிரம்ம வடிவாக இருப்பது அன்றி பொய்யே ஆகுமோ, அக்காரணத்தால் பிரம்மம் சாந்தம் ஆகவும், குற்றம் அற்றது ஆகவும் இரண்டு அற்றதாகவும் உள்ளது. எப்போதும் நீ அந்தப் பிரம்மம் ஆகவே இருக்கின்றாய். இது உண்மையே, சந்தேகம் வேண்டாம்.

**295. பேதமாம் சாதி நீதி பெருங்குல கோத்தி ரங்கள்**
**ஓதிடும் நாம ரூபம் ஒருகுணம் தோடம் இன்றிப்**
**போதுதே சம்பு லன்கள் பொருந்திடாப் பிரமம் யாது**
**போதனே அதுநீ ஆவாய் புந்தியில் சிந்தை செய்வாய்.**

பலவகையான சாதி, ஒழுக்கம் குலம் கோத்திரம், பெயர் வடிவம் குணம் குற்றம் ஆகிய இவைகள் இன்றிக் காலமும் தேசமும் புலன்களும் இல்லாத பிரம்மம் எதுவோ அது நீயே ஆவாய். அறிவு உடையவனே இதை புத்தியால் நன்கு ஆராய்ந்து பார்.

**296. யாதுஎலாம் வாக்கு கட்கும் இங்குக்கோ சரமே ஆகா**
**யாதுநற் போதக் கண்ணில் இங்குக்கோ சரமாம் யாதுஇங்கு**
**ஆதியில் வத்து ஆகும் அமலசிற் கனமும் ஆகும்**
**போதனே அதுநீ ஆவாய் புந்தியில் சிந்தை செய்வாய்.**

அறிவுள்ளவனே, எந்தப் பிரம்மம் இப்பூமியில் அனைத்து மொழிகளுக்கு பொருள் ஆகாதோ, எந்தப் பிரம்மம் ஞானம் ஆகிய கண்ணில் இங்கே பொருள் ஆகுமோ, எந்தப் பிரம்மம் இங்கு அநாதியான பொருளாக உள்ளதோ அந்தப் பிரம்மமே நீயாக இருக்கின்றாய். இதனை உன்னுடைய புத்தியில் எண்ணுக.

**297. மருவிய சடூர்மி இன்றி மாசுஇல்யோ கியர்ம னத்தால்**
**கருதிடப் பட்டு மற்றுஓர் கரணமும் கருதொ ணாத**
**உருவமாய் மனத்திற்கு எட்டா எண்மையாய் நிறைந்து நின்ற**
**பிரமம்ஏது அதுநீ ஆவாய் பிரிவுஅறச் சிந்தை செய்வாய்.**

பசி தாகம், சோகம் மோகம், மூப்புமரணம் என ஆறுவகையாகப் பொருந்து கின்ற பிறவிக்கடனின் அலைகள் இல்லாமல் குற்றம் இல்லாத யோகியர்களுடைய மனத்தால் தியானிக்கப் பெற்று, வேறு எந்தப் பொறிகளாலும் அறிய முடியாத வடிவம் கொண்டதாய், மனத்தால் அறிய இயலாத உண்மைப் பொருள் ஆகி எங்கும் நிறைந்து விளங்கும் பிரம்மம் எதுவோ, அதுவே நீயாக இருக்கின்றாய். நீங்காது இக்கருத்தை உன் மனத்தில் கொள்வாயாக.

**298. மித்தியா சகம்அ னைத்தும் மேவுஅதிட் டானம் ஆகிச்**
**சத்துஅ சத்திற்கு வேறாய்ச் சலம்அறத் தன்னில் தானாய்**

**நித்தநிட் களமாய் யாது நிகர்அற நிறைந்து நின்ற**
**வத்துஏது அதுநீ ஆவாய் வழுஅறச் சிந்தை செய்வாய்.**

பொய்யான அனைத்து உலகத்திற்கும் அதிட்டானம் ஆகி இருப்பில்லாமல் தோற்றம் மாத்திரமாய் காணப்படும் பொருள்களுக்கு வேறு ஆகி, அசைவு இல்லாமல் தன்னிடத்திலேயே நிலைபெற்றதாய், அழிவற்றும் பிளவுபடாமல் இருப்பதாய், ஒப்பற்று எங்கும் நிறைந்து விளங்கும் பொருள் எதுவோ அந்தப் பிரம்மம் நீயாகவே இருக்கின்றாய். குற்றம் இன்றி இதனை மனத்தில் பதிய வைத்துக் கொள்வாயாக.

**299. ஆதிவி யாதிகள் இலதாய் அறுவிகா ரம்பெ றாதாய்ப்**
**பேதமாம் இச்ச கத்தின் பிறப்புஇருப்பு இறப்பைச் செய்யும்**
**ஆதிகா ரணம்ஆ னாலும் அமலமாம் பிரமம் யாது**
**போதனே அதுநீ ஆவாய் பந்தியில் சிந்தை செய்வாய்.**

அறிவு உள்ளவனே, மனநோயும் உடல் நோயும் இல்லாதது ஆகி கருவுறுதல், பிறத்தல், வளர்தல், பெருத்தல், இளைத்தல், அழிதல் முதலிய ஆறு வேறுபாடுகளையும் பெறாததாய், பலவகையாய் விளங்கும் இந்த உலகின் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றைச் செய்யும் முதற்காரணம் ஆக விளங்கினாலும் குற்றம் அற்றதாய் இருக்கும் பிரம்மம் யாதோ அது நீயாகவே இருக்கின்றாய். இதனை மனத்திலே நன்கு பதிய வைப்பாய்.

**300. தொத்துபே தம்பெ றாதாய்த் தொடரும்ஓர் குறியி லாதாய்**
**நித்தரங்க ஆழி போல நிச்சலம் ஆகி நித்த**
**முத்தமாய் அகண்டம் ஆன மூர்த்தியாம் பிரமம் யாது**
**புத்திர அதுநீ ஆவாய் புந்தியில் சிந்தை செய்வாய்**

புதல்வனே, சம்பந்தமற்று வேறுபாடு இன்றித் தொடர்ந்து காட்டும் அடையாளம் அற்றதாய், அலைகள் இல்லாத கடலைப் போல அசைவு அற்றது ஆகி, எப்போதும் விடுதலை பெற்றது ஆகி, எங்கும் நிறைந்த வடிவுடையதாய் ஆகிய பிரம்மம் எதுவோ அது நீயாகவே இருக்கினன்றாய், மனத்தில் இதனை நீ உறுதியாகக் கொள்க.

**301. காரணம்எ வற்றி னுக்கும் காரணம் ஆகி ஒன்றாய்ப்**
**பாரினை முதல்அ நேகம் படைத்தகா ரணமாய் நின்றும்**
**காரியகா ரணங்கள் கலந்திடாப் பிரமம் யாது**
**தீரனே அதுநீ ஆவாய் திறம்உறச் சிந்தை செய்வாய்.**

அனைத்துக் காரணப் பொருள்களுக்கும் காரணம் ஆகி, ஒன்றே ஆகி, பூமி முதலிய ஐம்பூதங்களையும் உண்டாக்கிய காரணப் பொருளாய் இருந்தும், காரியமான உலகத்திற்கும் காரணமான மாயைக்கும் தொடர்பு இல்லாத பிரம்மம் யாதோ, தீரனே அது நீயாகவே இருக்கின்றாய். உறுதியாக இதனை நீ மனத்திலே கொள்க.

**302. கருதிய வெண்மை வெண்மை காரியங் கட்கு வேறாய்**
**பரமஅக் கரமாய் என்றும் பழுதுஇல்ஆ னந்தம் ஆகி**
**நிருமல நிருவி கற்ப நிலைமையாய் நிறைந்து நின்ற**
**பிரமம்ஏது அதுநீ ஆவாய் பிரிவுஅறச் சிந்தை செய்வாய்.**

மாயை, மரயையின் காரியங்களான உலகிற்கும் வேறுபட்டது ஆகி, மிக மேலானது ஆகி, அழிவு அற்றது ஆகி, என்றும் குறைவற்ற ஆனந்தவடிவம் ஆகி, மலம் இல்லாததும் வேறுபாடு இல்லாததும் ஆகிய நிலையானதாய் எங்கும் நிறைந்த பிரம்மம் எதுவோ அது நீயே ஆவாய். இவ்வுண்மையை இடைவிடாது மனத்திலே கொள்க.

**303. ஏதம்இல் கனக மேபோல் யாதுஒரு பிரமம் மாலால்**
**கோதுஉறு நாம ரூபம் குணம்முதல் விகாரம் ஆன**
**பேதமாய்த் தோன்றி னாலும் பேதியா விகாரி ஆகா**
**சாதுவே அதுநீ ஆவாய் சந்ததம் சிந்தை செய்வாய்.**

நல்லவனே, எந்தப் பிரம்மம் ஆனது மயக்கத்தால், குற்றம் இல்லாத தங்கள் போல பெயர் வடிவம் குணங்கள் முதலியவற்றை உடைய காரியங்கள் ஆகிய பல பொருள்களாகத் தோன்றினாலும் உண்மையில் இரண்டு அற்றதோ எவ்வித மாறுதலும் இல்லாததோ அந்தப் பொருளாக நீ இருக்கின்றாய். எப்போதும் இந்த உண்மையை நீ மனத்தில் கொள்க.

**304. யாதினில் வேறே இல்லை யாது மேலுக்கு மேலாம்**
**பேதம்இல் லாமல் என்றும் பிரத்தியக் அபின்னம் யாது**
**போதஆ னந்த உண்மைப் பூரணம் ஏகம் யாது**
**போதனே அதுநீ ஆவாய் புந்தியில் சிந்தை செய்வாய்.**

எந்தப் பிரமத்தைக் காட்டிலும் வேறான எப்பொருளும் உண்மையாக இல்லையோ எப்பொருள் மேலானதிற்கும் மேலானதோ, எப்பொருள் என்றுமே வேறுபாடு இல்லாமல்

உள்ளே ஆத்மாவாக விளங்குகிறதோ, எப்பொருள் அறிவாயும் ஆனந்தமாயும் உண்மையாயும் நிறைவடைந்தும் ஒன்றாகவே உள்ளதோ அது நீ ஆவாய். இதனை உன் மனத்தில் நன்கு பதியும் படி செய்வாயாக.

**305. ஓதிய இவ்அர்த் தத்தை உத்தம உத்தி யோடே**
**கோதுஇலாப் புந்தி யாலே குறித்துஉளம் தன்னில் சிந்தி**
**ஈதினால் ஐயம் ஆதி இன்றியே உளங்கை நீர்போல்**
**சாதுவே உண்மை ஞானம் சனித்திடும் சங்கை இல்லை.**

நல்லவனே இதுவரை கூறிய பொருளை வேதத்திற்கு முரண்படாத உத்திகளுடன் குற்றங்கள் இல்லாத புத்தியால் உனமனத்தில் ஒருமையுடன் எண்ணுவாயாக. இவ்வாறு எண்ணுவதால் ஐயமும் திரிபும் இன்றி மெய்யறிவு உள்ளங்கையில் உள்ள தண்ணீரைப் போலத் தோன்றும். இதில் சந்தேகம் இல்லை.

**306. அடர்வுஉறு சைநி யத்துள் அரசனைக் காண்ப தேபோல்**
**உடல்முதல் திரளி னுக்குள் உணர்வுமாத் திரமே ஆகித்**
**திடபரி சுத்தம் ஆகத் திகழ்ந்திடும் நின்னைக் கண்டுஅவ்**
**இடர்இலாப் பிரமம் நான்என்று எண்ணிஅவ் வடிவாய் நிற்பாய்.**

நெருங்கிய சேனைகளுக்கு இடையில் சிறப்பு மிக்க அரசனைக் காண்பதே போல், சரீரம் இந்திரியம் பிராணன் ஆகிய இவற்றின் கூட்டத்தில் அறிவு வடிவாய்ச் சிறப்புடன் விளங்குவது ஆகி, உறுதியாகவும், தூயதாகவும் விளங்கும் உன்னுடைய உண்மை வடிவைக் கண்டு, அந்த ஆனந்த வடிவு ஆகிய பிரம்மம் நானே என்று அறிந்து, அப்பிரம்ம வடிவாகவே இருப்பாய்.

**307. நிருமலப் பிரமம் ஆக நின்னில்நீ என்றும் நின்று**
**பிரமமாம் அந்த உன்னில் பிரிவுபோல் தோன்றா நின்ற**
**திருசியத் திரளை எல்லாம் தீரவே ப்ரவிலா பித்துப்**
**பரமஆ னந்தம் பெற்றுப் பகுப்புஇலாச் சாந் சார்வாய்.**

எப்போதும் நீ நிருமலமான பிரம்மம்ஆன உன் வடிவிலேயே நிலைபெற்று, பிரம்ம வடிவு ஆகிய உன்னிடம் வேறு பொருள்கள் போல் தோன்றி காணப்படும் பொருள்கள் அனைத்தையும் முற்றும் இல்லை என நீக்கி, ஒப்பற்ற ஆனந்தத்தை அடைந்து ஏகமாகி அமைதி அடைவாயாக.

**308. சத்துஅ சத்திற்கு வேறாம் சத்திய ஏக வத்துப்
புத்தியாம் குகையின் கண்ணே பொருந்தும்அவ் வத்து ஆக
நித்தம்இக் குகையின் கண்ணே நிலைமையாய் யாவன் நிற்பன்
புத்திர அன்னோன் மீண்டுஇப் புரைஉடல் குகையில் சேரான்.**

புதல்வனே, இருப்பில்லாமல் தோற்றம் மாத்திரம் உடைய பொருள்களுக்கு வேறான சத்தியமானதும் ஒன்றே ஆகிய அந்தப் பிரம்மம் புத்தி ஆகிய குகையில் பொருந்தி நிற்கும். எப்போதும் இந்தப் புத்தி என்னும் குகையில் விளங்கிக் கொண்டு இருக்கும் அந்தப் பிரம்ம வடிவாக எவன் நிலைபெற்று இருப்பானோ அவன் மறுபடியும் இழிவான உடலை எடுக்க மாட்டான்.

**309. வத்துவை அறிந்த போதும் வாதனை வலியே ஆகும்
இத்துனிச் சம்சா ரத்திற்கு ஏதுவாய் அநாதி ஆகி
அத்திரக் கர்த்தா போக்தா அகம்என உறுதிப் பட்ட
தொத்துவா தனைஅ னைத்தும் துடைத்திட வேண்டும் தூயோய்.**

குற்றம் அற்றவனே, பிரம்மத்தை ஒருவன் நன்கு அறிந்த நிலையிலும் வாசனை என்பது வலிமை கொண்டதாக இருக்கும். அநாதி துன்பம் தரும் இந்த சம்சார வாழ்விற்குக் காரணம் ஆகி, நிலையற்ற செயல்களை செய்பவனாகவும் அனுபவிப்பவனாகவும் இருப்பவன் நான் என்று உறுதியாக தொடர்ந்துவரும் அனைத்து வாசனைகளையும் அழிக்க வேண்டும்.

**310. மைந்தனே ஆன்ம நோக்கால் மாகஇலா நின்ஆன் மாவில்
சந்ததம் நீஇ ருந்து சலித்திடா முயற்சி யாலே
வந்தவா தனைஅ டக்கு வாதனை அடக்கத் தை த்தான்
முந்திய சநத்கு மார முனிவரர் முத்தி என்றார்.**

புதல்வனே, ஆத்ம அறிவுடன் குற்றம் இல்லாத என் வடிவான பிரம்மத்தில் நீ எப்போதும் நிலையாக இருந்து கொண்டு தளராத முயற்சியை மேற்கொண்டுத் தொடர்ந்து வரும் வாசனைகளை அழித்து விடு, வாசனைகளின் அழிவையே முன்னோரான சநத்குமார முனிவர் வீடுபேறு என்று கூறினார்.

**311. ஈனதே கேந்தி ஆதி எனும்அ நான்மா இடத்தில்
யான்எனது என்னும் எண்ணம் யாதுஅதே அத்தி யாசம்**

**ஞானியா னவன்இ வற்றை ஞானமாம் தம்ஆன் மாவில்**
**ஆனநல் நிட்டை யாலே அழித்திட வேண்டும் என்றும்.**

இழிவான சரீரம் இந்திரியங்கள் முதலிய ஆத்மா அல்லாத பொருள்களிடம் நான் எனது என்ற அகங்காரமும் மமகாரமும் ஆகிய எண்ணம் எதுவோ அதுவே மயக்க எண்ணம் ஆகும். மெய்யறிவு பெற்றவன் இந்த அகங்கார மமகாரங்களை ஆத்மா ஆகிய தன் உண்மை வடிவில் ஒன்றிய நிட்டையாலே எப்போதும் இல்லாமல் செய்ய வேண்டும்.

**312. புத்தியின் விர்த்தி கட்குப் பொலிவுசெய் சாட்சி ஆகிப்**
**பித்தியக் ஆன்மா ஆகப் பிறங்கிய நினைஅ றிந்து**
**புத்திர அந்த நானே பூரணப் பிரமம் என்னும்**
**விர்த்தியால் அத்தி யாசம் விடுத்துநீ விமலம் ஆவாய்.**

புதல்வனே புத்திக்கும் புத்தியில் ஏற்படும் விருத்திகளுக்கும் விளக்கம் தரும் சாட்சி ஆகி உள்ளே பிரகாசித்துக் கொண்டுள்ள ஆத்மாவாக தன்னை அறிந்து நானே அந்தப் பூரணபிரம்மமாய் இருக்கின்றேன் என்று அடிக்கடி எண்ணுவதால் நீ மயக்கத்தை விலக்கிக் குற்றங்கள் இல்லாதவன் ஆவாய்.

**313. ஒருவிதம் இலாதது ஆன உலகுடைச் சார்பை விட்டுப்**
**பொருள்களை நாநா வாகப் புகலும்நூல் சார்பும் விட்டுப்**
**பரவிய அநர்த்தம் எல்லாம் பற்றுடல் சார்பும் விட்டுஇங்கு**
**அரியனே ஆன்ம நோக்கால் அத்தியா சம்த விர்ப்பாய்.**

அருமையான மாணவனே, பலவகையான உலக பற்றினை விடுத்தும் பல பொருள்களாகக் கூறும் சாத்திரங்களை பயிலும் விருப்பத்தையும் நீக்கி, பரந்த துன்பங்கள் அனைத்தையும் அடைந்துள்ள சரீரத்தைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஆசையையும் போக்கி இப்பொழுது தானே ஆன்மா என்ற அறிவால் மயக்கமான எண்ணத்தை நீக்குக.

**314. ஊக்கமாய்ப் பொருந்தா நின்ற உலகவா சனையி னாலும்**
**நோக்கி டப்பட்ட நாநா நூலின்வா சனையி னாலும்**
**தேக்கமாய் வாரா நின்ற தேகவா சனையி னாலும்**
**சூக்கமாம் ஆன்ம ஞானம் சொன்னவாறு உதியாது யார்க்கும்.**

மிக்க ஊக்கத்தோடு நம்மை வந்து சேர்ந்த உலக வாசனையினாலும் நாம் பயின்ற பல நூல்களின் வாசனைகளாலும் நீக்கம் இன்றி வந்த தேக வாசனையினாலும் மிக நுட்பமான ஆத்ம ஞானம் யாருக்கும் சொன்னபடி தோன்றாது.

**315. இப்பவச் சிறையை நீக்கி ஏகஇச் சிப்ப வர்க்குச்**
**செப்புவா சனைகள் மூன்றும் செறிஅயோ மயவிலங்கு என்று**
**அப்புறப் பட்ட மேலோர் அறைவர்ஆ தலினால் மைந்தா**
**துப்புற இவற்றை விட்டோன் துகள்இலா முத்தி சேர்வான்**

இந்த சம்சாரம் ஆகிய சிறையில் இருந்து நீங்க விரும்புவனுக்கு மேலே கூறிய உலக வாசனை, சாத்திரவாசனை, தேக வாசனை ஆகிய மூன்றும் இரும்பு மயமான விலங்கு ஆகும் என்று இந்த மூன்று வாசனைகளையும் கடந்தவர்கள் சொல்வார்கள். ஆகையால் இவற்றை முற்றிலும் விலக்கியவன் துன்பமே இல்லாத வீடுபேற்றினை அடைவான்.

**316. சலமுதல் சம்பந் தத்தால் சனித்ததுர்க் கந்தம் உற்று**
**வலிஉறும் அகிலின் கட்டை வாசனை மறைந்த போது**
**மலம்அற அறைத்த லாலே மருவு-துர்க் கந்தம் நீங்கி**
**நிலைமையாய் அதனி டத்தில் நின்றவா சனையே தோன்றும்.**

வலிமையான அகில் கட்டை நீர் முதலியவற்றின் சேர்க்கையால் உண்டான கெட்ட நாற்றத்தினால் அதன் இயற்கையான நறுமணம் மறைக்கப்படுகிறது. அப்போது அழுக்கு நீங்கும்படி அறைத்துத் தேய்ப்பதினால் அது அடைந்த கெட்ட நாற்றம் விலகி அதனிடம் நிலைத்து நின்ற நறு மணமே தோன்றும்.

**317. ஈதுபோல் இதயத் துள்ளே இருப்பதாய் வெகுவாய்க் காமம்**
**ஆதிவா சனையி னாலே அன்மவா சனைம றைந்தும்**
**போதநற் பழக்கம் என்னும் புரைஇலாது அறைத்த லாலே**
**யாது-தான் நீங்கில் ஈதே அமலமாய்த் தோன்றா நிற்கும்.**

இதைப்போல மனத்தினும் அதிகமாய் இருக்கும் ஆசை கோபம் முதலிய தீய குணங்களால் ஆத்மாவின் தூய இயல்பு மறைக்கப்பட்டு இருக்கும். நல்ல ஒழுக்கம் என்னும் அறிவினால் அறைத்துத் தேய்ப்பதினால் ஆசை முதலியவை நீங்கிய போது இந்த ஆத்மா மாசுகள் இன்றி தூயதாய் விளங்கும்.

**318. வந்துஇல் லாஅு நான்ம வாசனைத் திரளி னாலே**
**வத்துவே ஆன ஆன்ம வாசனை மறைபட் டாலும்**
**நித்தமும் ஆன்ம நிட்டை நிலைமையால் அதனை நீக்கில்**
**சுத்தமாய் ஈதே தோன்றும் சொப்பிர காச மாக.**

உண்மை இல்லாத உலகவாசனை சாத்திரவாசனை தேகவாசனை முதலிய வாசனைக் கூட்டங்களால் உண்மையான ஆத்ம வாசனை மறைக்கப் பட்டு இருக்கும். அந்த மறைப்பினை நிலையான ஆத்ம நிட்டையால் நீக்கினால் இந்த ஆன்மா தூயதாய் சுயம் பிரகாசமாய் விளங்கும்.

**319. அரிமனம் ஆன்மா வின்கண் அடங்கிடும் எம்மட்டு எம்மட்டு**
**உரியனே அம்மட்டு அம்மட்டு ஊனவா சனையும் நீங்கும்**
**சருவ வாசனையும் நீங்கில் சாற்றிய ஆன்ம ஞானம்**
**பிரதிபந் தங்கள் இன்றிப் பிறங்கிடும் உள்ள வாறே.**

உபதேசம் பெறுவதற்கு உரியவனே! பகையான மனம் ஆன்மாவின்கண் எவ்வளவுக்கு எவ்வளவு நிலைத்து இருக்குமோ, அவ்வளவுக்கு அவ்வளவு இழிவான வாசனைகளும் நீங்கிவிடும். எல்லா வாசனைகளும் நீங்கிவிட்டால் கூறிய ஆத்ம ஞானம் தடைகள் இல்லாமல் உள்ளபடியே விளங்கும்.

**320. சந்தகம் ஆன்ம நிட்டை சார்ந்ததால் யோகி யர்க்குத்**
**தொந்தமாம் மனம்இ றக்கும் துட்டவா தனைஅ டங்கும்**
**மைந்தனே அதனி னாலே மயங்கிய அத்தி யாசப்**
**பந்தனை யாவும் தீர்த்துப் பரமமாம் பதமாய் நிற்பாய்.**

புத்திரனே! யோகிக்கு எப்போதும் தன் ஆத்மாவிலேயே நிலைத்து இருப்பதால் பகையான மனம் அழியும். தீய வாசனைகள் அடங்கிவிடும். அதனினால் மயக்க எண்ணங்களாகி அத்தியாசப் பந்தம் எல்லாவற்றையும் விலக்கி, ஆனந்தமான பிரம்மமாய் இருப்பாயாக.

**321. போதனே இருகு ணத்தால் போயிடும் தமசு முன்னம்**
**மீதியில் இராச தம்போம் மிசிரமாம் சத்து வத்தால்**
**சோதிஆ வதுதான் போகும் சுத்தமாம் சத்து வத்தால்**
**ஆதலால் சுத்தம் கொண்டே அத்தியா சம்த விர்ப்பாய்.**

அறிவுள்ளவனே! சத்துவ இராசத குணங்களால் முதலில் தமோ குணம் அழியும். ஈஞ்சியுள்ள இரு குணங்களில், பிறகுணங்கள் சிறிதே கலந்த சத்துவகுணத்தால் இராசத குணம் அழியும். சத்துவகுணத்தினால் தூய்மையான அறிவே வடிவமாவதால் சத்துவகுணமும் அழியும். ஆதலால் சத்துவகுணத்தை மேற்கொண்டு அத்தியாசத்தை நீக்குவாயாக.

**322.** **மித்தையாம் இவ்வு டம்பை மிந்தபிரா ரத்த கன்மம்**
**சித்தமாய்க் காக்கும் என்றே சிந்தையில் நிச்ச யித்து**
**மெத்தவும் தைரி யத்தை மேவிநிச் சலனே ஆகி**
**அத்தியா சம்த விர்ப்பாய் அநகஎம் முயற்சி யாலும்.**

குற்றமற்றவனே, பொய்யான இந்த சரீரத்தை எஞ்சியுள்ள பிராரத்தவினை உறுதியாய் பாதுகாக்கும். மனதில் இதை திடப்படுத்திக் கொண்டு மிகவும் தைரியத்தை கைக்கொண்டு கவலை இல்லாதவனாய் ஆகி, எந்த முயற்சி செய்தாவது அத்தியாசத்தை போக்குவாயாக.

**323.** **நான்ஒரு சீவன் அன்று நல்பரப் பிரம மேநான்**
**தான்எனும் நிச்ச யத்தால் தள்ளியே அகத்தை எல்லாம்**
**ஊனவா சனைவே கத்தால் உன்னிடை உதியா நின்ற**
**ஈனமாம் அத்தி யாசம் யாவையும் நீஒ ழிப்பாய்.**

நான் சீவன் அல்ல நான் மேலான பிரம்மமே என்ற உறுதியான எண்ணத்தால் அகங்காரம் முதலிய எல்லாவற்றையும் விலக்க வேண்டும். இதனால் குற்றமான வாசனைகளின் வேகத்தால் உன்னிடம் தோன்றிய இழிவான அத்தியாசம் முழுவதையும் நீ நீக்குவாயாக.

**324.** **சுருதியால் ஊகம் தன்னால் சூக்கும அனுப வத்தால்**
**பொருவிலா நானே எங்கும் பூரணன் என்றுஅ றிந்துஇங்கு**
**ஒருவொரு இடத்தில் ஓர்கால் உண்மைபோல் உதியா நின்ற**
**சருவமாம் அத்தி யாசச் சார்பையும் தவிர்தி மைந்தா.**

புதல்வனே, வேதத்தினாலும் அதை அனுசரித்த யுக்தியினாலும், நுட்பமான அனுபவத்தாலும் ஒப்பற்ற நானே எங்கும் நிறைந்துள்ள பிரம்மம் என்று அறிய வேண்டும்.

**318. வந்துஇல் லாஅ நான்ம வாசனைத் திரளி னாலே**
**வத்துவே ஆன ஆன்ம வாசனை மறைபட் டாலும்**
**நித்தமும் ஆன்ம நிட்டை நிலைமையால் அதனை நீக்கில்**
**சுத்தமாய் ஈதே தோன்றும் சொப்பிர காச மாக.**

உண்மை இல்லாத உலகவாசனை சாத்திரவாசனை தேகவாசனை முதலிய வாசனைக் கூட்டங்களால் உண்மையான ஆத்ம வாசனை மறைக்கப் பட்டு இருக்கும். அந்த மறைப்பினை நிலையான ஆத்ம நிட்டையால் நீக்கினால் இந்த ஆன்மா தூயதாய் சுயம் பிரகாசமாய் விளங்கும்.

**319. அரிமனம் ஆன்மா வின்கண் அடங்கிடும் எம்மட்டு எம்மட்டு**
**உரியனே அம்மட்டு அம்மட்டு ஊனவா சனையும் நீங்கும்**
**சருவ வாசனையும் நீங்கில் சாற்றிய ஆன்ம ஞானம்**
**பிரதிபந் தங்கள் இன்றிப் பிறங்கிடும் உள்ள வாறே.**

உபதேசம் பெறுவதற்கு உரியவனே! பகையான மனம் ஆன்மாவின்கண் எவ்வளவுக்கு எவ்வளவு நிலைத்து இருக்குமோ, அவ்வளவுக்கு அவ்வளவு இழிவான வாசனைகளும் நீங்கிவிடும். எல்லா வாசனைகளும் நீங்கிவிட்டால் கூறிய ஆத்ம ஞானம் தடைகள் இல்லாமல் உள்ளபடியே விளங்கும்.

**320. சந்தகம் ஆன்ம நிட்டை சார்ந்ததால் யோகி யர்க்குத்**
**தொந்தமாம் மனம்இ றக்கும் துட்டவா தனைஅ டங்கும்**
**மைந்தனே அதனி னாலே மயங்கிய அத்தி யாசப்**
**பந்தனை யாவும் தீர்த்துப் பரமமாம் பதமாய் நிற்பாய்.**

புத்திரனே! யோகிக்கு எப்போதும் தன் ஆத்மாவிலேயே நிலைத்து இருப்பதால் பகையான மனம் அழியும். தீய வாசனைகள் அடங்கிவிடும். அதனினால் மயக்க எண்ணங்களாகி அத்தியாசப் பந்தம் எல்லாவற்றையும் விலக்கி, ஆனந்தமான பிரம்மமாய் இருப்பாயாக.

**321. போதனே இருகு ணத்தால் போயிடும் தமசு முன்னம்**
**மீதியில் இராச தம்போம் மிசிரமாம் சத்து வத்தால்**
**சோதிஆ வதுதான் போகும் சுத்தமாம் சத்து வத்தால்**
**ஆதலால் சுத்தம் கொண்டே அத்தியா சம்த விர்ப்பாய்.**

அறிவுள்ளவனே! சத்துவ இராசத குணங்களால் முதலில் தமோ குணம் அழியும். ரஞ்சியுள்ள இரு குணங்களில், பிறகுணங்கள் சிறிதே கலந்த சத்துவகுணத்தால் இராசத தணம் அழியும். சத்துவகுணத்தினால் தூய்மையான அறிவே வடிவமாவதால் சத்துவகுணமும் அழியும். ஆதலால் சத்துவகுணத்தை மேற்கொண்டு அத்தியாசத்தை நீக்குவாயாக.

**322. மித்தையாம் இவ்வெ பணப மிந்தபிரா ரத்த கள்மம்**
**சித்தமாய்க் காக்கும் என்றே சிந்தையில் நிச்ச யித்து**
**மெத்தவும் தைரி யத்தை மேவிநிச் சலனே ஆகி**
**அத்தியா சம்த விர்ப்பாய் அநகஎம் முயற்சி யாலும்.**

குற்றமற்றவனே, பொய்யான இந்த சரீரத்தை எஞ்சியுள்ள பிராரத்தவினை உறுதியாய் பாதுகாக்கும். மனதில் இதை திடப்படுத்திக் கொண்டு மிகவும் தைரியத்தை கைக்கொண்டு கவலை இல்லாதவனாய் ஆகி, எந்த முயற்சி செய்தாவது அத்தியாசத்தை போக்குவாயாக.

**323. நான்ஒரு சீவன் அன்று நல்பரப் பிரம மேநான்**
**தான்எனும் நிச்ச யத்தால் தள்ளியே அகத்தை எல்லாம்**
**ஊனவா சனைவே கத்தால் உன்னிடை உதியா நின்ற**
**ஈனமாம் அத்தி யாசம் யாவையும் நீஒ ழிப்பாய்.**

நான் சீவன் அல்ல நான் மேலான பிரம்மமே என்ற உறுதியான எண்ணத்தால் அகங்காரம் முதலிய எல்லாவற்றையும் விலக்க வேண்டும். இதனால் குற்றமான வாசனைகளின் வேகத்தால் உன்னிடம் தோன்றிய இழிவான அத்தியாசம் முழுவதையும் நீ நீக்குவாயாக.

**324. சுருதியால் ஊகம் தன்னால் சூக்கும அனுப வத்தால்**
**பொருவிலா நானே எங்கும் பூரணன் என்றுஅ றிந்துஇங்கு**
**ஒருவொரு இடத்தில் ஓர்கால் உண்மைபோல் உதியா நின்ற**
**சருவமாம் அத்தி யாசச் சார்பையும் தவிர்தி மைந்தா.**

புதல்வனே, வேதத்தினாலும் அதை அனுசரித்த யுக்தியினாலும், நுட்பமான அனுபவத்தாலும் ஒப்பற்ற நானே எங்கும் நிறைந்துள்ள பிரம்மம் என்று அறிய வேண்டும்.

இப்படி அறிந்து கொண்டு இங்கு ஒவ்வொரு இடத்திலும், ஒவ்வொரு சமயம் உண்மைப் பொருள் போல் தோன்றும் எல்லாமும் உன்னிடம் உள்ள அத்தியாசம் என அவற்றில் பற்றை விடுக.

**325. சாதுவே பிச்சை வாங்கல் சலமலம் விடுதல் அன்றி**
**யாதுமே தியானி யர்க்குஇங்கு இயற்றிடும் செய்கை இல்லை**
**ஆதலால் ஆன்ம நிட்டை அநிசமும் அடைந்த தாலே**
**மோதிய அத்தி யாசம் முழுவதும் நீஒ ழிப்பாய்.**

இவ்வுலகில் பிச்சை எடுத்து உண்பதும் மலசலம் நீக்கிக் கொள்வதும் தவிர பிரம்மத்தை தியானிப்பவர்க்கு செய்யும் செயல் என்பது சிறிதும் கிடையாது. ஆதலால் எப்பொழுதும் ஆத்மா ஒன்றிலேயே மனம் ஒன்றிய நிலையை அடைவதலால் நீ துன்பம் செய்யும் அத்தியாசம் யாவற்றையும் ஒழிப்பாயாக.

**326. தத்துவ மசியே ஆதி தகுமகா வாக்கி யத்தால்**
**நித்தமும் பரசீ வைக்கியம் நிகழ்த்திய போதம் கொண்டு**
**வத்துவில் ஆன்ம புந்தி வலியுறக் கிடைப்ப தற்கே**
**அத்தியா சத்தை எல்லாம் அநகனே அறஒ ழிப்பாய்.**

குற்றமற்ற வனே 'தத்துவமசி' என்பது முதலிய மகா வாக்கியங்களால், பிரம்மமும் சீவனும் ஒன்றே என்பது எப்பொழுதும் விளங்கும். அந்த அறிவைக் கொண்டு பிரம்மத்திடம் ஆத்மபுத்தி உறுதியாக ஏற்படுவதற்காக அத்தியாசத்தை எல்லாம் அறவே நீக்குவாயாக.

**327. மூடமாம் இத்தே கத்தில் முளைத்திடும் அகங்கா ரந்தான்**
**சேடம்இல் லாது நன்றாய்ச் சிறைவுறும் காலம் மட்டும்**
**சீடனே சாவ தானம் சேர்ந்துநல் தியானி ஆகித்**
**தோடமாம் அத்தி யாசத் தொடர்பினைப் பரிக ரிப்பாய்.**

சீடனே, சடமான இந்த சரீரத்தில் தோன்றிய நான் என்ற அகங்காரம் மிச்சமின்றி நன்றாக அழியவேண்டும். அப்படி அழிவு ஏற்படும் வரையில் கவனத்துடன் பிரம்மத்தை நன்றாக தியனிப்பவன் ஆகி, குற்றமான அத்தியாசத் தொடர்பை நீக்குவாயாக.

**328. விவிதமாம் சகம்இ துஎன்றும் விரிவுறும் சீவர் என்றும்**
**இவிதமாம் தோற்றம் எல்லாம் இசைந்தநின் சொப்பனம் போல்**

**எவளவு காம மட்டும் இலங்குமோ வித்து வானே**
**அவளவும் இடைவி டாமல் அத்தியா சம்த விர்ப்பாய்.**

அறிஞனே, இந்த உலகம் பல வகையாக உள்ளது, சீவர்களும் பல வகையானவர்கள். இந்த விதமாகத் தோன்றும் யாவும் உனக்கு சொப்பனத்தைப்போல பொய்யென எந்தக் காலத்தில் விளங்குமோ, அந்தக்காலம் வரையில் இடைவிடாமல் அத்தியாசத்தை போக்க முயல வேண்டும்.

**329. நித்திரை உலக வார்த்தை நீண்டசத் தஆதி கட்கும்**
**நித்தமாம் ஆன்ம ரூபம் நினைந்திடா மறதிக் கும்நீ**
**இத்தனை யேனும் எங்கும் இடைவெளி கொடாமல் என்றும்**
**புத்திர நின்ஆன் மாவைப் புந்தியில் சிந்தை செய்வாய்.**

புத்திரனே, தூக்கம், உலகப் பேச்சு, சப்தாதி விடயங்கள், நித்தியமான ஆத்மாவை சிந்திக்காமல் மறதி இவைகளுக்கு நீ எக்காலத்திலும் சிறிதும் இடம் கொடுக்காதே. இவைகளில் ஈடு படாமல் எப்பொழுதும் புத்தியில் உனது ஆத்மாவை சிந்தித்துக் கொண்டு இருப்பாய்.

**330. மாதிரு பிதிரு தங்கள் மலத்தினால் உண்டாய் மற்றும்**
**மேதைதோல் மலமே ஆதி மேனியாம் இத்தூ லத்தை**
**சாதுவே வெகுதூ ரத்தில் சண்டாளன் நிகராய்த் தள்ளிப்**
**பேதமில் பிரம மாகிப் பேறுபெற் றவனாய் நிற்பாய்.**

சாதுவே, தாய் தந்தையின் சோணித சுக்கிலங்களினால் தோன்றி, கொழுப்பு தோல் மலம் முதலியவற்றால் ஆனதுஇந்த தூல சரீரம். ஆதலால் இந்த சரீரத்தை துரோகியைப் போல வெகுதூரத்தில் தள்ளிவிட்டு பேதமில்லாத வேற்றுமையற்ற பிரம்ம வடிவமே ஆகி வீடுபேறு பெற்றவனாக விளங்குவாய்.

**331. குறுகிய கடஆகா சத்தைக் கூர்மகா ஆகாசத் தில்போல்**
**சிறுகிய சீவஆன் மாவைச் சித்கனப் பரமஆன் மாவில்**
**அறிவினால்வ ப்ரவிலா பித்துஅவ் அகண்டமாம் வத்து ஆகி**
**வெறிதிருந் திடுவாய் என்றும் விமலமாம் யோகத் தோனாய்.**

சிறிய குடத்தில் உள்ள ஆகாசத்தை மிகப்பெரிய மகா ஆகாசத்தில் லயம் செய்து ஒன்றுதான் என்று பார்ப்பதுபோல, மிகச்சிறிய சீவாத்மாவை பேரறிவான மேலான

பிரம்மத்தில் நன்கு லயம் செய்து ஒன்றே என அறிய வேண்டும். அந்த அறிவினால் அகண்ட பிரம்மமே ஆகி, சுத்தமான பிரம்மத்தில் நிலை பெற்றவனாய் எப்பொழுதும் மௌனமாக இருப்பாயாக.

**332. பரஅதிட் டான மாகிப் படர்சுயம் சோதி ஆன**
**பிரமமே நீயாய் நின்ற பிரிவிலா நிட்டை யாலே**
**உருவமாம் பிரமாண் டத்தோடு ஒன்றிய பிண்டாண் டத்தை**
**அரியனே மலபாண் டம்போல் அகத்தினில் அகற்றி நிற்பாய்.**

உயர்ந்த அதிட்டானமாகவும், சுயம் பிரகாசமாகவும் உள்ள பிரம்மம் ஆகவே நீ இருக்கின்றாய். இந்த ஐக்கிய ஞானத்தால், காணப்படுகின்ற பிரம்மாண்டமாகிய உலகத்தோடு கூடிய பிண்டமாகிய சரீரத்தையும் மலம் உள்ள பாத்திரத்தைப் போல மனத்தில் இருந்து அகற்றி விடுவாயாக.

**333. ஏதமாம் இலிங்க தேகத்து இசைஅகம் புந்தி தன்னைச்**
**சோதிஆ னந்த சத்தாய்ச் சொல்லிய நின்ஆன் மாவில்**
**தீதற வைத்து இலிங்க தேகம்ஈது இதைவி டுத்துக்**
**கேதம்இல் லாமல் என்றும் கேவலன் ஆகி நிற்பாய்.**

துன்பம் தரும் சூட்சுமசரீரத்தில் எற்படும் நான் என்ற எண்ணத்தை விடுத்து, சத்து சித்து ஆனந்தமாகிய உனது ஆன்மாவில் நான் என்ற எண்ணத்தை நன்கு வைப்பாய். சூட்சும சரீரம் நான் என்ற எண்ணத்தை தள்ளிவிட்டு, துன்பம் இல்லாமல் எப்பொழுதும் எதிலும் சம்பந்தம் இல்லாத ஆத்மாவாக விளங்குவாய்.

**334. தீதுஇலாக் கண்ணா டிக்குள் திகழ்ந்திடும் புரமே போல**
**யாதொரு பிரமத் தின்கண் இச்சகம் யாவும் தோன்றும்**
**சாதுவே அதுநான் என்றே சலம்அற அறிந்த தாலே**
**சீதனாய்ச் செய்வது எல்லாம் செய்துநீ முடிந்தோன் ஆவாய்.**

அழுக்கு இல்லாத கண்ணாடிக்கு உள்ளே நகரம் விளங்குவது போல, பிரம்மத்தின் இடத்தில் இந்த உலகம் முழுவதும் இருப்பது போல் தோன்றும். அந்தப் பிரம்மமே நான் என்று நீ மாறுபாடு இல்லாமல் அறிந்து கொண்டு, மனம் குளிர்ந்தவனாய், செய்ய வேண்டியவற்றைச் செய்து முடித்தவனாக ஆகிவிடுவாய்.

**335. அருவ அக் கிரிய மாகி அறிவுமெய் இன்ப மாகி**
**ஒருமையாம் உன்ரூ! பத்தை ஒன்றிஇப் பொய்உ டம்பை**
**அரியனே விடுதி கூத்தன் அடைந்துதன் நிசரூ பத்தை**
**விரிவுறு வேட ரூபம் விடுத்திடு நீதியே போல்.**

அரியனே, நடிகன் தனது நிச வடிவத்தை அடைந்து, போட்டுக் கொண்ட வேஷ வடிவத்தை விட்டு விடுவான். அந்த முறைமையைப்போல், உருவமற்றதாயும் எவ்வித செயலற்றதாயும் சத்து சித்து ஆனந்தமாய் ஒன்றேயாய் விளங்கும் உனது நிசவடிவத்தை அடைந்து, இந்தப் பொய்யான சரீரத்தை விட்டுவிட வேண்டும்.

**336. சருவமாம் விதத்தி னாலும் சத்துஇலா அகங்கார ஆதி**
**சரூவமும் அறியா தாலும் சஷணிகமாய்க் காண்ப தாலும்**
**சருவமும் அறியா நின்ற சத்திய ஆன்மா ஆகா**
**சருவமும் அறியும் தன்மை சஷணிகமாம் அதனுக்கு உண்டோ.**

எல்லாவற்றையும் அறியாததாலும், நொடிப் பொழுதே அறிவதாலும் அகங்காரம் முதலியன எல்லா வகையாலும் பொய்யே ஆகும். ஆதலால் எல்லாவற்றையும் அறிகின்ற சத்தியமான ஆத்மா ஆகாது. நொடிப் பொழுது மாத்திரம் இருக்கும் அகங்காரம் முதலியவற்றிற்கு அனைத்தையும் அறிகின்ற தன்மை இருக்குமோ? இல்லை.

**337. ஆதலால் அகங்கார ஆதி அறிந்திடும் கரியே ஆன்மா**
**பேதமில் துயிலின் கண்ணும் பேதியாது இருப்ப தாலே**
**சோதியாம் ஆன்மா நித்தன் சுருதியும் ஆங்கே சொல்லும்**
**சாதுவே அதனால் அன்மா சத்அசத் திற்கு வேறே.**

ஆகையால் அகங்காரம் முதலியவற்றை அறிந்து கொண்டு சாட்சியாய் இருப்பதே ஆத்மாவாகும். பேதம் இல்லாத தூக்கத்திலும் ஆத்மா வேறுபாடின்றி இருக்கிறது. ஆதலால் சுயம் பிரகாசமான ஆத்மா எப்பொழுதும் உள்ளது என்றே வேதமும் கூறும். அதனால் ஆத்மா இருப்பில்லாமல் தோற்றம் மாத்திரம் உடைய பொருள் களுக்கு வேறானது.

**338. சாதுவே விகாரி மின்கண் சார்ந்துள விகாரம் யாவும்**
**நீதியாய் அறியும் ஆன்மா நித்தனாம் விகாரி ஆகான்**

**தோதக இவ்வி ரண்டும் துயில்கனா மனோர தங்கள்**
**மீதுஅடிக் கடிஇ லாதாய் மீள்வதைக் காண்ப தாலே.**

சாதுவே, மாறுபடும் சரீரம் முதலியவற்றின் எல்லாவித மாறுதல்களையும் ஆத்மா முறையாக அறிகிறது. வருத்தம் தரும் சரீரம், அதன் மாறுதல்கள் ஆகிய இந்த இரண்டும் தூக்கத்திலும், கனவிலும், பகற்கனவிலும் அடிக்கடி இல்லாமல் போய் மீண்டும் காணப்படும். ஆதலால் ஆத்மா நித்தியமானது, விகாரமற்றது.

**339. ஆதலால் மாம்ச பிண்டம் ஆகிய ஆக்கை மீதும்**
**தீதுறு புந்தி செய்த தேகஅபி மான மீதும்**
**சாதமாம் அகந்தை விட்டுச் சச்சிதா னந்தம் ஆக**
**ஓதிய ஆன்மா நான்என்று உணர்ந்துநீ சாந்தி சார்வாய்.**

ஆகையால் மாமிச பிண்டமாகிய சரீரத்திலும் தீமை பொருந்திய புத்தியால் உண்டான சரீர அபிமானம் உடைய சீவனிடத்திலும் தோன்றும் நான் என்ற எண்ணத்தை விட்டுவிடு. சத்து சிந்து ஆனந்தமாக கூறப்படும் பிரம்மமே நான் என்று அறிந்து கொண்ட நீ சாந்தி அடைவாயக.

**340. ஓதிய சவதே கத்தில் ஒன்றிய நாம ரூபம்**
**சாதிஆச் சிரம மாதிச் சார்பும்விட்டு இலிங்க தேக**
**சாதமாம் கர்த்தி ராதிச் சார்பையும் விட்டு அகண்ட**
**போதஆ னந்த உண்மைப் பொருள்வடி வாகி நிற்பாய்.**

பிணம் ஆகிய சரீரத்திற்கு கூறப்படும் பெயர், வடிவம், சாதி, ஆசிரமம் முதலிய வற்றில் பற்றை விட்டு விடு. சூட்சும சரீரத்தில் தோன்றும் கர்த்தா (செய்பவன்), போக்தா (அனுபவிப்பவன்) தன்மைகளையும் விட்டு விடு. இவற்றை ஒழித்து எல்லையில்லா சத்து சித்து ஆனந்தமான பிரம்ம வடிவனாய் விளங்குவாய்.

**341. தொந்தமாம் பவத்தைச் செய்யும் துட்டமாம் பிரதி பந்தம்**
**மைந்தனே அநேக மேனும் மருவிய அவற்றிற்கு எல்லாம்**
**முந்திய விகார மாக முளைத்திடும் அகங்கா ரம்தான்**
**சந்ததம் முதம் அத்தைச் சருவதா ஒழிக்க வேண்டும்.**

மைந்தனே, பலவாறாக பிறவித் துன்பங்களைச் செய்யும் கொடிதான தடைகள் அநேகம் இருக்கின்றன. ஆனாலும் கூறிய அவைகட்டு எல்லாம் எப்போதும் அவித்தையின் முதல் விகாரமாக உண்டாகும் அகங்காரமே மூலமாக இருக்கிறது. அதனை முற்றிலும் ஒழித்தல் வேண்டும்.

**342. எவளவில் ஆன்மா விற்குஇவ் ஈனமாம் அகங்கா நத்தோடு**
**எவமுறும் புணர்ச்சி ஏதும் இருப்பதாய்க் காணல் ஆகும்**
**அவளவும் புருட னுக்குஇங்கு அனுவின்மாத் திரம் ஆனாலும்**
**பவமறும் முத்தி என்று பகர்தலும் இல்லை மைந்தா.**

மைந்தனே, சீவாத்மாவிற்கு எந்த அளவு இந்த இழிவான துன்பம் தரும் அகங்காரத்துடன் சம்பந்தம் சிறிதும் இருப்பதாகக் காணப்பட்டாலும், அந்த அளவும் இங்கு மிகச் சிறிய அணு அளவாக இருந்தாலும் சீவனுக்கு பிறவியை அழிக்கும் முத்தி என்ற சொல்லும் இல்லாது போகும்.

**343. இருள்அகங் காரம் என்னும் ஈனமாம் இராகு வாலே**
**புரைஅற விடுபட் டோனே பூரண விமல மாகி**
**ஒருசுயம் சோதி ஆதி உண்மைஆ னந்த மான**
**சொரூபமாய் விளங்கா நிற்பன் சுத்தமாம் இந்து வேபோல்.**

அறியாமையைச் செய்யும் அகங்காரம் என்னும் இழிவான ராகுவின் பிடிப்பில் இருந்து குற்றமில்லாமல் விடுபட்டவன், (ராகுவிலிருந்து விடுபட்ட) சந்திரனைப் போல, தூய்மையாய், மாசற்று பரி பூரணமாய், ஒப்பற்ற சுயம் பிரகாசமாய், ஆனந்தமாய்ஆன தன் உண்மை வடிவமாய் விளங்குவான்.

**344. இருளினால் மூடப் பட்ட ஈனமாம் புந்தி செய்த**
**புரைஅகங் காரம் யாது பூருவம் தோன்றிற்று அந்தப்**
**பரவிய அகங்கா ரம்தான் பற்றுஅற நசித்துப் போனால்**
**விரிவுறு பரசீ வைக்கியம் விக்கினம் இன்றித் தோன்றும்.**

அறியாமையால் மறைக்கப்பட்ட இழிவான புத்தியால் ஏற்பட்ட குற்றமான அகங்காரமானது அவித்தையில் இருந்து முதலில் தோன்றிற்று. சரீரம் முழுவதும் பரவிநிற்கும் அந்த அகங்காரம் அடியோடு அழிந்தால் எங்கும் நிறைந்த சீவப் பிரம்ம ஐக்கிய ஞானம் தடை இல்லாமல் விளங்கும்.

**345. நிருமலப் பிரமா னந்த நிதிமகா வலிமைப் பெற்ற
திரிகுணச் சிரங்கள் உற்ற தீஅகங் காரப் பாம்பால்
இருதயப் பூமிக்கு உள்ளே இருள் உறச் சூழப் பட்டுஇங்கு
ஒருவரும் பெறாத வண்ணம் ஒளித்திடப் பட்ட தழகும்.**

மாசற்ற பிரம்மானந்தம் ஆகிய புதையல் மிகுந்த வலிமை அடைந்தும், (சத்துவம், இராசதம், தாமசம் என்னும்) குணங்கள் ஆகிய மூன்று தலைகளையும் உடைய, தீய அகங்காரம் ஆகிய பாம்பினால், மனமாகிய பூமிக்குள் அறியாமை ஆகிய இருளால் சூழப்பெற்ற இங்கு யாவரும் அடைய முடியாதபடி மறைக்கப் பட்டுள்ளது.

**346. தீரனாம் ஒருவன் ஞானத் திறமையாம் திகழ்வா ளாலே
கோரமாம் சிரங்கள் மூன்றும் கொய்துஅகங் கார மான
சாரமில் சர்ப்பம் தன்னைச் சற்றும்இல் லாத அறுத்தப்
பூரணச் சுகம்செய் விக்கும் புகழ்நிதி புசிக்க வல்லோன்.**

தீரனான ஒருவன் சிறந்த அனுபவ ஞானமாகிய வாளால் அகங்காரம் ஆகிய நன்மை தராத பாம்பின் கோரமான மூன்று தலைகளையும் வெட்டி சிறிதும் பிழைக்காதபடி அறுத்துவிட வேண்டும். அவனே முழுமையான இன்பத்தைத் தரும் புகழுடைய அந்த நிதியை அனுபவிப்பதற்கு திறமையானவன்.

**347. வெப்பமாம் விடதோ டந்தான் வீங்குதே கத்தில் எம்மட்டு
அற்பமும் இருக்கும் அம்மட்டு அரோகம்இல் லாது கண்டோம்
அப்படி யோகி யர்க்கும் அகங்காரம் எம்மட்டு அம்மட்டு
ஒப்பிலா முத்தி சித்தி உள்ளவா றுஉதிப்ப தில்லை.**

துன்பம் தரும் நஞ்சின் தன்மை விகாரமான சரீரத்தில் எவ்வளவு காலம் ஒரு சிறிதேனும் இருந்தாலும் அந்த வரையில் நோய்நீங்காது இருப்பதை அறிவோம். அவ்வாறே யோகிக்கும் சிறிது அளவு அகங்காரம் இருந்தாலும், அதுவரையில் ஒப்பற்ற வீடுபேறு உள்ளபடி தோன்றுவதில்லை.

**348. பகைஅகங் காரம் யாதும் பற்றற நசித்த தாலும்
அதுநின்று செய்வி கற்பம் அறவுமே அடங்க லாலும்
சுக கனப் பிரத்தியக் அன்ம சொரூபநல் விவேகத் தாலும்
அகம்அது வானேன் என்றே அடையலாம் தத்து வத்தை.**

பகையான அகங்காரம் அடியோடு அழிந்தமையாலும், அந்த அகங்காரம் உண்டாக்கிய பல வகையான விகற்பங்கள் முற்றிலும் நீங்கலாலும், ஆனந்தமேயாக உள்ளே விளங்கும் ஆத்ம வடிவத்தின் நல்ல விவேகத்தாலும், நான் பிரம்மமாய் இருக்கிறேன் என்ற உண்மையை நேரில் அறியலாம்.

**349. சொரூபநல் சத்தை யாலே சுயமுமே சத்துப் போலாய்**
**வெருள்உறும் கர்த்தா ஆகி விகாரியாய்ச் சொரூபம் தன்னின்**
**பிரதிபிம் பத்தை மேவிப் பிறங்கிய அகங்கா ரத்தின்**
**மருவிய ஆன்ம புந்தி மாற்றுவாய் விரைவில் மைந்தா.**

மைந்தனே, பிரம்மம் அழியாது இருப்பது. ஆதலால் பிரம்மத்தின், பிரதிபிம்பத்தோடு கூடி விளங்கும் அகங்காரமும் தானும் இருப்பதுபோல் விளங்கும். மேலும் தான் கர்த்தா என்னும் மயக்கத்தை உடையதாய், மாறுபாடு அடைவதாய் விளங்கும். இந்த அகங்காரத்தில் மயக்கத்தால் தோன்றி உள்ள ஆத்மா என்ற எண்ணத்தை விரைவாக நீக்கி விடுவாய்.

**350. சுககனச் சொரூபம் ஆகிச் சுத்தசின் மூர்த்தி ஆகும்**
**தகவுஉள பிரத்தியக் ஆன்ம தத்துவ மாம் கனக்குஇவ்**
**அகம்உடன் அத்தி யாசம் அடைந்ததால் சனைம் ஆதிச்**
**சகலமாம் துயர்மி குந்த சம்சாரம் உற்று தன்றோ.**

மிகுந்த ஆனந்த வடிவமாய், தூயஅறிவு வடிவமாய் உள்ளே தெளிவாக விளங்கும் ஆன்ம தத்துமாயிருப்பதே நீ. உனக்கு இந்த அகங்காரத்துடன் அத்தியாசம் அடைந்ததால், பிறப்பு இறப்பு முதலிய எல்லா சம்சாரத் துன்பங்களும் உண்டாயின.

**351. புகழ்சதா னந்த சித்தாய்ப் பூரண ஏக ரூபத்**
**தகவுஉள நிருவி கார தத்துவ மாம் உனக்குஇவ்**
**அகம்உடன் அத்தி யாசம் அன்றியின் சுபாவம் ஆக**
**இகழும்இச் சம்சா ரம்தான் ஏதுமே எங்கும் இல்லை.**

புகழ் பெற்றதாய், எப்பொழுதும் ஆனந்தமாய், அறிவாய், பூரணமாய் ஒரே வடிவாய் விளங்கும் எவ்வித மாறுதலும் அற்ற தத்துவமே நீயாகும். உனக்கு இந்த அகங்காரத்தோடு அத்தியாசம் இல்லையெனில், இகழ்வான சம்சாரத்துன்பம் இயல்பாகவே எங்கும் இல்லையாகும்.

**352. ஆதலால் துய்ப்போன் கண்டத்து அடைத்தகண் டகசுகே போல**
**வாதகம் உனக்குச் செய்து வந்தஇவ் அகங்கா ரத்தைச்**
**கோதிலா ஞான வாளால் கொய்துநன் றுஉன் சொரூப**
**பூதசாம் ராச்ய இன்பம் புசித்திடு நினைத்த வாறே.**

ஆதலால், சாப்பிடுபவனின் தொண்டையில் அடைத்துக் கொண்டு சிரமப் படுத்தும் முள்ளைப் போல உனக்குத்துன்பம் செய்து வருகின்ற இந்த அகங்காரத்தை குற்றமற்ற ஞானமாகிற வாளால் நன்றாக அழித்து விடு. உனது சாம்ராச்யமான ஆத்மானந்தத்தை விரும்பியவாறு அனுபவிப்பாயாக.

**353. பிந்தியும் பரமார்த் தத்தைப் பெற்றதால் காதல் நீங்கி**
**திந்தைசேர் அகங்கா ராதி நின்றவிர்த் தியினை மீட்டுஇங்கு**
**அந்தஉன் சொரூபா னந்தம் அனுபவித்து அகண்ட மாகிப்**
**பந்தமில் நிருவி கற்ப பத்தினில் வெறிது இருப்பாய்.**

உயர்ந்த பிரம்மத்தை அறிந்துவிட்டதால், வெறுக்கத் தக்க அகங்காரம் முதலானதில் இருந்து மனதை திருப்ப வேண்டும் அதன் பிறகு உனது உண்மை வடிவமாகிய அந்த ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டு அகண்டமாய், பந்தம் இல்லாமல், விகற்பம் இல்லாத பிரம்மவடிவில் மௌனமாய் நிலைத்து இருப்பாயாக.

**354. பெருகிய அகந்தை மெத்தப் பெயர்த்திடப் பட்ட போது**
**ஒருகண மேனும் மற்றும் உளத்தினால் நினைக்கப் பட்டால்**
**விரிவுறப் பின்னும் உண்டாய் விட்சேபம் வெகுவாய்ச் செய்யும்**
**மருவுகாற் றால்அு ரைந்த மழைக்கால மேக மேபோல்.**

விரிந்த அகங்காரம் நன்றாக நீக்கப் பட்ட போதும் ஒருநொடிப் பொழுது மறுபடியும் மனத்தில் நினைத்தாலும் மழைக் காலத்தில் காற்றால் கொண்டு வரப்பட்ட மேகம் மழையைக் கொட்டுவதுபோல். மீண்டும் விரிவாகத் தோன்றி கலக்கத்தை மிகுதியாகச் செய்யும்.

**355. பலபுலச் சிந்தை யால்இப் பகை அகங் காரத் திற்குஇங்கு**
**அலைவுற அவகா சத்தை அற்பமும் அளிக்க ஒண்ணாது**
**உலர்எலு மிச்சை உய்ய ஊற்றிய நீரே போல்இச்**
**சலஅகங் காரம் உய்யச் சலசிந்தை ஏது அன்றோ.**

பகையாய் இருக்கும் அகங்காரத்திற்கு பல விடயங்களைப் பற்றிய சிந்தனையால் ருத்தம் செய்வதற்கு வாய்ப்பினை சிறிதும் கொடுக்கக் கூடாது. வாடின எலுமிச்சை செடிக்கு நீர் ஊற்றினால் போல, இந்தப் பொய்யான அகங்காரம் வளர்வதற்கு அலைகின்ற னம் காரணமாகும்.

**356. தேகஆதி சிந்தை உற்றோன் திருசியப் பாசம் பெற்றோன்**
**தேகஆதி சிந்தை அற்றோன் திருசியப் பாசம் விட்டோன்**
**ஆகாத சிந்தை தானே ஆதலால் பேதம் கொண்டுஇவ்**
**எகாத பவபந் தத்திற்கு ஏதுவாய் இசையும் மைந்தா.**

சரீரமே தான் என்று நினைத்துக் கொள்பவன், காணப்படும் விடயங்களில் ஆசை கொள்வான். சரீரம் நான் அல்ல என்று நினைத்துக் கொள்பவன் காணப்படும் விடயங்களில் ஆசையை விட்டுவிடுவான். ஆதலால் நன்மைதராத விடயங்களை சிந்திப்பதே பேத புத்தியினால், இந்த நீங்காத சம்சார பந்தத்திற்கு காரணமாய் இருக்கிறது.

**357. காரியம் வளரு மாகில் காரணம் ஆன வித்தும்**
**பாரினில் வளர்ந்த தாகப் பார்க்கலாம் அதுதான் நீங்கில்**
**காரண மான வித்தும் கடிதினில் நீங்க லாலே**
**தீரனே காரி யத்தைத் தீர்த்திட வேண்டும் முன்னம்.**

தீரனே, உலகில் முளை இலை இளை முதலிய காரியங்கள் வளர்வதால் அதற்குக் காரணமான விதை வளர்ந்ததாகக் காணப்படுகிறது. அப்படியே காரியங்கள் அழிந்து போனால், காரணமான விதையும் விரைவாக அழியும் ஆதலால் முதலில் காரியங்களை உண்டாகாமல் அழிக்கவேண்டும்.

**358. காரிய மான சிந்தை கருத்தினில் வளரும் போது**
**காரண வாத னைக்கோள் கருத்தினில் வளரா நிற்கும்**
**காரண வாத னைக்கோள் கருத்தினில் வளரும் போது**
**காரிய சிந்தை யும்தன் கருத்தினில் வளரும் மைந்தா.**

மைந்தனே, மனத்தில் காரணமான விடய வாசனைகள் வளர்வதால், அதன் காரியமான விடய சிந்தனை மனத்தில் வளரும். காரியமான விடய சிந்தனை தன் மனத்தில் வளரும் போது, காரணமான வாசனைகளும் மனத்தில் வளரும்.

**359. வந்தஅச் சிந்தை யாலே வாகியச் செய்கை உண்டாம்
தொந்தமாம் சிந்தை செய்கைத் தொடர்பினால் முன்உ ரைத்த
அந்தவா தனைவ ளர்ந்துஇங்கு அகிலமாம் சீவ ருக்கும்
பந்தமாம் சம்சா ரத்தைப் பலவிதம் படைக்கும் அன்றே.**

விடயங்களைப் பற்றி மனதில் எண்ணுவதாலும், அதை அடைய வெளியில் செயல்கள் உண்டாகும். விடயசிந்தனை, வெளிச் செயல் ஆகிய இவ்விரண்டின் தொடர்பினால் முன்கூறிய அந்த வாசனை மேலும் பெருகி வளரும். இதுவே இவ்வுலகில் எல்லா சீவர்களுக்கும் சம்சார பந்தத்தை பலவிதமாக உண்டாக்கும்.

**360. ஓதிய ஏது வாலே ஒழிவிலாது உதித்த இந்தப்
பேதமாம் பவபந் தத்தைப் பெயர்த்திட வேண்டி முன்னர்
ஓதிய மூன்றை யும்தான் ஒழித்திட வேண்டும் அத்தில்
ஏதுநல் உபாயம் என்னில் இதனைநீ இயம்பக் கேளாய்.**

கூறிய காரணங்களால், ஒய்வின்றித் தோன்றிய, இந்தப் பல வகையான பிறவிப் பிணியை போக்குவதற்காக முன்பு கூறிய வாசனை, விடயசிந்தனை, செயல் ஆகிய மூன்றையும் அழிக்க வேண்டும். அதற்கு நல்ல உபாயம் ஏது என்றால் இதைக் கூற நீ கேட்பாயாக.

**361. எவ் அவத் தையிலும் எந்த இடத்திலும் எக்கா லத்தும்
விவ்விதத் தோற்றம் பெற்று வேறுஎனக் காண்ப எல்லாம்
செவ்விய பிரம மேயாம் சிறிதும்வே றில்லை என்னும்
இவ்விதப் பார்வை தான்இங்கு இயம்பிய நல்உ பாயம்.**

பொருள்கள் எல்லாம் பலவிதமான நாம உருவங்களுடன் வேறு வேறாகக் காணப்படுகின்றன. அவைகள் யாவும் எல்லா அவத்தைகளிலும் எல்லா இடங்களிலும் எல்லா காலத்திலும் பிரம்ம மாத்திரமே, இவை பிரம்மத்தைத் தவிர சிறிதும் வேறாக இல்லை, என்று இவ்விதம் பார்ப்பதே இப்போது யாம் கூறுகின்ற நல்ல உபாயமாகும்.

**362. ஓதிய பார்வை ஆகும் உண்மைவா தனைஉ ரத்தால்
கோதுறு செய்கை முன்னர்க் குவிந்திடும் பின்பு சிந்தை
யாதுமே இறக்கும் பின்னர் ஏதுவா தனைஅ டங்கும்
வாதனை அடக்கம் தானே வழுவிலாச் சீவன் முத்தி.**

எல்லாம் பிரம்மமே என்ற உண்மையான வாசனை திடப்படுவதே கூறிய பார்வை என்பதாகும். இதனால் முன்னர் மாசுள்ள செயல்கள் அழியும். பின்பு விடய சிந்தனை எல்லாம் அழியும். பின்னர் அவற்றிற்குக் காரணமான வாசனை அழியும். வாசனை முற்றிலும் அழிவதே சீவன்முத்தி எனப்படும்.

**363. சருவமும் பிரமம் என்னும் சத்துவா தனைவ ளர்ந்தால்**
**மருள் அகள் காரம்ஆதி மலிவைா தனைஅ டங்கும்**
**கருமையாம் எவ்வி டத்தும் கலந்துள அந்த காரம்**
**அருணனின் காந்தி தோன்றும் அளவிலே அழியு மாபோல்.**

எல்லா இடங்களிலும் கலந்து உள்ள கருமையான இருட்டு, சூரியன் உதயமாகி வெளிச்சம் தோன்றிய அளவில் அழிந்து விடும். அதைப் போல எல்லாம் பிரம்மமே என்ற நல்ல வாசனை வளர்ந்தால் மயக்கம்தரும் அகங்காரம் முதலிய மலின வாசனை அழிந்து விடும்.

**364. இருள்இருள் செய்கை ஆக இசைந்துள அநர்த்தம் எல்லாம்**
**இரவிநின்று உதிக்கும் போதுஇங்கு இறந்திடும் நீதி யேபோல்**
**அருவஅத் துவிதஆனந்த அனுபவம் உதிக்கும் போது**
**பெருகிள பந்தம் அத்தால் பெற்றதுன் பமும்இ லாவாம்.**

இருட்டும் இருட்டின் செயலால் விளங்கும் விபரீதம் எல்லாம் சூரியன் உதித்து விட்டால் இவ்வுலகில் இல்லாமல் போகும். அவ்வாறே உருவமற்ற பிரம்மத்தின் வடிவமான அத்துவித ஆனந்த அனுபவம் தோன்றும் போது சம்சார பந்தமும் அந்த பந்தத்தினால் ஏற்படும் துன்பங்களும் இல்லாமல் போகும்.

**365. திருசியத் தோற்றம் தன்னைத் திருக்குமாத் திரமே ஆகப்**
**பிரவிலா பித்து நின்னைப் பிரமமாத் திரமாய்ப் பார்த்துஇங்கு**
**அரியனே வெளியில் உள்ளில் ஆவது சமாதி பெற்றுக்**
**கருமபந் தம்வ ரைக்கும் காலம்நீ தள்ளு வாயே.**

அரியனே, வெளியில் காணப்படும் பொருள்களை பிரம்மவடிவமாக, லயம் செய்து, உன் வடிவத்தையும் பிரம்ம மாத்திரமாகவே அறிந்துகொள். இப்படி வெளியிலாவது, உள்ளிலாவது சமாதியை அடைவாய். இப்படி இங்கு பிராரத்த கர்மத்தின் தொடர்பு உள்ள வரை, நீ காலத்தை கழிக்க வேண்டும்.

**366. சொரூபநிட் டையைஓர் காலும் சொற்பமும் தவிர ஒண்ணா**
**தரணியி ல்அந்த நிட்டை தவிர்தலே தால ன்என்று**
**பிரியனே பகவா ன்ஆன பிரமபுத் திரரே ஆதி**
**பரசனச் சுஜாதீ யத்தில் பலவிதம் பகர்ந்தார் அன்றோ.**

பிரம்மத்தில் நிலைத்திருப்பதில் ஒரு போதும் சிறிதும் தவிரக் கூடாது. பூமியில் அந்த நிலையில் இருந்து நீங்குதலே யமன் என்று பகவான் பிரம்மாவின் புத்திரரான சனத் சுஜாதர் முதலியோர், மேலான சநத் சுஜாதீயம் என்ற நூலில் பலவாறு கூறி இருக்கிறார்.

**367. ஆதலால் சொரூப நிட்டை அன்றியும் தவிர்தல் ஞானிக்கு**
**ஏதமாம் அனர்த்த மாகும் ஏதெனில் தவிர்த லாலே**
**சாதமாம் மோகம் அத்தால் சநித்திடும் அகந்தை அத்தால்**
**கோதுஅதாம் பந்தம் உண்டாம் கூடிடும் அவற்றால் துன்பம்.**

ஆதலால் ஞானிக்கு தனது உண்மை வடிவத்தை விட்டு நீங்குதல் துன்பம் தரும் தீங்கு ஆகும். எப்படி எனில் சுய வடிவத்தை விட்டு நீங்குவதால் மோகம் தோன்றும். அல்லாமலும் அதனால் அகங்காரம் உண்டாகும். அதனால் இன்னல் தரும் சம்சாரபந்தம் உண்டாகும். அவற்றினால் துன்பங்கள் ஏற்படும்.

**368. பொருவிலா ஞானி யேனும் புலத்தின்றேர் சென்றோன் தன்னைத்**
**தரணியில் சொரூப நிட்டை தவிர்தலாம் மறதி புந்திப்**
**புரைகளால் அலைக்கும் சோர புருடனைச் சோர மாதுஇங்கு**
**அரியனே விவித மாக அலைத்திடும் நீதி யேபோல்.**

அரிய சீடனே, இவ்வுலகில் விலைமாது கள்ளப் புருடனை பலவிதமாக புத்தியை மயங்கச் செய்து அலையச் செய்வாள். அதுபோல, ஆத்ம ஞானம் பெற்று ஒப்பற்றவனாக ஒருவன் இருந்தாலும், விடயங்களில் ஈடுபட்டான் ஆனால், அவனை மறதியானது குழப்பமான புத்தியால் தன் உண்மை வடிவத்தில் இருந்து நீங்கச் செய்து வருந்தச் செய்யும்.

**369. தீரனாம் ஞானி யேனும் திருகியம் சென்றோன் தன்னைக்**
**கோரஆ வரண சத்தி குறைவுற மறைக்கும் அன்றே**
**நீரினுள் பாசிக் கொத்தை நீக்கினும் கணத்தில் அந்த**
**வாரியை அதுதான் மற்றும் வழுவுற மறைப்ப தேபோல்.**

நீரில் உள்ள பாசிக் கொத்தை விலக்கினாலும், கணப் பொழுதில் மறுபடியும் பரவிக் கொண்டு அந்த நீரை பாசிக் கொத்து மறைத்து மூடிக் கொள்ளும். அதுபோல, கொடிய ஆவரண சத்தி, ஆத்ம ஞானம் பெற்றவன் மனத்திடம் உள்ளவனாய் இருந்தாலும், காணப் படும் விடயங்களில் நோக்கம் உள்ளவன் ஆனால் அவனுக்கு குறைவு ஏற்படும்படி ஆத்மாவை மறைக்கும்.

**370. சவித்தடிக் கின்ற பந்து சற்றுமே தவறி மாடித்**
**தலத்துள படியில் வீழ்ந்த தன்மைபோல் சொரூபம் என்னும்**
**இலக்கிய நின்று சித்தம் எவளவும் தவறும் ஆகின்**
**புலத்தின்நேர் முகமே ஆகிப் போய்விழும் அங்கங் கேகாண்.**

வீசி அடிக்கின்ற பந்தானது சிறிது தவறி, மாடிப்படிகளில் விழுந்து படிப் படியாய் உருண்டு கிழே உள்ள படியை அடைந்துவிடும். அதுபோல, ஆத்ம வடிவம் என்னும் இலட்சியத்தில் இருந்து, மனம் சிறிதளவு தவறி விடுமானால், விடயங்களில் நோக்கம் உள்ளதாகி ஒன்றை விட்டு மற்றொன்று எனப்படிப் படியாய் அவைகளில் விழுந்துவிடும்.

**371. புலனிடைச் சென்ற சித்தம் புலத்தையே நன்று இதென்று**
**பலவிதம் சங்கற் பிக்கும் படர்ந்தஅச் சங்கற் பத்தால்**
**தொலைவிலாக் காம ம்உண்டாம் தொடர்ந்த அக் காமம் தன்னால்**
**சலமுறு ப்ரவிர்த்தி உண்டாம் சார்ந்தஅப் ப்ரவிர்த்தி யாலே.**

**372. அருமையாம் ஆன்ம நிட்டை அகன்றுபோம் மற்று அவற்றால்**
**புருடனும் தீங்கில் வீர்ந்து போகுவது அன்றி மற்றும்**
**சொரூபமே சாரான் இங்ஙன் சொன்னஇவ் அனர்த்தம் எல்லாம்**
**தருவதால் சங்கற் பத்தைத் தள்ளுவான் விவேகி ஆனோன்.**

விடயங்களில் ஈடுபட்ட மனம், விடயங்களையே நல்லது எனப் பலவிதமாக எண்ணும். தொடர்ந்து அந்த எண்ணங்களால் ஆசை உண்டாகும். தொடர்ந்து வந்த அந்த ஆசையால் அதை அடைய வெறுப்பைத் தரும் முயற்சி உண்டாகும் அந்த முயற்சியினால் ஆத்மாவில் நிலைத்து இருப்பதாகிய அரிய நிலை அகன்றுவிடும். அவற்றால் சீவனும் தீமையான விடயங்களில் விழுந்து விடுவதும் அல்லாமல் மறுபடியும் தன் உண்மை வடிவத்தை அடையமாட்டான். இங்கே சொன்ன இந்த எல்லாக் கெடுதலையும் தரும் எண்ணங்களை விலக்கியவனே விவேகி ஆவான்.

(371, 372 ஆகிய இரு பாடல்களுக்கும் சேர்த்தே பொருள் சொல்லப்பட்டுள்ளது)

**373. ஆதலால் ஆன்ம நிட்டை அன்றியும் தவிர்தல் தானே**
**சாதுவே விவேகியர்க்குச் சாற்றிய காலன் ஆகும்**
**கோதிலா ஆன்ம நிட்டை கூடினோன் பேற்றைச் சார்வன்**
**ஆதலால் சாவதான மாக அந்நிட்டை சார் வாய்.**

சாதுவே ஆகையால் ஆத்மாவில் மனதை நிலைபெறச் செய்யாமல் தவிர்த்தல் விவேகம் உடையவனுக்கு யமன் என்று கூறப்படும். குற்றமற்ற ஆத்மாவில் மனம் நிலை பெற்றவன் வீடு பேற்றை அடைவான். ஆகையால் கவனமாக ஆத்ம நிட்டையை மேற் கொள்வாய்.

**374. கேதமார் உடல் இருந்தும் கேவலன் ஆன வன்தான்**
**பேதமார் உடல் இலாத பேற்றிலும் கேவ லன்காண்**
**சாதுவே பேதம் தன்னைச் சற்றுமே காண்ப வர்க்கு**
**மேதக யசுரு வேதம் மிகவுமே பயத்தைச் சாற்றும்.**

சாதுவே, துன்பம் நிறைந்த இந்த சரீரத்தில் இருக்கும் போதே, தான் தானாய் இருக்கும் நிலை பெற்றவன் (சீவன்முத்தன்) தான் வேற்றுமையோடு கூடிய சரீரம் விழுந்த பின்பும் விதேக முத்தன் ஆவான். ஒருசிறிதேனும் வேற்றுமை காண்பவனுக்கு சிறந்த யஜீர் வேதம் மிகவும் பயம் உண்டு என்று கூறுகிறது.

**375. போதவான் எப்போ தேனும் பூரணப் பிரமத் தின்கண்**
**ஏதமாம் பேதம் தன்னை எவளவும் காண்ப பேல்அப்**
**பேதமே அன்னோ னுக்குப் பீதியா ம்ஆத லாலே**
**சாதுவே மறந்தும் பேதம் சற்றுமே காண ஒண்ணா.**

சாதுவே, எப்பொழுதாவது எங்கும் நிறைந்த பிரம்மத்திடம் அறிஞன் ஆனவன் தீமைதரும் பேதத்தை (வேற்றுமையை) சிறிதளவும் காண்பான் ஆனால், அப்படி பிரம்மத்தைவிட வேறு பட்டதாக காண்பவனுக்கு பயத்தை உண்டு பண்ணும். ஆதலால் மறதியால் பிரம்மத்திடம் பேதத்தை சிறிதும் காண்பது தகாது.

**376. சுருதிகள் மிருதி நீதி சுத்தமாய் நிடேதம் செய்த**
**திருசியர் துஆன்ம புந்தி செய்பவன் விவேகி யேனும்**
**விரிவுற மேலும் மேலும் விவிதமாம் துன்பம் சார்வன்**
**அரியனே, நிடேத கர்த்தா ஆகிய பாவி யே போல்.**

அரியனே, வேதங்களாலும், ஸ்மிருதிகளாலும், யுக்திகளாலும் இது ஆத்மாவல்ல என விலக்கப்பட்ட சரீரம் முதலான காணப்படும் பொருள்களை ஆத்மா என்று எண்ணுபவன், விவேகம் உடையவன் ஆனாலும், வேதம் தகாது என்று விலக்கியவற்றைச் செய்யும் பாவியைப் போல, மேன்மேலும் பல விதமான துன்பங்களை விரிவாக அடைவான்.

**377. சத்திய அநுசந் தானம் சார்ந்தவன் முத்தன் ஆகி**
**மெத்தவும் மகத்து வத்தை மேவுவன் நித்தம் ஆக**
**மித்தையின் அநுசந் தானம் மேவினோன் மிகநசிப் பன்**
**பத்தனே அசோர சோரர் பால்இதைப் பார்க்க லானோம்.**

அன்பனே, சத்தியமான பிரம்மத்தை தொடர்ந்து சிந்திப்பவன் சீவன் முத்தன் ஆகி எப்பொழுதும் மிகவும் மேன்மையை அடைவான். பொய்ப் பொருளையே சிந்திப்பவன் மிகவும் நாசத்தை அடைவான். திருடன் அல்லாதவன் ஆகியவர்களிடம் இதை நாம் பார்க்கலாம்.

**378. ஆதலால் சந்தி யாசி அசத்அநு சந்தா னம்தான்**
**ஏதமாம் பந்த ஏது என்றுஇதை இகழ்ந்து நன்றாய்ச்**
**சோதி ஆனந்த சத்தாயிச் சொல்லிய பிரமம் நான்என்று**
**ஓதிய பிரம நிட்டை ஒழிவற ஒன்ற வேண்டும்.**

ஆதலால் துறந்தவன் ஆத்மா அல்லாதவற்றை நினைப்பது துன்பம்தரும் பந்தத்திற்குக் காரணம் என்று எண்ணி அனாத்மப் பொருளை நன்கு வெறுத்து, சத்து சித்து ஆனந்தம் என சொல்லப்படும் பிரம்மமே நான் இருக்கிறேன் என்ற பிரம்ம நிட்டையில் ஒய்வு இல்லாமல் நிலை பெற்று இருக்க வேண்டும்.

**379. தீதில் ஆன் மஅநு பூதித் திகழ்வினால் திடமாய்ப் பெற்ற**
**பேதமில் பிரம நிட்டை பெருகிய சுகம்செய் விக்கும்**
**ஏதமாம் அஞ்ஞா னத்தால் எய்திய துயரை எல்லாம்**
**சாதுவே அந்த நிட்டை சற்றும்இல் லாது செய்யும்.**

சாதுவே, குற்றமில்லாமல் ஆத்ம அனுபவத்துடன் நிலைத்திருப்பதால் உறுதியாகப் பெற்ற பேதம் இல்லாத பிரம்ம நிட்டை ஆனது, மிகுந்த ஆனந்தத்தைக் கொடுக்கும். கேடான அஞ்ஞானத்தால் அடைந்த துக்கங்களை எல்லாம் அனுபவித்து அறிந்த பிரம்மநிட்டை சிறிதும் இல்லாமல் அழித்துவிடும்.

**380. வாகிய அநுசந் தானம் மலினவா சனையைத் தானே**
**பாகனே மேலும் மேலும் பயனதாய் வளரப் பண்ணும்**
**ஆகையால் விவேகி அத்தை அறிந்துடன் பாகி யம்விட்டு**
**ஏகமாம் ஆன்ம ரூபம் என்றுமே அநுசந் திப்பான்.**

பக்குவம் அடைந்தவனே, வெளிப் பொருள்களை பற்றிய சிந்தனை அதன் பயனாகிய கெட்ட வாசனையையே மேன்மேலும் பெருகச் செய்யும். ஆதலால் விவேகி ஆனவன் வாசனை வளரும் என்பதை அறிந்து கொண்டு வெளிப் பொருள்களை சிந்திப்பதை விட்டு எப்பொழுதும் ஒன்றேயான பிரம்ம வடிவத்தை இடைவிடாது சிந்தனை செய்து கொண்டு இருப்பான்.

**381. வாகியம் விட்ட போதே மனதுநின் மலிமாம் மைந்தா**
**ஆகிய அம்ம னத்தால் அடையலாம் ஆன்ம ஞானம்**
**கெமாம் அந்த ஞானம் இசைந்ததால் பவபந் தம்போம்**
**ஆகையால் பாகி யத்தை அடக்கலே முத்தி மார்க்கம்.**

மைந்தனே. வெளிப் பொருள்களை விட்ட போதே மனது தூயதாகி விடும். துயதாகிய அந்த மனத்தினால் ஆத்ம ஞானம் அடையலாம். ஒன்றேயான ஆத்ம ஞானம் எற்பட்டதால் பிறவிப் பிணி நீங்கும். ஆதலால் வெளிப் பொருள்களில் ஈடுபாட்டை விடுவதே வீடுபேற்றிற்கு உரிய வழியாகும்.

**382. சாதுவே முமுட்சு ஆகிச் சதுரனாய்ச் சத்அசத் ஓர்ந்து**
**வேதமே நம்பி ஆன்ம விபுத்துவம் அறிந்தோன் ஆர்தான்**
**கேதமார் அசத்துத் தன்னைக் கெடுத்திடும் என்று அறிந்தும்**
**பேதமாம் அவ்அ சத்தைப் பேணுவன் பால னேபோல்.**

சாதுவே வீடுபெறும் விறுப்பம் உடையவனாய், மிகவும் கற்று அறிந்தவனாய் எது எப்பொழுதும் இருக்கிற சத்தானப் பொருள், எது பொய்யான பொருள் என்ற பகுத்தறிவு உடையவனாய், வேதத்தைப் பிரமாணமாகக் கொண்டு, ஆத்மாவை அறிவதே மேலானது என்று, அறிந்திருக்கம் எவன் துக்கம் நிறைந்த பொய்யான பொருள் தன்னை அழித்துவிடும் என்று அறிந்தும், ஆத்மாவிற்கு வேறுபட்ட அந்த பொய்யானப் பொருளை குழந்தையைப் போல் விரும்புவான்?

**383. உடல்முதல் அபிமா னத்தை உடையவன் முத்தி சாரான்**
**திடமுற முத்தி சார்ந்தோன் தேகாதி அபிமா னிக்கான்**

**சடமுறு துயில்உடைத் தோன் சாக்கிரம் சாரான் அத்தை**
**உடையவன் துயிலைச் சாரான் உபயமும் வெவ்வேறு அன்றே.**

சரீரம் முதலானதில் அபிமானத்தை உடையவன் முத்தியை அடைய மாட்டான். உறுதியாக முத்தி அடைந்தவன் சரீரம் முதலானதில் அபிமானம் கொள்ள மாட்டான். அறிவற்று தூங்கிக் கொண்டு இருப்பவனுக்கு விழிப்பு நிலை இருக்காது. விழித்துக் கொண்டு இருப்பவனுக்கு தூக்கம் இருக்காது. அதுபோல அவ்விரண்டும் (சரீர அபிமானம், முத்தி) வெவ்வேறே ஆகும்.

**384. தன்னையே சரஅச ரங்கள் சகலத்தின் உட்பு றத்தும்**
**துன்னிய சாட்சி யாயும் தொடர்அதிட் டான மாயும்**
**உன்னிஇங் உபாதி எல்லாம் ஒழித்துஎவன் அகண்டம் ஆகி**
**மன்னுபூ ரணமாய் நிற்பன் மாசிலாத அவனே முத்தன்.**

அசையும் பொருள், அசையாப் பொருள் எல்லாவற்றிலும் உள்ளேயும் வெளியிலும் எவன் தனது உண்மை வடிவையே பொருந்திய சாட்சி ஆகவும் தொடர்ந்து ஆதாரமாய் இருப்பதாகவும் உறுதியாக எண்ணி இந்த உபாதிகளை எல்லாம் நான் அல்ல என்று நீக்குகிறானோ அவனே அகண்டமாய் பரி பூரனமாய் விளங்குவான். அவனே குற்றமில்லாத முத்தன் ஆவான்.

**385. சகலமாம் விதத்தி னாலும் சம்சாரம் விடுதற்கு ஏது**
**அகம்இலா அகண்ட பாவம் அன்றிமற் றுஏதும் இல்லை**
**துகள்இலா ஆன்ம நிட்டைத் தொடர்பினால் திருசி யத்தை**
**இகழில்அவ் அகண்ட பாவம் இசைந்திடும் அதிகா ரிக்கே.**

எல்லா வகையாலும் அகங்காரமற்று எல்லாவற்றிலும் யானே ஆத்மா என்ற அகண்ட பாவனையைக் காட்டிலும், பிறவிப் பிணியைப் போக்குவதற்குக் காரணம் வேறு எதுவும் இல்லை. அந்த அகண்ட பாவனையும் அதிகாரிக்கு குற்றமில்லாது எப்போதும் ஆத்ம நிட்டையில் நிலைத்திருப்பதனால், பார்க்கப் படும் பொருள்கள் தோன்றாமல் மறந்திடும் போது ஏற்படும்.

**386. மருவுதே கஆன்ம புந்தி மன்னிப்பா கியமே ஆன**
**பொருளுடை அனுப வத்தில் போகிய மனத்தன் ஆகி**
**ஒருவிதம் இலாத செய்கை ஒழிவிலாது உற்றோ னுக்குத்**
**திருசியம் தன்னை நீக்கும் திறமைஎவ் விதத்தில் உண்டாம்.**

சரீரத்தை ஆத்மா என்று எண்ணி, வெளியில் உள்ள விடயங்களை அனுபவிப்பதில் ஈடுபட்ட மனம் உடையவனாகி, பலவிதமான செயல்களை ஓய்வின்றிச் செய்பவனுக்கு, பார்க்கும் வெளிப் பொருள்களை விலக்கும் திறமை எவ்வாறு ஏற்படமுடியும்?

**387. அகிலமாம் தர்மம் கர்மம் அசத்தியப் புலன் அனைத்தும்**
**மிகவுமே துறந்து நித்தம் மெய்யான நிட்டை சார்ந்து**
**சுககன சொரூபம் ஓர்ந்துஅச் சுகத்தையே இச்சிப் போர்க்கே**
**திகழ்வுறு முயற்சி யாலே திருசிய நீக்கம் உண்டாம்.**

வேதத்தில் கூறப்பட்ட தர்ம அனுட்டானம் கர்மங்கள் எல்லாவற்றையும், பொய்யான எல்லா விடயங்களையும் நன்றாக விட்டு விட்டு, எப்பொழுதும் ஆத்ம நிட்டையில் ஈடுபட்டு அந்த ஆனந்தத்தை விரும்புவனுக்கே, இடைவிடாத முயற்சியால் வெளிப் பொருள்களை விலக்கும் திறம் உண்டாகும்.

**388. திருசியம் யாவும் நீக்கித் திடமுற அகண்ட பாவம்**
**சருவதா அடைவ தற்கே சாதுவாம் எதிக ளுக்குச்**
**சரவணம் ஆதி கன்மம் செய்தபின் சுருதி தானே**
**சருவதா நிருவி கற்ப சமாதியை விதிக்கும் அனறோ.**

சத்துவகுணம் உடைய துறவிகளுக்கு, காணப்படும் விடயங்கள் எல்லாவற்றையும் உறுதியாக விலக்கி, எப்பொழுதும் ஆத்ம பாவனை சித்திக்கும் பொருட்டு, சிரவணம் மனனம் நிதித்தியாசனங்களைச் செய்த பிறகு வேதம் எப்பாழுதும் நிர்விகல்ப சமாதியை விதிக்கின்றது.

**389. ஆதலால் அச்ச மாதி அடைந்ததால் அசல ரான**
**சாதுவாம் எதிகள் அன்றிச் சதகோடி சன்மத்து உற்ற**
**ஏதவா தனைஇ சைந்தோர் எவ்விதச் சதுர ரேனும்**
**தீதுஅகங் காரம் ஆதித் திருசியம் விரைவில் தீர்க்கார்.**

ஆகையால் அந்த நிர்விகல்ப சமாதியை மேற் கெண்டதால் கலக்கமில்லாத சாதுவான துறவிகளைத் தவிர, பலகோடி பிறவிகளில் ஏற்பட்ட துன்பம் தரும் வாசனையை அடைந்தோர், எவ்வளவு திறமை உடையவர்களாய் இருந்தாலும் அகங்காரம் முதலியவற்றால் வெளிப் பொருள்களின் தோற்றம் தன்னிடம் ஏற்படாமல் விரைவாக விலக்க மாட்டார்கள்.

**390. ஓதும்ஆ வரணம் தன்னின் உரத்தினால் விட்சே பம்தான்**
**போதமில் புருடன் தன்னைப் பொய்ம்மயக் கத்தி னுக்குஓர்**
**ஏதுவாம் அகங்கா ரத்தோடு ஏகமாய் இசைத்து வைத்துப்**
**பேதமாம் அதின்கு ணத்தால் போய்என அலைத்து வைக்கும்.**

கூறும் ஆவரண சத்தியின் வலிமையால் விட்சேப சத்தியானது அறிவில்லாதவனை பொய்யான நான் என்ற மயக்கத்திற்குக் காரணமான ஒப்பற்ற அகங்காரத்தோடு ஒன்றாக கூட்டுவித்து பலவாறான அந்த அகங்காரத்தின் குணங்களால் (ஆசை கோபம், பிரவிருத்தி) பேய் போல அலையச் செய்யும்.

**391. இருளும்ஆ வரண சத்தி யாவுமே ரசியாது ஆகின்**
**மருளும்விட் சேப சத்தி மாசற நசிக்க மாட்டா**
**பரவும்ஆ சரணநாசம் பாலின்நீர் பகுப்ப தைப்போல்**
**திருசியம் நிருக்கு இரண்டைத் திகழ்அறப் பகுத்தால் உண்டாம்.**

ஆத்மாவை மறைக்கும் ஆவரணசத்தி முற்றிலும் அழிக்கப் படாவிட்டால் மயக்கத்தைச் செய்யும் விட்சேப சத்தியும் குற்றமின்றி அடியோடு அழியாது. பாலையும் நீரையும் பிரித்து அறிவதைப் போல் பார்க்கப் படும் அநாத்மா பார்க்கும் ஆத்மா இரண்டையும் தெளிவாகப் பிரித்து அறிவதால் பெருகும் ஆவரண சத்திக்கு அழிவு உண்டாகும்.

**392. சாற்றும்ஆ வரணம்நாசம் சாரவே அன்ம ரூபம்**
**தோற்றிய சம்ச யஆதித் துகளறத் தானே தோன்றும்**
**ஊற்றவிட் சேப மும்தான் ஒழிந்திடும் அதுதான் மற்றும்**
**தோற்றுமே ஆகின் பொய்யே தோன்றிடும் என்று கொள்வாய்.**

கூறிய ஆவரண சத்தி அழிந்தவுடன் வலிமையான விட்சேப சத்தியும் அழியும். பிறகு சந்தேகம் விபரீதம் முதலிய குற்றங்கள் நீங்கி ஆத்ம வடிவம் தானாகவே விளங்கும். அந்த விட்சேப சத்தி மீண்டும் தோன்றுமே ஆனால் அது பொய்யே என்று காணப்படும் இதை அறிந்து கொள்வாய்.

**393. நல்லபோ தத்து உதித்த நல்லதாம் விவேகம் தானே**
**சொல்லிய ஆன்ம அநான்ம சொரூபம்நன் றாய்ப்ப குத்துத்**

**தொல்லையாம் அஞ்ஞா னத்தால் தொடர்ந்தபந் தம்சிதைக்கும்**
**அல்லல்செய் பந்தம் அற்றோர்க்கு அந்பமும் பவம்ஈண்டு இல்லை.**

தெளிவான அறிவினால் உண்டாகும் நல்ல பகுத்தறிவு கூறிய ஆத்ம அநாத்ம பொருள்களின் தன்மையை நன்றாகப் பிரித்துக் காட்டி, அநாதியான அறியாமையினால் தொடர்ந்துவரும் பந்தத்தை அழிக்கும். துன்பம் தரும் பந்தம் இல்லாதவர்களுக்கு இங்கே சிறிதும் பிறவி இல்லை.

**394. புத்திர பரசீ வைக்ய போதமாம் பெரிய வந்தி**
**மெத்தவும் அவித்தைக் காட்டை மீதிஅன்றித்த கிக்கில்**
**அத்தவு தஆன்ம ரூபம் அடைந்துள முத்த னுக்குஇங்கு**
**இத்துனிப் பவத்தை மீண்டும் ஈன்றிடும் வித்தஏ தாகும்.**

புத்திரனே, சீவப் பிரம்ம ஐக்கிய ஞானம் ஆகியது பெரியத் தீயானது அவித்தை என்னும் காட்டை மிச்சம் இல்லாமல் நன்கு எரித்துவிடும். அதனால் இரண்டற்ற ஆத்மவடிவத்தை அடைந்துள்ள சீவன் முத்தனுக்கு இங்கே இத்துன்பம் தரும் பிறப்பை மறுபடியும் உண்டாக்கும் விதம் எதுவாகும்? ஒன்றும் இல்லை.

**395. செவ்விதாய் ஆன்ம ரூப தெரிசனம் செய்வ தாலே**
**எவ்வஆ வரணம் நீங்கும் இறந்திடும் மித்தை ஞானம்**
**விவ்வித விட்சே பத்தால் விளைந்துள துன்பம் நீங்கும்**
**இவ்விதம் சொன்ன மூன்றும் இசைந்தஓர் திருட்டாந் தம்கேள்.**

ஆத்ம வடிவத்தை நன்றாக அறிவதனால் குற்றமான ஆவரணம் நீங்கி விடும். பொய் உணர்வும் அழிந்துவிடும். விட்சேபத்தால் பலவிதமாக உண்டான துன்பங்களும் நீங்கி விடும். இவ்வாறு கூறிய மூன்றும் பொருந்திய ஓர் உதாரணம் கூறுவேன், நீ கேட்பாயாக.

**396. தீதற இரச்சு ரூப தெரிசனம் செய்வ தாலே**
**மோதும்ஆ வரணம் ஆதி மூன்றுமே முடிந்த அன்றோ**
**ஆதலால் பந்தம் நீக்கம் அடைந்திட விவேகி ஆனோன்**
**ஆதியாம் ஆன்ம ரூபம் அவசியம் அறிய வேண்டும்.**

கயிற்றின் வடிவத்தை நன்றாக அறிந்து விடுவதால், இதுபாம்பு என்ற மயக்கமும் அதனால் ஏற்பட்ட பயமும் உடல் நடுக்கமும் நீங்கிவிடுகிறது. அதுபோல ஆத்மாவை

நன்றாக அறிவதால் துன்பம் தரும ஆவரணம், பொய்யுணர்வு, துக்கம் ஆகிய இந்த மூன்றும் அழிந்து விடும். ஆதலால் விவேகம் உடையவனால் பந்தத்தில் இருந்து விடுபடுவதற்கு முதன்மையாக விளங்கும் ஆத்ம வடிவத்தை நிச்சயமாய் உணரப்பட வேண்டும்.

**397. ஏதமாம் புந்தி ஒன்றே எரிஅயப் பிண்டம் போலப்**
**பேதசத் பிரமத் தோடே பொய்யதாம் புணர்ப்பு அடைந்து**
**ஞாதிரு ஞான ஞேய ஞாலமாய்ப் பரிணா மிக்கும்**
**ஆதலால் இவை அனைத்தும் அசத்தியம் ஆகும் என்றும்.**

இரும்பானது அக்கினியின் சேர்க்கையால் சுடும் தன்மையை அடையும். அதுபோல, குற்றமான புத்தியானது அறிவு வடிவம் சத்து வடிவம் ஆன பிரம்மத்தோடு பொய்யான சேர்க்கையினால் அறிபவனாகவும், அறிவாகவும், அறியப்படும் உலகமாகவும் மாறுபடும். ஆதலால் புத்தியால் தோற்றுவிக்கப் பட்ட இவை எல்லாம் எப்பொழுதும் பொய்யே ஆகும்.

**398. புந்திகற் பிதமே ஆகப் பொருந்திய ஞாதி ராதி**
**மைந்தனே மனம் யக்கம் மனோரதம் கனவு இவற்றில்**
**சந்ததம் பொய்யே ஆகச் சகலரும் காண்ப தாலே**
**அந்தமில் ஆன்ம ரூபம் அநிசமும் நிருவி காரம்.**

புத்தியினால் கற்பிதமாக தோற்றுவிக்கப்பட்ட அறிபவன், அறிவு, அறியப் படுவது ஆகிய மூன்றும், மனமயக்கம், பகற்கனவு (மனோராச்சியம்) சொப்பனம், ஆகிய இந்த மூன்று நிலைகளிலும் எப்பொழுதும் பொய்தான் என்று யாவரும் அறிவர். ஆதலால் அழிவில்லாத ஆதமாவே ஒருபோழுதும் விகாரம் அற்றதாக விளங்குகிறது.

**399. பகுதியின் விகார மாகப் பரவிய அகங்கா ராதி**
**புகல்உடல் ஈறாம் யாவும் புலன்அனைத் தும்கணத்தில்**
**வெகுவித விகாரம் மேவும் விமலமாம் ஆன்மா என்றும்**
**இகழ்வுறு விகாரம் மேவாது ஏகசித்து உருவ மேயாம்.**

பிரகிருதியின் மாறுதல்களாகப் பெருகிய அகங்கார முதல் தூலசரீரம் வரை கூறப்பட்ட எல்லாமும், சப்தம் முதலிய விடயங்கள் எல்லாமும், நொடிப் பொழுதில் பலவிதமாக வேறுபடக் கூடிய தன்மை உடையவைகளாம். ஆத்மா எப்பொழுதும் தூயதாம். இகழும் தன்மை உடைய வேறுபாடு அடையாது. ஒரே அறிவு வடிவமாக விளங்குவதாகும்.

**400. சத்துஅ சத்திற்கு வேறாய்ச் சாட்சியாய்ப் புந்தி ஆதிக்கு**
**இத்திறம் அகம்ப தத்தின் இலக்கியப் பொருளும் ஆகி**
**நித்தஆத் துவிதஅ கண்ட நிமல சித்து உருவே ஆன**
**சுத்தமாம் பிரத்யக் ஆன்மா சுகனேப் பரமஆன் மாவே.**

உளது இலது என்று விளக்க முடியாத மாயா காரியங்களுக்கு வேறுபட்டதாய், புத்தி முதலானவைகளுக்கு சாட்சியாய், நான் எனும் பதத்தின் இலட்சியார்த்தமாய், நித்தியமாய், அத்துவிதமாய், அகண்டமாய், நிர்மலமாய், அறிவு மயமாய் இத்தன்மைகளோடு உள்ளே சுத்தமான ஆத்மா விளங்கும். அதுவே ஆனந்தமே வடிவமான மேலான ஆத்மா எனப்படும்.

**401. இத்திறம் நித்தஅ நித்த இயல்பினைப் பகுத்துஅ வற்றில்**
**நித்தமாம் தன்ஆன் மாவை நிச்சயித்து அறிவாம் கண்ணால்**
**அத்திற மான நானே அகண்டசித் பிரமம் என்று**
**தத்துவம் அறிந்தோன் யாவும் தவிர்ந்துதான் சாந்தன் ஆவன்.**

இவ்வாறாக சத்தான ஆத்மா அசத்தான அநாத்மா இவற்றின் தன்மைகளை பிரித்துத் தன்னுடைய ஞானக் கண்ணால் நித்தியமான ஆத்மாவை நிச்சயித்துக் கொண்டு, அத்தகைய நானே நித்தியமாய் அகண்ட அறிவே மயமான பிரம்மம் என்ற உண்மையை அறிந்தவன் அநாத்மாவான பொருள்களை எல்லாம் விட்டு நீங்கி சாந்த குணம் உடையவன்ஆவான்.

**402. நிருவிகற் பகமே ஆக நிகழ்ந்திடும சமாதி யாலே**
**ஒருமையாம் தன்ஆன் மாவின் உண்மையை எந்தப் போது**
**புருடன்இங் குஅறிவ ன்அந்தப் போதுதா ன்அஞ்ஞா னத்தால்**
**மருவிய சகல மான மனமுடிச்சு இறந்து போகும்.**

நிர்விகல்ப சமாதியால் விளங்குகின்ற ஒன்றேயான தனது ஆத்மாவின் உண்மையை எப்பொழுது ஒருவன் இங்கே அறிந்து கொள்வானோ, அப்பொழுதே அஞ்ஞானத்தால் ஏற்பட்ட ஆத்மாவையும் அநாத்மாவையும் ஒன்றாகக் கருதிய மனதில் உள்ள முடிச்சு (அகங்காரக்கிரந்தி) முற்றிலும் அழிந்து போகும்.



## சாதனவியல்

**403. பத்தனே நிருவி கற்பப் பரமஅத் துவிதஆன் மாவில்**
**புத்தியின் தோடத் தாலே பொருந்திநீ நான்இ துஎன்று**
**நித்தமும் விகற்பம் உண்டாம் நிமலமாம் சமாதி தோன்றில்**
**தத்துவ அனுப வத்தால் தவிரும்அவ் விகற்பம் எல்லாம்.**

அன்பனே, விகற்பம் அற்றதும் மேலானதும் இரண்டற்றதும் ஆன ஆத்மாவில் புத்தியின் குற்றத்தால், நீ நான் இது என்ற வேறுபாடுகள் பொருந்தி ஏற்படும். எப்பொழுதும் சமாதியில் நிலைபெற்றால் மாசற்ற ஆத்ம அனுபவம் சித்திக்கும். அதனால் நீநான்இது என்ற வேற்றுமைகள் எல்லாம் அழிந்து விடும்.

**404. சமதமஆ தியைஅ டைந்த சதுரனாம் சந்நி யாசி**
**அமலமாம் சமாதி யால்தன் அகண்டபா வம்பொருந்தித்**
**தமசினால் வருவிகற்பம் தள்ளிநிர் விகற்ப னேஆள்**
**அமலமாம் பிரம ஆகாலம் ஆகவே சுகித்து நிற்பன்.**

சமம் தமம் முதலிய குணங்களை அடைந்த திறமையான துறவி ஆனவன், குற்றமற்ற சமாதியால் தன்னுடைய அகண்ட ஆத்ம பாவனையில் எப்பொழுதும் நிலை பெற்று விளங்குவான். அதனால் தமோ குணத்தால் உண்டாகும் வேறுபாடுகளை நீக்கி, விகற்பமற்றவனாய், மாசற்றவனாய் பிரம்மவடிவமாகவே ஆனந்தமாக இருப்பான்.

**405. எவர்கள்தம் சுரோத்தித ரஆதி இந்தியம் இதயம் யாவும்**
**சுவமதாம் ஞானஆன் மாவில் சுத்தமாய்ப் பிரவிலா பித்துஅங்கு**
**அவமிலாச் சமாதி பெற்றோர் அவர்களே முத்தர் ஆனோர்**
**விவிதமாம் பரோட்ச வார்த்தை விளம்புவோர் முத்தர் அன்றால்.**

எவர்கள் தம்முடைய சுரோத்திரம் முதலிய இந்திரியங்களையும் மனம் முதலிய எல்லாவற்றையும் சுயமாகவே விளங்கும் அறிவு வடிவாகிய ஆத்மாவில் நன்றாக லயம் செய்து அப்போதே சமாதி கூடியவர்களோ, அவர்களே முத்தர்கள் ஆவார்கள். நூல் அறிவினால் நானே பிரம்மம் என்று பல விதமாக பேசுவோர் வீடுபேற்றினை அடைய மாட்டார்கள்.

**406. பேதமாம் உபாதி யாலே பின்னன்ஆம் ஒருவன் தானே
ஏதமாம் உபாதி தீர்த்தால் ஏகனாம் அவனே மற்றும்
ஆதலால் உபாதி தீர்க்க அநிசமும் விவேகி ஆனோன்
சாதகம் நிருவிகற்ப சமாதியே செய்ய வேண்டும்.**

உபாதிகளின் சேர்க்கையால் தான் ஒருவன் பேதமாடந்து வேறுபாட்டை அடைகிறான். துன்பம் தரும் உபாதிகள் நீங்கினால் அவன் தானாகவே இருப்பான். ஆதலால் விவேகம் உடையவன் உபாதிகளை நீக்கும் பொருட்டு நிர்விகல்ப சமாதியை எப்பொழுதும் அப்பியாசம் செய்ய வேண்டும்.

**407. ஏகமாம் நிட்டை யாலே என்றுமே பிரமத் தின்கண்
ஆகும்ஆ சத்தி உள்ளோன் அகண்டசத் பிரமம் ஆவன்
சோகமே உற்ற கீடம் சுற்றிய பிரம ரத்தை
ஏகமாய்ப் பாவித் துத்தான் என்றுமே அஃதுஆ யிற்றே.**

சோகமான புழு தன்னைச் சுற்றி ரீங்காரமிடும் குளவியை எப்போதும் மிகுதியாக பாவித்து தானாகவே குளவி ஆகிவிடுகிறது. அதுபோல எப்போதும் பிரம்மத்தினிடம் மிகுதியான நிட்டையால், பிரம்மம் ஆகும் விருப்பம் உடையவன் அகண்ட சத்தான பிரம்மமே ஆகி விடுவான்.

**408. கிரியைகள் யாவும் விட்டுக் கீடகம் பிரம ரத்தை
மருவியே தியானம் செய்து மற்றுஅதே ஆகுமா போல்
ஒருமையாம் நிட்டை யாலே உண்மையாம் பிரமந் தன்னைச்
சருவதாத் தியானிப் போனும் சத்தியம் பிரமம் ஆவன்.**

புழுவானது எல்லாச் செயல்களையும் விட்டு தன்னைக் கொட்டிய குளவியையே சிந்தனை செய்து அந்தக் குளவியைப் போல ஆகி விடுகிறது. அதுபோல ஒருமுகப்பட்ட நிட்டையால் சத்தாகிய பிரம்மத்தினை எப்போதும் தியானிப்பவனும் பிரம்மமே ஆகி விடுவான். இது சத்தியம்.

**409. மிகவுமே நுண்மை யான மெய்ப்பரப் பிரமம் தன்னைத்
தகவிலாத் தூல திட்டி தன்னினால் எவரும் காணார்
நிகழ்மதி நுண்மை உள்ள நிமலரே சமாதி யாலே
மிகவுமே சூக்க மான விருத்தியாம் கண்ணால் காண்பர்.**

**பெருகிய விரதி பெற்றோன் பிரமநிட் டையைஅ டைந்துஇவ்**
**இருவிதப் பற்றை யும்தான் ஏகமாய் விடுக்க வல்லோன்.**

எங்கும் பரந்துள்ள விடயங்களில் ஆசை கொள்வது புறப்பற்று ஆகும். வலிமையான புகங்காரம் பிராணன் மனம் முதலியவற்றில் ஆசை வைப்பது அகப் பற்று எனப்படும். விரமான வைராக்கியம் உடையவனே, பிரம்மத்திடம் நிலை பெற்று சமாதியை அடைந்து, இந்த இரண்டு விதமான பற்றுகளையும் அடியோடு விடுவதற்கு திறம் உடையவன் ஆவான்.

**424. பரவிடும் ஓர்பட் சிக்குப் பறந்திட இருபட் சம்போல்**
**மருவிடும் மோட்சம் ஆகும் மாடிமேல் சீவன் ஏற**
**விரதிநல் விவேகம் என்ன வேண்டியது இரண்டு பட்சம்**
**இருமையில் ஒன்று இலாதேல் ஈதிம்மீ துஏற ஒண்ணா.**

எங்கும் பறந்து செல்ல ஒரு பறவைக்கு இரண்டு இறக்கைகள் வேண்டும். அதுபோல, சீவன் வீடுபேறாகிய மாடியின் மேல் ஏறி அடைவதற்கு நல்ல வைராக்கியமும விவேகமும் என்ற இரண்டு இறக்கைகளும் வேண்டும். அவ்விரண்டில் ஒன்று இல்லாவிடில் இந்த வீடு பேறாகி மாடியின் மீது ஏறி அடைய முடியாது.

**425. மிகவுமே விரக்தன் ஆனோன் மேவுவன் சமாதி தன்னைப்**
**புகழ்சமா தியைஅ டைந்தோன் பொருந்துவன் திடபோ தத்தை**
**இகழ்விலப் போதம் உற்றோன் எய்துவன் முத்தி தன்னைத்**
**தகைமைசேர் முத்தன் என்றும் தடையில்ஆ னந்தம் உண்பன்.**

தீவிர வைராக்கியம் உடையவன் தான் சமாதியை அடைவான். புகழும் சமாதி கூடியவனுக்கே திடமான ஆத்ம ஞானம் உண்டாகும். குறைவற்ற ஆத்ம ஞானம் பெற்றவன் தான் முத்தியை அடைவான். மேலான ஆத்மஞானம் பெற்ற சீவன் முத்தனே தடையற்ற ஆனந்தத்தை அனுபவிப்பான்.

**426. விரதியை விடவேறு ஒன்றும் விமலமாம் சுகம்அ ளிக்கக்**
**கருதிய ஏது வாகக் காண்கிலேன் தியானிக்கு எங்கும்**
**அரியனே அவ்வி ரக்தி அமலமாம் ஞானத் தோடே**
**மருவுமேல் பேரா னந்தம் மாறாமல் அளிக்கும் என்றும்.**

அரிய சீடனே, சமாதியை மேற் கொண்டவனுக்கு வைராக்கியத்தைவிட தூய்மையான ஆனந்தத்தைத் தருவதற்கு வேறு ஒன்றைக் காரணமாக சிந்தித்து நான்

காணவில்லை. அந்தவைராக்கியமும் சுத்தமான ஆத்ம ஞானத்துடன் கூடியதாக இருக்குமே ஆனால் எப்பொழுதும மாறாமல் பேரானந்தத்தை அளிக்கும்.

**427. யாதினால் முத்தி என்னும் இலங்கிய மாதைச் சேர**
**ஓதிய விரக்தி தானே உத்தம மார்க்கம் ஆகும்**
**ஆதலால் அகில மான ஆசையும் அறவே விட்டுச்**
**சாதுவே நின்ஆன் மாவில் சந்ததம் கருத்தை வைப்பாய்.**

சாதுவே, எதனால் முத்தி என்ற அழகிய பெண்ணை அடைய கூறிய வைராக்கியமே உயர்ந்த வழியாகும். அதனால் அனைத்திலும் ஆசையை அடியோடு நீக்கிவிட்டு, உனது ஆத்மாவில் மனதை எப்பொழுதும் நிலைபெறச் செய்வாய்.

**428. விடசம விடயத் தின்கண் விடுதிநீ ஆவை எல்லாம்**
**மடமைசெய் ஆசை தானே மரணாதி மார்க்கம் அன்றோ**
**படர்குலம் சாதி ஆதி பற்றிய அபிமா னத்தோடு**
**இடர்தரும் கன்மம் எல்லாம் எவளவும் இலாது தீர்வாய்.**

விஷத்திற்கு சமமான விடயங்களில் நீ எல்லா ஆசைகளையும் விட்டு விடு. அறியாமை செய்கின்ற ஆசையே ஆத்மாவை மறத்தல் என்னும் மரணத்திற்கு வழியாகும். குலம் சாதி ஆசிரமம் ஆகிய இவைகளில் அபிமானத்தை நீக்குவாய். அந்த அபிமானத்தால் தொடர்ந்து வரும் துன்பம் தரும் செயல் யாவும் சிறிதும் இல்லாமல் நீக்குவாயாக.

**429. மித்தையாம் தேகம் ஆதி மிசைஅகம் மதியைத் தள்ளிச்**
**சத்திய ஆன்மா வின்கண் சாலஅம் மதியைச் செய்வாய்**
**நித்தமும் சாட்சி நீயே நிமலநிர்ப் பயமாய் நின்ற**
**உத்தமப் பிரமம் நீயே உள்ள வாறு ஒரும் காலை.**

உள்ளபடி ஆராயும் பொழுது, நீ எப்பொழுதும் சாட்சியாக விளங்குகின்றாய். நீயே குற்றமற்றதும் பயமற்றதும் ஆகி நிற்கின்ற மேலான பிரம்மமாய் இருக்கிறாய். ஆதலால் பொய்யான சரீரம் முதலியவற்றில் நான் என்ற புத்தியை விட்டு விடு. சத்தியமான ஆத்மாவினிடம் அந்த புத்தியை நன்றாக நிலை பெறச் செய்வாய்.

**430. இலக்கியப் பிரமத் தின்கண் இதயத்தை ஊன்ற வைத்துச்**
**சலித்திடும் இந்தி யத்தைத் தனதுகோ ளகத்து இருத்தி**
**அலைந்திடா ஆக்கை யோனாய் அதனிலே உபேட்சை செய்து**
**நிலைத்தள பரசீ வைக்கியம் நித்தம்நீ அடைதி மைந்தா.**

இலக்கு ஆகிய பிரம்மத்தில் மனதை நிலை நிறுத்தி, அலைகின்ற இந்திரியங்களை அது அதன் இடமான கோளகங்களிலேயே இருக்கச் செய்து, சரீரம் அசையாமல் இருப்பவனாய், சரீரத்தின் கவனம் இல்லாமல், நீ எப்பொழுதும் நிலைத்து இருக்கின்ற சீவப்பிரம்ம ஐக்கியத்தை அடைவாய்.

**431. அந்தஜக் கியம்அ டைந்த அகண்டமாம் விருத்தி யாலே**
**சுந்தரப் பிரமஆ னந்தச் சுதையினை மகிழ்ச்சி யேடே**
**சந்ததம் பானம் செய்வாய் சாரமில் சகத்தைப் பற்றிச்**
**சிந்தைசெய் மயல்களாலே சேர்பயன் உன்டோ சொல்வாய்.**

பிரம்மத்திடம் ஒன்றுபட்ட அந்த இடைவிடாத சிந்தனையால் நன்மையான பிரம்மானந்த அமிர்தத்தை எப்பொழுதும் மகிழ்வுடன் பருகுவாய். பயனற்ற உலகைப் பற்றி சிந்தை செய்யும் மயக்கத்தால் அடையும் பயன் உண்டோ? சொல்வாயாக.

**432. கருதஒணாத் துயருக்கு எல்லாம் காரணம்ஆகா நின்ற**
**மருள்உறும் அநான்ம சிந்தை மாசற விடுத்து நித்தம்**
**அரியனே இன்ப முத்தி அடைவதற்கு ஏது ஆன**
**பரியமாம் ஆன்ம சிந்தை பிறிவுஅறச் செய்தி என்றும்.**

நினைப்பதற்கரிய எல்லாத் துன்பத்திற்கும் காரணமான மயக்கம் தரும் ஆத்மா அல்லாத உலக சிந்தனையை எப்பொழுதும் குற்றம் இல்லாமல் விட்டு விட்டு, ஆனந்தமே வடிவான முத்தியை அடைவதற்குக் காரணமான மிகவும் பிரியமான ஆத்மாவை எப்பொழுதும் இடைவிடாது சிந்திப் பாயாக.

**433. நிகழ்சுயம் சோதி ஆதி நிகிலசாட்சியுமாம் ஆன்மா**
**புகலும்விஞ் ஞான கோசம் பொருந்தியே விளங்கும் என்றும்**
**இகழ்விலா இவ்ஆன்மாவை இலக்கியம் ஆகப் பற்றி**
**அகம்என அனுப விப்பாய் அகண்டமாம் விருத்தி யாலே.**

சுயம் பிரகாசமாய் எல்லாவற்றிற்கும் சாட்சியுமாம் விளங்குகின்ற ஆத்மா, விஞ்ஞானமய கோசத்தில் பிரதிபலித்து எப்பொழுதும் விளங்கும். இகழ்வில்லாத இந்த ஆத்மாவை இலட்சியம் ஆகக் கொண்டு, அகண்டாகார (தொடர்ந்த ஆத்மவடிவ சித்த) விருத்தியால், அதுவே நான் என்று அனுபவத்திற்குக் கொண்டு வருவாயாக.

**434. இகழ்விசா திகவி ருத்தி யாதுமே இல்லாது என்றும்**
**தகமையாய்ப் பழகா நின்ற சந்தத விருத்தி யாலே**
**சுககனம் ஆன ஆன்ம சோதியைச் செவ்வி தாக**
**அகம்எனக் கோச ரித்துஇங்கு அநிசமும் அறிய வேண்டும்.**

மேலான ஆனந்த வடிவமான சுயம்பிரகாசமான ஆத்மாவை, எப்பொழுதும் கீழான வேறு எண்ணங்கள் எதுவும் இல்லாமல், நல்ல முறையில் பழகிய இடைவிடாத எண்ணத்தால், நன்றாக இங்கே நான் என்று உணர்ந்து எப்பெழுதும் அறிந்து கொள்ள வேண்டும்.

**435. பகரும்இப் பரமஆன் மாவில் பாங்குற ஆன்ம புந்தி**
**மிகவுமே திடமாய்ச் செய்து மித்தையாம் அகங்கா ராதிப்**
**பகைஇலாப் புந்தி விட்டுப் பலவுமாம் அவற்றில் என்றும்**
**புகல்கட படாதி யில்போல் புத்திர உபேட்சை செய்வாய்.**

புத்திரனே, கூறிய இந்த பரமாத்மாவில் நான் என்ற ஆத்ம புத்தியை மிகவும் நன்றாக உறுதி பெறச் செய்து, பொய்யான அகங்காரம் முதலியவற்றில் மாற்றம் இல்லாமல் ஆத்மா என்ற புத்தியை விட்டு விடுவாய். பலவாக இருக்கும் அவற்றில் எப்போதும் குடம் ஆடை முதலிய வற்றில் எப்படி நான் என்று எண்ணுவது இல்லையோ அதைப்போல உதாசீன புத்தியோடு நான் என்ற பாவனை இல்லாமல் செய்ய வேண்டும்.

**436. போதமாத் திரமே ஆகப் பொருந்திய சாட்சி யின்கண்**
**ஏதமில் மனத்தை நன்றாய் இருத்திநல் பழக்கத் தாலே**
**சாதுவே மெள்ள மெள்ளச் சலனம்இல் லாது செய்து**
**தீதுஇலாப் பூர ணத்தைத் திகழவே நோக்க வேண்டும்.**

அறிவே வடிவமாகப் பொருந்தி இருக்கும் சாட்சியினிடத்தில், மாசற்ற மனதை நன்றாக வைத்து, மெதுவாக நல்ல பழக்கத்தினால் மனதை அசைவில்லாமல் செய்து, துன்பம் இல்லாத பரிபூரணமாய் விளங்கும் தனது நிலையைக் காணவேண்டும்.

மிகவுமே நுட்பமான உண்மையான பரப் பிரம்மத்தை எவரும் தகுதியற்ற தூலமான மனோ விருத்தியினால் அறிய மாட்டார்கள். நுட்பமாக விளங்கும் புத்தியை உடைய மாசற்றவர்களே சமாதியினால் மிகவும் சூட்சுமமான மனோ விருத்தியால் பிரத்தியட்சமாக அறிவார்கள்.

**410. மெத்தவும் புடபா கத்தால் மேவிய மலத்தை விட்டுச்**
**சுத்தமாம் தன்கு ணத்தைச் னாசான்னம் மேவுதே போலச்**
**சித்தமுத் தியானத் தாலே சேர்ந்தமுக் குணம் லத்தைச்**
**சுத்தமாய் விட்டுத் தன்னின் சுபாவமாம் சொரூபம் மேவும்.**

தங்கமானது நன்றாக புடம் போடவதால் தான் அடைந்த அழுக்கை விட்டு தூயதான தன் பிரகாசத்தை அடையும். அதுபோல, மனமும் சத்துவம், இராசதம், தாமசம் என்ற மூன்று குணங்கள் ஆகிற அழுக்கைத் தியானத்தால் முற்றிலும் நீக்கிவிட்டு, தனது இயல்பான சத்துவமாய் இருக்கும் நிலையை அடையும்.

**411. இடைவிடாத் தியானத் தாலே இருதயம் சுத்தம் ஆகித்**
**திடமுறப் பிரமத் தின்கண் தியங்கிடாது அடங்கும் எப்போது**
**அடர்மிகும் அகண்டஆ னந்த அனுபவ ஏது ஆன**
**சடமிலா நிருவி கற்ப சமாதிஅப் பொழுதே உண்டாம்.**

இடைவிடாது தொடர்ந்த தியானத்தால் மனம் தூய்மை அடைந்து, சலனம் இல்லாது பிரம்மத்தின் இடத்தில் உறுதியாக எப்பொழுதும் ஒடுங்கும். அப்பொழுது வரம்பில்லாத மிகுந்த ஆனந்த அனுபவத்திற்குக் காரணமான, பொய் இல்லாத நிருவிகல்ப சமாதி தோன்றும்.

**412. ஆனஅச் சமாதி யாலே அகிலவா சனைமு டிச்சும்**
**போனதாம் விவித மாகப் பொருந்திய கன்மம் பொன்றும்**
**ஏனைஉள் வெளியில் எங்கும் என்றும் ஓர் முயற்சி இன்றி**
**ஊனயில் சொரூபத் தோற்றம் ஒருமையாய் ஒளிரா நிற்கும்.**

இந்த நிர்விகல்ப சமாதியால் எல்லா வாசனை முடிச்சுகளும் அழியும். பலவிதமாக அமைந்த கர்மங்கள் அழியும். உள்ளும் புறம்பும், எல்லா இடங்களிலும், எப்பொழுதும் வேறு எந்த முயற்சியும் இல்லாமலேயே குறைவில்லாமல் தனது உண்மை வடிவம் ஒன்றேயாய் விளங்கும்.

**413. பலிப்பினால் பார்க்கும் போது பாங்கான சிரவ ணத்தின்**
**சலிப்பிலா மனனம் தானே சதகுணம் மேலாம் அத்தின்**
**நிலைப்பிலா நிதித்தி யாசம் இலக்கமாம் குணம் மேலாகும்**
**அலுப்பிலா நிரு விகற்பம் அளவிலாப் பலன் உடைத்தாம்.**

பயன்தரும் முறையை சிந்திக்கும் போது நன்மையான சிரவணத்தைவிட சஞ்சலம் இல்லாத மனனம் நூறுமடங்கு மேலானது. அதனினும் தொடர்ச்சி இல்லாத நிதித்தியாசனம் இலட்சம் மடங்கு மேலானதாகும். தளர்வில்லாத நிருவிகல்ப சமாதி அளவிலாதப் பயனைத் தருவதாம்.

**414. பிரிவிலாச் சமாதி யாலே பிரதிபந் தங்கள் இன்றி**
**ஒருமையாய்ப் பிரம ரூபம் உணரலாம் அஃதுஇ லாதேல்**
**சருவதா மனவி ருத்தி சஞ்சல ம்ஆத லாலே**
**விரிவுற விரோத மான விருத்தியோ டேக லக்கும்.**

திரிவுடி அற்ற இந்த சமாதியால் தடைகளின்றி பிரம்ம வடிவத்தை ஒன்றேயாய் அறியலாம். அந்த சமாதி இல்லை எனில், மனம் எப்பொழுதும் சஞ்சலமாய் இருக்கும். அதனால் பிரம்மம் அல்லாத வேறுவிதமான எண்ணங்களுடன் கலந்து விடும்.

**415. ஆதலால் பொறிகள் புந்தி அடக்கிநீ நின்ஆன் மாவில்**
**சாதுவே சமாதி பெற்றுச் சந்ததம் பிரம ஞானச்**
**சோதி கொண்டு அவிசா ரத்தால் சுழல்வுறும் இருளை எல்லாம்**
**மீதிஇல் லாது நீக்கி மிஞ்சிய வடிவாய் நிற்பாய்.**

சாதுவே, ஆகையால் நீ இந்திரியங்களையும் புத்தியையும் அடக்கி, உனது ஆத்மாவில் மனத்தை நிலை நிறுத்தி சமாதியை அடைவாயாக. ஆத்ம ஞானமான பிரகாசத்தைக் கொண்டு கலக்கம் தரும் அறியாமை ஆகிய இருளை எல்லாம் மீதமின்றி அழித்து, எஞ்சிய பிரம்ம வடிவமாய் இருப்பாயாக.

**416. ஏதுமே பேசாத் தன்மை எவளவும் வாங்காத் தன்மை**
**கோதுறும் ஆசை இன்மை குறைவுசெய் கிரியை இன்மை**
**சாதுவே ஏகாந் தத்தில் சந்ததம் வாசம் செய்கை**
**ஈதுஎலாம் சமாதி தன்னை இசைந்திட முந்து மார்க்கம்.**

மௌனமும், அவசியம் இல்லாத பொருளை சிறிதும் வாங்காமல் இருப்பதும், தற்றமான ஆசைகளை விட்டு இருப்பதும், குறைவைத் தரும் செயல்களை விடுதலும், எப்பொழுதும் தனித்து வசிப்பதும், இவை எல்லாம் சமாதியைப் பெறுவதற்கான முதன்மையான வழிகளாகும்.

**417. ஏகாந்த தேச வாசம் இந்தியம் அடங்க ஏது**
**போகாத அவ்அ டக்கம் புரைமனம் அடங்க ஏது**
**ஏகாத அவ்அ டக்கம் இவ்உடல் ஆதி நான்என்று**
**ஆகாத வாதனைக் கோள் அடங்குதற்கு ஏது வாமே.**

தனித்த இடத்தில் இருப்பது இந்திரியங்கள் அடங்குவதற்குக் காரண மாகும். புறத்தே செல்லாத அந்த இந்திரியங்களின் அடக்கம் தீதான மனம் அடங்குவதற்குக் காரணமாகும். புறத்தே செல்லாத அந்த மனவடக்கம் இந்த சரீரம் முதலான வற்றில் நான்என்ற நன்மை தராத வாசனையின் தன்மைகள் அடங்குவதற்குக் காரணமாகும்.

**418. வாதனை அடக்கத் தாலே வரையிலாம் பிரமஆ னந்தத்து**
**ஏதமில் அநுப வம்தான் என்றுமே தியானிக்கு எய்தும்**
**ஆதலால் விவேகி ஆனோன் அலைமன அடக்கம் தன்னைச்**
**சாதுவே முயற் சியாலே சாதிக்க வேண்டும் என்றும்.**

சாதுவே, வாசனைகள் அடங்குவதால் வரம்பற்ற பிரம்மானந்தத்தின் குற்றமற்ற அனுபவம் தியானிப்பவனுக்கு எப்போதும் ஏற்படும். ஆதலால் விவேகம் உடையவன் அலைகின்ற மனதின் அடக்கத்தை எப்போதும் முயற்சி செய்து பழக வேண்டும்.

**419. அரியனே மனதில் வாக்கை அடக்குஅதைப் புத்தி யின்கண்**
**பிரிவற அடக்கி அத்தைப் பிறங்குசாட் சியில் அடக்கு**
**புரையில்லாச் சாட்சி தன்னைப் பூரண நிருவி கற்பப்**
**பிரமமாய்த் தானே பார்த்துப் பெருகிய சாந்தி சார்வாய்.**

வாக்கை மனதில் அடக்கிவிடு. அந்த மனதைப் புத்தியில் வேறுபாடின்றி அடக்கிவிடு. அந்த புத்தியையும் விளங்கும் சாட்சியின் இடத்தில் அடக்கிவிடு. குற்றமற்ற சாட்சியை பூரணமான விகற்பமற்ற பிரம்மம் ஆகவே அறிந்து மிகுந்த சாந்தியை அடைவாயாக.

**420. ஏதமாம் தேகம் பிராணன் இந்தியம் மனது புந்தி**
**ஆதியாம் உபாதி கட்குள் அலைமனம் எந்த எந்தக்**
**கோதுஅதாம் உபாதி யோடே கூடும்அம் மயமே ஆக**
**ஓதிய தியானி ஆவன் ஒழிவில்ஆ னந்தம் ஒன்றான்.**

சமாதியை மேற் கொண்டவன், துன்பமான சரீரம், பிராணன், இந்திரியம், மனம், புத்தி முதலிய உபாதிகளுக்குள், வருத்துகின்ற அவன் மனம் எந்த எந்த குற்றமுடைய உபாதிகளுடன் கூடுமோ, அந்த உபாதி வடிவமாகவே ஆகி விடுவான். கூறிய அழிவற்ற பிரம்மானந்தத்தை அடையமாட்டான்.

**421. ஆதலால் அந்த அந்த அநாத்தமாம் உபாதி சேர்ந்த**
**ஏதமாம் தன்ம னத்தை ஏகாது மீட்க வேண்டிச்**
**சாதுவே தியானி ஆனோன் சகலமும் நன்றாய்த் தள்ளி**
**ஓதிய பிரமத் தின்கண் ஓய்வதே ஒழியா இன்பம்.**

சாதுவே, ஆகையால் சமாதியை மேற் கொண்டவன், அந்த அந்த அழியும் உபாதியைக் கூடிய துன்பம்தரும் தனது மனதை, உபாதிகளில் செல்லாமல் மீட்கும் பொருட்டு, எல்லா உபாதிகளையும் ஆத்மா அல்ல என்று நன்றாக விலக்கி, கூறிய பிரம்மத்தினிடம் மனம் ஒடுங்குவதே அழியாத இன்பம் தரும்.

**422. பாகனே விரக்தன் தானே பரமோட்ச இச்சை யாலே**
**வாகியஆந் தரத்தி னாலே வருவதாம் பற்று இரண்டும்**
**ஏகமாய் விடுவ தாலே இயம்பிய விரக்த னுக்கே**
**வாகிய ஆந் தரம் இரண்டாய் வகுத்தநல் துறவு கூடும்.**

பக்குவம் அடைந்தவனே, வைராக்கியம் உடையவன் மேலான மோட்சம் அடைய வேண்டும் என்ற ஆவலினால் எனது என புறத்திலும் யான் நான் என அகத்திலும் உள்ள பொருள்களால் எற்படும் நான் எனது என்ற இரண்டு பற்றுகளையும் முற்றிலும் விட்டு விடுவான். ஆதலால் கூறிய வைராக்கியம் உடையவனுக்கே புறத்துறவு, அகத்துறவு என இரண்டு விதமாய் பிரித்துக் கூறிய நன்மைதரும் துறவும் கை கூடும்.

**423. பரவிய புலன்க ளோடே பற்றுதல் வெளிப்பற்று ஆகும்**
**உரஅகங் காரம் ஆதி யோடுபற் றுஉட்பற்று ஆகும்**

ஆனந்த வடிவமான பிரம்மம் நான் என்று சஞ்சலம் இல்லாத அப்பியாசத்தால் தனது உண்மை வடிவமான பிரம்மமேயாய் நிற்பாயாக.

**451. அரியனே சவதே கத்தில் அபிமானம் உள்ள மட்டும்**
**புருடன்எவ் விதத்தி னாலும் புனிதனே ஆகான் மற்றும்**
**சருவதா சனனம் துஞ்சல் சஞ்சலம் ஆதி வியாதி**
**நரகமே முதலாம் துன்பம் நண்ணுவன் நாநா வாக.**

அரிய சீடனே, பிணம் போன்ற சரீரத்தில் நான் என்ற எண்ணம் இருக்கும் வரையில் ஒருவன் எந்த விதத்தினாலும் தூய்மை உடையவன் ஆகமாட்டான். மேலும் எப்போதும் பிறப்பு, இறப்பு, சஞ்சலம், மனக்கவலை, உடல் நோய், நரகம் முதலான துன்பங்களை பலவிதமாக அவன் அடைவான்.

**452. நிருமலச் சிவமாய்த் தூய்தாய் நித்தநிச் சலமாய் நின்ற**
**பிரமமாம் தன்ஆன் மாவைப் பிரிவற உணர்ந்த போதே**
**புருடன்நல் சுத்தன் ஆகிப் புகல்துயர் யாவும் விட்டுப்**
**பிரமமே ஆவன் இவ்வா பேசிடும் சுருதி எல்லாம்.**

மலமற்றதும், மங்கள வடிவமானதும், தூயதானதும், நித்த மானதும், அசைவற்றது மான பிரம்மமே ஆன தனது ஆத்மாவைப் பிரிவு இல்லாமல் அறிந்தபோதே, சீவன் மிகவும் தூயவனாகி, கூறும் துன்பங்கள் எல்லாம் விட்டு நீங்கி பிரம்மமே ஆவான். இவ்விதம் வேதங்கள் கூறும்.

**453. கருதிய தன் ஆன் மாவில் கற்பித மான மித்தைப்**
**பொருளினை எல்லாம் தள்ளும் போது நிட்கிரிய மாகிச்**
**சருவபூ ரணமாய் ஒன்றாய்ச் சச்சிதா னந்த மான**
**பரமமாம் பிரமம் நாமே பரமார்த்தம் ஈதே மைந்தா.**

கூறிய தனது ஆத்மாவினிடத்தில் கற்பனை செய்யப்பட்ட பொய்யானப் பொருள்களை எல்லாம் விலக்கிய போது, எவ்விதகிரியையும் அற்றதாய் உள்ள, எங்கும் நிறைந்ததுமான, ஒன்றே ஆகிய சத்து ஆனந்தமான மேலான பிரம்மம் நாம் என அனுபவம் ஏற்படும். இதுவே உண்மை ஆகும்.

**454. தன்னுடை மனவி ருத்தி தன்னுடைச் சொரூப மாக**
**பன்னிய நிருவி கற்பப் பரமமாம் பூர ணத்தில்**
**மன்னியே சமாதி பெற்றால் மற்றொரு விகற்ப மும்தான்**
**தன்எதிர் காணாது அத்தால் தத்வமாய் விகற்பம் இல்லை.**

தனது உண்மை வடிவமாக கூறிய நிர்விகல்பமான (வேறு பாடற்று ஒன்றே யான) பிரம்மத்தில் சமாதி பெற்று ஒடுங்கி விட்டால் பிறகு எந்த விகல்பமும் தன்னிடத்தில் தோன்றாது. ஆகையால் உண்மையாய் விகல்பம் எதுவும் இல்லை.

(விகல்பம் என்பது பொருள் உண்மையில் இல்லாமல் சொல் மாத்திரம் அனுசரித்து உண்டாகும் மனோவிருத்தி).



# பொதுவியல்

**455. சோகமாம் ஞாலம் என்னும் சொல்லிய விகற்பம் எல்லாம்**
**மோகமார் அசத்தே ஆகும் மொழியும்ஓர் விகாரம் இன்றி**
**ஆகுமோர் வடிவும் இன்றி அகிலமாம் விசேடம் இன்றி**
**ஏகமாம் வத்துவி ன்கண் ஏதுதான் பேதம் சொல்வாய்.**

சோகத்தைத் தரும் உலகம் என்ற முன்பு சொன்ன வேறான பொருளாய் தோன்றுவது எல்லாம் புத்தி மயக்கத்தால் பொருந்திய பொய்யே ஆகும். கூறும் எந்த விகாரமற்றதும், ஒரு வடிவம் ஆகாததும் இன்றி, எவ்வித விசேஷமும் இல்லாமலும் ஒன்றேயான ஆத்மாவாகியப் பொருளில் பேதம் எப்படிவரும்? நீயே சொல்.

**456. ஞாதிரு ஞான ஞேய ஞாலமாய் நவிலு கின்ற**
**யாதுஒரு பொருளும் இன்றி எவ்விகா ரமுமே இன்றி**
**ஓதுமோர் வடிவும் இன்றி ஓர்விசே டமுமே இன்றி**
**மீதியாம் வத்து வின்கண் மேவிய பேதம் ஏதாம்.**

அறிபவன், அறிவு, அறியப்படும் உலகம் முதலாகக் கூறப்படும் எந்த ஒரு பொருளும் இல்லாமல், எந்த விகாரமும் (மாறுபாடும்) இல்லாமல், எஞ்சிநிற்கும் பிரம்மத்தில் எந்த பேதம் உண்டு? ஒன்றுமில்லை.

**457. அற்பமும் விகாரம் இன்றி அகிலமாம் வடிவும் இன்றிச்**
**செப்பிய விசேடம் இன்றிச் சொய்கையும் யாதும் இன்றி**
**அற்பமில் கற்ப காலத்து ஆழிபோல் நிறைந்து நின்ற**
**ஒப்பிலாப் பூர ணத்தில் ஒன்றிய பேதம் ஏதாம்.**

சிறிதும் விகாரம் இல்லாமலும், எந்த ஒரு உருவமும் இல்லாமலும், சொல்லிய எந்த விசேடமும் இல்லாமலும், எவ்வித செயலும் இல்லாமலும், பெரிய பிரளய காலத்து சமுத்திரம் போல் எங்கும் நிறைந்து நின்ற ஒப்பற்ற பிரம்மத்தில் பொருந்திய பேதம் ஒன்றுமில்லை.

**458. பரவிய தேசு தன்னில் பரம்பிய இருளே போல**
**பிரமையின் ஏது வாகப் பேசிய தமசு யாதில்**
**விரிவற லயிக்கும் அந்த விமலமாம் வத்து ஆன**
**ஒருமையாம் பிரமத் தின்கண் ஒன்றிய பேதம் ஏதாம்.**

மிகுந்த ஒளியில் அழிந்து போகும் இருள்போல, மயக்கத்திற்குக் காரணமாகிய அஞ்ஞானம், எந்த பிரம்மத்தில் அடியோடு அழியுமோ, அந்த மாசற்ற பொருளான ஒன்றே ஆகிய பிரம்மத்தினிடம் எந்த பேதம் பொருந்தும்? ஒன்றும் பொருந்தாது.

**459. ஒருவடி வாக எங்கும் ஓங்கிய வத்து வின்கண்**
**மருவிய பேதம் என்னும் மாற்றமும் உண்டோ சொல்லாய்**
**ஒருசுக வடிவாய்த் தானே ஒன்றிய சுழுத்தி யின்கண்**
**கருதிய பேதம் ஏதும் கண்டவர் ஒருவர் உண்டோ.**

எங்கும் ஒரே வடிவமாக விளங்கும் பிரம்மத்தில் பொருந்திய பேதம் என்ற சொல்லும் உண்டோ, நீசொல். ஒப்பற்ற சுக வடிவமாய் தானே மாத்திரமாய் ஒன்றிய உறக்க நிலையில் கூறிய பேதம் எதாவது ஒருவர் கண்டது உண்டோ?

**460. நிருவிகற் பகமே ஆக நிகழ்ந்துள பிரமம் தன்னை**
**ஒருமையாய் அறிந்த போதுஅங்கு ஒன்றிய சகமே இல்லை**
**இருளுறும் இரச்சுக் கண்டால் என்றுமே சர்ப்பம் உண்டோ**
**மருபுவி அதனைக் கண்டால் மற்றதில் சலமும் உண்டோ.**

விகற்பமற்றதாக விளங்கும் பிரம்மத்தை ஒன்றே என்று அறிந்த போது அங்கே பொருந்தி தோன்றிய உலகமும் இல்லாது போகும். மந்தமான இருளில் உள்ள கயிற்றை நன்கு அறிந்து விட்டால் பாம்பு எப்போதும் இருக்குமோ? பாலைவனத்தை நன்கு அறிந்து விட்டால் அதில் நீர் இருக்குமோ? இருக்காது. (உலகம் இருந்தது போகவில்லை. எப்போதும் இல்லவே இல்லை.)

**461. இகழும்இத் துவிதம் யாவும் என்றுமே மித்தை ஆகும்**
**புகழும்அத் துவிதம் என்றும் போற்றிய பரமார்த் தம்தான்**
**மகனேஇப் படியே நேராய் மறைமுடி உரைக்கக் கண்டோம்**
**சுகசுழுத் தியிலும் நித்தம் சுத்தஅத் துவிதம் கண்டோம்.**

**437. ஏதமாம் தேகம் பிராணன் இந்தியம் மனது அகந்தை**
**ஆதி அஞ் ஞானத் தாலே ஆக்கிய உபாதிக் கூட்டம்**
**ஏதுமில் அகண்ட போத இன்பமாம் தன்ஆன் மாவை**
**ஓதிய மகாகா சம்போல் ஒன்றுஎன உணர வேண்டும்.**

துன்பம் தரும் சரீரம், பிராணன், இந்தியம், மனது, அகங்காரம் முதலான எல்லாம் அஞ்ஞானத்தால் தோன்றிய உபாதிகளின் கூட்டமாகும். துன்பம் இல்லாத எல்லையற்ற அறிவாகவும் ஆனந்தமாகவும் விளங்கும் தனது ஆத்மாவை, வியாபகமான ஆகாசத்தைப் போல ஒன்றேஎன அறிய வேண்டும்.

**438. ஓதிய கடம்கு சூலம் ஊசியே முதலாய் வந்த**
**பேதமாம் உபாதி போனால் பெரியஆ காசம் ஒன்றே**
**ஈதுபோல் அகங்கா ராதி ஈனமாம் உபாதி போனால்**
**போதஆ னந்த சுத்த பூரண ஆன்மா ஒன்றே.**

கூறும் குடம் குதிர் ஊசி முதலான உபாதிகளினால் ஆகாசத்தில் வேறுபாடு வந்ததாம். உபாதிகள் நீங்கினால் மகா ஆகாசம் ஒன்றாகவே இருக்கும். இதைப் போல இழிவான அகங்காரம் முதலிய உபாதிகள் நீங்கினால், அறிவாய் ஆனந்தமாய் தூயதாய் பூரணமாய் விளங்கும் ஆத்மா ஒன்றே ஆகும்.

**439. யாதினால் அயனே ஆதி ஈனமாம் தம்பம் ஈறாய்**
**ஓதிய உபாதி எல்லாம் உண்மைஇல் லாதது ஆகும்**
**ஆதலால் ஏக ரூபம் ஆகிய தன்ஆன் மாவைப்**
**பேதமில் புரண மாகப் பேணியே பார்க்க வேண்டும்.**

நான்முகன் முதல் இழிந்த தம்பம் என்ற சிறுப் பூச்சி வரையில் கூறப்படும் உபாதிகள் எல்லாம் எக்காரணத்தாலும் பொய்யே ஆகும். ஆதலால் ஒரே வடிவமான தனது ஆத்மா, பேதம் இல்லாமல் பூரணமாக விளங்குவதை கவனமாகப் பார்த்து அறிய வேண்டும்.

**440. எதில்எது மயக்கத் தாலே இங்குக்கற் பிரம்ஆ யிற்றோ**
**அதுஅது ஆகும் அன்றி அறிந்திடில் அதில்வே றாகாது**
**இதமுறு ஞானத் தாலே திகர்மயல் நசிக்கும் போதுஇங்கு**
**எதிரிலே கண்ட சர்ப்பம் இரச்சுவே அன்றி வேறோ.**

இங்கே புத்தியின் மயக்கத்தால் எதனிடத்தில் எது கற்பனை செய்யப் பட்டதோ, ஆராய்ந்து அறிந்தால் அது அதுவே ஆகும் அன்றி அதில் இருந்து வேறு ஆவது இல்லை. நன்மை தரும் அறிவினால் பொருளை மறைக்கும் மயக்கம் நாசமானால், இங்கே எதிரில் கண்ட பாம்பு கயிறே ஆகுவது அல்லாமல் வேறு பொருள் ஆகுமோ? ஆகாது.

**441. ஈதுபோல் ஆன்மா வின்கண் இலங்கிய யாவும் ஆன்மா**
**ஆதலால் ஆன்மாத் தானே அயன்அரி அரனும் ஆகும்**
**ஓதும்இந் திரனும் ஆகும் உயர்சுரர் நரரும் ஆகும்**
**ஏதுமே ஆன்மா அன்றி எவளவும் இதில்வேறு இல்லை.**

இதைப் போல, ஆத்மாவினிடத்தில் விளங்கும் எல்லாம் ஆத்மாவே ஆகும். ஆதலால் ஆத்மாவே நான்முகனும், திருமாலும், சிவனும் ஆகும். கூறப்படும் இந்திரனும் ஆகும். மேலான தேவர்களும் மனிதர்களும் ஆகும். எல்லாம் ஆத்மாவே ஆவதின்றி இவற்றில் சிறிது அளவும் பொருள் வேறு இல்லை.

**442. பூரண ஆன்மா உள்ளில் பூரணஆன் மாப்பு றத்தில்**
**பூரண ஆன்மா மேற்கில் பூரணஆன் மாக்கி ழக்கில்**
**பூரண ஆன்மாத் தெற்கில் பூரணஆன் மாவ டக்கில்**
**பூரண ஆன்மா மேலில் பூரணஆன் மாக் கீழில்.**

உள்ளேயும் ஆத்மா நிறைந்து உள்ளது. வெளியேயும் ஆத்மா நிறைந்து உள்ளது. மேற்குத் திசையிலும் ஆத்மா நிறைந்து உள்ளது. கிழக்குத் திசையிலும் ஆத்மா நிறைந்து உள்ளது. தெற்கிலும் ஆத்மா நிறைந்து உள்ளது. வடக்கிலும் ஆத்மா நிறைந்து உள்ளது. மேலேயும் ஆத்மா நிறைந்து உள்ளது. கீழேயும் ஆத்மா நிறைந்து உள்ளது.

**443. பிரமமாம் நானே உள்ளில் பிரமமாம் நான்பு றத்தில்**
**பிரமமாம் நானே மேற்கில் பிரமமாம் நான்கி ழக்கில்**
**பிரமமாம் நானே தெற்கில் பிரமமாம் நான்வ டக்கில்**
**பிரமமாம் நான்மேல் கீழில் பிரமமாம் நானே எல்லாம்.**

உள்ளேயும், வெளியேயும், மேற்கிலும், கிழக்கிலும், தெற்கிலும் வடக்கிலும், மேலேயும், கீழேயும் எல்லா இடங்களிலும் நானே பிரம்மமாய் இருக்கிறேன்.

**444. அலைநுரை குமிழி மற்றும் ஆகிய சுழலே ஆதிப்**
**பலபல உருவம் எல்லாம் பார்க்கில் ஓர் சலமே போல**
**அலைவுறு தேகம் ஆதி அகங்கரம் ஈறாம் யாவும்**
**நிலையுறு சித்தே ஆகும் நிமலமாம் சித்துஅது ஒன்றே.**

அலை, நுரை, நீர்குமிழி மற்றும் உள்ள சுழல் முதலிய பல விதமான வடிவங்கள் யாவும் ஆராய்ந்து பார்த்தால் ஒரே நீராக இருப்பது ஆகும். அதுபோல, வருத்தம் தரும் சரீரம் முதல் அகங்காரம் வரையுள்ள எல்லாம் நிலையான அறிவே வடிவமான பிரம்மமே ஆகும். மாசில்லாத அறிவுமயமான அந்த பிரம்மம் ஒன்றே ஆகும்.

**445. அகிலமாம் மனது வாக்கால் அறியும்இச் சகம்அ னைத்தும்**
**பகுதியின் மேலாய் நின்ற பரமமாம் சத்தே ஆகும்**
**பகரும்அச் சத்தை அன்றிப் பார்க்கில்வே றாக இல்லைத்**
**திகழ்கடம் கலசம் ஆதி தெரிந்திடின் மண்ணின் வேறோ.**

மனதாலும் சொல்லாலும் அறியப்படும் எல்லாமும், இந்த உலகம் அனைத்தும் மாயைக்கு அப்பாற்பட்டு நிற்கின்ற சத்தாகிய பிரம்மமே ஆகும். கூறும் சத்தாகிய பிரம்மத்தைத் தவிர ஆராய்ந்து பார்த்தால் வேறாக ஒன்றும் இல்லை. குடம், கலசம் முதலியனவாக விளங்குபவற்றை ஆராய்ந்து பார்த்தால் அவை மண்ணைத் தவிர வேறாக உள்ளதோ? இல்லை.

**446. பகுதியரம் அதுவி னாலே பலவித மயக்கப் பட்டோன்**
**அகுதுநீ நான்இ துஎன்றே அறைவதால் ஆவது என்னை**
**மிகவுமே சுருதி தானே மித்தியா அத்தி யாசம்**
**இகழவே துவிதம் இல்லை என்னவே இசைக்கும் அன்றோ.**

மாயையால் பலவிதமாக மயக்கம் அடைந்தவன் அது, நீ, நான், இது என்று கூறுவான். அதனால் பயன் யாது? (ஒன்றும் இல்லை). வேதம் பொய்யான அத்தியாசத்தை இகழ்ந்து நீக்கவே மிகுதியாக பிரம்மத்தைத் தவிர இரண்டாவது பொருள் இல்லை என்று கூறும்.

**447. வான்நிகர் மலம்இ லாதய் வருவிகற் பமும்இ லாதாய்**
**ஊனமாம் அளவுஇ யங்கல் ஓர்விகா ரமுமஇ லாதாய்**

**ஆனஉள் வெளிஇ லாதாய் அபின்னஅத் துவிதம் ஆன**
**ஈனமில் பிரம மேநாம் இனிஎதை உணர வேண்டும்.**

ஆகாசத்தைப் போல மாசற்றதாயும், பலவாறான வேறுபாடுகள் இல்லாததாயும், இழிவான அளவும், செயலும், மாறுபாடும் இல்லாததாய், உள்ளென்றும், வெளியென்றும் இல்லாததாய் ஆன, பேதமற்றதும், இரண்டற்றதும் ஆகிய குறைவற்ற பிரம்மமே நாம். இதை அறிந்தபின் இனிநாம் எதை உணர வேண்டும் ஒன்றுமில்லை.

**448. விரிவதாய் இங்கு உரைக்க வேண்டியது ஒன்றும் இல்லை**
**பிரமமே சீவர் யாவும் பிரமமே பரவும் ஈசன்**
**பிரமமே அணுஈ றாகப் பிறங்கிய சகம்அ னைத்தும்**
**பிரமமே ஏகம் என்று பேசலால் சுருதி எல்லாம்.**

வேதம் எல்லாம் பிரம்மம் ஒன்றே என்று கூறுவதால், இங்கு விரிவாகச் சொல்ல வேண்டியது ஒன்றுமே இல்லை. எல்லாச் சீவர்களும் பிரம்மமே. புகழும் ஈசுவரனும் பிரம்மமே. அணுவரை விளங்கும் அனைத்தும் பிரம்மமே ஆகும்.

**449. பிரமமே நாம்என் றுஇந்தப் பெரிதான ஞானம் பெற்றோர்**
**பரவிய பாகி யத்தைப் பற்றாது நன்றாய் விட்டே**
**ஒருமைஆ னந்த சித்தாய் உண்மையாய் உள்ள அந்தப்**
**பிரமமே ஆகி என்றும் பிறங்குவர் உறுதி ஈதே.**

நான் பிரம்மமே என்று இந்த மேலான ஆத்ம ஞானம் பெற்றவர்கள், பரந்து இருக்கும் வெளிப் பொருள்களில் ஆசையின்றி அவற்றை நன்கு விட்டு விடுவார்கள். ஒன்றாகவும் சத்து சித்து ஆனந்த மாகவும் உள்ள அந்தப் பிரம்மமேயாய் எப்போதும் விளங்குவார்கள். இது உறுதி ஆகும்.

**450. மலமய தூல மீதும் மற்றுமே வாயு வைப் போல**
**அலைவுறு சூக்க மீதும் அகம்அபி மானம் விட்டுப்**
**பலமறை புகழ்ஆ னந்தப் படிவமாம் பரம்நா ன்என்றே**
**சலனமில் பழக்கத் தாலே கற்பர வடிவாய் நிற்பாய்.**

மலம் நிறைந்த தூல சரீரத்திலும், மேலும் வாயுவைப் போல அலைகின்ற சூட்சும சரீரத்திலும், நான்என்ற அபிமானத்தை விட்டுவிடு. பல வேதங்களும் புகழ்ந்து கூறும்

மைந்தனே, இரண்டாவதாகத் தோன்றும் இழிவானது எல்லாம் எப்போதும் பொய்யே ஆகும். புகழ்ந்து போற்றப்படும் அத்து விதமாய் (இரண்டற்று) விளங்குவதுதான் எப்போதும் சத்தியம் ஆகும். இவ்வாறு நேராகவே உபநிடதங்கள் சொல்கிறது. சுகமான உறக்கத்திலும் நாள்தோறும் சுத்தமான அத்துவிதம் (இரண்டற்ற நிலை) அனுபவித்து அறியப்படுகிறது.

**462. கற்பித வத்து விற்குக் கருதிய அதிட்டா னத்தோடு**
**ஒப்பிய அபதேம் தன்னை உள்ளவாறு அறிஞர் எல்லாம்**
**கற்பித இரச்சு சர்ப்பம் கானல்நீர் முதலில் கண்டார்**
**இப்படி இருக்கப் பேதம் இசைந்திடல் பிராந்தி அன்றோ.**

அறிஞர்கள் யாவரும், கயிற்றில் பாம்பைக் கற்பிக்கும் இடத்திலும், கானலில் நீரைக் கற்பிக்கும் இடத்திலும், இதுமுதலிய பிறஇடங்களிலும், கற்பனை செய்யப் பட்ட பொருளுக்கு இடமாகக் கருதும் அதற்கு ஆதாரமானப் பொருளோடு பொருந்தி உள்ள பேதம் இன்மையை உள்ளபடி அறிந்தார்கள். இவ்வாறு இருக்க பேதம் சொல்வது மயக்கத்தினால் ஆகும்.

**463. சித்தமே மூல மாகச் செறிந்துஉள விகற்பம் எல்லாம்**
**சித்தம்இல் லாத போது சிறிதுமே விகற்பம் இல்லைப்**
**புத்திர ஆதலாலே புகன்றசித் தமும்ந சிக்க**
**நித்தமும் பூர ணத்தில் நிலைமையாய்ச் சமாதி செய்வாய்.**

மனதின் மூலமாக மிகுந்து தோன்றுகின்ற விகற்பம் (வேறான உலகத் தோற்றம்) எல்லாம், மனம் இல்லாவிட்டால் சிறிதும் விகல்பம் இல்லை. (இரண்டாவது தோன்று வது இல்லை). ஆகையால் கூறிய மனம் நாசமாக எப்பொழுதும் பிரம்மத்தில் வழுவாமல் மனதை நிலை நிறுத்துவாய்.

**464. சந்ததம் போதம் ஆகிச் சார்ந்தஆ னந்த மாகித்**
**தொந்தமாம் உவமை இன்றித் தொடரும்ஓர் அளவு ம்இன்றி**
**பந்தமில் புரண மான பரமத்தை வித்து வான்தான்**
**சிந்தையில் சமாதி யாலே செவ்விதாய் அனுப விப்பன்.**

எப்பொழுதும அறிவு வடிவமாகவும், ஆனந்த வடிவமாகவும் பொருந்தி, வேறு உபமானம் இல்லாமலும் எல்லை இல்லாமலும், பந்தம் இல்லாத எங்கும் நிறைந்த பிரம்மம் விளங்கும். அப்பிரம்மத்தை ஞானி மனம் பிரம்மத்தில் நிலை பெற்ற சமாதி நிலையில் நன்றாய் அனுபவிப்பான்.

**465. ஈனமாம் செய்கை இன்றி எய்திய முடிவும் இன்றி**
**ஊனமாம் பங்கம் இன்றி ஓர்விகற் பமுமே இன்றி**
**வான்எனப் புரண மான வத்துவை வித்து வான்தான்**
**ஞானநல் சமாதி யாலே நான்என அனுப விப்பன்.**

இழிவான செயலற்றதாய், அழிவில்லாததாய், குற்றமான விகாரமற்றதாய், எவ்வித வேறுபாடுமற்றதாய், ஆகாசம் போல எங்கும் நிறைந்த பிரம்மத்தை, ஞானி நல்ல சமாதியில் உண்டான அறிவால் நானே என்று அனுபவிப்பான்.

**466. பகுதியின் விகாரம் இன்றிப் பாவன?அதீதம் ஆகித்**
**திகழும்ஓர் உவமை இன்றித் திரசம ரசமே ஆகிப்**
**புகழ்பரி புரண மான பொருளினை வித்துவான் தான்**
**நிகழ்வுறு சமாதி யாலே நித்தமும் அனுப விப்பன்.**

மாயையின் மாறுதல்கள் இல்லாததாய், கற்பனைக்கு எட்டாததாய், பொருத்தமான ஒரு உபமானம் அற்றதாய், மாறாமல் ஒரே நிலையில் இருப்பதாய், புகழும் பரிபூரணமான பிரம்மத்தை ஞானி இடைவிடாது நிகழும் சமாதி நிலையில் நாள்தோறும் அனுபவிப்பான்.

**467. அகிலமாம் பிரமா ணத்தால் அணுகஒண் ணாதது ஆகி**
**நிகழ்மறைப் பிரமா ணத்தால் நித்தமும் சித்தி பெற்றே**
**அகம்என விளங்கு கின்ற அகண்டத்தை வித்து, வான்தான்**
**திகழ்வுறு சமாதி யாலே திடமாக அனுப விப்பன்.**

எல்லா வகையான பிரமாணங்களாலும் நெருங்கத் தகாதது ஆகி, ஆகமப் பிரமாணத்தால் சித்திப்பதாகி, எப்பொழுதும் நான் என்று பிரத்தியட்சமாய் விளங்குகின்ற அகண்டமான பிரம்மத்தை ஞானி சிறந்த சமாதி நிலையில் திடமாக அனுபவிப்பான்.

**468. நிலைஇலாச் சனனம் ஆதி நிகிலமாம் விகாரம் இன்றி**
**அலை இலா வாரி போல அசைவற நிறைந்து நின்ற**
**பவஉரு நாமம் இல்லாப் பரமத்தை வித்துவான் தான்**
**சலனமில் சமாதி யாலே சந்ததம் அனுப விப்பன்.**

நிலையில்லாத பிறத்தல், வளர்தல் முதலிய எல்லா விகாரங்களும் (மாறுபாடும்) இல்லாமல், அலையற்ற கடல் போல அசைவற்று நிறைந்து விளங்கும், அழியும் உருவம் பெயர் இல்லாதப் பிரம்மத்தை ஞானி சஞ்சலம் இல்லாத சமாதி நிலையில் எப்பொழுதும் அனுபவிப்பான்.

**469. உதயம்அத் தமனம் இன்றி ஓர்குண விகாரம் இன்றிச்**
**சததமும் உண்மை ஆகிச் சாந்தமாய் ஏகம் ஆகி**
**மிதம்இலாப் புரண மான மேனியை வித்து வான்தான்**
**திதமுறு சமாதி யாலே திகழவே அனுப விப்பன்.**

தோன்றுதலும் மறைதலும் இல்லாமலும், எந்தவித குணமும் மாறுபாடும் இல்லாமலும், என்றும் இருப்பதாய், சாந்தமாய், ஒன்றேயாய், அளவற்றதாய் உள்ள பிரம்மத்தை ஞானி நிலையான சமாதியினால் நன்கு விளங்கும்படி அனுபவிப்பான்.

**470. வளமுறு சமாதி பெற்று வழுவுஇலா மனத்தன் ஆகி**
**அளவிலா மகிமை உள்ள அகண்டமே அனுப வித்துத்**
**தளர்விலா முயற்சி யாலேய சம்சாரப் பந்தம் தள்ளி**
**எளிதிலா ஆண்மை தன்னை இன்றுநீ சபலம் செய்வாய்.**

உறுதியான சமாதியை அடைந்து, தன் வடிவத்தில் இருந்து கெடாமல் நிலை பெற்ற மனம் உடையவனாய், அளவற்ற பெருமை உடைய பிரம்மத்தை அனுபவித்து, தளர்வில்லாத முயற்சியால் பிறவிக்கு ஏதுவான பந்தத்தை நீக்கி, எளிதாக அடைய இயலாத ஆண்மகனாகப் பிறந்ததை இப்போது நீ பயன் உள்ளதாகச் செய்வாய்.

**471. சருவமாம் உபாதி இன்றிச் சச்சிதா னந்தம் ஆகி**
**ஒருமையாய் உள்ளம் தன்னில் உன்வடி வாக நின்ற**
**பொருவிலாப் பிரமம் தன்னைப் பொருந்திநீ பாவிப் பாயேல்**
**மருவிய சம்சா ரத்தின் மார்க்கமே மற்றும் செல்லாய்.**

உபாதிகள் எல்லாம் இல்லாமல், சத்தாய் (எப்பொழுதும் உள்ளதாய்), சித்தாய் (அறிவு வடிவமாம்) ஆனந்தமாய் (துக்கமே கலக்காத ஆனந்தமாய்), ஒன்றேயாய் மனதில் உன் வடிவமாக விளங்குகின்ற ஒப்பற்ற பிரம்மத்திடம் இடைவிடாது நிலைபெற்று, அது நீயாக பாவனை செய்தால், மறுபடியும் இன்னல்கள் பொருந்திய பிறவியின் வழியில் நீ போக மாட்டாய்.

**472.** **விரிசிதா பாச னாலே விருத்தியின் மார்க்க மாகப்**
**புருடனின் சாயை போலப் பொய்அு தாய்க்காணப் பட்ட**
**உருவினைச் சவமே போல உணர்வினால் தூரத் தள்ளிப்**
**பெருமைசேர் மனத்தன் ஆனோன் பின்பு இதைச் சிந்தை வெய்யான்.**

மனதின் விருத்தி வழியாக விரிந்த சிதாபாசனால் பெருமை உடைய ஆத்மானந்தத்தை இடைவிடாது அனுபவிக்கும் மனத்தை உடையவன் ஆனோன், மனிதனுடைய நிழலைப் போல பொய்யாகக் காணப்படும் சரீரத்தை பிணத்தைப் போல தூரத்தில் விலக்கி விட்டு, மறுபடியும் இந்த சரீரத்தில் அபிமானம் கொள்ள மாட்டான்.

**473.** **ஆதலால் அமல போத ஆனந்தமாம் உன்னை நீயே**
**சாதுவே பற்றி இந்தச் சடமல உபாதி தன்னைத்**
**தீதறத் தூரத் தள்ளித் திரும்பவும் நினைத்தி டாதே**
**கோதமாம் வாந்தி அன்மை குறிப்பதும் அகூயை அன்றோ.**

சாதுவே, ஆதலால் தூய அறிவும் ஆனந்தமும் ஆகிய உன்னை நீயே உணர்ந்து கொண்டு, தீதான, அறிவற்ற மலம் நிறைந்த இந்த சரீரமாகிய உபாதியை மிகவும் வெகு தூரத்தில் விலக்கி வைத்து, மீண்டும் நினைக்கவே கூடாது. வாந்தி செய்த வெறுக்கத்தக்க உணவை எண்ணுவதே அருவருப்பை உண்டாக்கும் அல்லவா?

**474.** **சச்சிதா னந்த மான சாந்தமாம் பிரமத் தீயில்**
**இச்சட உபாதிப் பஞ்சி யாவையும் எரித்துப் பின்புஇவ்**
**உச்சமாய் போதஆ னந்த உண்மையாய்த் தூய்தாய் நின்ற**
**துச்சமில் பிரம மாகத் துலங்குவன் ஞானி என்றும்.**

சத்து சித்து ஆனந்தமான சாந்தமான பிரம்மமாகிய அக்கினியில், இந்த அறிவற்ற உபாதி ஆகிய பஞ்சினை எல்லாம் எரித்து விட்டு, உயர்ந்ததாய் சத்துசித்து ஆனந்தமாய் சுத்தமாய் விளங்குகின்ற, மேலான பிரம்மமாகவே ஞானி எப்போதும் விளங்குவான்.

**475. பலபிரா ரத்த கன்ம பாசத்தி னாலே கட்டுண்டு**
**அலையினும் இருக்கி னும்தன் ஆக்கையைப் பொருள துஆக**
**நிலைபெறு ஞானி பேணான் நிகழ்சுகப் பிரமத் தின்கண்**
**அலைமன விருத்தி நன்றாய் அடங்கியே இருப்ப தாலே.**

ஆனந்தமாக விளங்குகின்ற பிரம்மத்தில் நிலைபெற்ற ஞானியின் மனோ விருத்தி ஒடுங்கி இருக்கும். ஆதலால், பயன்தரும் பிராரத்த கர்மா ஆகிய கயிற்றினால் கட்டப்பட்டு உள்ள தனது சரீரம் அழிந்தாலும் இருந்தாலும், அதனை ஒரு பொருளாகக் கருதமாட்டான்.

**476. அகண்டஆ னந்தஆன் மாவை அநிசமும் நானே என்று**
**நிகழ்ந்திட அறிந்த ஞானி நித்தமும் எதைஇச் சித்துச்**
**சகம்தனில் என்நி மித்தம் சடமான தேகம் தன்னை**
**அகம்தனில் அனுச ரித்துஇங்கு அனுதினம் காப்பன் சொல்லாய்.**

அளவுகடந்த ஆனந்த வடிவமான ஆத்மாவே தான் என்று எப்பொழுதும் விளக்கமாக அறிந்து கொண்ட ஞானி, எதை விரும்பி, உலகில் எதன் பொருட்டு சடமான சரீரத்தை மனதில் பற்றுவைத்து இங்கே நாள்தோறும் பாதுகாப்பான், நீ சொல்வாய்.

**477. தத்துவ ஞானி ஆகித் தகைமைஉள் யோகி ஆன**
**சுத்தமாம் சீவன் முத்தன் தொடர்பயன் தான்எ தென்னில்**
**புத்திர புந்தி யாலே பூரண ஆனந் தத்தை**
**நித்தமும் உட்புறத்து நிகழவே அனுப விப்பன்.**

புத்திரனே, ஆத்ம ஞானம் அடைந்தவன் ஆகி, ஆத்மாவிலேயே மனம் நிலை பெற்று யோகி ஆன தூய சீவன் முத்தன், தொடர்ந்து அனுபவிக்கும் பயன் எது என்றால், எப்பொழுதும் முழுமையான ஆனந்தத்தை மனத்தினால், சமாதிநிலையில் உள்ளேயும், சமாதி நிலை நீங்கிய போது புறத்திலும் நன்றாக அனுபவிப்பான்.

**478. மிகுந்துஉள விராகத் திற்கு மேவிய பயனாம் போதம்**
**பகர்ந்த அப் போதத் திற்குப் பயன்உப ரதியே ஆகும்**
**சுகம்தனின் அனுப வத்தால் தொடர்வுஉறு சாந்தி தானே**
**பகர்ந்தஅவ் உபர திக்குப் பரமான பயனாம் மைந்தா.**

தீவிரமான வைராக்கியத்திற்கு ஆத்ம ஞானம் பொருந்திய பயன் ஆகும். கூறிய அந்த ஆத்ம ஞானத்திற்கு உபரதியே (விடயங்களில் இருந்து விலகுதலே) பயன் ஆகும். ஆத்மானந்த அனுபவத்தால் உண்டாகும் சாந்தி, கூறிய அந்த உபரதிக்கு மேலான பயன் ஆகும்.

**479. ஓதிய வகையாய் மேன்மேல் உறுபயன் உதிக்கும் ஆகில்**
**சாதுவே கீழ்க்கீ ழான சாதனம் சபலம் ஆகும்**
**ஓதிய பயன்மேன் மேலும் உதித்திடாது ஆகில் கீழ்க்கீழ்**
**நீதியாம் சாதனம் தான் நிட்பலம் ஆகும் அன்றே.**

சாதுவே, கூறிய முறையில் மேலும் மேலும் மிகுந்த பயன் தோன்றும் ஆனால் முந்திய வைராக்கியம் முதலான சாதனங்கள் பயன் உடையவகள் ஆகும். கூறிய பயன்கள் மேலும் மேலும் தோன்றாவிடில் முந்திய வைராக்கியம் முதலான சாதனங்கள் பயன் அற்றவையாகும்.

**480. மெத்தவும் நிவிர்த்தி என்ன மேலான திருப்தி என்ன**
**நித்தமும் தானே தோன்றும் நிகரில்ஆ னந்தம் என்ன**
**எத்திறத் துன்பம் நேரே எய்தினும் அபயம் என்ன**
**இத்தனை வகையும் வித்தை ஈன்றநல் பயனே ஆகும்.**

எல்லா செயல்களில் இருந்து விலகுதலும், மேலான திருப்தியும் எப்பொழுதும் உண்டாகும் ஒப்பற்ற ஆனந்தமும், எந்த விதமான துன்பம் ஏற்பட்டாலும் பயமற்று இருப்பதும், இத்தனை வகையான பயன்களும், ஆத்ம ஞானத்தால் தோன்றிய நல்ல பலன்கள் ஆகும்.

**481. விரிவதாய் அசுசி ஆன விவிதமாம் கன்மம் யாதைப்**
**புருடன்முன் பிராந்தி சேர்ந்த போதினில் பொருந்திச் செய்தான்**
**அருமையாம் விவேகம் தன்னை அன்னவன் அடைந்த பின்பும்**
**இருள்உறும் அக்கன் மத்தை எவ்விதம் செய்வன் சொல்லாய்.**

மிகவும் வெறுக்கத் தக்க பலவித கர்மங்களில் எதனை மயக்கமாக இருக்கும் சமயத்தில் ஒருவன் முன்பு உடன்பட்டு செய்தானோ, அரிய விவேகத்தை அவன் பெற்ற பின்பும், துன்பம்தரும் அக்கருமத்தை எவ்வாறு செய்வான்? நீயே சொல்.

**482. நிலைஇலா அசத்தி னின்றும் நிவிர்த்தியே வித்தையின் பேறு**
**அலைவுறும் பிரவிர்த்தி தானே அவித்தையின் பேறாம் இவ்வாறு**
**அலைவுசெய் கானல் நீரே ஆதியில் நிகழக் கண்டோம்**
**அலதுஎனில் வித்து வானுக்கு ஆனநேர் பயன்வேறு ஏதாம்.**

நிலை இல்லாத பொய்யான பொருளில் இருந்து விலகுவதே ஞானத்தின் பயன் ஆகும். இன்னல் தரும் பிரவிருத்தியே (அதில் ஈடுபடுதலே) அஞ்ஞானத்தின் பயன் ஆகும். இவ்வாறு மாறுபாடு இருப்பதை, கானல்நீர் கிளிஞ்சல் வெள்ளி முதலியவற்றில் அதைபொய் என்று அறிந்தவர் விலகுவதையும், அறியாதவர் அதில் ஈடுபடுவதையும் கண்டோம். அவ்விதம் இல்லை எனில், ஞானிக்கு உண்டாகும் கண்கூடான பயன் வேறு என்ன உண்டு?

**483. ஏதமாம் அஞ்ஞா னத்தால் எய்திய மனமு டிச்சு**
**மூதுணர் ஞான வாளால் முழுவதும் தீர்ந்த பின்னர்**
**யாதொரு விடய இச்சை இலாதநல் வித்த வானுக்கு**
**ஏதுதான் பிரவிர்த்திக்கு இங்ஙன் ஏதுவாம் இசைப்பாய் மைந்தா.**

மைந்தனே, துன்பம்தரும் அறியாமையால் அடைந்த அத்தியாசம், தானே பிரம்மம் என்ற பேரறிவாகிய ஞான வாளினால் அடியோடு நீங்கும். பின்னர் எந்த ஒரு விடயத்திலும் ஆசையற்ற சிறந்து ஞானிக்கு எந்த பொருள்தான் இங்கே பிரவிருத்திக்கு (ஈடுபாடு கொள்வதற்குக்) காரணமாகும் சொல்வாய்.

**484. வகுத்துஉள போக்கி யத்தின் வாதனை உண்டா காமை**
**மிகுத்துஉள விராகத் திற்கு மேவிய அவதி ஆகும்**
**பகுத்துஉள தேகம் ஆதி பற்றிய அகந்தை பின்பும்**
**அகத்தினுள் உண்டா காமை அவதியாம் போதத் திற்கே.**

பலவிதமான போகப் பொருள்களினால் வாசனை ஏற்படாமல் இருப்பதே மிகுந்த வைராக்கியத்தற்கு எல்லை ஆகும். சரீரம் முதலியவற்றில் நான் என்னும் அகங்காரம் மீண்டும் மனதில் தோன்றாமல் இருப்பதே ஆத்ம ஞானத்திற்கு எல்லை ஆகும்.

**485. சந்தத முயற்சி யாலே சச்சிதா னந்தம் ஆன**
**சுந்தரப் பிரமத் தின்கண் சூக்கமாய் வீனம் ஆன**

**சிந்தையின் விருத்தி மற்றும் சிறிதுமே உண்டா காமை**
**மைந்தனே அவதி ஆகும் மாசிலா உபர திக்கே.**

மைந்தனே, எப்பொழுதும் முயற்சி செய்து சத்தும் சித்தும் ஆனந்தமும் ஆன அழகிய பிரம்மத்திடம் சூட்சுமமாய் லயம் ஆன, மனதின் விருத்தி மேலும் சிறிதும் உண்டாகாமல் இருப்பதே, குற்றமற்ற உபரதிக்கு எல்லை ஆகும்.

**486. நித்தமும் பிரமஆ கார நிலைமையாய் நிற்ப தாலே**
**அத்திர வாகி யங்கள் அறிந்திடா மனத்தன் ஆகி**
**நித்திரை உற்றோன் போலும் நினைவுஇலாப் பாலன் போலும்**
**அத்திர விடய போகம் அநியரால் அறிந்தோன் ஆகி.**

**487. சொப்பனம் தன்னில் கண்ட சொரூபமில் சகத்தைப் போல்இக்**
**கற்பித சகத்தை ஓரோர் காலமே காண்போன் ஆகி**
**இப்படி உள்ள ஞானி யாவனோ அவனே தன்னியன்**
**அற்பமில் புண்ணியப்பேறு அடைந்தவன் அவனே பூச்சியன்.**

எப்பொழுதும் பிரம்ம வடிவமாகவே நிலைத்து இருப்பதனால், நிலையில்லாத வெளிப் பொருள்களை அறியாத மனதை உடையவனாய், உறங்குபவனைப் போலும், குழந்தையைப் போலும் நிலையற்ற விடய போகங்களை பிறரால் அறிந்து கொள்பவனாய் (தூக்கத்தில் தான் அறியாமலே பால் அருந்துவது), கனவில் கண்ட பொய்யான உலகத்தைப் போல, இந்த கற்பிதமான உலகத்தையும் சிலசமயங்களில் காண்போன் ஆகி, இவ்வாறு விளங்கும் ஞானி எவனோ அவனே பெரும்பேறு பெற்றவன். அவனே மிகுந்த புண்ணியங்களைச் செய்தவன். அவனே எல்லோராலும் பூசை செய்யத் தகுந்வன்.

(487,488 ஆகிய இரு பாடல்களுக்கும் சேர்த்தே பொருள் சொல்லப்பட்டுள்ளது)



# சீவன் முத்த வியல்

**488. யாதொரு சந்தி யாசி ஏகமாம் பிரமத் தின்கண்**
**தீதற லீன மான சித்தனய்ச் செய்கை இன்றி**
**ஏதுமே விகாரம் இன்றி என்றுமே இன்பம் சார்வன்**
**ஓதிய அன்ன வன்தான் ஒளிர்திடப் பிரஞ்ஞன் ஆனோன்.**

எந்த சந்நியாசி ஒன்றேயான பிரம்மத்திலேயே குற்றமில்லாமல் லயம் அடைந்த மனம் உடையவனாய், செயலற்றவனாய், எவ்வித விகாரமும் (மாறுபாடும்) இல்லாமல் எப்போதுமே ஆனந்தத்தை அனுபவிப்பவன், அந்த சந்நியாசிதான் வேதங்கள் புகழ்ந்து கூறும் திடப்பிரஞ்ஞன் (ஞானம் நிறைந்தோன்) எனப்படுவான்.

**489. சோரநா யகனைப் பற்றும் சோரநா யகியின் சித்தம்**
**பாரமாம் மனையின் செய்கை பற்றினும் அவனி டத்தே**
**தீரமாய் நிற்ப தேபோல் திகழ்திட பிரஞ்ஞை யைத்தான்**
**பூரணம் தன்னில் வைத்தோன் புகழ்திடப் பிரஞ்ஞன் ஆனோன்.**

கள்ளக் காதலனிடம் ஈடுபட்ட கள்ளக் காதலியின் மனம், சுமையான குடும்பக் காரியங்களில் ஈடுபட்டு இருந்தாலும், அவள்மனம் அக்காதலனிடம் நிலையாய் இருப்பது போல, பிரம்மமாத்திரமாக உறுதியாக விளங்கும் புத்தியை பிரம்மத்திடம் வைத்திருப்பவனே புகழ்ப்படும் திடப் பிரஞ்ஞன் (ஞானம் நிறைந்தோன்) எனப் படுவான்.

**490. சுத்தநல் பிரம சீவர் சொருபமாம் ஐக்கி யத்தை**
**நித்தமும் கோச ரித்து நிருவிகற் பகமே ஆன**
**சித்துமாத் திரவி ருத்திச் சீர்பெறும் பிரஞ்ஞை இத்தை**
**நித்தமும் பற்றி நின்றோன் நிமலமாம் சீவன் முத்தன்.**

உபாதிகள் நீக்கி நன்கு சுத்தமான சீவப் பிரம்மத்தின் இயல்பான ஐக்கியத்தை எப்பொழுதும் உணர்ந்து விகற்பமற்றதாய் (கற்பனை அற்றதால்) அறிவு வடிவான மனதின் விருத்தி பெருமை பொருந்திய பிரஞ்ஞை எனப்படும். இதனை எப் பொழுதும் அடைந்து இருப்பவன் தூய்மையான சீவன் முத்தன் ஆவான்.

**491. தேகஇந் திரியம் ஆதித் திரளிலே அகந்தை யும்மற்று**
**ஆகிய பொருள்கள் தம்மில் அமைவுறு மமதை யும்தான்**
**ஏகமாய் யாவ னுக்குஇங்கு எங்குமே இலாத தாகும்**
**மோகமில் அவனே சீவன் முத்தன்என் றுரைக்கல் ஆவன்.**

சரீரம். இந்திரியங்கள், முதலிய கூட்டங்களில் நான் என்ற அகங்காரமும், இவற்றிற்கு வேறாகிய வெளிப்பொருள்களில் ஏற்பட்ட எனது என்ற மமகாரமும், இங்கே எவனுக்க முழுதும் எவ்விடத்திலும் இல்லாமல் போகுமோ, மயக்கம் இல்லாத அவனே சீவன் முத்தன் என்று சொல்லத் தகுந்தவன் ஆவான்.

**492. நிலைபெறு ஞானம் உற்று நிரந்தர இன்பம் பெற்று**
**அலைவுறு சகம் மறந்துஇங்கு அமர்ந்தவன் சீவன் முத்தன்**
**சலமன விருத்தி கெட்டும் சாக்கிரம் உற்றோன் ஆகி**
**இலகுசாக் கிரமும் இன்றி இருப்பவன் சீவன் முத்தன்.**

நிலைபெற்ற ஆத்ம ஞானத்தினால், எப்பொழுதும் ஆனந்தத்தை அடைந்து துன்பம் தரும் உலகத்தை மறந்து, இங்கு இருப்பவனே சீவன் முத்தன். அலை கின்ற மனதின் விருத்திகள் ஒடுங்கிய போதும் விழிப்பு உடைவனாகி, சாக்கிரத்தில் விளங்கும் செயல்கள் இன்றி, இருப்பவனே சீவன் முத்தன்.

**493. எவன் நிகழ் வாத னைக்கோள் இலாதநல் ஞானம் உற்றோன்**
**எவன்வெகு விகற்ப மான இப்பவம் யாவும் விட்டோன்**
**எவன்கலை உற்றோ னாயும் ஏதுமே கலைஅற் றோனாம்**
**அவன்இடர் பந்தம் அற்ற அமலனாம் சீவன் முத்தன்.**

எவன் வாதனைகள் விளங்கும் தன்மை இல்லாத நல்ல ஆத்மஞானம் அடைந்தானோ, எவன் பல வேறுபாடுகளை உடைய இந்த உலகம் எல்லாவற்றையும் துறந்தானோ, எவன் கலைகள் எல்லாம் அறிந்தவனாயினும், கலைகள் ஏதும் இல்லாதவனைப் போன்றவனோ, அவனே இடரான பந்தம் இல்லாத மாசற்ற சீவன் முத்தன் ஆவான்.

**494. சித்தமோடு இருந்தும் யாவன் சித்தம்இல் லாதுஇ ருப்பன்**
**மித்தையாய்ச் சாயை போல்இம் மேனிதான் தொடர்ந்த போதும்**

**அத்திலே மமதை யோடே அகந்தையை விட்டோன் யாவன்**
**நித்தமும் அவனே பந்தம் நீங்கிய சீவன் முத்தன்.**

எவன் மனதுடன் இருந்த போதிலும் மனோவிருத்திகள் இல்லாதவனோ, பொய்யா நிழல் போல் இந்த சரீரம் தொடர்ந்து வந்த போதும், எவன் எப்பொழுதும் அதில் நான் என்னுடையது என்ற எண்ணத்தை விட்டவனோ, அவனே பந்தமற்ற சீவன் முத்தன் ஆவான்.

**495. பூதகா லத்து இறந்த பொருளினைச் சிந்தி யாமை**
**ஓதிய வருகா லத்தில் உறுபொருள் ஓர்ந்தி டாமை**
**ஏதுமே நிகழ் காலத்தில் எய்தினும் அதில்உ பேட்சை**
**ஈதுஎலாம் சீவன் முத்தன் இலக்கனம் ஆகும் மைந்தா.**

மைந்தனே, சென்ற காலப் பொருள் சிந்திக்காமலும், வருங்காலப் பொருளைப் பற்றி நினைக்காமலும், நிகழ்காலத்தில் எப்பெருள் அடைந்தாலும் அதில் உதாசீனமாய் இருத்தலும், முதலிய இவை எல்லாம் சீவன் முத்தனுக்குக் கூறப்பட்ட இயல்புகளாம்.

**496. ஏதமும் குணமும் சேர்ந்த இயல்பினால் வெவ்வே றான**
**யாதிலும் சமமாம் பார்வை எய்தினோன் சீவன் முத்தன்**
**ஓதிய பார்வை யாலே ஒன்றிய இட்டஅ நிட்டம்**
**ஏதிலும் விகார மற்றோன் இலங்கிய சீவன் முத்தன்.**

குற்றமும் குணமும் கொண்ட தன்மையால், வேறு வேறான எல்லாப் பொருள்களையும் சமமாய்ப் பார்ப்பவன் சீவன் முத்தன். கூறியசம நோக்கினால் ஏற்படும் விருப்பு, வெறுப்பு எதனாலும் மாறுதலற்று விளங்குபவன் சீவன் முத்தன் ஆவான்.

**497. பிரத்தியக் அபின்ன மான பிரமஆ னந்தம் தன்னைக்**
**கருத்திலே அனுப விக்கக் காதல்உண் டான சித்த**
**விருத்தியைப் பற்ற லாலே வெளியிலும் உளிலும் வேறு**
**கருத்துஉறு ஞானம் அற்றோன் களங்கமில் சீவன் முத்தன்.**

உள்ளே தனக்கு வேறில்லாத பிரம்மானந்தத்தை மனதில் அனுபவிக்க விருப்பம் கொண்ட மனோ விருத்தியுடன் இருப்பதால், வெளியிலும் உள்ளேயும் வேறு எதையும் அறியாமல் இருப்பவன் சீவன் முத்தன் ஆவான்.

498 விரித்துஉள சகத்தி னுக்கும் விமலமாம் பிரமத் திற்கும்
பிரத்தியக் ஆன்மா விற்கும் பேசிய பிரமத் திற்கும்
விருத்தமாம் பேதம் தன்னை விருத்தியில் ஓர்கா லேனும்
தரித்திடும் ஞானம் அற்றோன் தகைமையுள் சீவன் முத்தன்.

விரிவாக உள்ள உலகத்திற்கும், மாசில்லாத பிரம்மத்திற்கும், உள்ளே விளங்கும் ஆத்மாவிற்கும், கூறிய பிரம்மத்திற்கும், முரண்பாடான பேதத்தை (வேறுபாட்டினை) ஒரு தடவையேனும் மனதில் நினைக்காதவனே, பெருமை உடைய சீவன் முத்தன் ஆவான்.

499. சடமான இத்தே கத்தைச் சாதுக்கள் அர்ச்சித் தாலும்
தொடர்வான இதனை மற்றோர் துட்டர்கள் பீடித் தாலும்
திடமான ஞான நிட்டை சேர்ந்துள திறமை யாலே
இடராத சமபா வத்தை எய்தினோன் சீவன் முத்தன்.

சடமான இந்த சரீரத்தை நல்லவர்கள் பூசித்தாலும், தொடர்ந்து வருகின்ற இந்த சரீரத்தை பிற கெட்டவர்கள் துன்புருத்தினாலும், பிரம்மத்துடன் ஒன்றிய பாவனை உறுதியாகப் பெற்றுள்ள திறத்தினால், துன்பமற்ற சம நிலையை அடைந்தவனே சீவன் முத்தன் ஆவான்.

500. சுருதியின் பலத்தி னாலே சூக்கும ஆன்மா விற்குப்
பிரமபா வத்தை நன்றாய்ப் பேணிஇங்கு அறிந்த வன்தான்
மருவிய பவபந் தத்தை மாசற விடுத்தோன் ஆகி
அருமையாம் கைவல் யத்தை அடைகுவன் ஐயம் இல்லை.

வேதத்தினால் பொருள் உண்மையை அறிந்த வலிமையால், சூட்சுமமான ஆத்மாவிற்குப் பிரம்மமாய் இருக்கும் தன்மையை நன்கு கவனித்து இங்கு அறிந்தவனே, தன்னைப் பொருந்திய பிறவித் தளையை குற்றமற நீக்கியவனாகி, பெறுவதற்கு அரிய முத்தியை சந்தேகம் இல்லாமல் அடைவான்.

501. பேதமாய் நதியில் வந்த பிரவாகம் வாரி யில்போல்
யாதொரு எதிஇ டத்தில் எய்திய விடயம் எல்லாம்
கோதுஇலாச் சொரூப மாகக் கூடியே வயிக்கும் மற்றும்
ஏதுமே கலக்கம் செய்யாது இன்னவன் சீவன் முத்தன்.

பல நதிகளின் வெள்ளம் சமுத்திரத்தில் கலந்து அடங்கி விடுவது போல, ஒரு துறவியிடம் வந்து அடைந்த விடயங்கள் எல்லாம், ஒன்று கூடி குற்றமற்ற பிரம்மம் ஆகவே லயம் அடைந்து விடும். மீண்டும் எந்த கலக்கத்தையும் ஏற்படுத்தாது. இத்தகையவனே, சீவன் முத்தன் ஆவான்.

**502. பிரிந்திடாப் பிரம ரூபம் பிரிவறத் தெரிந்தோ னுக்குத்**
**திரும்பவும் முன்போல் இந்தத் திருகியப் பவமே இல்லை**
**இருந்ததேல் பிரமம் தன்னை இவன் அறிந் தவனே அன்று**
**விரிந்துஉள பாகி யத்தை வேண்டிய வெளிமு கன்தான்.**

தன்னைப் பிரிந்து இல்லாத பிரம்ம வடிவத்தை நானே அது என ஒன்றாக அறிந்தவனுக்கு, மறுபடியும் முன்னால் இருந்தது போல இந்த உலகம் இருக்காது. இருந்ததே ஆனால், அவன் பிரம்மத்தை அறிந்தவனே அல்ல. விரிவாக உள்ள வெளிப் பொருள்களை விரும்பியே வெளியே செல்லும் மனம் உடையவனாகவே இருப்பான்.

**503. முன்னமே தொடரா நின்ற மூலவா சனைவே கத்தால்**
**பின்னும் இச் சம்சா ரத்தைப் பேணுவன் பிரம ஞானி**
**என்னஒண் ணாது வத்து ஏகம்என்று உணர்ந்த தாலே**
**சொன்னவா சனைஅ னைத்தும் தொடர்வறச் சிதைந்த ஆன்றோ.**

பிரம்மத்தை அறிந்தவன், முன்பே தொடர்ந்து வந்து உள்ள இன்னல்களுக்குக் காரணமான வாசனையின் பலத்தால், ஆத்மானந்தத்தை அனுபவித்த பிறகும் பிரம்மம் ஒன்று என அறிந்ததால் கூறிய முன் வாசனைகள் எல்லாம் அடியோடு அழிந்துவிடும் அல்லவா?

**504. மெத்தவும் பெண்ம யக்கம் மேவிய மூடன் தன்னின்**
**சித்தமும் தாய்இ டத்தில் செல்லாது நிற்கு மாபோல்**
**சுத்தஆ னந்த மான சொரூபமே உணர்ந்தோ னுக்கும்**
**சித்தம்இவ் விடயஆ னந்தம் சொல்லாது நிற்கும் அன்றோ.**

மிகவும் பெண் ஆசை உடையவனின் மனமும் தாயார் இடத்தில் செல்லாது இருக்கும். அதுபோல, தூய ஆனந்தமே வடிவமான பிரம்மத்தை அறிந்தவனுக்கும், மனமானது இந்த விடய ஆனந்தத்தில் செல்லாது இருக்கும்.

**505. நித்தமும் சமாதி செய்யும் நிமலனாம் ஞானிக்கு ஓர்கால்
மித்தையாம் பாகி யத்தின் மேவிய தோற்றம் கண்டு
சுத்தமாம் சுருதி அன்னோன் தொடர்பயன் கூடு மாறு
சத்துஇலாப் பிராரத் தத்தைச் சாற்றிடும் சிலவி டத்தில்.**

நாள் தோறும் சமாதியில் ஈடுபடும், மாசற்ற ஞானி ஒரு சமயம் பொய்யான வெளிப் பொருளில் ஈடுபடும். நிலையைப் பார்த்து, தூய்மையான வேதம், அந்த ஞானி தொடர்ந்து பயனை அனுபவிப்பதற்குக் காரணமாக நிலையில்லாத பிராரத்த வினையை சில இடங்களில் கூறி உள்ளது.

**506. தகுபயன் உதிப்பது எல்லாம் தான்செய்த கன்மம் மூலம்
பகரும்அக் கன்மம் இன்றேல் பற்றிய பயனும் இல்லைச்
சுகமுதல் அனுப வம்தான் தொடரும் மட்டுஅம் மட்டும்
அகம்உறும் பிராரத் தத்தை அறிஞனுக்கு ஒப்ப வேண்டும்.**

தகுந்த பலன்கள் எல்லாவற்றிற்கும் காரணம் ஒருவன் செய்த கருமமாகும். கூறிய அந்தக் கருமங்கள் இல்லையானால் அவற்றால் உண்டாகும் பலனும் இல்லை. எதுவரையில் இன்பதுன்ப அனுபவங்கள் தொடர்ந்து நிகழுமோ, அதுவரை சரீரத்தை அடைந்துள்ள பிராரத்த வினையை ஞானிக்கு உண்டு என ஒப்புக் கொள்ள வேண்டும்.

**507. பிரமமே நாம்என்று இங்ஙன் பெற்றுள ஞானத் தாலே
சருவதாக் கற்ப கோடி சஞ்சித வினைந சிக்கும்
மருள்உறு சாக்கி ரம்தான் மயக்கமாம் சொப்ப னத்தில்
கருதிய கன்மம் எல்லாம் காணாது நசிக்கு மாபோல்.**

மயக்கத்தால் ஏற்பட்ட கனவில் செய்த கருமங்கள் எல்லாம், அறியாமையோடு கூடிய சாக்கிரத்தில் காணப்படாமல் அழியும். அதுபோல, கோடிக் கணக்கான பிறவிகளில் சேர்த்து வைத்த சஞ்சித வினை எல்லாம், நாம் பிரம்மம் என்று இவ்விடம் பெற்ற அனுபவ ஞானத்தினால் அடியோடு அழிந்து விடும்.

**508. பேதமாம் சொப்ப னத்தில் பெலமதாய்ச் செய்யப் பட்ட
தீது இலாப் புண்ணி யம்தான் தீங்குறு பாப மும்தான்
ஏதுமே கனவை விட்டுஇங்கு எய்திய நனவுஉற் றோர்க்குச்
சாதுவே நரகம் சுவர்க்கம் சார்ந்திட ஏது ஆமோ.**

சாதுவே, பலவகையான கனவில் மிகவும் உறுதியாக செய்யப் பட்ட தீமையற்ற புண்ணியமும், தீமைதரும் பாவமும், இங்கே கனவை விட்டு நனவை அடைந்தவர்களுக்கு, நரகத்தையோ, சுவர்க்கத்தையோ அடைவதற்கு சிறிதும் பொருத்தமான காரணம் ஆகுமோ? ஆகாது.

**509. சங்கம்இல் லாமல் என்றும் சாந்தமாம் தத்து வத்தைப்
பங்கம்இல் லாது தானாய்ப் பார்த்து நன்றாய்அ றிந்த
துங்கம்ஆம் சந்தி யாசி தூரஆ காமி யத்தை
எங்குமே எவள வேனும் என்றுமே இசையான் விண்போல்.**

ஆகாசம் போல் எதிலும் சம்பந்தம் இல்லாமல் எப்பெழுதும் சாந்தமான பிரம்மத்தை, வேறுபாடு இல்லாமல் தன் வடிவமாகவே நன்றாக அனுபவித்து அறிந்த மேலான துறவி, எவ்விடத்திலும் ஆகாமியத்தை சிறிதாயினும் விலகும்படி செய்து எப்போதும் அடையமாட்டான்.

**510. ஒருமையாம் விண்கட ஆதி உபாதியின் புணர்ப்பி னாலே
மருவிய மதுகந்த ஆதி மருவிடாத் தன்மை யேபோல்
ஒருமையாம் ஆன்ம ஞானி உபாதியின் புணர்ப்பி னாலே
மருவிய கன்மத் தோடு மைந்தனே மருவ மாட்டான்.**

ஒன்றே ஆன ஆகாசம் குடம் முதலிய உபாதிகளுடன் சேர்ந்து இருப்பதனால், அந்தக் குடத்தில் உள்ள கள் முதலியவற்றின் நாற்றத்தைப் பொருந்தாது. அதுபோல பிரம்மத்துடன் ஒன்றே ஆன ஆத்ம ஞானியும் உபாதிகளுடன் சேர்ந்து இருப்பதனால், அந்த உபாதிகளில் நிகழும் கர்மங்களோடு பொருந்தமாட்டான். (சம்பந்தப் படுவது இல்லை.)

**511. போதம்உண் டாவ தற்குப் பூருவ மேஉ தித்த
பேதமாம் பிராரத் தம்தான் பெறும்பயன் அளியா வண்ணம்
ஓதிய ஞானத் தாலே ஒழிந்திடாது இலக்கி யத்தின்
சேதமே உத்தே சித்துச் செலுத்திய பாண மேபோல்.**

ஆத்ம ஞானம் உண்டாவதற்கு முன்பே தோன்றிய பல வகையான பிராரத்த வினை தனது பலனை அளிக்காமல், கூறிய ஆத்ம ஞானத்தால் அழிந்திடாது. குறிவைத்த பொருளை வீழ்த்துவதற்காக விடப்பட்ட அம்பைப் போல.

**512. புலிஎனும் புத்தி யாலே போட்டஓர் பாணம் மற்றும்**
**உலவிய பசுஇ துஎன்றே உண்மையை உணர்ந்த போதும்**
**அலைவற மத்தி யத்தில் அடங்கிநிற் காம லேதான்**
**பெலமுடன் இலக்கி யத்தைப் பேதித்து நிற்கும் அன்றோ.**

இது புலி என்று அதன் மீது எய்த ஒரு அம்பானது, விட்டபிறகு, இதுமேய வந்த பசு என்று உண்மையை அறிந்த போதும், அதன்வேகம் குறைந்து அடங்கி இருக்காமல், பலத்துடன் குறிவைத்த பொருளை பிளந்துதான் அடங்கும்.

**513. ஆகையால் அறிஞ ருக்கும் அதிபலம் பிராரத் தம்தான்**
**போகமே புசித்த தாலே போக்கிட வேண்டும் இத்னத**
**ஏகமாம் ஞானம் ஆகும் இலங்கிய வந்நி தன்னால்**
**ஆகிய சஞ்சி தத்தோடு அழியும்ஆ காமி யிம்தான்.**

ஆதலினால் ஞானிகளுக்கும் பிராரத்த வினைதான் மிகவும் வலி உடையது. இந்த பிராரத்த வினையை அனுபவித்துத் தான் அழிக்க வேண்டும். பிரம்மம் ஒன்றே, என்று விளங்கும் ஞானம் ஆகிய அக்கினியினால், முன் சேர்ந்துள்ள சஞ்சித வினையோடு ஆகாமிய வினைகளும் அழிந்து போகும்.

**514. பிரமசீ வைக்கி யத்தைப் பிரிவற அறிந்து பின்னும்**
**மருவிஅ மயமே ஆக மாறாமல் என்றும் நின்றோர்**
**திருவிதக் கன்ம மும்தாம் சேர்ந்திடார் அவரே நித்த**
**நிருமல நிருவி கார நிர்குணப் பிரமம் அன்றோ.**

பிரம்மமும் சீவனும் ஒன்றே என்பதை தெளிவாக அறிந்து கொண்டு, மேலும் அந்த பிரம்மமாகவே பொருந்தி மாறாமல் எப்பொழுதும் நிலைத்து நிற்பவர், பிராரத்தம், சஞ்சிதம், ஆகாமியம் ஆகிய மூன்று வகையான காமங்களையும் அடையமாட்டார். அவர் எப்பொழுதும் மலமலற்றதும், விகார மற்றதும், குணமற்றதும் ஆன பிரம்மமே ஆவார்.

**515. யாதொரு உபாதி சங்கம் இன்றிக்கே வலமாய் நின்ற**
**பேதமில் பிரம ரூபம் பெற்றுஉள அறிஞ ருக்குஇங்கு**
**ஓதிய பிராரத் தத்தை உண்டுஎன உரைக்க ஒண்ணா**
**காதல்செய் நனவுஉற் றோர்க்குக் கனவுஉள துஎன்ன லாமோ.**

எந்த ஒரு உபாதியோடும் சம்பந்தம் இல்லாமல் தனித்து நின்று, வேறுபாடற்ற பிரம்ம வடிவத்தை அடைந்து உள்ள சீவன் முத்தனுக்கு, இங்கே கூறிய பிராரத்த வினை உண்டு என்று கூற முடியாது. அவை பெருகுவதற்கு இடமான சாக்கிரத்தில் இருப்பவர்களுக்கு, சொப்பனத்தில் கண்ட பொருள் உண்டு என்று கூறுதல் தகுமோ? தகாது.

**516. நனவுஉளோன் சொப்ப னத்தில் நண்ணிய பொய்த்தே கத்தும்**
**அனையதே கஉப யோகம் ஆகிய பொய்ஞ்ஞா லத்தும்**
**நனவில்யான் எனதுஇது என்று நாடிடான் பின்னோ என்றால்**
**அநகனே நனவில் தானே அன்னவன் அமைந்து நிற்பான்.**

மாசற்றவனே, சொப்பனத்தில் தோன்றிய பொய்யான சரீரத்திலும், அந்த சரீரத்திற்கு உபயோகமாய் இருந்த பொய்யான உலகத்திலும், விழித்துக் கொண்டவன், யான்என்றும் எனது என்றும், இது ஒருபொள்என்றும் விரும்ப மாட்டான், பின் எப்படி என்றால், சாக்கிரத்தில் அவன் சொப்பனம் பொய் என்ற நிச்சயத்துடன் அமைதியாக இருப்பான்.

**517. அன்னவன் மித்தை யான அச்சகம் அடையப் போனால்**
**பன்னும்அச் சகமும் சேரப் பட்டதாய்க் காணான் மற்றும்**
**துன்னிய அச்ச கத்தன் தொடர்புஇருந் திடுமே ஆகில்**
**அன்னவன் துயிலை விட்டோன் அன்றுஎன அறிய லாமே.**

சொப்பனம் கண்டு விழித்தவன் பொய்யான அந்த உலகத்தை அடைய முயன்றால், கூறிய சொப்பன உலகமும் அடைந்ததாய் காணமாட்டான். கூறிய சொப்பனத்தில் தோன்றிய அந்த உலகத்தின் தொடர்ச்சி இருக்குமே ஆனால், அவன் உறக்கத்தை விடவில்லை என்று அறிந்து கொள்ள வேண்டும்.

**518. இந்தவா பிரமம் தன்னை எய்திய பிரம ஞானி**
**அந்தநல் பிரமம் ஆக அடங்குவன் பிறிதைப் பாரான்**
**மைந்தனே அவன்பு சித்தல் மலசலம் விடுத்தல் ஆதி**
**சிந்தைசெய் வதுக னாவில் சேர்பொருள் சிந்தை போலாம்.**

இவ்வாறு பிரம்மமே ஆன பிரம்ம ஞானி, அந்த நல்ல பிரம்ம வடிவமாகவே அமைதி உற்று இருப்பான். பிரம்மத்தைத் தவிர வேறு எதையும் காண மாட்டான். அவன் உண்பது, மலசலம் கழிப்பது முதலிய எண்ணம் யாவும், சொப்பனத்தில் தோன்றிய பொருளை நினைப்பது போல ஆகும்.

519 கருமமே மூலம் ஆகக் கற்பித தேகத் திற்குஇங்கு
ஒருமையில் பிராரத் தத்தை ஒப்பலாம் மற்று அநாதி
சொரூபமாய்க் கருமத் தாலே தோன்றிடா ஆன்மா விற்கு இங்கு
ஒருவிதக் கன்ம மேனும் உண்டுஎன ஒப்ப லாமோ.

கருமத்தால் உண்டான இந்த சரீரத்திற்கு இங்கே பிராரத்த வினை உண்டுஎன ஒப்புக் கொள்ளலாம். ஆனால் ஆதி இல்லாத வடிவமாய், கருமத்தால் தோன்றாத ஆத்மாவிற்கு இங்கு எவ்வித கருமமும் ஆவது உண்டு என்பதை ஏற்கமுடியுமோ? முடியாது.

520. ஓதிய ஆன்மா என்றும் உதித்திடா நித்தம் என்றே
ஏதம்இ லாமல் உள்ள இயல்பினை இசைக்கா நின்ற
வேதம்ஓ துவதால் அந்த விமலமாம் சொரூபம் ஆனோர்க்கு
ஏதுமே பிராரத் தம்தான் இருக்கும்என்று ஒப்ப லாமோ.

கூறிய ஆத்மா எப்பொழுதுமே, "பிறப்பற்றது, என்றும் இருப்பது" என்று குற்றமில்லாமல் உள்ள அதன் இயல்பை பொய்யா மொழியான வேதம் கூறுவதால், அந்த மாசற்ற வடிவமான சீவன் முத்தர்க்கு சிறிதும் பிராரத்த வினை உண்டு என்று கூற இயலுமோ? இயலாது.

521. என்றுதே கஆன்ம புத்தி இசைந்ததுஆ யிடுமோ அன்றே
துன்றுபி ரார்த்த கன்மத் தொடர்வுமே சித்தி ஆகும்
ஒன்றுதே கஆன்ம புத்தி ஒழிந்துஉள அறிஞ ரின்பால்
நின்றதாய்ப் பிராரத் தத்தை நினைவது நீதி யோசொல்.

எப்போது சரீரத்தில் ஆத்மா என்ற எண்ணம் பொருந்தி இருக்குமோ, அப்பொழுதே பிராரத்த வினையின் நெருங்கிய தொடர்பு ஏற்படும். பொருந்தி உள்ள சரீரத்தில் ஆத்மா என்ற எண்ணம் நீங்கிய ஞானியிடம் பிராரத்த வினை உண்டு என்று சொல்வது முறையோ? நீயே சொல்.

522. கற்பித தேகத் திற்கும் கருதிய பிராரத் தத்தை
ஒப்புதல் மயக்க மேயாம் உண்மையில் கற்பி தம்தான்
எப்படி சனிக்கும் நிற்கும் இறந்திடு மயாது ம்இல்லை
இப்படி உசாவில் ஆக்கை என்றுமே அசத்துத் தானே.

ஆத்மாவில் கற்பிதமாய் தோன்றும் சரீரத்திற்கும், பிராரத்த வினை உண்டு என்று எண்ணுவது மதிமயக்கமே ஆகும். கற்பிதமான சரீரம் எப்படி பிறக்கும், இருக்கும், அழியும்? எதுவும் உண்மையில் இல்லை. இவ்வாறு ஆராய்ந்தால் சரீரம் எப்பொழுதும் இல்லாததே (அசத்தே) ஆகும்.

**523. ஆதலால் அகத்துஆக் கைக்கும் அமைபிரா ரத்தம் இல்லை**
**ஓதிய நீதி ஆக ஒன்றினுக் கேனும் ஈது**
**சாதுவே இலாத தேனும் சத்திய ஞானி கட்கு**
**வேதமே பிராரத் தத்தை விதிப்பதன் கருத்தைக் கேளாய்.**

சாதுவே, ஆதலால் அசத்தான (இல்லாத) சரீரத்திற்கும் பிராரத்த வினை அமைவது இல்லை. கூறிய முறைப்படி ஒரு பொருளுக்கு இது இல்லை என்றாலும், உண்மையான ஞானிகளுக்கு, வேதமானது பிராரத்த வினை உண்டு என்று கூறுவதின் கருத்தைக் கேட்பாய்.

**524. அந்தநல் வித்தை யாலே அவித்தைகா ரியம்ந சித்தால்**
**பிந்திஇத் தேகம் ஆதி பிறங்குவது எப்படித்து என்று**
**இந்தவா சங்கிக் கின்ற ஈனரைச் சமாதா னிக்கச்**
**சுந்தர மான வேதம் சொல்லிடும் பிராரத் தத்தை.**

அந்த மேலான ஞானத்தால் அஞ்ஞானமும் அதன் காரியங்களும் அழிந்து போனால், பிறகு இந்த சரீரம் முதலியவை விளங்குவது எப்படி? என்று இந்தவாறு சந்தேகப்படும் மதி குறைந்தவர்களை சமாதானம் செய்வதற்காக அழகான வேதம் பிராரத்தம் உண்டு என்று சொல்கிறது.

**525. இப்படி வெளிநோக் காக ஏகதே சத்தில் வேதம்**
**கற்பிதப் பராரத் தத்தைக் காட்டிடும் ஞானி கட்கும்**
**செப்பிய தேகம் ஆதி சிறிதுமே சத்தாம் என்றுஇங்கு**
**ஒப்பிடும் வண்ணம் இத்தை உரைத்திட இல்லை மைந்தா.**

இவ்வாறு வேதம் வெளிஉலக விவகார நோக்கில், உடன் பாடாக ஞானிகளுக்கு கற்பிதமாக பிராரத்தம் உண்டு என்று கூறிடும். கூறிய சரீரம் முதலியன சத்தியமாய் இருக்கும் தன்மை உண்டு என்று இங்கே சிறிதும் ஒப்புக் கொள்வதற்காக, பிராரத்தத்தைக் கூறவில்லை.

**526. அகிலபூ ரணமே ஆகி ஆதிஅந்த தங்கள் இன்றி**
**மிகவும்ஓர் பிரமா ணத்தான் மேவஒண் ணாதது ஆகிப்**
**பகர்செயல் இன்றி நின்ற பரமமாம் பிரமம் ஒன்றே**
**திகழும் அத் வயமாய் இத்தில் சிறிதுமே பேதம் இல்லை.**

எங்கும் நிறைந்து நிற்பதாகி, தோற்றமும் முடிவும் இல்லாமல், எந்த பிரமாணத்தாலும் அறிய இயலாதது ஆகி. செயலற்றதாய் விளங்குகின்ற பிரம்மம் ஒன்றே ஆகவும், இரண்டற்றதாகவும் விளங்குவது. இதில் ஒருசிறிதும் வேற்றுமை என்பது கிடையாது.

**527. சுத்தநிட் கிரிய சத்சித் சுகசன சொரூபம் ஆகி**
**நித்தஅந் துவித மான நிருமலப் பிரமம் ஒன்றே**
**புத்திர எல்லாம் ஆகிப் பூரண மாய்இ லங்கும்**
**இத்தில்வே றான பேதம் எவளவும் இல்லை என்றும்.**

புத்திரனே, ஒன்றே ஆன பிரம்மம், பரிசுத்தமானது, எவ்விதக் கிரியையும் இல்லாதது. இருப்பே வடிவமானது, அறிவே வடிவமானது, ஆனந்தமே வடிவமானது; என்றும் என்றும்உளது; இரண்டற்றது மாசற்றது. எல்லாம் ஆகி இருப்பது, எங்கும் நிறைந்த இதில் எப்பொழுதும் அதற்கு வேறான பேதம் சிறிதளவும் இல்லை.

**528. தள்ளவும் கூட்ட வும்தான் தகாதாய்த் தன்னில் தானாய்**
**உள்ளவா தன்னில் ஒன்றும் ஒன்றிடாப் பிரமம் ஒன்றே**
**உள்ளிலும் வெளியில் எங்கும் ஒருமையாய் நிறைந்து நிற்கும்**
**எள்அள வேனும் இத்தில் எய்திய பேதம் இல்லை.**

தள்ளவும் கொள்ளவும் முடியாததாய், தானே தன்னிடம் விளங்குவதாய், உள்ளபடி தன்னிடத்தில் வேறு எதுவும் பொருந்தி இல்லாத பிரம்மம் ஒன்றே ஆகும். அதுவே உள் வெளி ஆகிய எல்லா இடங்களிலும் ஒரே விதமாய் நிறைந்து இருக்கிறது. அதன் இடத்தில் எள் அளவுகூட பேதம் என்பது கிடையாது.

**529. நிரஞ்சன நிருவி கற்ப நிட்கள நுண்மை ஆகி**
**விரிந்தநிர்க் குணமாய் ஒன்றால் விளம்பிடப் படாதது ஆகிப்**
**பொருந்திய வடிவமான பூரணப் பிரமம் ஒன்றே**
**இருந்ததுஅத் வயமாய் இத்தில் எவளவும் பேதம் இல்லை.**

எங்கும் நிறைந்த வடிவமான பிரம்மம் ஒன்றே, குற்றமற்றது, மாறுதலற்றது, அவயவமற்றது; சூட்சுமமாய், எங்கும் வியாபகமாய், குணமற்றதாய், ஒரு பிரமாணத்தால் சொல்லப் படாததாய், எல்லாவற்றிலும் பொருந்தி இரண்டற்றதாய் விளங்குகின்றது. இதில் எந்தஅளவும் பேதம் என்பது இல்லை.

**530. சித்தமும் வாக்கு யாவும் சென்றுகோ சரிக்க ஒண்ணாச்**
**சத்துஅதாய்ச் சுத்த சித்தாய்ச் சாரும்ஓர் உவமை இன்றி**
**நித்தஆ னந்தம் ஆகி நிகழ்சொத சித்தம் ஆன**
**அத்வயப் பிரமத் தின்கண் அணுவுமே பேதம் இல்லை.**

மனதிற்கும் வாக்கிற்கும் மற்ற எவற்றிற்கும் எட்டாததாய், எப்பொழுதும் இருப்பதாய், சுத்தமாய், அறிவே வடிவமாய், ஒரு உவமைக்கும் பொருந்தாததாய், எப்பொழுதும் ஆனந்த வடிவமாகி சுயம் பிரகாசமாய் விளங்குவதான இரண்டற்ற பிரம்மத்தில் அணுஅளவேனும் பேதம் என்பது கிடயாது.

**531. போகமே தள்ளி அந்தப் போகஆ சையும்வி டுத்துஇங்கு**
**ஆகிய சாந்தி தாந்தி அடைந்தமா எதிகள் தாமே**
**ஏகநல் தத்து வத்தை இருதயம் தனில்அ றிந்து**
**பாகமா ம்யோகத் தாலே பரசுகம் அடைந்தார் அன்றோ.**

போகத்தை விட்டு, அந்தப் போகத்தில் ஏற்படும் ஆசையையும் விட்டு நீங்கி, இங்கே மன அடக்கம் பொறி அடக்கம் ஆகியவற்றை அடைந்த பெருமை உடைய துறவிகள், தாமே தங்கள் மனதில் ஒன்றேயான உண்மைப் பொருளை நன்கு உணர்ந்து, பக்குவமான மனம் ஆத்மாவிலேயே நிலை பெற்றதனால் மேலான ஆனந்தத்தை அடைகிறார்கள்.

**532. ஆதலால் பால நீயும் அகண்டஆ னந்த மான**
**பேதமில் நின்சொ ரூப பிரமதத் துவம்அ றிந்தே**
**ஏதமாம் நின்ம னத்தால் இங்குக்கற் பித்த மோகப்**
**பேதமாம் பந்தம் நீக்கி பேறுபெற் றவனாய் நிற்பாய்.**

பாலனே, ஆதலால் நீயும், வரம்பற்ற ஆனந்த வடிவமான பேதம் இல்லாத உன் உண்மை வடிவமான பிரம்ம தத்துவத்தை அறிந்து கொண்டு, இங்கே உனது மனதால் கற்பனை செய்யப்பட்ட பல வகையான மயக்கத்தையும், துன்பம் தரும் பந்தத்தையும் விலக்கி வீடுபேறு பெற்று விளங்குவாய்.

**533. நிருவிகற் பகமே ஆன நிருமலச் சமாதி கொண்டே**
**ஒருமையாம் உன்சொ ரூபம் உணர்வதாம் திட்டி யாலே**
**மருள்தரும் ஐயம் இன்றி மாசற நோக்கு வாயேல்**
**பிரியநீ கேட்ட வத்துப் பின்னரும் பேதி யாதால்.**

பிரியனே, திரிபுடி இல்லாத மாசற்ற சமாதியை மேற் கொண்டு, ஒன்றேயான உனது உண்மை வடிவத்தை ஞானம் ஆகிய கண்ணால், மயக்கத்தைத் தரும் சந்தேகத்திற்கு இடம்இல்லாமல் தெளிவாக அறியப் பட்டதே ஆனால், நீ அறிய விரும்பிய பொருள் மறுபடியும் வேறாகத் தோன்றாது.

**534. தன்னிடைப் பொய்அு வித்தை தந்தபந் தம்வி டுத்துத்**
**துன்னிய சச்சித் இன்பச் சொரூபமாம் தனையே சார**
**மன்னுநல் நூல்கள் யுக்தி மாகுரு வாசனம் மானம்**
**பின்னுநல் சுவாநு பூத பெருகிய பிரமா ணம்காண்.**

தன்னிடத்தில் பொய்யான அஞ்ஞானத்தால் வந்த தளையில் இருந்து விடுபட்டு, சச்சிதானந்தமாகப் பொருந்தி தன் வடிவத்தை அடைவதற்கு, நிலை பெற்ற சாத்திரங்களும், யுக்தியும், சிறந்த குருவின் உபதேசமும் பிரமாணங்களாம். மேலும் தன்னுடைய நல்ல அனுபவமும் மிகுந்த பிரமாணம் என அறிந்து கொள்.

**535. பந்தமும் மோட்ச மும்தான் பசிஉடன் திருப்தி தானும்**
**சிந்தையின் ரோக ம்இல்லாத் திறமையே முதல்அு னைத்தும்**
**மைந்தனே தாங்க ள்தாமே மயல்அற உணர்வர் மற்றோர்**
**வந்தஓர் அனுமா னத்தால் வகுத்துஉள இவை மதிப்பர்.**

மைந்தனே, பந்தமும், முத்தியும், பசியும், திருப்தியும், நோயற்ற பாக்கியம் முதலிய எல்லாம் ஒருவன் தனக்குத் தானே மயக்கமற அறிடவன் மற்றவர்கள் தனக்கு எற்பட்ட அனுமானத்தினால் மட்டும் வகுத்துக் கூறிய இவற்றைக் கருதுவார்கள்.

**536. சுருதிகள் பொதவே ஆகச் சொல்லிடும் எப்ப டித்தாய்க்**
**குரவரும் அப்ப டித்தான் கூறுவர் சீட னேறம்**
**பரசிவன் அருளால் தந்த பரம்உணர் அனுப வத்தால்**
**வரைஇலாப் பவம்ஆ கின்ற வாரிதி கடக்க வேண்டும்.**

வேதங்கள் பொதுவாக எவ்வாறு கூறுமோ. அவ்வாறே குருமார்களும் உபதேசம் செய்வார்கள். ஈசுவரன் அருளால் நமக்கு அளித்த மேலான அறிவினாலும், அனுபவத்தாலும், எல்லை இல்லாத பிறவி ஆகிய கடலைக் கடக்க வேண்டும்.

**537. சகலவே தாந்த நூலில் சாரமாய்த் திட்டி மூன்று**
**திகழும்அத் திட்டி யாலே திருசிய ம்யாவும் நீக்கி**
**நிகழும்அந் துவிதஅ கண்ட நிருமலப் பிரமம் தன்னை**
**அகம்என அறிந்த வன்தான் அகண்டனாய் முத்தன் ஆவன்.**

எல்லா வேதாந்த சாத்திரங்களிலும் சாரமாக மூன்று வகையான திருஷ்டிகள் (நோக்குகள்) சொல்லப்படும். அந்த திருஷ்டிகளால் காணப் படும் பொருள்கள் எல்லாவற்றையும் விலக்கி, இரண்டற்றதாய் அகண்டமாய் மாசற்றதாய் விளங்கும் பிரம்மத்தை, நான் என்று அறிந்தவனே அகண்ட பிரம்மமாய் சீவன் முத்தன் ஆவான்.

**538. பரவிய திட்டி மூன்றின் பகுப்பினைப் பகரக் கேளாய்**
**விரிவுறு வாத திட்டி மித்தியா திட்டி மற்றும்**
**பிரிவுஎலாம் நீக்கா நின்ற பிரவிலா பதிட்டி மூன்றாம்**
**இருமைதீர் இவைகள் தம்மின் இலக்கணம் இயம்பு வாமே.**

சொல்லிய மூன்று திருஷ்டிகளின் பிரிவுகளைக் கூறக் கேட்பாய். விரிவான வாத திருஷ்டி, மித்தியா திருஷ்டி மேலும் பேதம் எல்லாம் நீக்குகின்ற பிரவிலாப திருஷ்டி என மூன்று ஆகும். விதங்களை விளக்குகின்ற இந்த திருஷ்டிகளின் இலக்கணத்தைக் கூறுவோம்.

**539. மருவிய சுழுத்தி போலும் மகத்தான தாணு போலும்**
**பிரமமாம் என்இ டத்தில் பிறிதுபோல் காண்ப துஎல்லாம்**
**ஒரு அணு வேனும் இல்லை உள்ளவன் நானே என்று**
**நிருமலப் பார்வை தானே நிகழ்த்திய வாத திட்டி.**

உறக்கத்தில் போல பேதமற்றும், பெரிய தூணைப் போல அசைவற்றும் உள்ள பிரம்மம் ஆகிய என்னிடம், வேறாக காணப்படுவது யாவும் ஒரு சிறிதும் இல்லை. உண்மையாக நானே இருப்பவன் என்ற குற்றம் இல்லாத நோக்கமே கூறிய வாத திருஷ்டி ஆகும்.

**540. இருமைசேர் கனவு போலும் இந்திர சாலம் போலும்**
**பிரமமாம் என்இ டத்தில் பிறிதுபோல் காணப் பட்ட**
**சருவமும் மித்தை ஆகும் சத்தியம் நானே என்று**
**விரிவுறும் பார்வை தானே மித்தியா திட்டி ஆகும்.**

பிரம்மம் ஆகிய என்னிடம் வேறாகக் காணப்பட்ட எல்லாமும் சுகதுக்கங்களைத் தரும் கனவைப் போலும், இந்திர சால வித்தை போலவும் பொய்யே ஆகும். உண்மையாக இருப்பவன் நானே என்ற பரந்த நோக்கமே மித்தியா திருஷ்டி ஆகும்.

**541. பரவிய ஆழி போலும் பார்த்திடும் கனவு போலும்**
**ஒருசிதா காச மான உருவமாம் என்இ டத்தில்**
**பிரிவுபோல் காண்ப எல்லாம் பிரமமாம் நானே என்று**
**பிரிவிலாப் பார்வை தானே பிரவிலா பதிட்டி ஆகும்.**

பெரிய கடல் போல வியாபகமாகவும், கனைவக் காணும் சாட்சி போலவும் உள்ள, ஒப்பற்ற அறிவு வடிவமாகிய என்னிடம் வேறாகக் காணப்படும் யாவும் பிரம்மம் ஆகிய நானே என்று பேதம் இல்லாமல் பார்ப்பதுவே பிரவிலாப திருஷ்டி ஆகும்.

**542. ஓதிய திட்டி மூன்றில் உளத்தினுள் இசைந்தது ஆன**
**ஏதுஒரு திட்டி யாலும் இருமையாம் திருசி யத்தைத்**
**தீதற நீக்கி நித்தம் திருக்குமாத் திரமாய் நின்ற**
**பேதமில் பரம்உ ணர்ந்து பேற்றினை அடைய வேண்டும்.**

கூறிய மூன்று திருஷ்டிகளுள் மனதிற்கு இசைந்த எதாவது ஒரு திருஷ்டியால் துவிதமாக காணப்படும் பொருளை குற்றமின்றி நீக்கி எப்பொழுதும் அறிவு வடிவமாக மட்டுமே விளங்கும் வேறுபாடற்ற பிரம்மத்தை அறிந்து வீடு பேற்றினை அடையவேண்டும்.

**543. பரவிய திட்டி மூன்றும் பரசிதா காச மான**
**பிரமஞா னத்தி னுக்குப் பேணிய ஏது வேனும்**
**பிரிவுஇலாப் பார்வை ஆகும் பிரவிலா பதிட்டி தானே**
**ஒருமையாம் ஞானம் சேர உத்தம ஏது ஆகும்.**

கூறய முன்று திருஷ்டிகளும் மேலான அறிவு வடிவமான பிரம்மத்தை அறிவதற்கு பொருத்தமான காரணம் ஆகும். ஆனாலும் வெளிப் பொருளும் பிரம்மமும் வேறல்ல என்று

பார்க்கும் பிரவிலாப திருஷ்டியே, பிரம்மம் ஒன்றே என்ற ஞானம் ஏற்பட உயர்ந்த காரணமாகும்.

**544. உன்னுடை அகண்டம் ஆன உண்மையாம் சொரூபம் தன்னை**
**உன்னுடை அனுப வத்தால் உற்றுநீ யேஉ ணர்ந்து**
**பின்னமில் சீவன் முத்திப் பேறுஎனும் இன்பம் பெற்று**
**நின்னிடை நிருவி கற்ப நிலைமையாய் நீஇ ருப்பாய்.**

உனது அகண்டமான (வரம்பற்ற) உண்மையான பிரம்மவடிவத்தை, உனது அனுபவத்தால் நீயே சிந்தித்து அறிந்து கொள். பிறகு பின்னமில்லாத சீவன் முத்திப் பேறு என்னும் ஆனந்தம் பெற்று, உன் வடிவத்திலேயே விகற்பமற்று நீ நிலைத்து இருப்பாயாக.

**545. பரமமாம் வேதாந் தத்தின் பரமசித் தாந்தம் ஈதே**
**பிரமமே சீவர் யாவும் பிரமமே சகம்அ னைத்தும்**
**பிரயனே பிரம்ம ஆகப் பிரிவற இருத்தல் மோட்சம்**
**சுருதியின் முடிவுஅ னைத்தும் சொன்னதில் பிரமா ணம்காண்.**

மேன்மையான வேதாந்தத்தின் மேலான முடிந்த கருத்து இதுவே ஆகும். சீவர்கள் யாவரும் பிரம்மமே, உலகம் எல்லாம் பிரம்மமே ஆகும். பிரம்ம வடிவமாகப் பேதமற்று இருப்பதே வீடுபேறு ஆகும். கூறியதற்கு வேதங்களின் முடிவான உபநிஷத்துக்கள் எல்லாமே பிரமாணம் ஆகும்.



# சீடன் இயல்பியல்

**546. என்னலும் குரவன் வாக்கால் ஏதம்இல் மறைமா னத்தால்**
**தன்னுடை மனனம் தன்னால் தத்துவம் அறிந்து சீடன்**
**பின்னஇந் தியம்அ டக்கிப் பேதம்இல் சமாதி பெற்றுத்**
**தன்னிலே அசல னாகத் தான்ஒரு இடத்துஇ ருந்தான்.**

இவ்வாறு குருவானவர் கூறிய உடன், சீடன் குரு உபதேசத்தாலும், மாசற்ற வேதத்தின் பிரமாணத்தாலும், தன்னுடைய இடைவிடாத சிந்தனையினாலும் பிரம்மத்தை அறிந்து கொண்டு, வேறு வேறான இந்திரியங்களை அடக்கி, பேதம் இல்லாத சமாதி நிலை பெற்று, அவன் தனது சமாதி நிலையில் அசைவற்றவனாய் ஓரிடத்தில் இருந்தான்.

**547. இந்தவா சிறிது காலம் ஏகமாம் பிரமத் தின்கண்**
**தொந்தம்இல் சமாதி தன்னைத் துகள்இலா மனத்தால் பெற்றுப்**
**பிந்திஅந் நிட்டை விட்டுப் பிரிந்துபேர் இன்பத் தோடே**
**அந்தம்இ லாத தன்னின் அனுபவம் அறையல் உற்றான்.**

இவ்வாறு சிலகாலம் ஒன்றே ஆன பிரம்மத்தில், இரண்டற்ற சமாதி நிலையை, குற்றமில்லாத மனத்தினால் பெற்றான். பின்பு அந்த சமாதி நிலையை விட்டு அகன்று, அளவற்ற ஆனந்தத்தோடு, தனது அழிவற்ற பிரம்மானந்த அனுபவத்தைக் கூறத் தொடங்கினான்.

**548. பிரமசீ வைக்கி யத்தைப் பேணிநான் அறிந்த தாலே**
**பிரிவுசெய் புந்தி யும்போய்ப் பிரவிர்த்தி யாவும் நீங்கி**
**உருஇது உருகி தன்றுஎன்று ஒன்றையும் உணர்கி லேன்யான்**
**ஒருமையாம் இச்சு கத்திற்கு உற்றஓர் கரையும் காணேன்.**

பிரம்மமும் சீவனும் ஒன்றாய் இருக்கும் தன்மையை நான் அனுபவித்து அறிந்தேன். அதனால் பேதபுத்தி அழிந்து, செயலில் ஈடுபாடுயாவும் நீங்கி விட்டது. இது பிரத்தியட்சம் (கண் கூடான பொருள்), இது பரோட்சம் (கண்கூடான பொருள் அல்ல) என ஒன்றையும் நான் அறியவில்லை. ஒப்பற்ற இந்த ஆனந்தத்திற்கு பொருந்திய ஒரு எல்லையை நான் காணவில்லை.

**549. விரும்பிய சொரூப ஆனந்த விமலமாம் சுதை யினாலே**
**நிரம்பிய பிரமம் ஆகும் நிர்மல வாரி தன்னின்**
**பரம்பிய மகிமை தன்னைப் பகர்ந்திட வளக்கி னாலும்**
**தெரிந்திட மனதி னாலும் திறமையை அடைந்தோர் இல்லை.**

யாவரும் விரும்பும் ஆனந்த வடிவமான, மாசற்ற அமிர்தத்தினால் நிரம்பிய சமுத்திரமே தூய பிரம்மம் ஆகும். அதன் அளவற்ற பெருமையை சொல்லால் எடுத்துக் கூறவும், மனதினால் நினைப்பதற்கும் திறமை உடையவர் ஒருவரும் இல்லை.

**550. சிந்துவில் ஆலங் கட்டி சேர்ந்துஅதில் கரைவ தேபோல்**
**அந்தமில் பிரமஆ னந்தம் ஆகிய சிந்து தன்னின்**
**விந்துவின் லேசா லேசம் மீதுதான் வீழ்ந்த என்தன்**
**புந்தியும் அதில்க ரைந்து பூரணச் சுகம்ஆ யிற்றே.**

கடலில் ஆலங்கட்டி மழை விழுந்து அதில் கரைந்து விடும். அதுபோல, அழிவற்ற பிரம்மானந்தம் ஆகிய கடலின், திவலையின் மிகச்சிறிய பாகத்தின் மீது விழுந்த என் புத்தியும், பிரம்மானந்தத்தில் கரைந்து பூரண ஆனந்தம் ஆனது.

**551. பங்குற இன்று கண்ட பார்முதல் சகம்அ னைத்தும்**
**இங்குத்தான் எவன வேனும் இல்லைஈ துஎன்னே என்னே**
**எங்குத்தான் ஏகல் ஆய்த்தோ யாதினால் நீக்கல் ஆய்த்தோ**
**எங்குத்தான் லீனம் ஆய்ததோ ஈதுதான் என்னே என்னே.**

பலவாக இன்று நான் கண்ட பூமிமுதல் உலகம் எல்லாம் இந்த பிரம்மத்தில் சிறிதளவும் இல்லை. இது என்ன பெரிய ஆச்சரியம்! எங்கே சென்று விட்டதோ! எக்காரணத்தால் நீங்கி விட்டதோ! எங்கு போய் மறைந்ததோ! இது என்ன பெரிய ஆச்சரியம்!

**552. பேதம்இல் அகண்டஆ னந்தப் பெயர்பெறும் சுதைநி றைந்த**
**போதமாம் பிரமம் என்னும் பூரணச் சிந்து வின்கண்**
**ஏதுதான் தள்ளத் தக்கது ஏதுதான் கூட்டத் தக்கது**
**ஏதுதான் வேறா கின்றது ஏதுதான் விருத்தம் அந்தோ.**

வேறுபாடற்ற, அளவுகடந்த ஆனந்தம் என்ற பெயர் உடைய அமிருதத்தில் எது தள்ளத்தக்கது? எது கொள்ளத்தக்கது? எது வேறாக இருக்கின்றது? முரண்பாடாக விளங்கும் பொருள் எதுவும் இல்லை.

**553. பிரமமா சாக ரத்தில் பிறிதினை ஒன்றும் காணேன்**
**பிரமமா சாக ரத்தில் பிறிதினை ஒன்றும் கேளேன்**
**பிரமமா சாக ரத்தில் பிறிதுஏதும் அறிகி லேன்யான்**
**பிரமஆ னந்த மாகப் பிரிவற இருக்கின் றேனே.**

பிரம்மம் ஆகிய மகா சமுத்திரத்தில் வேறுஒன்றையும் நான் காணவில்லை; கேட்கவில்லை; அறியவில்லை. எப்பொழுதும் பேதமற ஆனந்த வடிவமாகவே இருக்கின்றேன்.

**554. தேசிக ராச போற்றி தெரிந்துஉள பெரியோய் போற்றி**
**பாசம்அற் றவனே போற்றி பரமஉத் தமனே போற்றி**
**ஏசுஇலா இன்ப இரதமாம் உருவே போற்றி**
**மாசு இலா விபுவே போற்றி மாஅருட் கடலே போற்றி.**

குருமார்களின் அரசரே, பிரம்மத்தை எப்பொழுதும் அறிந்த பெரியவரே, பற்றற்றவரே, ஞானிகளுக்குள் மிகச் சிறந்தவரே, குற்றமில்லாத, ஒன்றேயான ஆனந்தமான இனிமையான வடிவமானவரே, மாசற்று எங்கும் வியாபகமானவரே, கருணை ஆகிற கடல் போன்றவரே வணக்கம்.

**555. நின்னுடைக் கடாட்சம் ஆகும் நெருங்கிய நிலவி னாலே**
**என்னுடைய பவதா பத்தால் எய்திய துன்பம் நீங்கி**
**உன்னிய அகண்டஆ னந்த உண்மையாம் ஆன்ம ரூபம்**
**மன்னிநான் கணநே ரத்தல் மகத்துவம் அடைந்தேன் அந்தோ.**

தங்களுடைய கடைக்கண் பார்வை ஆன அடர்ந்த சந்திரனால் மேலும், அளவுகடந்த ஆனந்தமாயும், சத்தியமாயும் உள்ள ஆத்ம வடிவத்தை நொடிப் பொழுதில் அடைந்து, நான் பெரும் பேற்றை அடைந்தேன்.

**556. நாதநின் அருளி னாலே நவில்பவ நக்க ரத்தின்**
**பீதியை விடுத்தோன் ஆனேன் பேற்றினைப் பெற்றோன் ஆனேன்**

**ஓதரும் தன்யன் ஆனேன் உள்ளபூ ரணமே ஆனேன்**
**சோதியாய் நித்யஆ னந்த சொரூபமே ஆனேன் அந்தோ.**

நாதனே, தங்களுடை அருளால் பிறவிஆகிய முதலையின் பயத்தில் இருந்து விடுபட்டேன். வீடுபேற்றினைப் பெற்றேன். என்றும் எங்கும் நிறைந்தவன் ஆகிவிட்டேன். என்றும் சுயம்பிரகாசமான ஆனந்த வடிவினன் ஆகி விட்டேன்.

**557. சங்கமும் விட்டோன் ஆனேன் சரீரமும் அற்றோன் ஆனேன்**
**லிங்கமும் இற்றோன் ஆனேன் லீனம்ஆம் மனத்தன் அனேன்**
**தங்குஅள வற்றோன் ஆனேன் தாபமும் விட்டோன் ஆனேன்**
**பங்கம்இல் புராணன் ஆனேன் பரமநின் அருளி னாலே.**

மேலானவரே, தங்களது அருளால் நான் பற்று விட்டவனும், சரீரம் இல்லாதவனும் ஆகிவிட்டேன். லிங்கம் என்கிற சூட்சும சரீரம் இல்லாதவன் ஆகிவிட்டேன். ஒடுங்கிய மனம் உடையவன் ஆகிவிட்டேன். நிலையாக அளவு கடந்தவன் ஆகிவிட்டேன். துன்பங்களை நீக்கியவனாய். குறைவற்ற மேன்மை உடையவன் ஆகிவிட்டேன்.

**558. கத்திரு போக்த்ரு த்வங்கள் கற்பித விகாரம் யாவும்**
**நித்தமும் அற்று நின்ற நிட்கிரிய சொரூபம் அனேன்**
**சுத்தசித் சொரூபம் ஆனேன் சுத்தகே வலமும் ஆனேன்**
**நித்தநல் சிவமே ஆனேன் நிமலநின் அருளி னாலே.**

மாசற்றவரே, தங்கள் அருளினால் செய்பவன், அனுபவிப்பவன் என்ற கற்பனையான விகாரங்கள் (மாறுதல்) எல்லாம் எப்பொழுதும் இல்லாமல் செயலற்ற வடிவினன் ஆனேன். பரிசுத்தமான அறிவு வடிவினன் ஆனேன். சுத்தமாய் எந்த சம்பந்தமும் இல்லாமல தனித்து இருப்பவன் ஆனேன். எப்பொழுதும் மங்கள வடிவினன் ஆகிவிட்டேன்.

**559. தத்திரு போக்தி ருக்கும் காண்பவன் கேட்போ னுக்கும்**
**மெத்தவும் சொல்வோ னுக்கும் மேலதாம் சொரூபம் ஆன**
**நித்தநிட் கிரியம் ஆகி நிரம்பிஓர் எல்லை அற்ற**
**அத்தம்இல் புராணம்ஆன அசங்கசித் சொரூபம் ஆனேன்.**

செய்யபவனுக்கும், அனுபவிப்பவனுக்கும், பார்ப்பவனுக்கும், கேட்பவனுக்கும், பேசுபவனுக்கும் மிகவும் மேலான சாட்சி வடிவமானேன். என்றும் உளதாய். செயல்

அற்றவனாய், எங்கும் நிறைந்ததாய், எல்லை அற்றதாய், அழிவற்றதாய், பழமையான பற்றற்ற அறிவே வடிவமானேன்.

**560. தெரிந்திடும் பொருள் நான்அன்று தெரிந்திடாப் பொருள் நான் அன்று
விரிந்துஉள இவைகள் எல்லாம் விளக்கிநல் சுத்தம் ஆகி
நிரந்தரம் ஆக எங்கும் நிரம்பிஉள் வெளிகள் இன்றிப்
பொருந்திய அகண்டஆ னந்த போதமாம் பிரம மேநான்.**

நான் பிரத்தியட்சமாய் உள்ள பொருள் அல்ல, நான் பிரத்தியட்சமாய் இல்லாத பொருள் அல்ல. இந்த இரண்டு வகையாய் விரிந்து உள்ள பொருள்கள் எல்லாவற்றையும் விளங்கும்படி செய்து, மிகக் தூயதாய், எப்பொழுதும் எங்கும் நிறைந்து, உள்ளும் வெளியும் இல்லாமல், அளவு கடந்த ஆனந்தமான ஞானமான பிரம்மமே நான்.

**561. பகரும்ஓர் உவமை இன்றிப் பழமையாய் ஆதி இன்றி
அகம்இது அதுஎன்று இவ்வாறு ஆகிய விகற்பம் இன்றிச்
சுககன வடிவம் ஆகிச் சுத்தசித்து உருவம் ஆகி
நிகழும்நித் தியஅ கண்ட நின்மலப் பிரம மேநான்.**

கூறுவதற்கு ஒரு உவமை இல்லாததாய், தொன்மையாய், ஆதியற்றதாய், நான் அது இது என்று இவ்வாறு ஆகிய வேறுபாடுகள் இல்லாததாய், ஆனந்தம் மிகுந்த வடிவமாய், தூய அறிவே வடிவமாய் விளங்கும் என்றும் உள்ள அளவுகடந்த மாசற்ற பிரம்மமே நான்.

**562. பரவிய அயனும் ஆனேன் பரித்திடும் அரியும் ஆனேன்
இருமைதீர் சிவனும் ஆனேன் ஈசனும் நானே ஆனேன்
அருளும்நல் சிவனும் ஆனேன் அகிலமும் நானே ஆனேன்
கருணைவா ரிநியே உன்தன் கரைஇலா அருளி னாலே.**

கருணைக் கடலே, தங்களுடைய அருளால், புகழும் நான்முகன் ஆனேன். காக்கும் திருமால் ஆனேன். அழிக்கும் பெருமை உடைய உருத்திரன் ஆனேன். அருள்புரியும் நல்ல சதாசிவனும் ஆனேன். எல்லாமும் நானே ஆனேன்.

**563. பரசக சீவர் ஆனேன் பரசக சீவர் அற்ற
ஒருசிதா காசம் ஆன உருவமாம் பிரமம் ஆனேன்**

**சருவசான்று ஆகி நின்ற சந்தத போதம் ஆனேன்**
**நிருமம நிரகங் கார நிருமல சொரூபம் ஆனேன்.**

ஈசுவரனாகவும், உலகமாகவும், சீவனாகவும் நான் ஆனேன். ஈசுவரன், உலகம், சீவன் என்ற பேதங்கள் அற்ற, ஒப்பற்ற அறிவே வடிவமான பிரம்மம் ஆனேன். எல்லாவற்றிற்கும் சாட்சியாய் நின்று, எப்பொழுதும் அறிவு வடிவானேன். மமதையற்று, அகங்காரமற்று, மாசற்ற பிரம்மம் ஆனேன்.

**564. சகலபூ தத்துஇ டத்தும் சார்ந்துஉள சாட்சி ஆனேன்**
**அகிலமாம் சகத்தி னுக்கும் அமர்அதிட் டானம் ஆனேன்**
**எகுதுமுன் போகம் கோத்தா ஈதுஎன வேறாய்த் தோன்றிற்று**
**அகுதுஎலாம் இன்று நானே ஆகினேன் அந்தோ அந்தோ.**

எல்லா பூதங்கள் இடத்தும் சாட்சியாய்ப் பொருந்தி உள்ளேன். எல்லா உலகங்கள் இடத்தும் அதிட்டானமாய்ப் (ஆதாரமாய்) பொருந்தி உள்ளேன். எது ஞானம் ஏற்படுவதற்கு முன் அனுபவிக்கப்படும் பொருள் ஆகவும், அனுபவிப்பவன் ஆகவும், இது என்றும் வேறாகத் தோன்றியதோ, அது எல்லாம் இப்பொழுது நானே தான்.

**565. அகலும்ஆ னந்த சிந்து ஆகிய என்இ டத்தில்**
**பகுதியாம் வாயு வின்தன் பலவிதச் சலனத் தாலே**
**வெகுவித ஞாலம் ஆகும் விசித்திர அலைகள் தோன்றி**
**அகுதுகள் அடங்கி னாலும் ஆகுவது எனக்குஒன்று இல்லை.**

அகன்ற ஆனந்தக் கடலாக விளங்கும் என்னிடம் மாயை ஆகிய வாயுவின் பலவிதச் சலனத்தால், பல விதமான உலகங்கள் ஆகிய விசித்திரமான அலைகள் தோன்றுகின்றன, ஒடுங்குகின்றன, அவைகளால் எனக்கு ஆகும் பயன் ஒன்றும் இல்லை.

**566. உலகர்கள் அநாதி ஆக உற்றதம் அத்தி யாச**
**நிலைமையாம் நிருவி கற்ப நிட்கள வடிவாம் என்னில்**
**பலவிதத் தூலம் ஆதிப் பகுப்பினைக் கற்பிக் கின்றார்**
**கலைகணம் கற்பம் ஆதி கால்மிசைக் கற்பிப் பார்போல்.**

உலகில் மக்கள், காலத்தில் விநாடி, நிமிடம், கல்பம் (பல ஆயிரம் ஆண்டுகள்) முதலியவைகளைக் கற்பனை செய்வது போல, அநாதியாய் அடைந்த தனது

அத்தியாசத்தினால், மாறுபாடற்றதும், வடிவமற்றதும் ஆகிய பிரம்ம வடிவமான என்னிடம். பல விதமான தூலம் முதலிய பிரிவுகளைக் கற்பனை செய்கின்றார்கள்.

**567. பற்பல சித்த தோடம் பற்றிய மூட ராலே**
**கற்பிதம் அதிட்டா னத்தைக் களங்கமாய்ச் செய்யாது என்றும்**
**வெப்புஉறு கானல் நீரால் விரிவுஉறும் கானல் பூமி**
**அற்பமும் சேறுஉ டைத்தாய் ஆகுவது இல்லை அன்றோ.**

வெப்பமான கானலில் கற்பிக்கப் பட்ட நீரால், விரிந்த பாலைவனம் சிறிதும் சேறு உடையதாக ஆவதில்லை. அதுபோல பலவகையான தோஷங்களோடு கூடிய புத்தி உடைய மூடர்களால். செய்யப்பட்டக் கற்பனை அதிட்டானமானப் பிரம்மத்தை எப்பொழுதும் களங்கம் அடையச் செய்யாது.

**568. பரவிய ஆகா சம்போல் பற்பல விகற்பம் அற்றேன்**
**இரவிபோல் விளக்கப் பட்டது எவையினும் வேறா கின்றேன்**
**உரவிய வரைபோல் என்றும் ஊன்றிநிச் சலனா கின்றேன்**
**கருதிய வாரி போல்ஓர் கரையுமே அற்றோன் ஆனேன்.**

எங்கும் பரவி இருக்கும் ஆகாசத்தைப் போல் பலவகையான வேறுபாடுகளற்ற ஒருவனே ஆனேன். சூரியனைப் போல், விளக்கப்படும் எல்லாப் பொருள்களைக் காட்டிலும் வேறானவன். திரமான மலையைப் போல் எப்பொழுதும் நிலைபெற்று அசையாதவன். கடலைப் போல் ஒரு கரை (எல்லை) அற்றவன்.

**569. பூதஆ காசம் மேகப் புணர்ப்பினை அடையா தேபோல்**
**போதமாம் நானும் தேகப் புணர்ப்பினை அடைய வில்லை**
**ஆதலால் தேக தர்மம் ஆகிய நனாக்க னாவும்**
**ஏதமாம் துயிலும் என்றும் ஏகமாம் எனக்கு உண்டோ.**

ஆகாசம் மேகத்துடன் சம்பந்தம் அடையாதது போல, அறிவு வடிவமான நானும் சரீரத்தோடு சம்பந்தம் அடையவில்லை. ஆகையால் சரீரத்தின் தர்மங்கள் ஆகிய குற்றம்தரும் சாக்கிரமும், சொப்பனமும், சுழுத்தியும் எப்பொழுதும் ஒன்றாகவே விளங்கும் எனக்கு உண்டோ? இல்லை.

**570. வாதக தேகம் ஆதி வந்திடும் போயி டும்மற்று**
**ஏதமாம் கன்மம் செய்யும் எய்திய பயனைத் துய்க்கும்**
**சாதமே முதல்லி காரம் சார்ந்திடும் ஆத லாலே**
**போதமாம் நான்கு லக்கோ போலநிச் சலனே என்றும்.**

கேடு அடையும் சரீரம் முதலானது வருகின்றது, போகின்றது. குற்றமான கருமங்களைச் செய்கிறது. அதனால் அடைந்த பயனை அனுபவிக்கிறது. பிறத்தல் முதலிய விகாரங்களை அடைகிறது. ஆகையால் அறிவு வடிவமாகிய நான் குல பர்வதம் போல எப்பொழுதும் அசைவற்றவனே ஆவேன்.

**571. ஒருபகுப்பு இன்றி என்றும் ஒருஉரு வாம்எ னக்கு**
**மருவும்ஓர்பி ரவிர்த்தி இல்லை மற்றொரு நிவிர்த்தி இல்லை**
**கருதிய விண்போல் எங்கும் கலந்துஇடை வெளிஇ லாமல்**
**ஒருமையாய் நிறைந்த நான்இங்கு உற்றுஎதைச் செய்வோன் ஆவேன்.**

எப்பொழுதும் பிளவுபடாமல் ஒரே வடிவமான எனக்கு எந்த செயலிலும் பொருந்தி ஈடுபடுவது இல்லை. மேலும் எந்த செயலில் இருந்து விலகுவதும் இல்லை. ஆகாசத்தைப் போல எல்லா இடங்களிலும் கலந்து, இடைவெளி இல்லாமல், ஒன்றேயாய் நிறைந்து இருக்கும் நான் இங்கே எதனைச் செய்பவன் ஆவேன்?

**572. இந்தியம் சித்தம் இன்றி யாதுஒரு விகாரம் இன்றி**
**வந்தஓர் வடிவம் இன்றி வான்என அகண்ட போத**
**ஆனந்தமாம் எனக்குப் பாவம் நல்வினை என்றும் இல்லைச்**
**சுந்தர வேத மும்தான் சொல்வதுஇப் படியே அன்றோ.**

இந்திரியங்களும், மனதும் இல்லாமல், எந்த விகாரமும் இல்லாமல், தனக்கு என ஒரு வடிவமும் இல்லாமல் ஆகாசம் போல, அளவுகடந்த அறிவாகவும், ஆனந்தமாகவும் விளங்கும் எனக்கு பாவமும் புண்ணியமும் என்றுமே இல்லை. அழகான வேதமும் இப்படியே அல்லவா சொல்கிறது.

**573. புருடனின் நிழலி னோடே பொருந்திய தாபம் சீதம்**
**மருவிய தீங்கு நன்கு மற்றுஇவை ஏதுஆ கட்டும்**
**தரணியில் அந்தச் சாயை தன்னின்வே றாகி நின்ற**
**புருடனுக்கு இலாத தேபோல் புகல்வினை எனக்கும் இல்லை.**

ஒருவனின் நிழலோடு பொருந்திய வெப்பமும் குளிரும், தீமையும், நன்மையும், மேலும் எது ஆனாலும், உலகில் அந்த நிழலில் இருந்து வேறு ஆகின்ற அவனுக்கு இல்லாமல் போகும். அதுபோல கூறிய நல்வினை தீவினைகள் (பிரம்மமாகிய) எனக்கு இல்லை.

**574. திருசியங் கட்டு வேறாய்த் திகழ்ந்துஉதா சீன மாகி**
**நிருவிகா ரியுமே ஆகி நிகழ்ந்திடும் திருக்காம் என்னைத்**
**திருசிய தருமம் ஒன்றும் சேர்ந்திடாது ஓர்இல் லத்தின்**
**தருமம்அங்கு உள்ள தீபம் தன்னினைச் சாரா தேபோல்.**

ஒருவீட்டில் நடை பெறும் செயல்கள் அந்த வீட்டில் உள்ள விளக்கினை அடையாது. அதுபோல, பார்க்கப்படும் பொருள்களுக்கு வேறாகி, விருப்பு வெறுப்பு இல்லாமல், விகாரமற்றவனாகி, அறிவே வடிவமாக விளங்கும் என்னை, பார்க்கப்படும் பொருள்களின் குணங்கள் யாதும் வந்து அடையாது.

**575. சந்ததம் இரவி கன்ம சாட்சியாய் இருக்கின் றால்போல்**
**தொந்தமாம் அயப்பிண் டத்தைச் தொடர்அனல் எரிக்கின் றால்போல்**
**சந்தியில் இரச்சு ரூபம் சர்ப்பமே ஆகின் றால்போல்**
**அந்தமில் கூடத்த ஆன்மா ஆகிய நானும் ஆவேன்.**

எப்பொழுதும் சூரியன் உலகச் செயல்களுக்கு சாட்சியாய் இருப்பது போலவும், அக்கினியுடன் தொடர்ந்து ஒன்றுபட்ட உருண்டையான இரும்பு சுடுவது போலவும், மந்த இருளில் கயிற்றின் வடிவம் பாம்பு ஆகத் தோன்றுவது போலவும், அழிவற்ற மாறுதலற்ற ஆத்மாவாகிய நானும் சூரியனைப் போல சாட்சி ஆகவும், இரும்பு சுடுவதைப் போல செயல் புரிபவன் ஆகவும், பாம்பு தோன்றுவது போல கற்பிதம் ஆகவும் ஆவேன்.

**576. ஒன்றினைச் செய்வோ னும்மற்று ஒன்றினைச் செய்விப் போனும்**
**ஒன்றினைத் துய்ப்போ னும்மற்று ஒன்றினைத் துய்ப்பிப் போனும்**
**ஒன்றினைக் காண்போ னும்மற்று ஒன்றினைக் காண்பிப் போனும்**
**அன்றுநான் சுயமே சோதி ஆகிய ஆன்மா ஆனேன்.**

ஒரு செயலை செய்பவன் ஆகவோ, ஒரு செயலைச் செய்விப்பவன் ஆகவோ நான் இல்லை. ஒரு பொருளை அனுபவிப்பவன் ஆகவோ, ஒரு பொருளை அனுபவிக்கச் செய்பவன் ஆகவோ நான் இல்லை. ஒரு பொருளைக் காண்பவன் ஆகவோ, ஒரு

பொருளைக் காட்டுவிப்பவன் ஆகவோ நான் இல்லை. நான் சுயம்பிரகாசமான ஆத்மா ஆனேன்.

**577. சலித்திடும் உபாதி யோடே சார்ந்தசித் பதிபிம் பத்தின்**
**அலைத்தலை மூடர் ஆனோர் அஃதினுக்கு அயலே ஆன**
**சலித்திடா அகண்ட சித்தின் சத்துஅதாம் பிம்பத் தின்கண்**
**செலுத்திநான் கர்த்தா போக்தா சிதைந்தவன் என்று சோர்வர்.**

மூடர்கள், அசைகின்ற அந்தக்கரணம் ஆகிய உபாதியுடன் சம்பந்தப்பட்ட, பிரதிபிம்பத்தின் அசைவை, அந்த பிரதிபிம்பத்துக்கு வேறான, அசைவற்ற, அளவுகடந்த, அறிவான, சத்தான பிம்பத்தில் ஏற்றி வைத்து, நான் செய்கிறவன், அனுபவிக்கிறவன், அழிகிறவன் என்று கருதி வருந்துவர்.

**578. பரவிய சலத்தில் கண்ட பாற்கரன் பதிபிம் பத்தின்**
**மருவிய தருமம் யாதும் மற்றுஅவற்கு இலாத தேபோல்**
**திரிவுஉறும் உபாதி சேர்ந்து திகழ்சிதா பாச தர்மம்**
**ஒருசிதா காசம் ஆன உருவமாம் எனக்கும் இல்லை.**

தேங்கிய நீரில் கண்ட சூரியனுடைய பிரதிபிம்பத்தில் பொருந்திய எந்த குணமும் பிம்பம் ஆகிய சூரியனுக்கு இல்லை. அதுபோல அலைகின்ற அந்தக்கரணத்தோடு சேர்ந்து விளங்குகின்ற ஆபாசன் ஆகிய சீவனின் குணங்கள், ஒப்பற்ற அறிவு ஆகாசமான வடிவான எனக்கு இல்லை.

**579. சலத்திலோ தலத்தி லோஇச் சடமான தூல தேகம்**
**அலைந்துதான் புரண்ட போதும் அஃதுஉள தர்மம் தன்னைக்**
**கலந்திடேன் நான்யாது ஒன்றும் கடத்துஉள தர்மம் தன்னைச்**
**சலித்திடா ஆகாசம் தான் சற்றுமே சாரா தேபால்.**

அசைவற்ற ஆகாசம் குடத்தின் இயல்புகளைச் சிறிதும் அடையாமல் இருக்கும். அதுபோல, சடமான இந்த தூல சரீரம் நீரிலோ, தரையிலோ விழுந்து புரண்டாலும், அந்த சரீரத்தின் யாது ஒரு இயல்பையும் நான் அடைய மாட்டேன்.

**580. கத்திரு போக்திரு த்வங்கள் கலத்துவ சடத்து வங்கள்**
**பெத்தமுத் தத்து வங்கள் பெரியசா துத்து வாதி**

**புத்தியின் விகற்பம் அன்றிப் பூரணப் பிரமம் ஆன**
**சுத்தஅத் துவிதஅ கண்ட சொரூபமாம் எனக்குஈ துஇல்லை.**

செய்பவனாய், அனுபவிப்பவனாய் இருத்தல், துஷ்டனாய் சடமாய் இருத்தல், கட்டுப்பட்டவனாய், விடுபட்டவனாய் இருத்தல், உயர்ந்த சாதுத் தன்மை முதலானவைகள் புத்தியின் கற்பனையால் ஏற்படும் வேறுபாடுகளே ஆகும். எங்கும் நிறைந்த, பிரம்மமே ஆன, தூயதும் இரண்டற்றதும், அளவுகடந்த வடிவம் உடைய எனக்கு இந்த குணங்கள் இல்லை.

**581. பகுதியின் விகாரக் கூட்டம் பத்துநூ றுஆயி ரங்கள்**
**எகுதுதான் உதித்த போதும் ஏகசித் தாம்எ னக்கு இங்கு**
**அகுதினால் ஆநி என்னை அமலமாம் ஆகா சத்தில்**
**முகிலின்ஆ டம்ப ரம்தான் முனைத்தலால் ஆநி உண்டோ.**

மாயையின் மாறுதல்கள் பத்து ஆகவோ, நூறு ஆகவோ, ஆயிரக்கணக்காகவோ, எவ்வளவுதான் உண்டாகட்டும். ஒரே அறிவுவடிவமான எனக்கு அவைகளினால் இங்கே என்ன குறைவு ஏற்படும்? மாசற்ற ஆகாசத்தில் மேகத்தின் இடி, மின்னல் முதலிய ஆடம்பரம் வெளிப்படுவதால் குறைவு ஏற்படுமோ?

**582. பகுதியே முதலாய்த் தூல பரியந்த மான இந்த**
**அகிலமா ஞாலத் திற்கும் அதிட்டான மாய்இ லங்கி**
**ககனநேர் ஆதி அந்தம் கலந்திடாச் சூக்கம் ஆகி**
**நிகழும்அத் துவிதஅ கண்ட நின்மலப் பிரம மேநான்.**

மாயை முதல் தூலப் பொருள் முடிய உள்ள இந்தப் பெரிய எல்லா உலகங்களுக்கும் ஆதாரமாய் விளங்கிக் கொண்டு, ஆகாசத்தைப் போல சூட்சுமமாய், ஆதியும் அந்தமும் அற்றதாய், விளங்கும் இரண்டற்ற அளவுகடந்த மாசற்ற பிரம்மம் ஆகவே நான் இருக்கிறேன்.

**583. உன்னிய மாயை செய்த ஓர்விகற் பமுமே இன்றி**
**மன்னிய பிரத்யக் ஆன்ம வடிவமாய்ப் புத்தி யாலே**
**இன்னதுஎன்று உணர ஒண்ணா இன்பமாய்ச் சத்துச் சித்தாய்த்**
**துன்னும்அத் துவிதஅ கண்ட சொரூபமாம் பிரம மேநான்.**

சிந்தித்து அறியத்தக்க, மாயை உண்டாக்கிய எவ்வித வேறுபாடுகளும் இல்லாமல், ்ள்ளே விளங்கும் ஆத்ம வடிவமாக நிலைபெற்று, புத்தியால் இப்படிப் பட்டது என்று ுறிய முடியாத. சத்து சித்து ஆனந்தமாய் பொருந்தி உள்ள, இரண்டற்ற, அளவுகடந்த. ிரம்மம் ஆகவே நான் இருக்கின்றேன்.

**584. சகலஆ தாரம் ஆகிச் சகலசாட் சியுமே ஆகிச்**
**சகல ஆ காரம் ஆகிச் சகலபூ ரணமே ஆகிச்**
**கசலமும் இன்றித் தூய்தாய்ச் சத்தும்ஆய்ச் சலனம் அற்ற**
**அகம்இலா நிருவி கற்ப அத்வயப் பிரம மேநான்.**

எல்லாவற்றிற்கும் ஆதாரமாய். எல்லாவற்றிற்கும் சாட்சியாய், எல்லா வடிவமாய், ால்லாவற்றிலும் நிறைந்து இருப்பதாய், பரிசுத்தமாயும், சத்துமாயும், அசைவற்ற, அகங்காரமற்ற, இரண்டற்ற பிரம்மமாய் நான் இருக்கின்றேன்.

**585. ஒருசெயல் ஒருவி காரம் ஒருபகிர்ப்பு ஓர்வி கற்பம்**
**ஒருஉரு ஓர்ஆ லிம்பம் ஒருவிநா சமுமே இன்றிச்**
**சருவமாய்ச் சருவஆன் மாவாய்ச் சருவமும் தாண்டி ஒன்றாய்ப்**
**பொருஇலா அகண்ட ஆ னந்த போதமாம் பிரமமே நான்.**

எந்த செயலும், எந்த வேறுபாடும், எந்தபகுப்பும், எந்த பேதமும், எந்த வடிவமும், எந்த ஆதாரமும். எந்த நாசமும் இல்லாமல், அனைத்துமாய். அனைத்திற்கும் ஆத்மாவாய், அனைத்தையும் கடந்ததாய், ஒன்றேயாய், ஒப்பற்ற அளவு கடந்த, ஆனந்தமான அறிவான பிரம்மமாய் நான் இருக்கின்றேன்.

**586. ஈசனே திவ்யம் ஆக இசைந்தநின் அருளி னாலே**
**தூசு இலாச் சொப்பிர காச சொரூபசாம் ராச்ய நிட்டை**
**நீசனாம் என்தனாலும் நித்தமாய்ப் பெறல்ஆ யிற்றே**
**தேசிகஇந் திரனே போற்றி திரும்பவும் போற்றி போற்றி.**

ஈசனுக்குச் சமம் ஆன குருவே, தங்களது அருளை நன்றாக அடைந்ததனால். மாசற்ற சுயம் பிரகாசமான, ஆத்மவடிவமாகிய பேரரசான சமாதியில் நிலைத்திருப்பதை, இழிந்தவனான நானும் எப்பொழுதும் அடைந்தேன். குருமார்களுக்கு அரசே வணக்கம். மீண்டும் வணக்கம், வணக்கம்.

**587. சனனமும் இறப்பும் ஆதி சார்ந்ததால் பொல்லாங்கு ஆன**
**கனம்அதாம் மாயை செய்த கனவினில் வெகுதா பத்தோடு**
**அநிசமும் மயங்கிச் சோர்ந்து அவ்அகங்கர வியாக்கி ரத்தால்**
**தினமுமே துன்பப் பட்ட தீனனாம் என்னைக் காத்தாய்.**

தீதான, உறுதியான மாயை தோற்றுவித்த, கனவு போன்ற உலகில் மிகுந்த துன்பத்தோடு எப்பொழுதும் மயக்கமுற்று, களைப்புற்று பிறப்பு, இறப்பு முதலியவைகளை அடைந்தேன். அந்த அகங்காரம் ஆகிய புலியால் நாள்தோறும் துன்புற்ற என்னைப் பாதுகாத்து அருள் செய்தீர்கள்.

**588. பன்னிய சொப்ப னத்தைப் பற்றிய என்னை நீயே**
**பின்னம்இல் பிரம ஞான பெலத்தினால் போதிப் பித்துஇங்கு**
**அன்னசொப் பனம் அகற்றி அகண்டஆ னந்தம் தந்து**
**தன்னியன் ஆகச் செய்தாய் தந்தையே அருளி னாலே.**

தந்தையே, கனவு போன்று கூறப்படும் உலக வாழ்வில் ஆசை கொண்ட என்னை, தங்களது வேறுபடாத, திடமான பிரம்ம ஞானத்தை உபதேசம் செய்து, இங்கே கனவு போன்ற வாழ்வை நீக்கி அளவற்ற ஆனந்தத்தைத் தந்து அருளினால் பேறு பெற்றவன் ஆகச் செய்தீர்கள்.

**589. குருபர உன்றன் எந்தக் குற்றம்இல் லாத சோதி**
**வரையிலாது அகிலம் ஆன வடிவம்ஆ கப்பி றங்கும்**
**ஒருமையாய் அகண்டஆ னந்த உண்மையாம் அந்தச் சோதி**
**உருவமே நோக்கி என்றும் உவந்துநான் போற்றல் செய்வேன்.**

உயர்ந்த குருவே, தங்கள் உடைய குறைவில்லாத எந்த ஆத்மப் பிரகாசமானது, அளவற்ற எல்லா உலக வடிவமாக விளங்குகிறதோ, ஒன்றேயாய், அளவற்ற ஆனந்தமாய், சத்தும் ஆகிய அந்த சுயம் பிரகாசமான தங்கள் வடிவத்தை அறிந்து மகிழ்ந்து எப்பொழுதும் நான் போற்றி வணங்குகிறேன்.



# புனருப தேச வியல்

**590. இன்னவா போற்றல் செய்துஇவ் ஏகமாம் தத்து வத்தை**
**அந்நியம் அறஅறிந்துஅவ் அகண்டஆ னந்தம் பெற்ற**
**தன்னிய சீடன் தன்னைத் தகைமைஉள் குரவன் நோக்கி**
**மின்னிய வதனன்ஆக மீளஇவ் வசனம் சொன்னான்.**

இவ்விதம் போற்றி, இந்த ஒன்றே ஆன உண்மையை பேதம் இன்றி அறிந்து கொண்டு அந்த அளவு கடந்த பிரம்மானந்தம் பெற்ற பாக்கியவான் ஆன சீடனை பெருமை உடைய குரு பார்த்தார். மலர்ந்த முகத்தடன் மீண்டும் இந்த வார்த்தையை சொன்னார்.

**591. அகண்டமாம் பிரமத் தோற்றம் அகிலமும் ஆத லாலே**
**சகம்இது என்னும் தோற்றம் சத்தியப் பிரமஎன்று**
**அகத்துஉறும் ஆன்ம நோக்கால் ஆறிய சித்த னாய்நீ**
**இகபரம் எவ்வி டத்தும் ஏகமாய் என்றும் பார்ப்பாய்.**

எல்லா உலகமும் அகண்டமான பிரம்மத்தின் வடிவமே ஆகும். ஆகையால் இது உலகம் என்று தோன்றுவதை. மனதில் பொருந்திய ஆத்ம திருஷ்டியால் உண்மையாக பிரம்மமே என்று அறிந்து, அமைதியான மனத்துடன், இந்த உலகம் மேல் உலகம் ஆகிய எல்லா இடங்களிலும் நீ எப்பொழுதும் ஒன்றாகவே பார்ப்பாயாக.

**592. சகத்தினில் நல்ல தான சட்சுவைச் சார்ந்தோ ருக்குப்**
**பகுத்துஉள உருவம் அன்றிப் பார்க்கவேறு இலாத போல்**
**அகண்டமாம் பிரம வித்துக்கு அமலமாம் பிரமம் அன்றி**
**அகந்தனில் அறியும் வண்ணம் அந்நியம் ஒன்றும் இல்லை.**

உலகில் நன்கு கண் உள்ளவர்களுக்கு வெவ்வேறாக உள்ள உருவங்களைத் தவிர பார்ப்பதற்கு வேறு எதுவும் இல்லை. அதுபோல, அகண்டமான பிரம்மத்தை அறிந்தவருக்கு. மாசற்ற பிரம்மத்தைத் தவிர மனதில் தோன்றும்படி வேறு எதுவும் இல்லை.

**593. எந்தநல் வித்து வான்தான் இம்மகா னந்தம் பற்றி
வந்ததன் அனுப வத்தை மாறிவா ளாம்பு லத்தில்
புந்தியால் ரமிப்பன் விண்ணில் பூரண விந்து தோன்றின்
மைந்தஒ வியமே ஆன மதியினில் ரமிப்பார் உண்டோ.**

மைந்தனே. ஆகாசத்தின் முழுச் சந்திரன் விளங்கும் போது, சித்திரமாக எழுதிய சந்திரனில் இன்பம் அடைபவர் உண்டோ? இல்லை. அது போல, எந்த ஞானி, இந்தப் பேரானந்தத்தைப் பற்றி தனக்கு வந்த (பிரம்மானந்த) அனுபவத்தை விட்டு விட்டு, பயனற்ற விடயங்களில் புத்தியைச் செலுத்தி மகிழ்வுறுவான்?

**594. மித்தியா விடயம் தன்னின் மிகுந்தஅநு பவத்தி னாலே
இத்தனை யேனும் திருப்தி இல்லைஇத் துன்பம் போகா
அத்வயஆ னந்தஆன் மாவின் அனுபவ நிட்டை தன்னை
நித்தமும் நீஅ டைந்து நிசைகத் திருப்தன் ஆவாய்.**

பொய்யா விடயங்களை அதிகம் அனுபவிப்பதனால் போதும் என்ற திருப்தி சிறிதும் கிடையாது. இந்த துன்பமும் அழியாது. ஆகையால் ஆத்மா நிட்டையால், இரண்டற்ற ஆனந்தமான அனுபவத்தை நீ அடைந்து, எப்பொழுதும் நிறைவான ஆனந்தத்தினால் திருப்தி உடையவனாய் ஆவாய்.

**595. உன்னையே வெளியில் எங்கும் ஒருமையாய் நோக்கி நிற்பாய்
உன்னையே ஒருமை ஆக உள்ளிலும் உன்னி நிற்பாய்
உன்னுடைச் சொரூபம் ஆன ஒழிவுஇலாப் பேரா னந்தம்
தன்னையே புசித்துக் காலம் தள்ளும்மா மதிஉ டைத்தோய்.**

எல்லா இடங்களிலும் ஒன்றே ஆன பிரம்மத்தையே உனது வடிவமாக அறிந்து கொண்டு இருப்பாயாக. மனதிலும் உன்னையே ஒன்றே ஆன பிரம்மமாக அறிந்து கொள்வாயாக. உனது வடிவமான, அழியாத பேரானந்தத்தையே அனுபவித்துக் கொண்டு காலம் கழிக்கும் நல்ல புத்தி உடையவனாய் இருப்பாய்.

**596. நிருவிகற் பகஅ கண்ட நின்மலப் போதஆன் மாவில்
வரு விகற் பகம்அ னைத்தும் வான்அமர் புரமே போலாம்
ஒருமையாம் ஆனந் தஆன்ம உருவம்நீ ஆகி என்றும்
பரமமாம் சாந்தி பெற்றுப் பரம்ஆன மோனம் சார்வாய்.**

விகற்பமற்றதும், அளவுகடந்ததும், மாசற்றதும், அறிவு வடிவமானதும் ஆன ஆத்மாவில், தோன்றும் வேறுபாடான நாமரூபங்கள் எல்லாம் ஆகாசத்தில் தோன்றும் ஒரு நகரமே போல ஆகும். ஒன்றேயான ஆனந்த வடிவமே ஆக நீ இருந்து கொண்டு, எப்பொழுதும் சிறந்த சாந்தியை அடைந்து, மேலான மௌனத்தைப் பொருந்தி இருப்பாய்.

**597. மித்தியா கற்ப னைக்கு மிகவுமே ஏத வான**
**புத்திநல் பிரம ரூபம் பொருந்தியே வெறிது இருத்தல்**
**உத்தம சாந்தி இத்தில் உள்ளவாறு அகண்டஆ னந்தம்**
**வித்துவா னுக்கு நித்தம் விமலமாய் விளங்கா நிற்கும்.**

பொய்யான கற்பனைகளுக்கு நெருங்கிய காரணமான புத்தி நன்மை ஆன பிரம்ம வடிவத்தைப் பொருந்தி, எதையும் எண்ணாமல் இருப்பது சிறந்த சாந்தி ஆகும். இந்த சாந்த நிலையில் அளவுகடந்த ஆனந்தம் உள்ளபடி, சீவன் முத்தனுக்கு எப் பொழுதும் தூயதாக விளங்கும்.

**598. ஏகமாம் பிரம ரூபம் யான்என உணர்ந்து அகண்டம்**
**ஆகிய அவ்ஆனந்தம் அனுபவிக் கின்ற வர்க்கு**
**மோகவா தனையே அற்ற மோனமாம் நிட்டை இன்றிச்**
**சோகம்இல் சுகம்அ ளிக்கச் சொற்பமும் வேறுஒன் றுஇல்லை.**

ஒன்றே ஆன பிரம்ம வடிவமே நான் என்று அறிந்து கொண்டு, அளவு கடந்ததான ஆனந்தத்தை அனுபவிக்கும் சீவன் முத்தனுக்கு, மோக வாசனைகள் ஒழிந்து, மௌனமாக இருக்கும் நிலையைத் தவிர, சோகமற்ற சுகத்தை தரக் கூடியது சிறிதும் வேறு எதுவும் இல்லை.

**599. தத்துவம் அறிந்த யோகி தன் சொரூ பஆனந் தத்தில்**
**நித்தமும் ரமிப் போன் ஆகி நினைத்ததன் இச்சை வாறே**
**புத்திர இருப்பன் நிற்பன் போகுவன் படுப்பன் மற்றும்**
**எத்தனை விதமோ ஆக இசைந்தவாறு இலங்கா நிற்பன்.**

ஆத்மாவை நன்கு அறிந்த சீவன் முத்தன், தான் விரும்பியபடியே, உட்கார்ந்து கொண்டும், நின்றுகொண்டும், போய்க் கொண்டும், படுத்துக் கொண்டும், மேலும் எத்தனை விதங்களில் இருந்தாலும், தன் வடிவமான ஆனந்தத்தில் எப்பொழுதும் இன்புறுபவனாய் விளங்குவான்.

**600. ஏதமாம் பதிபந் தங்கள் இன்றிய விருத்தி ஆகிப்**
**பேதம்இல் பிரம ஞானம் பெற்றுஉள பெரியோ ருக்கு**
**யாதுஒரு தேசம் காலம் இலக்கிய திட்டி ஆதி**
**ஓதும்ஆ சனமே ஆதி ஒன்றுமே தேவை இல்லை.**

குற்றமற்ற, தடையற்ற அகண்டாகார விருத்தி உடையவன் ஆகி பேதமற்ற பிரம்ம ஞானம் அடைந்த சீவன் முத்தனுக்கு எந்த ஒரு இடம், காலம், இலட்சியம், திருஷ்டி முதலியனவும். ஆசனம் முதலியனவும் ஒன்றுமே தேவை இல்லை.

**601. தன்னினை அறிவ தற்குத் தான்ஒரு நியமம் வேண்டா**
**மன்னிய கடம்இ துஎன்று மலைவுஅற அறிவ தற்குத்**
**துன்னிய பொருள்வி ளக்கம் தோடம்இல் சட்சு அன்றிப்**
**பின்ஒரு நியமம் தன்னைப் பேணுவது எங்கும் உண்டோ.**

இது குடம் என்று நிலையாக மாறுபாடு இல்லாமல் அறிவதற்கு, நெருங்கிய பொருளில் வெளிச்சமும், குற்றம் இல்லாத கண்ணும் வேண்டியவைகளே அன்றி, வேறு ஒரு நியமத்தை எங்கும் மேற்கொள்வது உண்டோ? இல்லை. அது போல தன்னைத் தானே அறிவதற்கு எந்த ஒரு நியமமும் தேவை இல்லை.

**602. அந்தவா நித்த சித்தம் ஆகிய இவ்ஆன் மாவும்**
**சொந்த மாம்மன விருத்தி சுத்தமாய் இருக்கும் போது**
**சந்ததம் தானே தோன்றும் சாரும்ஓர் தேசம் காலம்**
**பிந்திஓர் சுத்தி ஆதி பேணுவது ஒன்றும் இல்லை.**

அப்படியே எப்பொழுதும் சித்தமாய் இருக்கும் இந்த ஆத்மாவும், தனது மனதின் விருத்திகள் தூய்மை ஆன போது எப்பொழுதும் தானே விளங்கும். பிறகு குறிப்பிட்ட இடம் காலம் இவற்றை அடைந்து தூய்மை முதலியவைகளைப் பேணுவது ஒன்றும் வேண்டாம்.

**603. தேவதத் தோகம் என்று தெளிவுஉறு ஞானத் திற்குத்**
**தேவையாய் வேறுஇங்கு ஒன்றும் தேடிடாத் திறமை யேபோல்**
**பாவருப் பிரம விதத்துப் பரமமே நான்என்று இவ்வா**
**மேவிய ஞானத் திற்கு மீளஓர் அபேட்சை இல்லை.**

நான் தேவதத்தன் என்று தெளிவாக அறிவதற்கு, இங்கு எதையும் தேட வேண்டாததைப் போல, பரிசுத்தமான பிரம்மவித்தும் நான் பிரம்மமே என்று பொருந்தி அறிவதற்கு, மீண்டும் எதுவும் வேண்டுவது இல்லை.

**604. இரவியால் சகத்தைப் போல யாதுஒரு பிரம தேசால்**
**பரவிய சகம் அனைத்தும் பகுப்புடன் விளக்க லாமோ**
**ஒருமையாம் அந்தத் தேசை உண்மைஇல் லாத துச்ச**
**உருவமாம் எவ்அ நான்மா உள்ளவா விளக்கி வைக்கும்.**

சூரியனால் உலகம் விளங்குவது போல, எந்தப் பிரம்மத்தின் பிரகாசத்தினால், விரிந்த உலகம் எல்லாம் பல பிரிவுகளாகப் பிரகாசிக்கிறதோ, ஒன்றே ஆன அந்தப் பிரகாசத்தை, பொய்யானதும், அற்பமானதும் ஆன எந்த அநாத்மப் பொருள் உள்ளபடி விளக்கும்?

**605. வேதசாத் திரபு ராணம் விவிதமாம் பூதம் எல்லாம்**
**யாதுஒரு தேசி னாலே என்றுமே இலங்கா நிற்கும்**
**போதமாம் அந்தத் தேசாம் பூரணப் பிரமம் தன்னை**
**ஏதுமே இச்ச கத்தில் இலக்குவது எங்கும் இல்லை.**

வேதமும், சாத்திரமும், புராணங்களும், பலவிதமான பூதங்கள் எல்லாமும் எந்த ஒரு பிரகாசத்தினால் எப்பொழுதுமே விளக்கமாகத் தெரியுமோ, அறிவே ஆகிய அந்தப் பிரகாசமான, எங்கும் நிறைந்த பிரம்மத்தை இந்த உலகில் விளங்கச் செய்வது எதுவும் எவ்விடத்தும் இல்லை.

**606. ஓதிய இந்த ஆன்மா ஓர்சுயம் சோதி ஆகித்**
**தீதுஅற அநந்த சத்தி திகழ்வுஉடைத் தாகி எல்லாப்**
**போதமாம் உருவம் ஆகிப் பொருந்தியே மற்றுஒன் றாலும்**
**ஈதுஎன உணர ஒண்ணா இலக்கிய வடிவாய் நிற்கும்.**

இந்த ஆன்மா ஒப்பற்ற சுயம் பிரகாசமானது. தீமை இல்லாத அளவற்ற சத்தி உடையது. அறிவே வடிவமாய் எல்லா வற்றிலும் பொருந்தி இருப்பது. சத்து சித்து ஆனந்த வடிவ இலக்கணங்களை உடையதாய் விளங்குவதாம்.

**607. ஓதிய இவ் ஆன் மாவை உயர்ச்சிசேர் பிரம வித்துஇங்கு**
**ஏதமே இல்லா வண்ணம் யான்என உணர்ந்து நன்றாய்த்**

தீது அதாம் பந்தம் விட்டுத் திரம்ஆன முத்தி பெற்று
யாதுஒரு துன்பம் இன்றி ஏகமாய் இலங்கா நிற்பன்.

மேன்மை பொருந்திய பிரம்மஞானி, கூறிய இந்த ஆத்மாவை, இங்கே குற்றம் இல்லாமல் தானே என நன்கு அனுபவித்து அறிந்து, தீமை தரும் தகைளை நீக்கி, நிலையான முத்தியை அடைந்து, எவ்விதத் துன்பமும் இல்லாமல், ஒன்றாகவே விளங்குவான்.

**608.** **பிரிவுஇல்ஆ னந்த திருப்தி பெற்றுஉள பிரம வித்து**
**மருவிய விடயத் தாலே மகிழ்வுசோர்வு அடையான் அத்தில்**
**உரவிய காமம் ஆதி உற்றிடான் தன்இ டத்தே**
**சருவதா ரமிப்போன் ஆகிச் சந்ததம் மகிழ்ச்சி சார்வன்.**

சீவன்முத்தன், நீங்காத பிரம்மானந்தத்தால் திருப்தி அடைந்தவன். தன்னை வந்து அடைந்த விடயங்களால் மகிழ்வதில்லை, வாடுவதுமில்லை. அவைகளில் உறுதியாக ஆசை முதலியவைகளை அடைந்திடான். தன்னிடத்திலேயே எப்பொழுதும் இன்புறுபவன் ஆகி எப்பொழுதும் மகிழ்ந்து கொண்டு இருப்பான்.

**609.** **பரவிய லீலை செய்யும் பாலகன் பசிதா கங்கள்**
**மருவிய தேக பீடை மற்றுஎதும் விட்டு லீலை**
**புரிவது போல ஞானி பூரண சுகியே ஆகி**
**நிருமல நிர்அகங் கார நிலைமையாய் ரமிப்பன் நித்தம்.**

சிறுவன், பசியையும் தாகத்தையும், வந்து அடைந்த உடலின் களைப்பையும், மற்று எவற்றையும் விட்டு விட்டு, பல விதமாக விளையாடுவான். சிறுவன் விளையாடுவது போல, ஞானியும் முழுமையான ஆனந்தம் உடையவனாய், மாசற்றவனாய், அகங்காரம் இல்லாதவனாய், எப்பொழுதும் நிலையாக இன்பமுற்று இருப்பான்.

**610.** **சிந்தைதை லாமல் செறிபலி அன்னம் உண்டு**
**வந்துஉறு குளமே ஆதி வாரியைப் பானம் செய்து**
**பந்தமாம் நியமம் அற்றுப் பயம்அற வனம்ம யானம்**
**எந்தஓர் இடத்தும் ஞானி ஏகனாய்த் துயில்செய் வானால்.**

சீவன் முத்தன், மனதில் தாழ்மை உணர்வு இல்லாமல், மிகுதியாக பிச்சை எடுத்து உணவு உண்பான். எதிர்ப்பட்ட குளம் முதலியவற்றில் நீர் பருகுவான். எவ்வித கட்டுப்பாடும்,

நியமங்களும் இல்லாமல் இருப்பான். பயம் இன்றி, காடு சுடுகாடு முதலிய எந்த இடத்திலும் தனியாக உறங்குவான்.

**611. சுத்தமாய்த் தோய்த்து உலர்த்தாத் துகில்தரித்து அலது திக்கை**
**வத்திர மாய் உடுத்தி அந்தபூ மியில் நடந்து**
**வித்திர வேதாந் தத்தின் வீதியில் சஞ்ச ரித்து**
**வித்துவான் பிரமத் தின்கண் விமலமாய் ரமிப்பன் என்றும்.**

பிரம்மஞானி, நன்றாக துவைத்து உலர்த்தாத ஆடையை அணிந்து அல்லது திசைகளையே ஆடையாய் உடுத்திக் கொண்டு (ஆடையற்றவனாய்) பூமியில் நடமாடுவான். விசலாமான வேதாந்தம் ஆகிய வீதியில் நடமாடிக் கொண்டு; மாசற்றவனாய் பிரம்மத்தினிடம் எப்பொழுதும் இன்பம் அடைந்து கொண்டு இருப்பான்.

**612. இன்னஎன்று உணர ஒண்ணா இலக்கணம் உடையோன் ஆகிப்**
**பன்னிய பாகி யத்தைப் பற்றிடா ஆன்ம ஞானி**
**அந்நியர் இச்சை யாலே அமைவதைப் பால னேபோல்**
**துன்னிதே கஅபி மானத் துகள் இறந் தவனாய்த் துய்ப்பன்.**

சீவன் முத்தன், இப்படிப் பட்டவன் என்று அறிய முடியாத இலட்சணம் உடையவன். வெளிப் பொருள்களில் பற்றில்லாதவன். பிறர் விருப்பத்தால் தனக்குக் கிடைப்பதைத் குழந்தையைப் போல அனுபவிப்பான். சரீர அபிமானம் ஆகிய குற்றம் நாசம் அடைந்தவனாய், இருப்பான்.

**613. அகண்டமாம் சிதம்ப ரத்தில் அமர்ந்துஉள பிரமஞானி**
**திகம்பரம் அலது மற்றோர் திவ்விய அம்பரம் தான்**
**வகுத்தஓர் வற்கல் ஆதி வத்திரம் தான்உ டுத்திப்**
**பகுப்புஇலாப் பாலன் பித்தன் பசாசஎனச் சஞ்ச ரிப்பன்.**

சீவன் முத்தன். அளவுகடந்த அறிவாகிய ஆகாசத்தில் (சிற்றம்பலத்தில்) நிலை பெற்றிருப்பான். திசைகளையே ஆடையாகக் கொண்டு நிர்வாணியாகவோ, மேலான ஆடையையோ அல்லது மரவுரி முதலியவற்றால் ஆன ஆடையையோ அணிந்து கொண்டு இருப்பான். தெளிவற்ற குழந்தை, பித்தன், பேய் ஆகியவர்களைப் போல நடமாடிக் கொண்டு இருப்பான்.

**614. தத்துவம் அறிந்த யோகி தன்னிலே தான்ம கிழ்ந்து**
**நித்தமும் சருவஆன் மாவாய் நிகழ்ந்துதன் இச்சை வாறே**
**எத்தனை உருவோ ஆகி ஏதுமே தான்பு சித்துஇங்கு**
**இத்திறம் ஏகன் ஆகி எங்குமே சஞ்ச ரிப்பன்.**

பிரம்மத்தை அறிந்த சீவன் முத்தன், தன்னிடத்திலேயே தான் மகிழ்பவனாய், எப்பொழுதும் தானே எல்லா வடிவமாய் விளங்குவான். தன் விருப்பப்படி பல வடிவம் கொண்டு, எந்த உணவையும் உண்டு, இவ்வாறு இங்கே தனியாகவே எங்கும் நடமாடுவான்.

**615. ஒருமையாம் பரமஆ னந்தம் உற்றுஉள பிரம ஞானி**
**ஒருவிடம் மூட னேபோல் ஒருவிடம் வித்து வான்போல்**
**ஒருவிடம் மன்ன னேபோல் ஒருவிடம் பித்த னே போல்**
**ஒருவிடம் சாந்த னேபோல் உலகினில் சஞ்ச ரிப்பன்.**

பிரம்ம ஞானி ஒன்றேயான பிரம்மானந்தத்தில் திகழ்பவன். அவன் ஒரு பொழுது மூடனைப் போலும், ஒருபொழுது அறிஞனைப் போலும், ஒருபொழுது அரசனைப் போலும், ஒருபொழுது பித்தனைப் போலும், ஒரு பொழுது சாந்தமாகவும் உலகில் நடமாடிக் கொண்டு இருப்பான்.

**616. ஒருவிடம் அசக ரத்தோடு ஒத்தஆ சாரன் ஆகி**
**ஒருவிடம் நேயன் ஆகி ஒருவிடம் நேயன் அன்றி**
**ஒருவிடம் மறைவோன் ஆகி ஒருவிடம் தெரிவோன்**
**ஆகிஉரைதரும் இவ்வாறு எல்லாம் ஒருவனே சஞ்ச ரிப்பன்.**

ஒரு பொழுது மலைப் பாம்பைப் போல அசையாது கிடப்பவனாயும், ஒரு பொழுதும் அன்பு உடையவனாயும், ஒருபொழுது அன்பு அற்றவனாயும், ஒருபொழுது, ஒதுங்கி மறைபட்டவனாயும், ஒருபொழுது அறியப் படுபவனாயும், கூறிய இவ்வாறு எல்லாம், ஒப்பற்ற சீவன் முத்தன், நடமாடுவான்.

**617. அருத்தம்இல் லாது இருந்தும் அநிசமும் மகிழ்ச்சி சார்வன்**
**ஒருத்தரின் சகாயம் அற்றும் உரவிய பலமே சேர்வன்**
**திருப்திசெய் புசித்தல் அற்றுத் திருப்தியே நித்தம் சேர்வன்**
**பொருத்தல்இல் விடமம் எல்லாம் பொருந்தியே சமமாய்ப் பார்ப்பன்.**

செல்வம் இல்லை ஆனாலும் எப்பொழுதும் மகிழ்வோடு இருப்பான். பிறர் துணை இல்லாமல் இருந்தாலும் மிகுந்த பலம் உள்ளவன். திருப்தி தரும் போக அனுபவம் இல்லாவிட்டாலும் எப்பொழுதும் திருப்தி நிறைந்தவன். பொறுக்க இயலாத தொந்தரவுகளை அடைந்தாலும் சமமாக நோக்குபவன், சீவன் முத்தன்.

**618. ஒன்றுனைச் செய்யும் போதும் ஒன்றுமே செய்கை அற்றோன்**
**ஒன்றினைத் துய்க்கும் போதும் ஒன்றுமே துய்த்தல் அற்றோன்**
**ஒன்றிய சரீரி யேனும் ஓர்சரீ ரமுமே அற்றோன்**
**அன்றியும் அளவு பட்டோன் ஆகினும் பூர ணன்தான்.**

ஒருசெயல் செய்த போதும் (நான் செய்கிறேன் என்ற எண்ணம் இல்லாததால்) ஒரு செயலும் இல்லாதவன். ஒரு பலனை அனுபவிக்கும் போதும் (நான் அனுபவிக்கிறேன் என்ற எண்ணம் இல்லாததால்) ஒன்றையும் அனுபவிக்காதவன். சரீரத்துடன் இருப்பவனாயினும் (அதில் அபிமானம் இல்லாததால்) எந்த சரீரமும் இல்லாதவன். மேலும் (சரீரம் முதலியவற்றால்) அளவுக்கு உட்பட்டவனாயினும் எங்கும் நிறைந்தவன், சீவன் முத்தன்.

**619. உரைதரும் விதமே ஆக ஓர்சரீ ரமுமே இன்றி**
**ஒருமையாய் இலங்கா நின்ற ஓங்கியபிரம வித்தைப்**
**பரியம்அப் பிரியம் மற்றுப் பேசிய சுபஅசு பங்கள்**
**மருவியே தொடராது ஒன்றும் மைந்தனே மற்றும் கேயாய்.**

சிறந்த பிரம்ம ஞானி, மேலே கூறியவாறு சரீரஅபிமானம் ஒன்றும் இல்லாமல் ஒன்றே ஆக விளங்குவான். அவனை, விருப்பும் வெறுப்பும், மேலும் நன்மை தீமைகளும். இவற்றுள் ஒன்றுமே தொடர்ந்து பொருந்தாது. மேலும் கேட்பாய்.

**620. ஏதமாம் தூலம் ஆதி இசைந்துஉள அபிமா னிக்கே**
**ஓதிய சுகதுக் கங்கள் ஒன்றிய சுப்அசு பங்கள்**
**ஈதுஎலாம் உண்டாம் பந்தம் இசைந்திடா ஆன்ம வித்துக்கு**
**ஏதுதான் சுகதுக் கங்கள் ஏதுதான் சுபஅசு பங்கள்.**

துன்பம் தரும் தூல சரீரம் முதலியவற்றில் பொருந்தி நான் எனது என்ற அபிமானம் உடையவனுக்கே, இன்பதுன்பங்கள், நன்மை தீமைகள் இவையாவும் உண்டாகும்.

தளைகளை எல்லாம் விலக்கிய சீவன் முத்தனுக்கு இன்பதுன்பங்கள் எப்படி ஏற்படும்? நன்மை தீமைகள் எப்படி எற்படும்?

**621. விரிஇனன் இராகு வாலே விழுங்கிடப் பட்டோன் போலப்**
**பரவிய சனங்க ளுக்குப் பார்வையில் தோன்ற லாலே**
**இரவியின் உள்ள தான இலக்கணம் அறியா மூடர்**
**இரவியே விழுங்கப் பட்டான் என்பர்தம் மயக்கத் தாலே.**

ஒளியை உடைய சூரியன் ராகுவால் விழுங்கப்பட்டால் போல, உலகில் மனிதர்களின் பார்வைக்குத் தோன்றும். ஆதலால் சூரியனின் உண்மையான (மறையாத லட்சணத்தை அறியாத மூடர்கள், தமது மதி மயக்கத்தால் சூரியனே விழுங்கப்பட்டது என்று கூறுவர்.

**622. ஈதுபோல் தேகம் ஆதி ஈனமாம் பந்தம் விட்ட**
**தீது இலாப் பிரம வித்தும் தேகிபோல் தோன்ற லாலே**
**ஏதமே உற்ற மூடர் இன்னவன் தேகி என்றே**
**ஓதுவர் அதனால் ஒன்றும் உண்மையாய் இவனுக்கு இல்லை.**

இதைப் போல சரீரம் முதலிய இழிவான தளைகளை விட்டுவிட்ட தீமை இலாத சீவன் முத்தனும் சரீரத்தை உடையவன் போல் பிறருக்குத் தோன்றுவான். ஆதலால், கேடான மதி உடையவர்கள் சீவன் முத்தன் சரீரம் உடையவன் என்றே கூறுவார்கள். அவ்வாறு கூறுவதால் இந்த சீவன் முத்தனுக்கு உண்மையாக ஒரு சிறிதும் ஆகுவதில்லை.

**623. பன்னிய முத்தன் தேகம் பாம்புஉடைச் சட்டை யேபோல்**
**துன்னிய பிராண வாயும் தொடர்பினால் இங்கும் அங்கும்**
**தன்னிய எவ்வா றேனும் சலித்திடும் மற்று அவற்றால்**
**உன்னிய முத்த னுககுஇங்கு ஒன்றுமே ஆநி இல்லை.**

சீவன் முத்தனின் சரீரம் பாம்பு உரித்து விட்ட சட்டையைப் போல் பிராணவாயுவின் நெருங்கிய தொடர்பினால், இங்கேயும் அங்கேயும் எப்படியேனும் அலைந்திடும். அதனால் பிரம்மத்தையே எண்ணுகின்ற சீவன் முத்தனுக்கு இங்கு கேடு எதுவும் இடையாது.

**624. ஒருநதி பிரவா கத்தால் ஒன்றிய தாரு ஆதி**
**தரணியின் மேடு பள்ளம் தன்னிலே சாரு மாபோல்**

**மருவிய பிராரத் தத்தால் மாசுஇலா முத்தன் தேகம்**
**பொருள்இலாப் போகம் தன்னில் பொருந்தும்ஒவ் வொருகா லத்தே.**

ஒரு ஆற்றின் நீரோட்டத்தில் அகப்பட்ட மரக்கட்டை முதலியன, பூமியில் மேடு பள்ளம் ஆகிய இடங்களை அடைவது போல, குற்றம் இல்லாத சீவன் முத்தனின் சரீரம் பொருந்திய பிராரத்த வினையால் உண்மையற்ற போகத்தில், அந்த அந்த காலத்தில் சென்று பொருந்தும்.

**625. பேதமாம் பிராரத் தத்தால் பிறந்தவா தனைக ளாலே**
**போதம்இல் பெத்தன் தேகம் போலவே முத்தன் தேகம்**
**ஏதுமே போகத் தின்கண் இசையினும் இந்த முத்தன்**
**ஓதிய தடத்த னேபோல் உபேபசையாய் வெறிது இருப்பன்.**

பலவாறான பிராரத்த வினைகளால் உண்டாகும் வாசனைகளால் ஞானமற்ற சம்சாரியின் சரீரம் போலவே, சீவன் முத்தனின் சரீரமும் எந்த போகத்தையும் அடையும். ஆனாலும் சாட்சியைப் போல, சீவன்முத்தன் உதாசீனமாய் வெறுமென (சம்பந்தப்படாமல்) இருப்பான்.

**626. சத்ததாம் சீவன் முத்தன் சக்கர மூல மேபோல்**
**கர்த்திரு கரணம் ஆதி கற்பனை யாவும் அற்றுச்**
**சுத்திய இந்தி யத்தைச் சுழல்புலன் தன்னில் சேரான்**
**அத்தினின் றும்தி ருப்பான் அவன்உதா சீனன் ஆவன்.**

பிரம்மமாகவே விளங்கும் சீவன் முத்தன், சக்கரத்தின் அச்சுப்போல, செய்பவன், அனுபவிக்கும் மனம் முதலிய கற்பனைகள் எதுவுமற்று இருப்பான். மயக்கும் விடயங்களில் உலவும் இந்திரியங்களை, விடயங்களில் ஈடுபடுத்தவும் மாட்டான், அவற்றினின்று திருப்பவும் மாட்டான். அவன் விருப்பு வெறுப்பு இல்லாமல் இருப்பான்.

**627. சுத்தமாம் சொரூபஆ னந்தச் சுதையினைப் பானம் செய்து**
**மத்தமாம் சித்தன் ஆன மாசிலாச் சீவன் முத்தன்**
**சுத்திய இந்தி யாதித் தொழிலினால் தொடரும் பேற்றை**
**இத்தனை யேனும் எய்தான் ஏகமாய் இலங்கா நிற்பன்.**

சுத்தமான பிரம்மானந்த அமிருதத்தைப் பருகிக் கொண்டு, மனம் மகிழ்ந்தவனாய், மாசற்று சீவன் முத்தன் இருப்பான். அவன் அலைகின்ற இந்திரியங்கள் முதலியவற்றின் செயல்களால் ஏற்படும் பலனை சிறிதும் அடையமாட்டான். ஒன்றே ஆன பிரம்மமாக விளங்கிக் கொண்டு இருப்பான்.

**628. யாதுஒரு பிரம ஞானி இலக்கியஅ லக்கியங்கள்**
**ஏதுமே விட்டு அகற்றி ஏககே வலனாய் நிற்பன்**
**சாதுவாம் அவனே நித்த சச்சிதா னந்தம் ஆக**
**ஓதிய சிவசொ ரூப உண்மைஈ துஉண்மை ஈதே.**

எந்த சீவன் முத்தன் குறிக்கோள், குறிக்கோள் இலாமை என்ற இரண்டு தன்மையும் விலக்கிவிட்டு, ஒன்றே ஆன பிரம்மாகவே விளங்குவானோ, அவனே சிறந்து துறவியாம். எப்பொழுதும் சத்து சித்து ஆனந்தமாகக் கூறப்படும் மங்கள வடிவமானவன். இதுவே உண்மை. இதுவே உண்மை.

**629. கிரியைஎல் லாம்மு டிந்த கேவலப் பிரம ஞானி**
**சரிதமோடு இருக்கும் போதே தான் சதா முத்தன் ஆனான்**
**பரவிய உபாதி எல்லாம் பற்றுஅற நசிக்கு போது**
**நிருமல நிர்வி கற்ப நிர்க்குணப் பிரமம் ஆவன்.**

செயல்கள் எல்லாம் செய்து முடிந்த (கிருத கிருத்தியன் ஆன) முத்தியை அடைந்த பிரம்ம ஞானி, சரீரத்தோடு வாழும் போதே, அவன் எப்பொழுதும் முத்தி பெற்றவனாகவே இருந்தான். உபாதிகள் எல்லாம் அடியோடு அழியும் போது, மாசற்ற, விகற்பமற்ற, குணமற்ற பிரம்மமே (விதேக முத்தன்) ஆகி விடுவான்.

**630. ஒருநடன் ஒருவே டத்தை ஒன்றினும் ஒன்றாப் போதும்**
**புருடனே ஆகு மாபோல் பூரணப் பிரம வித்து**
**ஒருமையில் உபாதி தன்னை ஒன்றினும் ஒன்றாப் போதும்**
**பிரமமே ஆவன் அன்றிப் பிறிதுஏதும் ஆக மாட்டான்.**

ஒருநடிகன் வேஷத்துடன் இருக்கும் போதும், வேஷம் இல்லாத போதும், அவன் எப்படி ஒருபுருடன் ஆகவே விளங்குகின்றானோ அதுபோல, பூரணமான சீவன் முத்தனும், தான் பிரம்மமாகவே ஒன்றாய் நிற்கும் நிலையில், உபாதிகளுடன் கூடிய போதும், விலகிய போதும், பிரம்மமாகவே ஆவான் அல்லாமல் வேறு ஒன்றும் ஆகமாட்டான்.

**631. தருவிடைப் பழுத்த பந்நம் தவிர்ந்துதான் எவ்வி டத்தும்**
**தரணியில் வீழ்வ தேபோல் தத்துவம் ஆகி நின்ற**
**இருமைஇல் ஞானி தேகம் எங்கணும் வீழ்ந்த தால்என்**
**அருமையாம் ஞானத் தீயால் அதுதான்முன் வெந்தது அன்றோ.**

மரத்தில் பழுத்த இலைதான், அம்மரத்தை விட்டு நீங்கி, பூமியில் எங்காவது விழுவதைப் போல, பிரம்மம் ஆகவே விளங்குகின்ற, இம்மை மறுமை இல்லாத, சீவன் முத்தனின் சரீரம் எப்படித்தான் மரணம் அடைந்தால் என்ன? அந்த சரீரம், அரிய ஞானம் ஆகிய அக்கினியால் முன்பே வெந்து விட்டது அல்லவா?

**632. சச்சிதா னந்த பூன்ற சாந்தமாம் பிரமத் தின்கண்**
**உச்சஅத் துவிதஆ னந்த உருவமாய் ஒய்ந்த ஞானி**
**மச்சைதோல் மாமிச ஆதி மலம்உறும் உடல்வி டுக்க**
**அச்சம்இல் தேசம் காலம் அதியைப் பேண வேண்டாம்.**

சத்துசித்து ஆனந்தமாகவும், பூரணமாகவும், சாந்தமாகவும் உள்ள பிரம்மத்தின் இடத்தில், மேலான, இரண்டற்ற ஆனந்தமாக உள்ள ஞானி தோல், மாமிசம் முதலான மலங்கள் உடைய சரீரத்தை விடுவதற்கு இடம், சமயம் முதலியவற்றைப் பயமின்றி பேண (கருத) வேண்டாம்.

**633. ஏதஎனில் இந்தத் தேகம் இறந்திடல் மோட்சம் அன்றே**
**ஓதியகமண் டலதண் டஆதி ஒழித்தலும் மோட்சம் அன்றே**
**ஏதமாம் அவித்தை யாலே எய்திய மனமு டிச்சு**
**யாதுமே ஒழிவது அன்றோ எதிகளுக்கு இசைந்த மோட்சம்.**

ஏன் எனில், இந்த சரீரம் அழிவது முத்தி அல்ல. ஒரு கமண்டலத்தையும், தண்டத்தையும் விட்டு விடுவதும் முத்தி அல்ல. குற்றமான அவித்தையினால் அடைந்த அகங்கார முடிச்சு எல்லாம் அழிவது அல்லவா துறவிகளுக்கு ஏற்ற முத்தி ஆகும்.

**634. ஆதலால் வெணின் ஞானி ஆக்கைதான் வீழ்ந்த தால்என்**
**ஓதிய தருவின் பந்நம் ஒருநதி வாய்க்கால் வீதி**
**மேதகு சிவஆல யஆதி மீதுதான் வீழ்ந்த தாலே**
**ஏதுமே சுபஅசு பம்தான் இசைவது தருவுக்கு உண்டோ.**

மரத்தின் உலர்ந்த இலை, ஒரு நதியிலோ, ஓடையிலோ தெருவிலோ மேன்மையான சிவாலயம் முதலிய இடங்களில் விழுவதால், அந்த மரத்திற்கு நன்மையோ தீமையோ ஏற்படுவது உண்டா? இல்லை. ஆகையால் ஞானியின் சரீரம் எவ்விடத்தில் மரணம் அடைந்தால் என்ன?

**635. மரம்உடை இலைப லங்கள் மலருகள் நசிப்ப தேபோல்
சரீரஇந் திரியம் ஆதி சகலமும் நசிக்கும் அன்றி
ஒருசதா னந்த சித்தாய் ஓங்கிய ஆன்மா விற்கு
மருவும்ஓர் நாசம் இல்லை மரம்என இருக்கும் ஆன்மா.**

ஒருமரத்தின், இலையும், பழங்களும், பூக்களும் அழிவதே போல், சரீரம், இந்திரியங்கள் முதலிய எல்லாமும் அழியுமே அன்றி, ஒப்பற்ற சத்தாய், ஆனந்தமாய், சித்துமாய் விளங்குகின்ற ஆத்மாவிற்கு அழிவு எப்பொழுதும் பொருந்தாது. ஆத்மா மரத்தைப் போல் அழியாது இருக்கும்.

**636. சுருதியும் சித்கன ஆன்ம சொரூபமே சத்தாம் என்று
மருவிய உபாதி எல்லாம் மாறியே நசிக்கும் என்றும்
பிரகதா ரணம்என் றுஓதும் பெருகிய உபநி டத்தில்
சருவதா ஆன்மா விற்கே சத்தியத் தன்மை சாற்றும்.**

வேதமும், பிருகதாரண்ய உபநிஷத்தில், அறிவுமயமான, ஆனந்த வடிவமே எப்பொழுதும் அழியாத ஆத்மா என்றும், அதனுடன் கூடிய உபாதிகள் யாவும் மாறுதல் அடைந்து அழியும் என்றும், எப்பொழுதும் ஆத்மாவிற்கே அழியாதத் தன்மையைக் கூறும்.

**637. திருணநெல் பாய்ப பங்கள் திறம்உறும் கல்க டங்கள்
மரமுதல் எரிக்கப் பட்டுஓர் மண்வடிவு ஆவ தே போல்
திருசியத் தேகம் ஆதித் திரள்எலாம் ஞானத் தீயால்
எரிஉறப் பட்ட பின்னர் ஏகசித் சொரூப மேயாம்.**

புல், நெல், பாய், ஆடை, கல் குடங்கள், மரம் முதலியவை எரிக்கப்பட்டு ஒரே மண் வடிவம் ஆகிவிடுகின்றது. அதுபோல் சரீரம் முதலியனவாகக் காணப்படும் யாவும், ஞானம் ஆகிய அக்கினியினால் எரிக்கப்பட்டப் பின்பு, ஒரே அறிவு வடிவமான பிரம்மமே ஆகி விடும்.

**638.** **இரவியின் தேசி டத்தில் இருள்இறக் கின்ற தேபோல்**
**திருசியம் யாவும் ஆன்மத் திகழ்விலே லீனம் ஆகும்**
**வருகடம் முதல்உ டைந்தால் வான்மகா வான மேபோல்**
**பிரிவுஉறும் உபாதி போனால் பிரமமாம் பிரம வித்தே.**

சூரியனின் பிரகாசத்தில் இருள் அழிந்து விடுகின்றது. அதுபோல, ஆத்மாவின் பிரகாசத்தில் காணப்படும் அனைத்தும் லயமாகும். உள்ள குடம் முதலியவை உடைந்து போனால், அந்த கட ஆகாசம், மகாகாசம் ஆகவே ஆகும். அதைப்போல, வேறுபடும் உபாதிகள் அழிந்து போனல், பிரம்ம ஞானி பிரம்மமே ஆகி விடுகிறான்.

**639.** **கீரநீர் தைலம் தன்னில் கீரநீர் தைலம் சேர்ந்து**
**பாரினில் அயிக்கி யத்தைப் பற்றிய பான்மை யேபோல்**
**பூரணப் பிரமத் தின்கண் பூரணப் பிரம ஞானி**
**சாரல்உற்று ஏகம் ஆகச் சந்ததம் இலங்கா நிற்பன்.**

உலகில், பாலில் பாலும், நீரில் நீரும், எண்ணெய்யில் எண்ணெய்யும் கலந்து ஒன்றாகும் தன்மையைப் போல, பிரம்மத்தைப் பூரணமாக அறிந்த ஞானி, எங்கும் நிறைந்த பிரம்மத்தில் கலந்து, ஒன்றாகவே எப்பொழுதும் விளங்குவான்.

**640.** **பொருஇலா அகண் டஆனந்த பேதமாம் பிரமம் ஆக**
**மருவியே இருப்பது ஆன மாசுஇலா விதேக முத்திப்**
**பொருளினை அடைந்த ஞானி பூருவம் போல மற்றும்**
**திருசியச் சகத்தில் என்றும் தியங்கியே சனியான் மைந்தா.**

மைந்தனே, ஒப்பற்ற, அளவுகடந்த, ஆனந்தமாகவும் அறிவாகவும் உள்ள பிரம்ம வடிவமாகப் பொருந்தி இருக்கும் தன்மையே விதேக முத்தியாகும். குற்றமற்ற, விதேக முத்திநிலையை பெற்ற ஞானி, மீண்டும் காணப்படும் இந்த உலகில் மயங்கி, எப்பொழுதும் பிறக்கமாட்டான்.

**641.** **அருமையாம் பரசீ வைக்கியம் அறிந்தநல் ஞானத் தீயால்**
**ஒருமையில் அவித்தை ஆதி உடல்எரி பட்ட பின்னர்ப்**
**பொருமைஉள் சந்நியாசி பிரமமாய் நிற்ப தாலே**
**பிரமமாம் அவனுக்கு எங்கும் பிறப்பதும் உண்டோ சொல்லாய்.**

அரிய சீவபிரம்ம ஐக்கியத்தை அனுபவித்து அறிந்த நல்ல ஞானம் ஆகி அக்கினியால், ஒரே தன்மை இல்லாத அவித்தையும், அதன் காரியமான சரீர முதலியனவும். எரிந்து போகும். அதனால் துறவி, பெருமை நிறைந்த பிரம்ம வடிவமாகவே விளங்குவான். பிரம்மம் ஆகி விட்ட அவனுக்கு எங்காவது பிறப்பு ஏற்படுமா? நீயே சொல்

**642. மித்தையாய்த் தோன்றும் சர்ப்பம் மேவிய அதனின் நாசம்**
**அந்தமாய் இரச்சு வின்கண் சோதிக்கில் இலாத தேபோல்**
**மித்தையாம் மாயை யாலே மேவிய பந்த மோட்சம்**
**சுத்தமாம் ஆன்மா வின்கண் சோதிக்கில் என்றும் இல்லை.**

ஆராய்ந்து பார்த்தால், பொய்யாகக் காணப்படும் பாம்பும், அதனுடைய அழிவும் கயிற்றில் முழுமையாக இல்லை. அதுபோல, ஆராய்ந்து பார்த்தால், பொய்யான மாயையால் உண்டான பந்தமும் மோட்சமும், சுத்தமான ஆத்மாவில் எப்பொழுதும் இல்லை

**643. இருளும்ஆ வரண சத்தி இருக்குமேல் பந்தம் என்றும்**
**மருளும்ஆ வரண சத்தி மரிக்குமேல் மோட்சம் என்றும்**
**உரைசெய ஒணாத துஆகும் உண்மையில் பிரமம் அன்றி**
**இருளும்ஆ வரண சத்தி எவளவும் இலாத தாலே.**

மறைக்கும் ஆவரண சத்தி இருந்தால் பந்தம் எனவும், மயக்கும் ஆவரண சத்தி அழிந்தால் முத்தி எனவும் கூறத் தகாது. உண்மையில் இருப்பது பிரம்மமே அன்றி, மறைக்கும் ஆவரண சத்தி சிறிதும் இல்லை.

**644. சருவதா இலங்கா நின்ற சத்தியப் பிரமம் அன்றி**
**இருளும்ஆ வரணம் ஆதி ஏதுமே இருக்கும் ஆகின்**
**பரமஅத் துவிதத் தன்மை பாலனே ஆநி ஆகும்**
**மருவும்அவ் ஆநி தன்னை மாமறை சகிக்க மாட்டா.**

பாலனே, எப்பொழுதும் விளங்கிக் கொண்டு இருக்கும் பிரம்மமே உண்மை ஆகும். அந்தப் பிரம்மத்தைத் தவிர மறைக்கும் ஆவரண சத்தி முதலிய எந்தப் பொருளாவது இருக்குமே ஆனால், மேலான, "அத்துவிதம்" (இரண்டற்றது) என்பதற்கு கேடு உண்டாகும். அந்தக் குறைவு பொருந்தும் என்பதை வேதம் ஒப்புக் கொள்ள சகியாது.

**645. விரிவுஉறு முகிலால் வந்த விழியுன்ஆ வரணம் தன்னை**
**இரவியில் ஏற்று மாபோல் ஈனுர்ஆ கின்ற மூடர்**
**பரவிய மனத்தால் வந்த பந்தமோட் சங்கள் தம்மைப்**
**பொருஇலாப் பிரமத் தின்கண் பொய்தாய்க் கற்பிப் பாரால்.**

இழிவான மூடர்கள், பரவிய மேகங்களால் உண்டான கண்களின் மறைப்பை, சூரியனிடத்தில் மறைவு இருப்பது போல் கற்பனை செய்வார்கள். அதுபோல, மனதால் ஏற்பட்ட பந்தத்தையும் (கட்டுப் படுவதையும்), மோட்சத்தையும் (விடுதலையும்), ஒப்பற்ற பிரம்மத்திடம் பொய்யாக கற்பனை செய்வார்கள்.

**646. அசிலஅத் துவிதஅ சங்க அறிவுஉரு அக்க ரத்தில்**
**இருதுஇலை இருதுஉண் டுஎன்னும் இவ்விதத் தோற்றம் எல்லாம்**
**பகர்மனோ தர்மம் அன்றி பரத்தினுக்கு இலாத தாலே**
**புகலும்இப் பந்த மோட்சம் பொய்ம்மாயை தந்ததே ஆம்.**

பிரம்மம், எல்லாமாக இருப்பதும், இரண்டற்றதும், பற்றற்றதும், அறிவு வடிவானதும், அழிவற்றதும் ஆகும். அதில், இது இல்லை, இது உண்டு என்ற இவ்விதமன எண்ணம் எல்லாம், மனதின் குணங்கள் என்று கூறுவதன்றி, பிரம்மத்திற்கு இல்லை. ஆதலால், பந்தம் மோட்சம் என்று கூறுவது பொய்யான மாயையால் உண்டானது ஆகும்.

**647. பரமமாம் ஆன்மா விற்குப் பந்தமோட் சங்கள் இல்லை**
**நிருமல நிருவி கார நிட்கள சாந்தம் ஆகி**
**ஒருமையாய் வான மேபோல் ஓங்கிஓர் பழுதும் அற்ற**
**பரமாம் தத்து வத்தில் பரவுகற் பனையே இல்லை.**

மேலான ஆத்மாவிற்கு பந்தமும் மோட்சமும் இல்லை. மாசற்ற, விகாரமற்ற, வடிவமற்ற, சாந்தமானது ஆகி, எங்கும் பரவிய ஆகாசம் போல, ஒன்றேயாய், குற்றமற்ற, மேலான ஆத்மாவில் கற்பனையே சொல்லுவதற்கு இல்லை.

**648. ஓதும்உற் பத்தி இல்லை ஒருதிதி நாசம் இல்லை**
**தீதுஉறு பெத்தன் இல்லை திகழ்முமுட் சுவுமே இல்லை**
**சாதகன் இல்லை மோட்சம் சார்ந்தவன் இல்லை எல்லாம்**
**போதமாம் பிரம மேயாம் புகல்பர மார்த்தம் ஈதே.**

எதுவும் உண்டாவதும், இருந்து அழிவதும் இல்லை. துன்புறும் கட்டுப் பட்டவனும் இல்லை. முமுட்சுவாக விளங்குபவனும் இல்லை. விடுபடச் சாதனம் செய்பவனும் இல்லை. முத்தி அடைந்தவனும் இல்லை. எல்லாம் அறிவு வடிவமாகக் கூறப்படும் பிரம்மமே ஆகும். இதுவே சத்தியம் என்று கூறப்படும்.

**649. சகலவே தாந்த நூலில் சார்ந்தசித் தாந்தம் ஆன**
**ரகசியம் ஈதே மெத்த ரகசியம் ஈதே ஆகும்**
**புகழும்இப் பரமம் ஆன பொருளினை உன்த னக்கு**
**மகனே உன் பத்தி யாலே மகிழ்ந்துநாம் உபதே சித் தோம்.**

மைந்தனே, எல்லா வேதாந்த நூல்களிலும் பொருந்திய முடிந்த கருத்தான இதுவே இரகசியமானது. மிகவும் இரகசியமானது இதுவே ஆகும். இந்த மேலான புகழ் உடைய பொருளை உனக்கு, உனது பக்தியைக் கண்டு மகிழ்ந்து, நாம் உபதேசம் செய்தோம்.

**650. சகலஆ சையுமே அற்றுச் சாரமாம் புத்தி பெற்றுப்**
**புகல்கலி தோடம் ஒன்றும் பொருந்திடா முமுட்சுத் தன்னைச்**
**சகம்இதில் நீசோ தித்துச் சாற்றும்இப் பொருளை எல்லாம்**
**மகனேஅவ் அதிகா ரிக்கே மயல்அற உபதே சிப்பாய்.**

மைந்தனே, இந்த உலகில் எல்லா ஆசைகளும் நீங்கி சிறந்த புத்தி உடைய, கொடிய பாபத்தினால் ஏற்பட்ட தோஷங்கள் நீங்கிய முமுட்சுவை, நீ நன்றாக சோதித்து அறிந்து, தகுதி உடைய அவனுக்கே, நான் உபதேசித்த இந்தப் பொருளை எல்லாம், மயக்கம் நீங்கும்படி உபதேசம் செய்வாய்.

**651. இந்தவா தேசி கேந்திரன் இசைத்தஇவ் உபதே சத்தைச்**
**சிந்தைஉள் மகிழ்ச்சி யோடே சிரவணம் செய்து சீடன்**
**வந்தனம் அநந்தம் செய்து மற்றுஅவன் அநுஞ்ஞை பெற்றுப்**
**பந்தம்அள் றவனே ஆகிப் பாரினில் சஞ்ச ரித்தான்.**

இங்ஙனம், குருமார்களுக்கு அரசன், கூறிய இந்த உபதேசத்தை மன மகிழ்ச்சியோடு கேட்ட சீடன், அவரை பலமுறை வணங்கி நமஸ்கரித்து, குருவின் அனுமதி பெற்று, பந்தங்களில் இருந்து விடுபட்டவனாய், உலகில் நடமாடிக் கொண்டு இருந்தான்.

**652. அந்தஆ சாரி யேந்திரன் அகண்டஆ னந்தம் ஆகும்**
**சிந்துவில் என்றும் மூழ்கும் சித்தனாய்ச் சிரேட்டன் ஆகிப்**
**பந்தமார் சீவன் தம்மைப் பாவனம் ஆக்க வேண்டித்**
**தொந்தமார் பூமி எல்லாம் துகள்அற சஞ்ச ரித்தான்**

அந்த குருமார்களுக்கு எல்லாம் அரசன், அளவற்ற ஆனந்தம் ஆகிய கடலில் எப்பொழுதும் மூழ்கின மனது உடையவராய், தலைசிறந்தவர் ஆனார். பந்தம் அடைந்த சீவர்களைத் தூய்மை உள்ளவராகச் செய்ய உடன்பட்டு, பூமியில் எல்லா இடங்களிலும் மாசின்றிச் சுற்றி வந்தார்.

**653. இந்தவா குரவ னுக்கும் இசைந்தஓர் சீட னுக்கும்**
**வந்தசம் வாதம் ஆக வரமுமுட் சுக்க ளுக்குச்**
**சிந்தையில் ஆன்ம ரூபம் செவ்விதாய் உணரும் வண்ணம்**
**இந்தநூல் மார்க்கம் ஆக இங்ஙனம் திருபித் தோம்யாம்.**

மேலான முமுட்சுக்கள் ஆத்ம வடிவை நன்கு உணரும் பொருட்டு, இந்த நூலின் வழியே, குருவுக்கும் ஒத்த ஒரு சீடனுக்கும் நடந்த உரையாடலாக, நாம் இவ்வாறு விளக்கினோம்.

**654. நித்தகன் மத்தி னாலே நின்மல சித்தர் ஆகி**
**மத்தியா பவசு கத்தில் விரத்தராய்ச் சாந்தர் ஆகிச்**
**சத்தியச் சுருதி நம்பிச் சன்முமுட் சுக்கள்**
**உத்தம எதிகள் இந்த உபதேசம் ஆத ரிப்பார்.**

மேலான துறவிகள், நாள் தோறும் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்து, தூய்மையான மனம் உடையவராகி, பொய்யான உலக இன்பங்களில் ஆசையற்றவராய், மன அமைதி பெற்றவராய், உண்மையான வேதங்களில் நம்பிக்கை உடையவராய் நல்ல வீடுபெறும் விருப்பம் உள்ளவராய், இந்த உபதேசத்தை ஆதரித்து மேற் கொள்வார்கள்.

**655. மோகமார் பவமார்க் கத்தின் முத்தாப பானு தேசால்**
**ஆகிய தாகத் துன்பம் அடைந்துநீர் விருப்பத் தோடே**
**வேகமாய் வருந்தி ஓடி வெறிதான மருதே சத்தில்**
**சோகமே உற்ற சீவர் சுகத்தினை அடைய வேண்டி.**

**656. மெத்தவும் கிட்டி நின்ற மெய்உணர்வு அநந்தஆ னந்த**
**அத்வயப் பிரமம் ஆகும் அமிர்தவா ரிதையைக் காட்ட**
**உத்தமச் சங்கர ஆசான் உரைத்திடும் இந்த நன்னூல்**
**நித்தமும் முத்தி இன்பம் நிலைமையாய் நிகழா நிற்கும்.**

சீவர்கள், மயக்கம் நிறைந்த பிறவியில் (ஆதியாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதி தைவிகம் ஆகிய) மூன்றுவித தாபம் ஆகிய நீர் பருகும் ஆசையோடு வெறுமையான பாலை நிலத்தில் வேகமாய் ஓடிச் சென்று, வருத்தமுற்று, கவலை அடைகிறார்கள். அவர்கள் ஆனந்தம் அடைய வேண்டும் என விரும்பி, மிகவும் அருகே உள்ள அளவற்ற ஆனந்தவடிவமான, இரண்டற்ற பிரம்ம வடிமாகிய உண்மையை உணர்வதாகிய அமுதக் கடலை விளக்கிக் காட்ட, உயர்ந்த சங்காரசாரியார் இந்த நல்ல நூலை மொழிந்தார் இந்நூல், எப்பொழுதும் முத்தி இன்பத்தை அளிப்பதாய் நன்கு விளங்கும்.

**657. இப்படிச் சங்க ரஆசான் இசைத்தஇக் கிரந்த நூலை**
**ஒப்புஇலா நடன ராசன் ஓங்கிய கருணை யாலே**
**தப்புஉறும் என்தன் வாக்கால் தமிழ்மொழிக் கவிதை ஆகச்**
**செப்பினேன் மேலோர் ஈதைச் செவ்விஇதுஎன்று ஒப்ப வேண்டும்.**

இவ்வாறு சங்கர குருவானவர் வடமொழியில் இந்த நூலைச் செய்தார். நடராஜப் பொருமானின் மிகுந்த அருளால், இந்நூலை, தவறுடைய என்னுடைய சொற்களால் தமிழில் செய்யுகளாக உரைத்தேன். பெரியோர்கள் இந்த நூலை நல்லது என ஏற்றுக் கொள்ள வேண்டும்.

**658. இந்தவாறு அமைக்கப் பட்ட இக்கவி மாலை தன்னை**
**சத்ததம் சிவகா மாம்பா சகிதனாய் வீற்று இருக்கும்**
**சுந்தர நடன ராசன் சுத்தமாம் பாதப் போதில்**
**அந்தம்இல் மகிழ்ச்சி யோடே அர்ப்பணம் செய்யல் ஆனேன்.**

இவ்வாறு அமைந்த இந்தச் செய்யுள் மாலையை, எப்பொழுதும் சிவகாமி அன்னையுடன் ஆகி விளங்குபவரும், அழகானவரும் ஆன நடராஜப் பெருமானின் தூயமலர்ப் பாதகளில் மிகுந்த மகிழ்வுடன் சமர்ப்பணம் செய்கிறேன்.

**659. திருவிடை மருதூ ரின்கண் திரமதாய் வசிக்கா நின்ற**
**பிரமவம் சத்து உதித்த பெருமைசேர் உலக நாதன்**

**மருள்அறும் விவேக சூடா மணிஎனும் கிரந்த நூலை**
**வரதமிழ்க் கவிதை ஆக வளமதாய் அமைக்க லானான்.**

திரு விடை மருதூரில் நிலையாக வசித்தவரும், அந்தணர் குலத்தில் தோன்றியவரும், சிறந்தவரும் ஆகிய உலகநாதன் என்ற பெரியவர், பிறவி மயக்கத்தை நீக்கும் இந்த விவேக சூடாமணி என்ற வடமொழி நூலை, உயர்ந்த தமிழ்ச் செய்யுட்கள் ஆக நன்கு அமைத்தார்.

**660. மகிழ்தரு விவேக சூடா மணிஎனும் இந்த நூலை**
**அகம்உற ஆசான் முன்னர் அமலமாய்ப் படித்து அறிந்தோன்**
**சுககன வடிவாய் நித்த சுத்தமாம் பரமஆன் மாவே**
**அகம்என அறிந்து நன்றாய் அகண்டமாய் இலங்கா நிற்பன்.**

இன்பம் தரும் விவேக சூடாமணி என்னும் இந்த நூலை, மனதில் விளங்கும் படி, குருவின் முன்பு மாசற படித்து அறிந்த அறிய வேண்டும். அப்படி படித்து அறிந்தவன், மிகுந்த ஆனந்த வடிவமாகவும், என்றும் உளதாகவும், தூயதாகவும் விளங்கும் மேலான ஆத்மாவே தான் என நன்கு அறிந்து கொள்வான். அகண்ட பிரம்மமாய் விளங்குவான்.

**661. அகிலநா யகனே போற்றி அம்பிகா பதியே போற்றி**
**நிகழ்சபா திபனே போற்றி நிருத்தநா யகனே போற்றி**
**சுககன வடிவே போற்றி சுத்தமாம் உருவே போற்றி**
**அகம்எனும் திகழ்வே போற்றி அகண்டமே போற்றி போற்றி.**

உலகிற்குத் தலைவனே, வணக்கம். உமையின் மணவாளனே, வணக்கம். சிற்றம்பலத்திற்கு அதிபதியே, வணக்கம். நடராஜப் பெருமானே, வணக்கம். ஆனந்தமய வடிவினனே, வணக்கம், தூய வடிவினனே, வணக்கம். நான் என விளங்குபவனே, வணக்கம். அகண்டமானவனே, வணக்கம்.

**விவேக சூடாமணி முடிவு பெற்றது.**

இறும்பூதூர் ஸ்ரீ தத்துவராய சுவாமிகள்

அருளிச் செய்த

# அஞ்ஞவதைப் பரணி

உ

சிவமயம்

## இறும்பூதூர் ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் அருளிச் செய்த

# அஞ்ஞவதைப் பரணி

### கடவுள் வணக்கம்

1. **படைப்பானும் வியன்ஞாலம் காக்கும் ஆழிப்**
**படையானும் படைத்துஅளிக்கப் பட்ட எல்லாம்**
**துடைப்பானும் சுருதிகளும் தொழுது போற்றும்**
**சொரூபா னந்தச்சுடரைத் தொழுதல் செய்வாம்.**

இடம் அகன்ற இவ்வுலகத்தை உண்டாக்கும் நான்முகனும் அவ்வாறு படைக்கப் பட்ட உலகத்தைக் காக்கும் சக்கரப் படையினை உடைய திருமாலும், அவ்வாறு படைத்துக் காப்பாற்றப் பட்ட இவ்வுலகு அனைத்தையும், ஊழிக் காலத்தில் அழிக்கின்ற சங்கரனும், இருக்கு முதலான நால் வேதங்களும், துதித்து வணங்கிப் போற்றுகின்ற சுயஞ் சோதியைத் தொழுவோம்.

2. **அழிந்துபிறந்து உழல்வதுவே தொழிலாய் யான்இன்று**
**அழியாமல் எழுந்துஅருளி அமையா இன்பம்**
**பொழிந்தபெரும் கருணைமுகில் நாளும் நாளும்**
**பூதலத்தின் துயர்தீரப் பொழிக என்றே.**

அடியேன், இவ்வுலகில் பிறந்து இறந்து துன்பம் அடைதலே தொழிலாய் இருப்பதைக் கண்ணுற்று, அவ்வாறு இறந்து போய் விடாமல் உய்யும்படி, இப்பொழுது இங்கு எழுந்தருளி மட்டில்லாப் பேரின்பமாகிய மழையைப் பொழிந்த பெருமை வாய்ந்த கருணை கொண்ட மேகம், தினந்தோறும் பூமியின் கண்ணுள்ள துன்பமானது தீரும் பொருட்டுப் பொழிக என இறையை வணங்குவோம்.

3. **தலைபலவாய்ப் பெயர்பலவா நதிகள் எல்லாம்**
**சாகரத்தின் ஒருநீராம் தன்மை போலப்**
**பலபலவாய்ச் சொல்லுநெறி எல்லாம் சொல்லப்**
**பட்டஒரு பொருளினையாம் பணிதல் செய்வோம்.**

தோன்றுமிடம் பலவுடையதாயும், பல பெயர்களை உடையதாயும் உள்ள ஆறுகள் எல்லாம் பெரிய கடலிடைக் கலந்து ஒரே நீராய்க் காட்சி அளிப்பது போலப் பலப் பல நெறிகளைக் கூறினாலும் அவை கூறும் ஒரே பொருளான இறையை நாம் பணிதல் செய்வோம்.

4. **அழியாத வீடுஎன்னும் பழைய ஊர்கண்டு**
**அறியாதார் அதுகாண வேண்டி ஆறு**
**வழிஆகும் சமயங்கள் கொண்டு தம்மில்**
**வழக்குப்பே சும்சழக்கு மாழ்க என்றே.**

அழியாது நிலைத்து உள்ள வீடுபேறு என்னும் அநாதியாய் உண்டான பழைய ஊரைக் கண்டு அனுபவத்தால் அறிந்தும் அதனை அடையாதவர்கள், அதனை அடையும் பொருட்டு, அறுவகை நெறிகளைப் போதிக்கும்சைவம் முதலானஅறுவகைச் சமயங்களைப் பற்றித் தமக்குள் தத்தம் மதமே பெரிது என்று வழக்குப் பேசும் குற்றம் அழியக் கடவது என்று பணிவோம்.

5. **ஈறு ஆதி முதலாய் இரண்டு**
**வகையாகி மூன்று வடிவாய்**
**எழுதாத வேதம் ஒருநாலு பூதம்**
**இவைதான்ஓர் ஐந்து சுவைதான்**
**ஆறுஆகி ஒது இசைஏழும் ஆன**
**திசைஎட்டும் ஆகி எவையும்**
**ஆகாமல் ஆகும்சொ ரூபம்க லந்த**
**அருள்ஆன வாறு மொழிவாம்.**

முடிவாகி, ஆதி முதலுமாகிச் சக்தி, சிவம் என இரண்டு வடிவமாகி, நான்முகன், திருமால், சிவன் என்ற மும்மூர்த்தியாகி, ஒப்பற்ற ஒருவராலும் எழுதப்படாத இருக்கு முதலான நால் வேதங்களாகி, கண் காணத் தோன்றும் உலகில் ஐம்பூதங்களாகி, இனிப்பு

முதலிய சுவைகளில் அறு வகையாகி, சிறப்பித்துச் சொல்லப்படும் இசைவகையுள் ஏழாகி, எட்டுத் திசைகளாகி, மேலே சொல்லிய இவையும் ஆகாது, இவற்றைத் தன்கண் தோற்றுவிக்கும் பொருள் ஆனது என்னுடன் கலந்து ஒன்றான தன்மையைச் சொல்லுவோம்.

**6. ஓர்வுஒன்று இலேன்ஓர் பொருள்ஆக நல்கி**
**இருபதம் மூன்று குணம்நான்கு**
**உள்இந்தி யங்கள்உறு கோசம்ஐந் தோடு**
**அறுபாவ னாதி உணர்கால்**
**ஏர்புஒன்று இலாத பவம்ஏழு அறுத்து**
**வடிவான எட்டும் உடையான்**
**எழில்ஆரும் ஞான மயமாக வாழும்**
**இயல்நாளும் வாழ்க எனவே.**

அறிவு சிறிதும் இல்லாத அடியேனையும் ஒரு பொருளாக மதித்து, இரண்டு திருவடிகளையும் எனக்குத் தந்து சத்துவம். ரஜஸ், தாமச என்னும் மூன்று குணங்களையும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கு அந்தக் கரணங்களையும், அன்னமயம் முதலான ஐந்து கோசங்களையும், கருவுறுதல், பிறத்தல், வளர்தல், பருத்தல், குறைதல், ஒடுங்கல் என்னும் ஆறு நிலைகளையும் பொருந்திய பிறவியை உணருங்கால், சிறப்பு சிறிதும் இல்லாத தேவர் முதலான எழுவகைப் பிறவிகளையும் அழித்து, நிலம், நீர், நெருப்பு, உயிர், நீள்விசும்பு, நிலா, பகலோன், ஜீவன் என்னும் அட்ட மங்கல மூர்த்தங்களை உடையவன், அழகு பொருந்திய ஞான வடிவமாக வாழ்ந்து வரும் தன்மையானது நாளும் வாழ வேண்டும் என வணங்குவோம்.

**7. சினமான மாயை இனம்ஆன மாசு**
**செறியாமல் நூறி அறிவுஆகவே**
**மனம்ஆன தீய பகைவீய மோதி**
**வருஞான யானை வலிபாடுவாம்**

கோபமுள்ள மாயையின் இனமான யான் எனது என்னும் குற்றங்கள், நெருங்காமல் அழித்து அறிவாக விளங்குவான் வேண்டி மனமாகிய கொடிய பகை அழிய, மோதி வரும் ஞான வடிவாகிய யானை முகக் கடவுளினது ஆற்றலைத் துதித்துப் போற்றுவோம்.

8. **ஒழியாமல் ஈசன் ஒளிஆகி மேவ**
**உணராமல் மூடும் ஒருமாயையால்**
**விழியாத லோகர் அழியாத ஞானம்**
**விழிமேவ லான வழிமேவவே.**

ஈசன் ஒளி வடிவமாகி நீக்கமற எங்கும் நிறைந்திருந்தும், அதனை மறைக்கின்ற ஒரு மாயா சக்தியினால் ஆன்மாவைக் காண இயலாத அறிவிலிகள், அழியாத அறிவுக் கண் பெறும் படியான வழியை அடைவான் வேண்டி வணங்குவாம்.

9. **இறைவாழி நாதன் அருள்வாழி தாளின்**
**இசைவாழி ஆளும் இயல்வாழியே**
**மறைவாழி மோன மொழிவாழி ஆறு**
**வழிவாழி ஞான விழிவாழியே**

இறை வடிவாகிய குருமூர்த்தி வாழவும். அத்தலைவனது அருள் வாழவும், அவனது திருவடிகளின் புகழ் வாழவும், எம்மைத் தடுத்தாட் கொள்ளும் தன்மை வாழவும், அவர் கூறிய வேதமெழி வாழவும், மவுன உபதேசம் வாழவும், அறுசமய நெறிகள் வாழவும், ஞானக்கண் வாழவும் வணங்குவாம்.

10. **தறுகண்வினை வழிசரிய வருதலைவன் வாழியே**
**தனதுசரண் எனதுதலை தரவலவன் வாழியே**
**உறுகண்அற உணர்வுவிழி உதவும்அவன் வாழியே**
**உணர்வுஅறமெய் திகழஅருள் ஒழிவுஇல்பரன் வாழியே**

எவர்க்கும் அஞ்சாத தீவினை நெறி அழிய வருகின்ற நம் இறைவன் நீடுழி வாழவும், தன் திருவடிகளை எனது தலையின்கண் சூட வல்லவன் வாழவும், பிறவித் துன்பம் அழிய ஞானப் பார்வையை வழங்கும் அவன் நீடுழி வாழவும், உள்ளுணர்வு நீங்கவும், நீங்கும் உயிர்த் தத்துவம் நன்கு ஒளி விடவும் அருள் செய்து எங்கும் நீக்கமற நிறைந்து இருக்கும் ஆண்டவன் நீடுழி வாழ்க.

11. **நினைவுஅயர்வு கெடநிகழும் நிகர்இலவன் வாழியே**
**நிரதிசய சுகவடிவில் நிலைசெய் பரன்வாழியே**
**எனையழிய வரும்விழியின் இசையும்அவன் வாழியே**
**இனிமைதரு சரணபதம் அருளும்இறை வாழியே.**

நினைவில் உண்டான தளர்ச்சியான வருத்தம் முதலியன (கேவல அவத்தைகள்) அழிந்து, விளங்குகின்ற ஒப்பு உயர்வு இல்லாத ஆண்டவன் நீடூழி வாழ்க. அதிசயம் இல்லாத சுக வடிவத்தில் எம்மை நிலைத்து இருக்கச் செய்யும் படியான மேலான ஆண்டவன் நீடூழி வாழ்க. தன் முனைப்பை அழிக்க வருகின்ற ஞானப் பார்வையோடு கூடி விளங்கும் ஆண்டவன் நீடு வாழ்க. ஆனந்தத்தோடு அடைக்கலம் தரும் திருவடிகளை அருளும் இறைவனே நீடூழி வாழ்க.

## கடைதிறப்பு
## (ஒரு சிறு விளக்கம்)

ஓர் அரசன் தன் நகரை முற்றுகையிட வந்த பகைவனோடு போர் புரியச் செல்வான் வேண்டி, அச்செய்தியைத் தன் அந்தப் புரத்து மகளிர்க்குத் தெரிவிக்க வேண்டிச் செல்கின்ற போது அவள் அதனை அறியாது கதவைத் தாளிட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு அவளைக் கதவு திறந்திட வேண்டுகின்றான். அதுபோல ஈண்டு அறியாமை என்ற போர் வீரன் ஞான மயமான நகரை முற்றுகையிட்டு இருப்பதைக் குரு வென்ற ஞான வீரன் அறிந்து அவ் அறியாமையோடு போர்செய்வான் வேண்டி, மகான்கள் ஆகிய பத்தினியரிடம் தெவிவிக்கச் செல்லும் போது அவர்கள் அசைவிலாச் சமாதிநிலை என்னும் யோகத்துயிலில் இருப்ப, அதனை அறிந்து, சமாதிக் கதவைத் திறந்து வெளிப்பட வேண்டிக் கொள்ளுதல். அரசனுக்கு அவன் மனைவி எப்படி அதிக ஆசை உள்ளவளோ, அதுபோல் மகான்களும் ஈண்டு குருநாதனுக்கு அதிகப் பிரியம் உடையவர்கள் ஆதலால் மனைவியர் என்று சொல்லப் பட்டனர். அம்மகான்கள் எத்தகையவர் என்பதை விளக்குவது இப்பகுதி.

1. **தனிநாடியர் பொருளோடுஉறு தலைநாடியர் நிலைபேர்**
   **துனிநாடியர் அலைதீர்வதுஓர் துறைநாடியர் திறமின்.**

தனிமையில் இருக்கும் நாட்டம் உடைபவர் நீங்கள். பிரமம் என்ற பொருளோடு ஒன்று சேர்ந்திருப்பவர் அல்லவா நீங்கள். துன்ப நிலையை நீக்க வல்ல ஆராய்ச்சியை உடையவர் நீங்கள். சலனமில்லாத அத்வைத நெறியினை நாடியவர்கள் அல்லவா நீங்கள். இப்படிப்பட்ட நீங்கள் கதவைத் திறக்க வேண்டும்.

2. மறைநாடியர் மனுநாடியர் மதியால்வரு சமயத்
துறைநாடியர் இறைதாள்இணை தொழநாடியர் திறமின்.

வேதத்தின் பொருளை நாடியிருப்பவரும், மனு முதலான அறநூல் பயிற்
உடையவரும் அல்லவா நீங்கள். தங்கள் தங்கள் அறிவின் ஆற்றலால் அறுவகைச் சம
நெறிகளையும் அறிந்தவர் அல்லவா நீங்கள். குருவினது இரண்டு திருவடிகளையு
வணங்குதலை உடையவர் அல்லவா நீங்கள். இத்தகைய தன்மையுடைய நீங்கள் கபாட
திறக்க வேண்டும்.

3. அருவம் அன்றிஅவர் உருவம் அன்றிஅவர்
அடைய அன்றிஅவர் உடையசீர்
உருவம் ஒன்றுபட உடைய நெஞ்சடைய
உருகு கின்றவர்கள் திறமினோ

வடிவின்றியும், வடிவத்தோடும் அடைய இயலாமலும் ஆன இலக்கணங்களை உடைய
சிறப்பான பிரமத்துடன் ஒன்றுபட எண்ணி, அதனால் மனமானது நெக்குருகி இளகிட
உருகும் நெஞ்சுடையவர்களே கபாடம் திறவுங்கள்.

4. புனலின் அமிழாது ககனமிசை ஊதை
புகுதஅசை யாத பொருள்அதாய்
அனலின்எரி யாது படையின்அழி யாத
அறிவை அறிவார்கள் திறமினோ.

நீரில் அமிழாததாயும், வானில் அசையும் காற்றானது நுழைந்து அசைக்க முடியாத
பொருளாயும், நெருப்பால் அழித்திட இயலாததாயும் படைக்கலங்களால் அழிக்க
முடியாததாயும் ஆகிய ஞான வடிவினைத் தன் வடிவமாக எண்ணும் முனிக்கணங்களே
(பெண்களே) கதவினைத் திறவுங்கள்.

5. ஐயம் ஒன்றும்அற வந்த கோன்அடியில்
அன்பொடு ஒன்றிஅகம் இன்புற
மைஅ ழிந்திட மலர்ந்து இலங்குவிழி
மல்குவீர் கள்கடை திறமினோ.

இங்கு எழுந்து அருளிய இறைவன், ஐயம் சிறிதும் இன்றி நீங்கவும், அவ் இறைவன்
அடியில் ஒன்றி, மனமானது மகிழவும், கண் மை அழிந்திடவும் மலர்ந்து விளங்கும்

பார்வையை உடையவர்களே. அப்பார்வையால் விளக்கம் பெற்றவர்களே கதவைத் திறவுங்கள்.

**6. பாரும் எறிவளியும் நீரும் எரியும்வெளி**
**பானு மதியும் இய மானும்நேர்**
**ஒரும் அளவின்உணர்வு ஆக ஒருமொழியின்**
**ஓதும் அவர்கள்கடை திறமினோ.**

பூமியும், வீசுகின்ற காற்றும், சூரியனும், சந்திரனும், சீவனும் ஆகிய இவ்வட்ட மங்கள வடிவத்தையும் நன்கு ஆராய்ந்து பார்க்கும் கால், உணர்வோடு கூடி மகாவாக்கியத்தால் உபதேசிக்கும் பெண்களே கதவு திறவுங்கள்.

**7. கருகு கலியன்வலி தொலைய உலகின்வரு**
**கருணை மலையின் அருள் பரவியே**
**பெருகும் அதிசயமொடு அருவிசொரி**
**பெரிய விழியினவர் திறமினோ.**

உள்ளத்தைக் கருகச் செய்யும் கலியினது வலிமை அழியும் பொருட்டு உலகின் கண்ணே எழுந்தருளி வரும் கருணை மலையான பரமனது அருளை வணங்கி, மிகுந்த வியப்போடு மனம் கசிந்து கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருகும்படியான பெரு விழிகொண்டவர்களே கதவைத் திறவுங்கள்.

**8. உளவலி முனிவர்கள் ஒழியஆர்**
**உயிர்விட விழிகொள உருகிவீழ்**
**அளவினில் ஒருதிரு மொழியதாம்**
**அமிர்துஅருள் பவர்கடை திறமினோ.**

திட ஞானம் ஆகிய உள்ள வலிமை நீங்க, மற்றவர் தம் ஆருயிரை விடவும், முழுமையான நோக்கினை அடையவும், மனம் கசிந்து கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் ஒழுகுகின்ற தருணத்தில் ஒப்பற்ற அழகிய மகாவாக்கிய உபதேசம் ஆகிய அமிழ்தத்தினைக் கொடுக்கின்றவர்களே கதவைத் திறவுங்கள்.

9. கனவினும் அமரர்கள் பெறல்அறக்
கலியுகம் இதில்ஒரு நினைவுஅறத்
தனைஅருள் செயஇறை நினைவுஅறத்
தமைநினை பவர்கடை திறமினோ

கனவிலும் தேவர்கள் அடைதற்கு அரியதான இக்கலியுகத்தின் கண் யாதொ( நினைவுமின்றிக் குருநாதரானவர் இறைவன் வடிவாய்த் தன்னைக் கொடுக்க, எண்ண இன்றித் தங்களது ஆன்ம வடிவத்தையே வணங்கும் மகான்களே கதவைத் திறவுங்கள்

10. வளைதரு வினைகழல் வுறஅருள் இறைஅடி
மருவுதொ றும்உளன்உடல் புளகமது எறியவும்
மலர்தரு குவளைகள் அருவிகள் சொரியவும்
மறிகடல் ஒலிஎன அலறியும் உலறியும்
அளைதரு புலன்அவை மடிதர மனம்இற
அறிவுஎழும் அதுஅற மருவிய வெளியினில்
அழிதர ஒழிவுஅற மிகுவிழி நிகழ்தரும்
அமிர்துஅது பருகிடும் அவர்கடை திறமினோ.

நம்மைச் சூழ்ந்துள்ள பாவ வினைகள் விட்டு நீங்க, அருள் புரியும் குரு மூர்த்தியின் திருவடி கிட்டுந்தோறும், மனமும், உடலும் மயிர்க் கூச்சு எறியவும், மலர்ந்திருக்கும் குவளை மலர் போன்ற கண்களிலிருந்து மலையிலிருந்து விழுகின்ற அருவி நீர்போல ஆனந்தக் கண்ணீர் பெருகவும், மனம் பரவசத்தால் குழம்பிடவும், இப்பரவசத்தால் மகிழும்கருவிகள் அழியவும், மனத்தைக் கலக்கும் ஐம்புலன்கள் நாசமடையவும், எழுகின்ற அறிவானது விருத்தியடையாது நாசமாகவும் நீக்கம் இன்றி நிறைந்த அறிவு வெளி வடிவத்தில் யாவும் அழியாமல் செய்து பெரிய விழியோடு விளங்குபவரும், அதனால் உண்டான அமிழ்தத்தினைப் பருகிடச் செய்பவரும் ஆனவர்களே கதவைத் திறவுங்கள்.

11. சிதையும் எனஉடன் முதல்வரு பொருள்களும்
திரியும் எனஉயர் பதம்உறு வினைகளும்
சிலுகது எனஅலை அலைவரு சமயமும்
தெளிவு தரஇவை முழுதையும் நழுவிநின்று

**இதைய மலர்செய உருகிநம் இறைவர்தந்**
**திடும்அடி இணைமலர் முடிமிசை அணிவந்து**
**இழிவு கழிவுஇதம் அகம்அறும் அமிர்தம்உண்டு**
**எமது சுகவடிவு எனுமவர் திறமினோ.**

உடல் முதலாக வருகின்ற அனைத்து உறுப்புக்களும் அழியும் எனவும், உயர்ந்த பிரம பதவியை அடைவிக்கும் சகலமான வினைகளும் மீண்டும் திரும்பும் எனவும், கடலினது அலைகளைப் போலச் சலன வடிவான அறுவகைச் சமயங்களும் போரிட்டுக் கொள்ளும் எனவும், இவைகளை எல்லாம் நீக்கித் தெளிவோடு இருந்து, இதய மலரானது நன்கு கசிந்துருக, கருணையால் நமக்கு வந்து அருளிடும் இணையடித் தாமரைகளைத் தலையில் சூட்டி, சம்சார பந்தமாகிய இழிவு கழிந்து, இதம் தருகின்ற அகந்தை நீங்கிய அமுதத்தைப் பருகி, நமது சுகவடிவம் என்று சொல்லும் படியானவர்களே கதவைத் திறவுங்கள்.

**12.** **மருவு குணமொடு மலம் அது கழியவும்**
**மலரும் இருவினை மயலது பறியவும்**
**மகிழ்வு மடிவுஅற ஒருபொறை அணையவும்**
**மனனும் நினைவரும் இடமது நினையவும்**

**அருவ உருவனது அடிதலை அமரவும்**
**அயர்வு நினைவுஅறும் அறிவது நிகழவும்**
**அடைய ஒழிவுஉறும் அதன்நிலை திதிபெறும்**
**அமிர்து பருகிடும் அவர்கடை திறமினோ.**

காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றம் நீங்கவும் விரிந்த புண்ணிய பாவ வினைகளால் ஆன சுக துக்க மயக்கங்கள் கெடவும், மகிழ்ச்சி நீங்கி ஒப்பற்ற பொறுமை வந்து பொருந்தவும், மனமானது எண்ணுதற்கு அரிய நிலையான பொருளைத் தியானிக்கவும் அருவமாயும், உருவமாயும் உள்ள குருமூர்த்தியினது திருவடித் தாமரை தலையில் பொருந்தவும், அயர்வும் நினைவும் நீங்கி அறிவொளியானது ஒளிவிடவும், அனைத்தும் நீங்கி நிலையான பொருளை அடையும் பேறு பெற்று, அதனால் உண்டான அமிழ்தத்தைப் பருகி அவ்வானந்தமே எம்வடிவம் என்று கூறுபவர்களே கதவைத் திறவுங்கள்.

**13.** **உலகம் அநித்தம்எனா உணர்வது நித்தம்எனா**
**உருவுஅருவு அற்றவர்ஓர் உருவு தனைக்கொடுநும்**
**கலகம னத்திடையே இலகமு தல்பருகும்**
**கலைகளை விட்டுஎறிவீர் கடைதிற மின்திறமின்.**

இவ்வுலகம் நிலையற்றது எனவும், இவைகளுக்கு எல்லாம் மூலமான இறை ஒன்றே நித்தியம் எனவும், உருவும், அருவும் அற்ற பரமான்மா ஓர் உருவத்தைத் தாங்கி வந்து உங்களது கலக வடிவான மனத்தின்கண் குடிகொண்டிருக்க, அதனால் முதன்மை பொருள் பற்றிப் பகரும் சுருதிகளை எடுத்து எறிந்த மகான்களே நீங்கள் கதவை திறவுங்கள். திறவுங்கள்.

**14.** **ஓதல் அறக்கணியா ஒப்பில் பரம்பொருளே**
**ஒருவடிவு ஆகிஎழுந்து அருளுதல் உன்னுதொறும்**
**காதல் மிகுத்துவரக் கண்பனி கொண்டுவரக்**
**கரைஅழி அன்புடையீர் கடைதிற மின்திறமின்.**

சொல்லுக்கு எட்டாததாயும், மனத்தினால் எண்ண முடியாததாயும், ஒப்பின்றி விளங்கும் பரம்பொருளே. ஒப்பற்ற வடிவோடு நீ எழுந்தருளி அருள் புரிவதை எண்ணும்போது அன்பு ததும்பி ஆனந்தக் கண்ணீர் பெருகவும் அளவிலாப் பக்தி கொண்டவர்களே கதவைத் திறவுங்கள். திறவுங்கள்.

**15.** **ஆவியி னுக்குஉயிராம் ஆரணன் ஓர்உருவாய்**
**அவனியில் வந்துஅருளும் பவனி விரைந்துதொழா**
**ஓவியம் ஒத்திடநின்று உரைஉணர்வு ஒன்றுஅழியா**
**உம்மை ஒழிந்திடவே ஒழிவுஅறு வீர்திறமின்.**

உயிருக்கு உயிராய் உள்ள பரமேசுவரன், ஒப்பிலா அருள் வடிவாய்ப் பூமியில் எழுந்தருளி வந்து அருள் செய்யப் பவனி வருதலை அறிந்து, அதிவிரைவாய்ச் சென்று வணங்கிச் சித்திரப் பதுமை போல் இருந்து சொல்லும், உணர்வும் கடந்து, இறைத் தத்துவமானதை விட்டு நீக்கமின்றி நிறைந்திருக்கும் மகான்களே கதவைத் திறவுங்கள்

**16.** **பொருளையே கருதிவெம் புலன்வழிச் செல்லும்என்**
**புன்மையே கண்டுவந்து இம்மையே அருள்பெறும்**
**கருணையே உடையவன் கழல்நினைந் திடும்தொறும்**
**கரைஅழிந்து உளம்நெகும் காதலீர் திறமினோ.**

தனம் முதலான பொருள்களையே எண்ணிக் கொடியதான இந்திரியங்களின் வழிச்சென்று எழலும் அடியேனது இழிவான தன்மையைக் கண்ணுற்று, இம்மையில் ஒரு வடிவமாய் வந்து அருள் புரியும் பெருங்கருணைத் திறம் உடையவனது திருவடியை நினைக்கும் தோறும் மனமானது அளவின்றிக் கசியும் அன்புடையீர் கதவைத் திறவுங்கள்.

**17.** **நம்மை ஆளுடையநா யகனையே நனவிலும்**
**கனவிலும் நவிலுமாறு அன்றிவேறு ஒன்றுநம்**
**செம்மையா னதுதெரிந் திடுதல்கண் டிலம்எனத்**
**தெரியும் ஆதரவினீர் கடைதிறந் திடுமினோ.**

அடியவர்களாகிய எங்களை ஆட்கொண்ட பரம்பொருளையே கனவிலும் நனவிலும் மனம் மொழி மெய்களால் வழிபடும் செயல் அன்றி வேறு ஒரு செயல் நமக்கு நலம்தரும் என்று ஆராய்ந்து அறிந்த வரையில் காணவில்லை என்பதனை அறிந்திருக்கும் பக்தி மிக உடையவர்களே கதவைத் திறவுங்கள்.

**18.** **விழியால் உலகு அழியாவெறும் உணர்வாய்விடும் வகையால்**
**ஒழியாஅமிர்து உண்பீர்உமது உணர்பொன் கடைதிறமின்**

முழுமையான அருட் பார்வையால் உலகைக் கெடுத்து வெறும் உணர்வு மட்டும் எஞ்சுகின்ற படியால், நீக்கமின்றி எங்கும் நிறைந்திருக்கும் வீடுபேறாகிய அமிழ்தத்தைப் பருகும் மாதர் கணமே பொன்னால் ஆகிய உமது கதவினைத் திறவுங்கள்.

**19.** **அளவு கண்டிட அரிய பங்கய நயனம் வந்துஉமது ஆவியைக்**
**களவு கொண்டிட உருகு கின்றவர் கனக நன்கடை திறமினோ.**

காலதேச வர்த்த மானங்களால் இவ்வளவு என்று எல்லை காண இயலாத குருநாதரது தாமரை மலர் போன்ற கண்களின் அருட்பார்வை உங்கள் உயிரைக் கவர்ந்து கொண்டு போய்விட அதனால் மனம் உருகுகின்றவர்களே பொன்மையான உங்களது அழகிய கதவினைத் திறவுங்கள்

**20.** **அழுந்த ஆகம் இரண்டும் ஒன்றுஉற அழிவி லானொடு தழுவிமுன்பு**
**இழந்த நாளை நினைந்து போத இரங்கு வீர்கடை திறமினோ.**

அழிவில்லாத பரம்பொருளுடன் சேர்ந்து, உடல் இரண்டும் பிரிவு இன்றி ஒன்றாகி அழுந்தும்படி தழுவி, சென்ற காலத்தை நினைப்பவராய் மறுபடியும் சேர்ந்திட ஏங்கும் தன்மை உடையவர்களே வாயிலைத் திறந்து விடுங்கள்.

**21. ஒழித்தே உள்ளம் உணர்வுஅடைய ஒழியா ஒருவன் வரும் அளவும்
விழித்தே உறங்கும் விளங்குஇழையீர் மேவும் கபாடம் திறமினோ.**

மனம் நல்லுணர்வசை சாரும்படி செய்து விழிவழிச் சென்றிடாமல் தடுத்து, எங்கும் நீக்கமற நிறைந்துள்ள உண்மை ஞானிகளுக்கு மட்டும் மறையாத ஒப்பற்ற இறைவனை, அவன் தனது வடிவோடு முன்னே தோன்றும்வரை, தூங்காமல் தூங்கும் யோக நித்திரையில் இருக்கின்றவரும், நற்குணங்களை அணிகளாகக் கொண்டவர்களும் ஆன நீங்கள் திருக்கதவை திறவுங்கள்.

**22. உருநாமம் ஒன்றும்இலா ஒளிகருணா கரன்என்னும்
திருநாமம் பெறவந்த திறம்பாடத் திறமினோ.**

உருவமும், பெயரும் இல்லாத சுய அறிவானது, கருணைக்கு இருப்பிடமானவன் என்ற அழகிய பெயரைப் பெற்று, ஈங்கு எழுந்தருளி வந்த திறம் பாடக் கதவைத் திறவுங்கள்.

**23. தரணியில் வந்த பெருமானார் தாள்இணை சூடி அஞ்ஞுவதைப்
பரணியை இன்றுஎன் வாயாரப் பாடக்க பாடம் திறமினோ.**

உலகில் அருளுருவாய்த் தோன்றிய குருமூர்த்தியின் இணை அடிகளை முடியாய்ப் புனைந்து, அஞ்ஞுவதைப் பரணி என்னும் ஞான நூலினை, இப்பொழுது என் வாயாரப் பாடுதற்குக் கதவைத் திறவுங்கள்.

## கடை திறப்பு நிறைவுற்றது

## 3. காடு பாடியது

இப்படி ஞான வேந்தன் தன் மனைவிகள் என்று கூறிய மகான்கள் பால் தெரிவித்துப் போருக்குப் புறப்பட்டுச் செல்லும் போது வழியிலுள்ள காடு பற்றிக் கூறுதல் (சம்சாரம் என்ற வனம்) அப்பெரிய காட்டில் உள்ள அம்பாள் கோவில், பேய், கல், மரம், தீ ஆகியன எப்படி இருக்குமோ அப்படியே இந்தச் சம்சாரமாகிய வனத்திலும் அப்படி இருக்கும் காட்சியை வருணித்தல்.

1. **குறிஉறா அறிவுதான் இறைவிதன் கோலமே**
**குருகுவார் உளம்எலாம் அவள்பெரும் கோயிலே**
**அறிஞர்வாழ் இடம்அலாது அழல்நெடும் கானமே**
**அறிவுஇலா அவைஎலாம் அடையவும் பேய்களே.**

சுட்டுதற்கு அரிய இலிங்கம் இல்லாத அறிவுதான் இறைவியின் வடிவம் ஆகும். அந்த இறைவியின் வடிவமெலாம் தம் வடிவமாக ஏற்றுக் கொண்டவர்களான அனைவரது இதயம் அனைத்தும் இறைவியின் ஆலயமாம். தத்துவ ஞானிகளாகிய அறிஞர்கள் வாழ்கின்ற இடங்களைத் தவிர மற்றவை எல்லாம் வெம்மை பொருந்திய கானகமே. அறிவில்லாத உயிர்த் தொகுதிகள் எல்லாம் அந்தக் காட்டில் வாழும் பேய்களாம்.

2. **மறைஎலாம் மறைவது ஆகியபரஞ் சோதிஓர்**
**வடிவதாய் அருளும்அப் பொருள்எனும் தேசுதான்**
**உறைவதாம் அகம்உறாது அலமரும் பேய்எலாம்**
**உழல்வதாம் உலகமாம் ஒருபுறம் கூறுவாம்.**

இருக்கு முதலான வேதங்கள் எல்லாம் போற்றுகின்ற மேலான சுய அறிவே, ஒப்பற்ற திருவுருவம் ஆகி அருள் புரியும் பரமான்மா என்ற ஒளிப் பொருளை ஏற்றுக் கொள்ளும் மனம் அடையாது அலைகின்ற பேய்கள் அனைத்தும் சுழன்று கூத்தாடும் பேய்கள் உலகின் ஒரு பகுதியை எடுத்து மொழிவாம்.

3. **கல்லும் கயவோர் மனமே அவர்தம்**
**கண்ணே மரமும் அவர்தண் மைஅறச்**
**செல்லும் உரையே சுடுதீ இடர்சேர்**
**சூறா வளிமற் றவர்தம் தொழிலே.**

மூடர்களது மனங்களே கற்களாம். அம்மூடர்களது மேல் நோக்கு ஆகிய பார்வையே மரமாம். அக்கயவர்கள் குளிர்ச்சியும் இனிமையும் இன்றிப் பேசுகின்ற வன்சொற்களே சுடவல்ல நெருப்பாம். அவர்தம் கொடிய பாவச் செயல்களே துன்பத்தைச் செய்யும் புயற் காற்றாம்.

4. **செயிரைச் சுடவல் லவர்தம் அளவும்**
**செயிர்செய் பவர்சேர் வுறுதீ வனம்ஈது**
**உயிரைச் சுடவல் லதுவெவ் அழலோ**
**ஓரா இவர்தம் உரைஅன் றியுமே.**

அனைத்துத் துன்பங்களையும் கோபங்களையும் சுட்டழிக்க வல்ல ஞானியராகிய மகான்களைக் கூடத் துன்பம் அடையச் செய்யும் கயவர்கள் வாழும் இடமாகிய கொடிய காட்டின் கண்ணே, உயிருக்குத் துன்பம் தந்து சுடவல்ல கொடிய நெருப்பே அன்று வேறு உள்ளதோ? (இல்லை).

5. **வெருவ எரிசொரியும் விழியும்அழல் பொழியுமால்**
**வெகுளி எரிவிரவி மிகமிகவும் எரியுமால்**
**அருவ உயிரும்இற எரியும்அனல் அதனில்வேறு**
**அனலும் இலதுஅகில உலகுஅதனின் அழலதே.**

கோபத் தீயானது எங்கும் பரந்து அனைவரும் அஞ்சும் படியாக நெருப்பை எங்கும் வீசி மிக மிகுதியாய் எரியும் ஆனதால் அதிநுட்பமான உயிரையும் சுடவல்லதான சினத்தீயைக் காட்டிலும் அனைத்துலகிலும் வேறு பெரிய தீ இல்லை என்று சொல்லும்படி இருப்பது சம்சார வனத்தின் கோபத் தீயே. இக்காட்டில் அதற்கு வேறாக உயிர்களைத் துன்புறுத்தும் அக்கினி இல்லை.

6. **தருவர் தருவதுஇலர் எனநினையும் மனமொடே**
**தமது தலைமைகெட அவர்அவர்கள் கடையிலே**

**ஒருவர் தரும் உணவு கருதிஉழல் பவையில்வேறு**
**உழலும் ஞமலிகளும் உளவும்அல உணரிலே.**

ஆராய்ந்து பார்க்கும்போது இவர் கொடுப்பார் இவர் கொடார் என்ற நினைப்புடன் தனது முதன்மை அழியும்படி வாயில் தோறும் சென்று, ஒருவர் தரும் உணவை எதிர்பார்க்கும் மனத்தோடு சுற்றுகிறவர்களைக் காட்டிலும் அலையும் நாய்களைக் காட்டிலும் வேறு நாய்கள் உள்ளனவோ?

7. **அணிகொள் உம்பர் தருவும்நேர் அருகர் பிண்டி மரமும்நேர்**
**கணிக பங்கர் அரசுநேர் கடிய கானம் அதனிலே.**

இந்தக் கொடிய (சம்சார) காட்டிலே அழகோடு விரும்பியதை அளிப்பதான கற்பக விருட்சமும் இங்கில்லை. சைனர்கள் வணங்கும் அசோக மரமும் இல்லை. கணக்கிட்டு விஞ்ஞான வாதங்களால் காப்பாற்றப்படும் அரசுவிருட்சமும் இல்லை.

8. **நீளத்தில் சோலையதாய் நெடுந்தா பத்தால்**
**நிழல்எனவந்து அடைந்தவர்க்கு நெருப்பே ஆகி**
**வாள்ஒத்த முள்சரித்து வறிதே காய்க்கும்**
**வன்புஆகும் கருவேலை வளர்க்கும் கானம்**

நீண்ட தொலைவு காணுமிடத்து மிக்க அழகுடன் இருக்கின்ற சோலையாயும், நெடுந் தாபங்களால் வெம்மை அடைந்து இது நிழல் தருமே என வந்து அடைபவர்க்கு மேலும் வெம்மை தருவதாயும், வாள் போன்ற முள்கள் நிறைந்து வறிய காய்களைக் காய்க்கும் கொடிய கருவேல மரங்களை வளர்க்கின்ற காடாக இருக்கும். (எவ்விதமான விசாரமும் இன்றி, உலகாதி விஷயங்களால் வெய்யதுன்பத்தை அடைந்து, அது நீங்குவான் வேண்டி வருவோர்க்கு மேலும் மிக்க துயர் தந்து, கூரிய கடுஞ்சொல், காமம் முதலான முள்கள் நிறைந்து, பயனின்றிப் புத்திரோற்பத்தியைச் செய்யும். மிகுந்த கர்ப்ப வாசத்தை இந்தச் சம்சார வனமும் உண்டாக்கும்.)

9. **ஆராத அருந்துதலும் புணர்ப்பும் ஆகும்**
**ஆயாமல் வரும்தோற்றம் அம்புஎன்று ஓடிப்**
**பேராசை மான்செல்லச் செல்லப் போகும்**
**பேய்த்தேரே எம்மருங்கும் பெருகும் கானம்.**

கானலை நீர் என்று எண்ணி, ஆராயாது நம்பியே ஓடி இளைத்தல் போல், அளவற்ற ஆசை கொண்ட உயிர்கள் என்று சொல்லப்படும் மான்கள் போகப் போகப் போய்க் கொண்டே இருக்கும். அமைதி அடையாத அருந்தல், பொருந்தல் என்னும் கானல் நீராகிய வெறுந் தோற்றமே எவ்விடத்தும் வனமாகப் பெருகி இருக்கும்.

**10. செத்தபிணம் இடுகாடு சுடுகாடு என்று**
**செப்புவர்கள் அறியாதார் சிலர்தன் நெஞ்சத்து**
**ஒத்துதாம் உணராதுஉண்டு உடுத்து வாழும்**
**உயிரோடும் பிணம்பயில்காடு ஒழிய விட்டே.**

உயிரோடும் பிணம் பயில்காடு பரமான்மா என்பதோர் பொருளை ஏற்றுக் கொள்ளாது, உணவை உண்டு உடையைத் தரித்து உயிரோடு வாழும் பிணங்கள் வசிக்கும் காட்டினைச் சுடுகாடு என்று சொல்வதை நீக்கி விட்டு, அறியாத சிலபேர் உயிர் நீங்கிய பிணத்தைப் புதைக்கவும், சுடவும் செய்கின்ற இடத்தை மயானம் என்று கூறுவர்.

**11. அறம்காட்டி இருசெவிமீது அழல்காட்டி**
**னாற்போலும் அலகை வாழும்**
**புறங்காட்டிற்கு ஒப்பதும்இப் புறங்காடே**
**வேறுஉண்டோ புறம்பு கூற.**

பெரியோர் அறஞ்செய்வது பற்றிப் போதிக்கையில் இரண்டு காதின் கண்ணும், நெருப்பை எடுத்து வைத்தது போல் கருதும் பேய் அனையர் வாழும் நகரத்திற்குப் புறம்பேயுள்ள காட்டிற்கு ஒப்பாவதும், இந்த உலகமாகிய சுடுகாடே. இதனை அன்றி அன்னியமாகச் சொல்ல வேறு உண்டோ. (இல்லை)

**12. வெய்யமறம் அறப்பெருத்த விடயம்எனில்**
**எப்பொழுதும் வெறுத்த மெய்யை**
**ஐயம்அறத் துறந்தவர்கள் அருவருத்தது**
**இதுசுடுகாடு ஆகை அன்றோ.**

கொடிய தீமைகள் மிகுதியாகப் பெருத்த உலக விடயங்கள் யாவும், அறிவற்றவர் வாழும் காடென வெறுத்துச் சந்தேகம் இன்றித் துறவியான மகான்கள், இது சுடுகாடாய் இருத்தலினால் அன்றோ, இவ்வுடலை அருவருத்து விட்டனர்.

13. **தின்றாலும் சிலர்அரிந்து தீற்றி னாலும்**
**தீமைஉறத் தீக்குள்ளே தள்ளி னாலும்**
**கொன்றாலும் அஞ்சாதார் தங்கள் நெஞ்சில்**
**குலைகலைந்தது இக்காடு கொடிதாய் அன்றோ.**

சில வீரர்கள் தமது உடலை அறுத்துப் புசித்தாலும், அழிந்து போகும்படி நெருப்பில் தள்ளினாலும், கொலை செய்தாலும் பயப்படாத தன்மையுடையவர்கள் தம்மைத் தொழ நடுங்கச் செய்த மூர்த்திகளாய் இருக்கும் இம்மயாணம் கொடியது.

14. **கரையற்ற நீராரும் கனன்றுஎழுவது**
**இக்காட்டின் கடுமை அன்றோ**
**புரையற்ற பெரியோர்கள் போய்அகல்வது**
**இவ்வெம்மை பொறாமை அன்றோ.**

காமம், வெகுளி, மயக்கம் என்கின்ற மூன்று குற்றங்களும் இல்லாத பெரியோர் நீர் நிறைந்த கடல் கோபித்து எழுந்து கரையை மோதுவது போல் கோபித்து எழுதல் இக்காட்டின் கடுமையினால் அன்றோ. குற்றமற்ற ஞானியரும் இக்காட்டை விட்டு அகன்று வேறிடத்திற்குச் செல்வதும் இக்காட்டின் வெம்மை தாங்க இயலாமையால் அன்றோ.

15. **மேலாய வானோரும் விண்டுஇருப்பது**
**உடம்புஉற்ற வெம்மை அன்றோ**
**மாலாரும் பால்ஆழி வைகுவதும்**
**இவ்அழலை மாற்ற அன்றோ.**

மேலான குணங்களை உடைய இந்திராதி தேவர் முதலியோர், இவ்வுலக வனத்தை விட்டுச் சொர்க்கத்தின்கண் வசிப்பது உடம்பில் பட்ட வெப்பத்தினால் அல்லவா. திருமாலும் இக்கொடிய நெருப்பின் வெம்மையைத் தவிர்த்தற்கு அல்லவா பாற்கடலில் துயில்கின்றார்.

16. **இன்னமும்யான் வேறுசில இயம்புவதுஎன்**
**இவ்உலகம் எல்லாம் ஈன்றான்**
**அன்னமுமாய்ப் பறந்ததும்இவ் ஆரணியத்து**
**உறுவெம்மை ஆற்ற அன்றோ.**

அடிக்கடி நான் பலவிதமானக் கூறுவதில் பயன் என்ன? இவ்வுலகனைத்தையும் ஈன்றவனாகிய நான்முகனும் இவ்வனத்திலுள்ள வெம்மையைத் தாங்க இயலாமையினால் அன்றோ அன்ன வடிவம் எடுத்துப் பறந்து விட்டார்.

17. **ஓது அரியஎரி கானம் இதில்ஒருவர்**
**உடு வரநினையல் ஆவதோ**
**போத உருவம்நினை யாதஅவரை**
**அடுபூத கணம்அனவி மோதுமே.**

இவ்வாறு இன்னதெனச் சொல்ல இயலாதபடி சுடுகின்ற காட்டில், யாரேனும் ஒருவர் இடையில் நுழைந்துவிடலாம் என்று கருதத் தக்கதோ? இப்படி இருப்பதை அறிந்து ஞான வடிவைத் தியானிக்காதவரை, கொல்லுகின்ற பூதகணங்கள் நெருங்கி நம்மை மோதும்.

## காடு பாடியது நிறைவுற்றது.

## பேய் பாடியது

### முன்னுரை

இனி ஞான வேந்தன் அவ்வனத்திலுள்ள சில பேய்களைப் பற்றி எடுத்துக் கூறத் தொடங்குகின்றான்.

1. **ஏதம் அளவுதெரி யாத கொடியஅனல்**
**மேலும் வகைமருவு பேய்அரோ**
**பேதம் அளவுதெரி யாது பெரிதுஅறிவு**
**பேசும் அலகைசில பேசுவோம்.**

குற்றம் இவ்வளவிற்று என்று கணக்கிட முடியாத மிகக் கொடிய இந்த வனத்தின்கண் பொருந்திய அநேகவிதக் கொள்கைகளை உடைய பேய்களின் வேறுபாட்டைக் கணக்கிட முடியாது. இருந்தாலும் கொஞ்சம் கூடுதலான அறிவுடன் பேசும் பேய்களில் சிலவற்றைக் கூறுவாம்.

2. **ஒன்றுஎன்று நின்றசில பலஎன்று நின்றசில**
**உபயத்து நின்ற சிலவே**
**அன்றுஎன்று நின்றதனை யாம்என்று சொல்லியுடன்**
**அலகிட்டு விட்ட சிலபேய்.**

இரண்டில்லை, ஒன்று என்று சில பேய்கள் சொல்லிக்கொண்டு நின்றன. எல்லாம் பல என்று கூறிக் கொண்டு சிற்சில பேய்கள் நின்றன. மூன்று என்ற கொள்கையுடன் பல பேய்கள் நின்றன. இல்லை என்பதை இருப்பதாய்க் கூறிக் கொண்டு நின்றன சில பேய்கள். ஆம் என்று அவற்றை ஒப்புக் கொண்டு சில பேய்கள் நின்றன.

(சுருதிகளின்படி அனைத்தும் ஒன்றே என்பர் சிலர். காலம், திசை நாநா, விபு என்பர் சாங்கியர். இராமானுசர், மத்துவர், நீலகண்ட பண்டிதர் கொள்கையைக் கொண்டோர் சிலர். சப்தம் அநித்தியம் அன்று நித்தியம் என்பாரும், அதனை ஆம் என்பாரும் உளர்.)

3. **இலது என்று நின்றசில உளதுஎன்று நின்றசில**
**இறைதன்னை நெஞ்சில் உணரும்**
**வலதுஇன்றி அங்குமல உடல்தங்கு கின்றதவ**
**வடிவங்கள் கொண்ட சிலபேய்**

பௌத்தர் முதலிய சூன்ய வாதிகளில் ஒன்றும் இல்லை என்று கூறி நிற்கின்ற சில பேய்கள், புண்ணியம், பாவம் ஆகிய அனைத்தும் உண்டு என்று கூறி நிற்கும் பிரபாகரர் முதலாய கர்ம காண்டிகப் பேய்கள், மனத்தில் பரமாத்மாவை உணருகின்ற வலிமை இல்லாதவையாய்க் கால முடிவில் அழிகின்ற தூய்மையற்ற தேகாதி முதலியவற்றில் நாட்டமுடையவையாய்த் தவ தேடம் பூண்டு திரியும் சில பேய்கள்.

4. **தண்டைப்பி டித்தசில சிகையைத் தரித்தசில**
**சடையைப் பரித்த சிலவே**
**முண்டித்து விட்டசில முடியைப் பறித்தசில**
**முசுவிற் பொறித்த சிலபேய்.**

தண்டைப் பிடித்தவாறு சந்நியாசி என்று சில பேய்கள் திரிகின்றன. பிரம்மச்சாரி என்று சில பேய்கள் தவமுனிவர் என்று சடைமுடியை வளர்த்துக்கொண்டு திரிகின்றன. சில பேய்கள் மொட்டை அடித்துக்கொண்டு துறவிகள் என்று திரிகின்றன. சில சைனப் பிசாசுகள் கருணை உடையவர் என்று சொல்லிக்கொண்டு உரோமங்களைப் பிடுங்கிக் கொண்டு செல்கின்றன. சில பேய்கள் குரங்கு போல் உடலெங்கும் உரோமங்களை வளர்த்துக்கொண்டு திரிகின்றன.

5. **அலைகெட்டி ராதுபல தலைகெட்ட நூல்பழகி**
**அதுமுக்ய மாக மிகவே**
**கலைகற்ற பேய்களொடு சிலுகிட்டு உலாவுவன**
**கரைஅற்ற பேய்கள் உளவே.**

அறிவுச் சலனம் இன்றி, நிர்விகற்ப சமாதியில் இராது நன்னெறியைப் போதிக்காத நூல்களைக் கற்று, அவையே நற்பொருள் தரும் என்று கருதி, அதிகக் கலைகள் பலவற்றையும் கற்ற சாத்திர விற்பன்னராகிய பேய்கள் பலவற்றுடன் சண்டையிட்டு, உலவுகின்ற பேய்களும் அளவு கடந்து திரிகின்றன.

**6.** **வறிய வானஉ ரைபல கேட்பன**
**மாண்டு மீண்டுஇனி வாராவ ழியினைச்**
**செறிய லானபொ ருள்கள்தெ ரிந்துரை**
**செய்யும் எல்லை செவிடுகள் ஆவன.**

வீண் சொற்கள் பலவற்றைக் கேட்கும், ஆனால் இறந்து மீண்டும் திரும்ப, இனி அன்னையின் கருவிற் புகாத வழியினை உண்டாக்கும் நல்வழியினை உரைப்பாரே ஆனால் இரு காதுகளும் செவிடுகள் ஆகி விடும்.

**7.** **வம்புகூறின் உடம்பு எலாம்வெறும் வாய்கள்**
**ஆகி வடித்தற்கு வல்லன**
**உம்பர்கோன் அடித்தாமரை போற்றிநின்று உரைக்க**
**என்னில்வெற்று ஊமைகள் ஆவன.**

தீய சொற்களைப் பேசுமிடத்து, உடம்பிலுள்ள மயிர்க் கால்கள் தோறும், வெறும் வாயாக இருந்து தடையின்றிப் பேசுவதற்கு உரிய வலிமைகளை உடையன ஆகின்றன. திருவாசகம் முதலான பாராயணங்களால் தேவ தேவனின் தாமரைப் பாதங்களை வணங்குங்கள் என்று சொன்னவுடன் முன் இருந்த வாய்களையும் மூடி ஊமைகள் ஆகி விட்டன.

**8.** **பொய்ம்மை ஆகியமெய் போலவி ளங்கிய**
**பொருள்தெ ரிக்கின்நற் புற்புதக் கண்ணின**
**மெய்ம்மை ஆனபொ ருளைஉ ளத்தினில்**
**மீண்டு பார்க்கில்வெ றுங்குருடு ஆவன.**

பொய்யே ஆகி, உண்மை போல் விளங்கிய நற்பொருளை ஆராய்ந்து பார்க்கும் இடத்து, நல்ல நீர்ப் பெருக்கை உண்டாக்கும் நீர்க் குமிழி போன்ற கண்கள் அளவற்றன. மறுபடியும் இதயத்தின்கண், உண்மையான பொருளை ஆராய்ந்து பார்க்கும் இடத்து ஞானப் பார்வை இல்லாத குருடுகளாய் உள்ளன.

**9.** **பருகுஉ ளத்துஅமிர் தம்பொழி நூல்களைப்**
**பக்கம் ஓதிப்ப ழித்துக்க ழிப்பன**
**திருகுஉ ளத்தொடு தர்க்கங்க ளேஉரை**
**செய்யும் நூல்கற்றுத் தெற்றர்கள் ஆவன.**

இதயத்தின்கண் இருந்து இறை உணர்வாய்ப் பெருகி நிதம் அனுபவித்துச் சொல்லு அமுத மொழிகளை உடைய சாத்திரங்களை ஒருபுடை ஒப்புக் கொண்டு, ஒரு பக்க பழித்துக் கழிக்கின்றன. முரண் பட்ட மனத்துடன் வெறும் தர்க்க நூல்களையே கற்று அவற்றையே போதிக்கும் நியாயம் முதலான சாத்திரங்களைப் படித்து, வாழ்நாளை வீண் நாளாகக் கழிப்பன சில பேய்கள்.

**10. ஆவது ஒன்றுஇலை ஆயினும் தன்னைமேல்**
**ஆக உன்னிஅ றக்கடை ஆவன**
**பாவ கத்துஒன்று இலாதமை காட்டல்போல்**
**படப டத்துத்தன் பாழ்வாய்தி றப்பன.**

தன்னால் சாதிக்கக் கூடியது ஒன்றும் இல்லை ஆயினும், தன்னைமே தலைமையாகக் கருதி, மிகவும் கீழான நிலையை அடைகின்றன சில பேய்கள். இறைத் தோற்றமானது தன்னிடத்து இல்லாத தன்மையைக் காட்டுவன போல் சில பேய்கள் அதிவேகமாகத் தானே படபடவென்று, புன்மொழி கூறும் தம் வாய்களைத் திறந்து பயனிலாத சொற்களைக் கூறுகின்றன.

**11. ஆறு ஞானம் உடையார் பிணக்குஅற**
**ஆறு ஞானநெ றிஎன்றுஅ றிந்தவர்**
**கூறு ஞானக்க ரும்புகொள் ளாதுபோய்க்**
**குருடர் சொன்னசொல் கோதுகொண் டாடுவ.**

சைவம், வைணவம், சாக்தம், காணாபத்தியம், கௌமாரம், சௌரம் என்று சொல்லப்படும் அறுவகை நெறிகளையும் பின்பற்றியவர் பேத புத்தியால் உண்டாகும் துன்பத்தினின்றும் நீங்கும்படி, அறுசமய நெறியையும் வீடுபேற்றிற்கு உரிய சாதனம் என்று கண்டறிந்த மகான்கள் உபதேசிக்கும், அத்வைதம் ஆகிய ஞானக் கரும்பை ஏற்றுக் கொள்ளாது பொய் பேசும் குருடர் பொய்யான பொருள்களைச் சத்தியம் என்று கருதிக் கூறும் அறிவற்ற சொற்கள் ஆகிய சக்கையைக் கொண்டு களிக்கும் சில பேய்கள்.

**12. உண்ண லானஇ டந்தொறும் மற்றவர்க்கு**
**உற்ற நட்டவர் போல்உற வாடவே**
**கண்ண னார்சிலர் ஆயினும் கைப்பொருள்**
**இல்லை ஆகில்க ழலக்க ழல்வன.**

அறுசுவைகளோடு கிடைக்கும் உணவு தடையின்றி இங்கே கிடைக்கும் வரை, அன்னம் இடுபவர்க்கு நெருங்கிய நண்பர்கள் போல் உறவு கொண்டாடும் சில பேய்கள், கண்ணுக்கு நிகராகச் சிலர் இருந்த போதிலும், கைப் பொருள் இன்றி வறுமை அடைந்த காலத்தில், கண்கள் போன்ற அவர்கள், தானே தன்னை விட்டு நீங்கும் படியான வழிகளைச் சொல்லும் சில பேய்கள்.

13. **கண்ட மட்டின் இதுஅன்றி வேறுஒன்றும்**
**கண்டி லோம்கதி என்னும்க ருத்தினால்**
**பிண்டம் இட்டவர் தம்பிற கேஞுஞ்ஞை**
**பிஞ்ஞை என்று பிதற்றித் திரிவன.**

பார்த்த வரையும் வீடு பேறானது உண்டு களித்துத் திரிவதே என்று கருதி இதுவரை நாங்கள் வேறு ஒன்றைப் பார்த்தது கிடையாது என்ற எண்ணத்தை உடையவராய், அன்னம் அறித்திட்ட அவர்களது பின்னாலேயே, அய்யா சாமி என்று பல்லைக் காட்டிக் கொஞ்சியவாறு வாய் பிதற்றி வயிறு வளர்த்துச் சஞ்சரிக்கும் சில பேய்கள்.

14. **வயிறு சாணும்வ ளர்த்தல்பொ ருட்டுஅந்த**
**வானும் சென்றுவ ரக்கால் உடையன**
**கயிறும் கம்பையும் ஊடும்பி றர்க்குஒரு**
**காட்சி போல்வரும் புத்தகக் கையன.**

ஒரு சாண் வயிற்றை வளர்ப்பதற்காக வானம் வரைக்கும் சென்று வரக் கூடிய கால்களை உடையன சில பேய்கள். இடுப்பிலே கயிற்றையும், யோக தண்டங்களையும், ஏட்டுச் சுவடிகளையும் கொண்டு பிறர்க்குக் காட்சி கொடுத்தவாறு, கையில் புத்தகம் தாங்கி வருவன சில பேய்கள்.

15. **சவலைச் சாகரம் ஆகிய சமயத் தேநிலை ஆவன**
**தனைமெய்ப் பால்உண ராதன தனுவைத் தான்என நாடுவ**
**கவலைக்கு ஆகரம் ஆவன கடைகட் கேநடம் ஆடுவ**
**கலைவிற் றேஉணவு ஆவன கருவிப் பேய்பல கோடியே.**

சஞ்சலம் உடைய சமுத்திரம் போன்றதான சைவம் முதலான அறுசமயங்களில் நிலை பெற்று இருப்பதும், தன்பால் உள்ள இறைத் தன்மையைத் தானே உணராததும், தூல உடம்பையே அகம் என்று கருதுவதும், சோகக் கடலுள் மூழ்கி இருப்பதும், கீழான

நெறிதரும் வீட்டு வாசல்களில் சஞ்சரிப்பதும், வாயிற் படிகள் தோறும் நடமாடுவதும், தான் கற்ற கருவி நூலைப் பிறருக்குப் போதித்து உணவைத் தேடுவனவும் ஆகிய சாத்திர பேய்கள் பல கோடியாம்.

**16. அடைகட் டாஉக கோடிகள் அளவுஇல் காமச னாதியை**
**அமைவற் றேநிலை யாமையும் அமைவுற் றேஅறி யாதன**
**சடைகட் டாமழி யாஉடல் தலைகட் டாநினை யாஒரு**
**தமைமெய்ப் பால்உண ராதன சமயப் பேய்பல கோடியே.**

கோடிக் கணக்கான யுக பரியந்தம் தகுதி உடையன ஆகி உண்ட உணவு முதலியவற்றையே உண்டும், திருப்தி இன்றி, அதனால் பந்திக்கப் பட்டிருந்தும், நிலையாமையைப் போதித்தும், தன உண்மையான வடிவை அறியாதனவாய்த் தன் தலையில் சடைகளை மகுடமாய்க் கட்டியும் உடலிலுள்ள முடிகளை மழித்தும், குடுமி முடிந்தும், நினைவுக்கு எட்டாத தன்னை, உள்ளபடி அறியாதனவும் ஆகிய சமயப் பேய்கள் பல கோடி.

**17. உழலத் தான்இளை யாதன உணவிற்கு ஆவன தேடுவன**
**உணர்வைத் தான்உண ராதன உலகத் தார்நக வாழ்வன**
**கழலத் தான்உரை யாடுவ கதறத் தான்முசி யாதன**
**கனகத் தேமனன் ஆவன கருவிப் பேய்பல கோடியே.**

அங்கும் இங்கும் அலைந்து திரிவதில் சலிப்பு இல்லாதனவும் உணவிற்கு வேண்டியவற்றைத் தேடுவனவும், தனது அறிவு வடிவத்தை அறியாதனவும், உலகத்தார் சிரிக்கும்படி வாழ்வனவும், வந்தவன் தன்னை விட்டு நீங்கும்படி பயன் இல்லாத சொற்களைக் கூறுவனவும், கத்திப் பேசுவதால் இறைப்பு அடையாதனவும், பொருளை ஈட்டுவதிலே கவனம் உடையவனவும் ஆகி, இலக்கணம் முதலிய கருவிநூல் கற்ற பேய்கள் கோடி.

**18. மெய்வருந்திக் குரவன்அருள் விரும்பாது என்றும்**
**விட்டிடமும் தொட்டிடமும் அறியா தேநின்று**
**அவ்அருகுப் பட்டனவாய் மிகவும் தம்மை**
**அகமதித்துத் திரியும்பேய் அனந்தம் கோடி**

மனம், மொழி, மெய் என்ற முக்கருவிகளாலும் முயற்சியுடன் குருவின் திருவருளை பிரும்பாமல், எப்பொழுதும் வீடுபேறு இது, பந்தம் இது என்று தெரியாமல் நின்று, ஐம்புலன் பசப்பட்டு, வெகுவாகத் தம்மை, கற்றுயர்ந்தோன் என்று நினைத்துத் திரியும் பேய்கள் பலகோடி.

**19.** **கவலைஉற்ற தம்பசியைத் தணிப்ப வேறுஓர்**
**கதிஇன்மையால் அறந்தான் காட்டு வார்போல்**
**குவலயத்தோர் பொருள்விரகால் வாங்கிக் கொண்டு**
**குருக்கொடுக்கும் பேய்கள்ஒரு கோடி கோடி**

துன்பம் தரு தம் பசி நோயைச் சாந்தம் அடையும்படி செய்ய வேறு ஒரு பற்றுக் கோடின்மையால், அறத்தைப் போதிப்பவர் போல, உலகிலுள்ளோர் பொருளைத் தந்திரமாய் வாங்கிக் கொண்டு குருவாய் இருந்து உபதேசிக்கும் பேய்கள் அளவிறந்தன.

**20.** **தன்ம னம்தனை வெருட்டு மேபிறர்**
**தளும்பு நெஞ்சுகள் தெருட்டுமே**
**வன்ம னங்கொடு கிளிகள் போல்அறம்**
**வடிக்கு மேபடி நடிக்குமே.**

தனது மனத்தைப் பார்க்கும் முகமாக அலையச் செய்யும். அந்நியர்களது குற்றமுள்ள மனத்தைத் தெரிவிக்கும். வலிமையானதொரு சித்தத்துடன் சொன்னதையே சொல்லும் கிளிப் பிள்ளைகள் போலத் தர்மத்தையே போதிக்கும். அவர்கள் தம்மிடத்துப் பொருந்தியது போல் சில பேய்கள் நடிக்கும்.

**21.** **நீளு கின்றசடை தன்னில் ஆசைமிக**
**நீளு மேவினையின் மூளுமே**
**மீளு கின்றநெறி தன்னின் ஆதரவும்**
**மீறு மேஒழுக நாளுமே.**

நீண்டு வளரும் சடைபோல, ஆசை வளர்ந்து கொண்டே செல்லும், அதனால் ஆசையை முழுமை ஆக்குவான் வேண்டி, பிறப்பை நிவர்த்தி செய்யும் வீட்டு நெறியில் அன்பு நீங்கி இருக்கும் சில பேய்கள், நீண்ட சடை வேண்டுமென்று இச்சிக்கும். பின் அதற்கு வேண்டிய உபாயமான நெறிகளை நாடும்.

**22.** **பஞ்சு படுகலைகள் தன்னை யும்பல**
**படிக்கு மேதலை வெடிக்குமே**
**பிஞ்சு படுகலைகள் தன்னை உந்துவர்**
**பிடிக்கு மேபட நடிக்குமே.**

அறிவைக் கெடுக்கும் அற்ப சாத்திரங்கள் அநேகமானவற்றைப் படிக்கும். பி
அதனால் பயனின்றித்தலை வெடிக்கும். சில காலத்தில் அழியும் தன்மை கொண்
துணிகளை நல்ல சாயங்களில் நனைத்தணிந்து யாவரும் வியப்பு எய்த நடிக்கும் சி
பேய்கள்.

**பேய் பாடியது நிறைவுற்றது.**

# 5. உவமை

## முன்னுரை

ஒப்புமை கூறும் பகுதியே உவமை எனப்படும். இத்தகைய கொடிய வெப்பம் உடையதும், பேய்களால் சூழப்பட்டதும் ஆன வனத்தில் பேய்கள் அனைத்தும் ஒன்றுக்கு ஒன்று எல்லாம் கடந்த பரமான்மாவாகிய இறையை பற்றிப் போதிப்பதும், அதனை உறுதி செய்வதும், குருவின் அருள் இல்லாது பெறக் கருதுவதும் எதுபோல உள்ளது என்ற ஒப்புமை கூறுகின்றார்.

1. **சொல்லாலும் மனனாலும் அறியா ஒன்றைச்**
   **சொல்லாலே தோற்றுவிப்பத் துணியும் சொற்கள்.**
   **புல்லாலே எரிசுடுதல் போலும் போலும்**
   **போலாதேல் புகையின்எழும் கனலே போலும்.**

சொல்லாலும், மனத்தாலும் அறிய இயலாத இரண்டற்ற கடவுளைச் சொல்லாலே துணிந்து இன்னனெறு சொல்லுகின்ற உபதேசம். புல்லாலே நெருப்பைச் சுடுவதற்குச் சமம். இதுவும் சமம் இல்லலையெனில் புகையிலிருந்து நெருப்பு உண்டானது என்பது போலவாம்.

2. **ஒளிதருநூல் ஒதிமுடி பொருளைக் காணாது**
   **ஒதியநூல் பலஉணர்ந்து பிணங்கும் பேய்கள்**
   **களிதரும்யா னையைக்குருடர் கையால் கண்டு**
   **கண்டகண்ட அளவுகொடே கழறல் போலும்.**

நெஞ்சிற்குத் தெளிவைத் தந்து அறிவை வளர்க்கும் நூல்களைக் கற்று. அந்நூல்களின் முடிவை அறியாது. தான் பயின்ற சாத்திரங்களின் வழி பலவதமாக உறுதி செய்து கொண்டு, சண்டை அடித்துக் கொள்ளும் பேய்கள் மும்மதம் பொழியும் களிற்றைக் கையால் தடவிப் பார்த்து. அவரவர்தம் அறிவுக் கேற்றவாறு சொல்வது போலாகும்.

**3. கலைபகரும் சமயிகள்கண் காணில் பீலிக்**
**கண்ஒன்றைக் காணும்எனக் கையில் கொண்டு**
**தலைபறியே சமயங்கள் என்று தத்தம்**
**தலைபறித்துச் சிலசமண்பேய் சாற்றல் போலும்.**

சாத்திரங்களைப் பேசுகின்ற சைவம் முதலான அறுசமயத்தோரும், எதிரில் கண்டால், அம்மயில் தோகையின் கண்களைப் பாருங்கள் என்று கையில் தாங்கிக் கொண்டு, நாங்கள் தலைமுடியைப் பிடுங்கிக் கொள்ளும் சமணர்களாம் என்று, தத்தம் தலைமுடிகளைப் பிடுங்கும் சில சமண் பேய்கள் சாற்றுவது எது போலவெனில் சில உரோமங்களைப் பிடுங்கிய சமணப் பிசாசுகள் சொல்லுவது போலாம்.

**4. அன்புறுநற் குருபரனுக்கு அன்பு செய்யாது**
**அருஉருவைப் பெறஇருக்கும் தன்மை யையோ**
**இன்புறுநற் கனிபால்தேன் இனிதுஅருந் தாது**
**இரதம்நகர்வு உறஇருப்பார் இயல்பு போலும்.**

உயிர்களிடத்தில் அருள் காட்டுகின்ற சிவபக்தி, திருந்திய துறவு, மெய்ஞ்ஞானம் என்ற வடிவுடன், பிரம நிட்டையை உடைய குருவுக்குப் பணி செய்யாது, எல்லாம் கடந்த பரமாத்மாவை அடைய வேண்டும், அடைய வேண்டும் என்று கூறித் திரிவது எது போல இருக்கின்றது எனின், அகோ ஆச்சரியம் பசித்தவனுக்கு திருப்தி தரும் மா, பலா, வாழை என்னும் முக்கனிகள், பசுவின் சுவைமிக்க பால், தேன் ஆகியவற்றை விருப்பத்தோடு புசியாது. அதன் சுவையை அனுபவிக்க வேணும், அனுபவிக்க வேணும் எனக் கூறித் திரிபவனுக்கு நிகராகும்.

**5. அருவாய பரன்உருவாய் அருள்வது ஒன்றை**
**அஞ்சாதே சிலஅளவை கொண்டு தாமும்**
**குருவாகிச் சிலகுருப்பேய் கூறும் தன்மை**
**குருடர்க்குக் குருடர்நெறி கூறல் போலும்.**

தனக்கு என்று ஓர் உருவம் இல்லாத பரம்பொருள் அன்பர்களுக்காக அருள் உருவாக வந்து, உபதேசிக்கும் இறை வடிவத்தை அஞ்சாதே சில அளவைகளைக் கொண்டு, தாமும் குருவாக இருந்து சில குருவாகிய பேய்கள் உபதேசிக்கும் விதம் எதுபோல எனில் குருடனுக்கு மற்றொரு குருடன் வழி காட்டுவதை ஒக்கும்.

## உவமை நிறைவுற்றது

# 6. உட்சோலை

## முன்னுரை

இதுவரை தேவி வீற்றிருக்கும் ஆலயத்தைச் சுற்றியுள்ளதான புறங்காட்டை வெம்மையுடையது என்றும், பேய்கள் வசிக்கும் சுடுகாடு என்றும், பல விதமான பேய்களால் சூழப் பட்டது என்றும் கூறி, அவை ஒன்றுக்கு ஒன்று உபதேசிக்கும் விதத்தையும் கூறினார். இனிக் கோயிலைச் சுற்றியுள்ள உட்சோலையாக, மகான்கள் வசிக்கும் இடத்தைப் புகழ்கின்றார்.

1. **போகாத துயர்மேவும் பொல்லாத இப்பேய்கள் புகுமாறிலா**
   **யோகால யத்துள் இருப்பாள் திருச்சோலை உட்சோலையே.**

தத்துவ ஞானத்தால் அன்றி வேறு வழிகளால் தீராத துன்பம் பொருந்திய கொடியதான பேய்கள், அடைய இயலாத மகான்களின் மனத்திலுள் நிர்விகற்ப சமாதி என்னும் வீட்டில் வீற்று இருப்பவளது அழகிய இடமானது கோவிலைச் சுற்றியுள்ள உட்சோலையே.

2. **ஆகாசம் நீர்பூமி அனல்கால்இ ரவிசோம ரவியாதும்ஊடு**
   **ஏகாச தரநாதன் அடியார்கள் பயில்வார்கள் இனிதாகவே.**

வானம், நீர், பூமி, அனல், காற்று, சூரியன், சந்திரன், உயிர் ஆகிய இவை யாவுமாய் எங்கும் பரந்துள்ள, மேலாடை தரித்த பரமான்மாவினது திருவடி பணியும் அடியவர்கள் இறைத்தியானம் செய்து கொண்டு நலமாக இருப்பார்கள்.

3. **ஆறும் இலகலை நீரஅ றிஞர்கள் ஆறு**
   **நிறைவும்அவ் அருளுமே**
   **வேறும் இலகலை கூறு பதினாறு நாலும்**
   **அலதுவி எம்பிலே**

அச்சோலையின்கண் நதிகள் இல்லை. கலைபல கற்ற புகழுடைய மகான்களின் அமைதி என்னும் முழுமையான சமுத்திரமே உள்ளது. அதனை அறிமின்கள். சொல்லுமிடத்து அறுபத்து நான்கு கலையறிவுகள் மட்டுமே இருக்கின்றன அல்லாமல வேறு கிடையாது.

**4.** **நிலவிய கிளிகள் உலவிய குயில்கள் நிறையபயில்**
**இயல்பது இறைவர்தாள்**
**குலவிய மறைகள் இறைவிதன் அருகு குழறுவ**
**குழறுவ மழலையே.**

இறைவியின் திருவடியைத் துதிக்கும் வேதாதிகள் என்ற கிளிகளும் புராதன வரலாறுகள் எனத் திரியும் குயில்களும். வரிசை வரிசையாக வசிக்கும் இயல்பினை உடையது. அக்கிளியும். குயிலும் அத்தேவியின்பால் சென்று, இனிய குழந்தைகள் போல உரையாடும்.

**5.** **அழல்உற உடலும் அயர்வுஉற உயிரும் அலம்வர**
**வெறுவி அயரும்நாள்**
**நிழல்இல பிறிதுஅவ் அழகிய கருணை நிகழ்வுஅறு**
**நிழல்ஓர் நிழலுமே.**

உடல் அதி வெப்பத்தால் பீடிக்கப் படவும், உயிர் அயற்சி அடையவும், இந்திரியங்கள் கலகமிடவும், அஞ்சி அயர்கின்றகாலத்தில் அத்துக்கத்தைச் சாந்தி செய்திட வேறு துணை இல்லை. தேவிக்குப் பக்தர்கள்பால் உண்டாகிய கருணை மழையே ஒரு நிழலாக மாறி அச்சோலையில் இருக்கின்றது.

**6.** **என்றுஇவ் உலகுஉளது அன்று முதல்எதிர்**
**இன்று வரைஇதில் ஒன்றுதான்**
**நின்றது எனஇலை என்றும் ஒழிவுஅற**
**நின்றது ஒருபொருள் ஒன்றுமே.**

எக்காலத்தில் இவ்வுலகம் இருந்ததோ அன்று முதலாக இன்றுவரை, இவ்வுலகில் ஒரு பொருளேனும், முன்னிலையில் ஒரே மாதிரியாக இருந்தது என்று இல்லை. எப்பொழுதும் அழிவில்லாதபடி முழுமையாக அழியாத பரமான்மா ஒன்றுதானே இருந்தது.

## உட்சோலை நிறைவுற்றது

# 7. கோயில்

## முன்னுரை

தேவியினது ஆலய வருணனை சொல்லப் படுகின்றது.

1. **ஆதி நாலுமா மறைகள் சூழ்வதற்கு**
**அரிய கோயிலுக்கு அளவு கூறவோ**
**ஓது நால்இரண்டு உடன்இ ரண்டுதிக்கு**
**உண்டே மேனிஅக் கோயில் உள்ளதே.**

முதன்மையான இருக்கு முதலான நான்கு வேதங்கள் சேர்ந்தும் சொல்வதற்கு அருமையான கோயிலுக்கு அதனுடைய எல்லையை எடுத்துச் சொல்லவோ? (முடியாது) அவ்வாறு ஒருகால் கூறும் போது, பத்துத் திசைகளையும் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ள தேவியின் வடிவம் அந்த ஆலயத்தின் உள்ளே இருக்கின்றது.

2. **சமயம் ஆறுதான் அறைவ தேஅலால்**
**சதுமுகாதிகாண் அரியது ஆர்கொலோ**
**அமையும் ஆறுதான் அறிய ஓதுவார்**
**அரிய கோலம்வாழ் பெரிய கோயிலே.**

நான்முகன் முதலானோரும், அறுவகைச் சமயங்களும் அவ்வடிவத்தை ஏற்றுக் கொள்வான் வேண்டிக் கூறுகின்றனவேயன்றி அச்சத்தியப் பொருளைக் காண்டல் மிகவும் அருமை. அப்படியிருப்பின் அந்நியர் மனம் ஏற்றுக் கொள்வான் வேண்டி உபதேசிப்பவர் யார்? இவ்வாறு அவளுக்கு ஏற்றவாறு உள்ள மகத்தான கோலத்துடன் எழுந்தருளி இருக்கும் மகத்தான ஆலயம்.

3. **மெய்வி ளக்கினார் மேவு கோயிலுக்கு**
**எவ்வி ளக்குவே றுஇனிவி ளக்குமே.**

உண்மையை உணர்ந்தோர் வடிவமானது எழுந்தருளி இருக்கும் ஆலயத்திற்கு. வேறு எந்த விளக்கானது ஒளிவிட வேண்டும். இனி இல்லை என்பதாம்.

**கோயில் நிறைவுற்றது**

# 8. பலிபீடம்

## முன்னுரை

இனி இவ்வாலயத்துப் பலிபீடம் வருணிக்கப் படுகிறது.

1. **அண்ட கோடிநூ றாயி ரங்கள்ஓர்**
   **பிண்ட மாயிடும் பெரிய பீடமே.**

நூறு ஆயிரம் கோடி அண்டங்கள் சேர்ந்து ஒரு பிண்டமாக வைத்துப் பங்கு போட்( வழிபடுவதான தன்மையுடையது பெரிய பீடம் ஆகும்.

2. **பவத்தி னார்பொடி படப்ப ராவிய**
   **தவத்தி னார்பலி கொடுப்பார் தம்மையே**

நிறைந்த தவ வலிமையுடைய மகான்கள், பிறப்பு இறப்பாகிய எதிரிகள் அழியத் தம்மையே பலி கொடுக்கின்ற பீடம்.

3. **தமதுஉரு இறைவடிவு உறுதலின் இதன்நிகர்**
   **தருவதும் ஒருபொருள் இலம்இது தகவுஇலது**
   **எமதுஉயிர் எனினும்இது அமுதுசெய் வதுகடன்**
   **எனஅடி தொழுதுஇடு பலிபல பலவே.**

தன் மெய் வடிவமானது, இறை வடிவாய் இருத்தலால் இதற்குச் சமமாகக் கொடுக்கவும் ஒரு பொருளின்றி இருக்கின்றோம். ஆனால் கொடாமல் இருப்பது தகுதி அல்ல. எனின் இப்படிக் கூறுவதும் தகுதியுடையதன்று. எமது உயிரையேனும் இதற்கு அமுதமாக வைக்க வேண்டியது கடமையே என்று திருவடி தொழுது இடப்பட்ட பலிகள் அநேகமாம்.

4. **உடையன உடல்உயிர் உறும்வினை உளம்உணர்வு**
   **உலகுஅது தனில் இனம் உரைசெய வருபொருள்**

**அடையவும் அமிர்துசெய் தனைஇனி அமிர்துசெய்**
**வதும்இலது எனும்ஒலி அவைபல பலவே.**

எமக்குள்ள பெண்டிர் முதலிய மமதைக்குப் பொருளான குடும்பமும், அகந்தைக்குப் பொருளான உடலும் உயிரும், பொருந்திய நல்வினை தீவினைகளும், மனமும் புத்தியும் உலகத்தின்கண், இன்னும் சொல்லப்படும் பொருள்கள் யாவும் அமிர்தம் போலப் பலியாகி விட்டன. இனிமேல் அருந்தத் தக்கது ஒன்றுமில்லை என்று கூறும் கூக்குரலானவை பல அப்பலி பீடத்தின் அருகிலேயுள்ளன.

## பலி பீடம் நிறைவுற்றது

# 9. ஆல்

## முன்னுரை

தேவி எழுந்தருளியுள்ள வடவால மர வருணனை தொடங்குகின்றது

1. **மருவுஇதய கமலம்உறை வாள்என்றும் வாழ்வதுஒரு**
**வடமும்உளது அதன்அளவை யாம்இங்கு நாடுஅளவில்**
**ஒருவிதையின் அளவுஅளவில் ஓர்அண்டம் ஆகும்அதில்**
**உளகனியின் அளவைஇனி யார்கண்டு கூறுவரே.**

மகான்களின் நற்குணம் பொருந்திய இதய தாமரையில் எழுந்தருளி இருக்கும் தேவிக்கு, எப்பொழுதும் வசித்து வருவதற்கு என்றே ஒரு வடவால மரம் உள்ளது. அதன் எல்லையை நாம் இங்கு ஆராய்ந்து பார்க்குங்கால் ஒரு விதையின் அளவையே அளக்குமிடத்து, ஓர் அண்டத்திற்கச் சமம் ஆகும் என்றால், அம்மரங்களில் உள்ள கனியின் கணக்கை யாரால் இனிமேல் கண்டு கூற முடியும்?

2. **அயனைஉலகு அடையவரும் ஓர்உந்தி மாமலரின்**
**அருளிஅறிவு அரியபர யோகுஒன்றி மால்துயில்கொள்**
**சயனம்என மொழிவதுஒரு தாழ்கொம்பில் மேவுசிறு**
**தளிரின்ஒரு தலையின்நுனி ஏதுஎன்பர் சாகையே**

உலகனைத்தும் படைத்திடுவதற்காக நான்முகனைத் தன்னுடைய ஒப்பற்ற உந்தித் தாமரையின் மூலம் ஈன்றருளி அறிதற்கு அருமையான அரிதுயில் என்னும் யோக நித்திரை கொண்டுள்ள திருமாலின் படுக்கை என்று சொல்லப் படுவது, அம்மரத்தின் தாழ்ந்த கிளையில் பொருந்திய சிறிய தளிரின் நுனிப் பாகத்தினும் நுனிப் பாகமாகும் என்றால் அதனது பெரிய கிளைகளை எப்படிப் பட்டது என்று கூற முடியும்?

3. **செறியும்வகை அரியதுஎன வேதங்கள் ஓதுபொருள்**
**தெரியவிரகு ஒருவர்அறி யாதுஅன்பி னால்அரனோடு**
**அறியும்வகை அதில்உல காய்வந்து கூடியதும்**
**அதனில்விடு சிறியதுஒரு வீழ்நீன்ற நீழலிலே.**

அடைதற்கு அருமையானது என்று, வேதங்கள் ஓதுகின்ற பொருளை உணரும் திறமையால் ஒருவரேனும் அறிந்து கொள்ள இயலாதவராய் அன்பிலால் பரமனுடன் தெரிந்து கொள்ளும் படியாக. அனைத்து முனிவர்களும் ஒன்றுதிரண்டு அம்மரத்தில் உள்ள ஒரு சிறிய இலையின் நிழலிலே தங்கினார்கள் என்று இங்கே சொன்னால் அம்மரத்தின் பெருமையை என்னவென்று இயம்பலாம்?

**4. இரையும்எழு கடலுமவளை யாநின்ற ஏழ்புவியும்**
**எழும்அலையும் உலகுபதி னாலும்தன் ஊடுருவு**
**வரையும்இரு சுடர்அடைய ஓர்அண்டம் ஆகும்இது**
**வடவிதையின் அளவும்இல தால்என்கொல் ஓதுவதே.**

ஒலியுடன் கூடிய ஏழு கடலும். அதனைச் சுற்றியுள்ள ஏழு பூமிகளும் மேல் ஏழு, கீழ் ஏழு பதினான்கு உலகங்களும், இவற்றின் இடையில் ஊடுருவிய பொன் மலையும், இரு சுடர்களாகிய சந்திர சூரியரும் ஓர் அண்டத்தின் இலக்கணம். இது தேவி எழுந்தருளியுள்ள வடவாலின் ஒருவிதைப் பரிமாணமும் இல்லைஎனில் அவ்வடவாலை எத்தகையது என்று சொல்ல முடியும்?

**5. நெரியமுய லகன்முதுகு நாகன்ப ணாமகுடம்**
**நெறுநெறுஎன முறியநடம் ஆடும்ச டாதரனும்**
**அரியும்மல ரவனும்அதி லேநின்ற ஊசல்மிசை**
**அணையவரின் அவர்கள்விசை போயன்றி மீள்விலரே.**

முயலகன் என்ற அரக்கனின் முதுகு நெறு நெறு என முறியுமாறு நடனம் ஆடிய நடராசப் பெருமானும், காளிங்கன் என்ற கொடிய பாம்பின் படம் நெரிய நடனமாடிய திருமாலும், மலரின்மேல் வாழ்கின்ற நான்முகனும், தம் பத்தினியருடன் இருந்து ஆடுங்கால், அவர்கள் உந்தி ஆடும் வேகத்தில் அவ் ஊஞ்சல் போய்க் கொண்டே இருக்கின்றதன்றி இன்னும் திரும்பவில்லை.

**6. மாறாத அருளுடையான் மாறென்றால் அன்றி**
**ஆறாத அவ்வூசல் அதில்ஊசல் அல்லவோ.**

அடியவர்பால் என்றும் மாறாத அருளுடைய தேவியானவள் சென்ற ஊசல் திரும்பி வரட்டும் என்று அருளினால் அல்லாமல் வேகம் குறையாத ஊஞ்சல் அல்லவா அந்த மரத்தில் உள்ளது.

**7. மேல்நோக்கி வீழ்ஓட்டி விரிதிசையே கவடுஓட்டிக்**
**கீழ்நோக்கிக் கிளைஓட்டிக் கிளரவளர் வடம்இதுவே.**

மேலே விழுதுகளை ஓடச் செய்தும், விரிந்து கிடக்கும் பத்துத் திசைகளை நோக்கி கப்புகளைப் பரப்பியும், கீழ்முகமாகக் கிளைகளை ஓடச்செய்தும் வளர்ந்துள்ள மரம் இ வடவால மரம்.

**8. ஆசைஎனும் தளைஇட்டே அமையாமல் பறந்துஇந்தப்**
**பாசம்விடப் பறவாத பறவைஅதில் பறவைகளே.**

ஆசை என்னும் விலங்கால் பூட்டப்பட்டதாய். வேண்டும் வேண்டும் என்று அலைந் இந்தப் பந்தத்தை நீக்கிட முயற்சிக்காத பறவைகளே அதிலுள்ள பறவைகள்.

**ஊசல் நிறைவுற்றது**

# 10. தேவி

## முன்னுரை

இனித் தேவியின் வடிவத்தை வருணிக்கின்றார்.

1 **அன்னைஎன எழுந்துஅருளும் அருளுடைய திருமேனி**
**தன்னைஇனி யாம்அறியும் தன்மையினைச் சாற்றுவாம்.**

அனைத்து உயிர்களுக்கும் தாயாகி அருள் புரியும் கருணை வடிவான தேவியின் திருமேனி அழகை இனி யாம் அறிந்த வகையில் சொல்லுவோம்.

2. **மதுர வாரியாய் ஞான மயம தாகி வாடாத**
**மலர தாகி நாடாத மணம தாகி ஆனாத**
**சதுமு காதி வானோர் கள்சகல வேத கீதாதி**
**தகும்அ நாதி யான்மீ துதடஒ ணாத தாளாளே.**

ஆனந்தம் ஆகிய கடலாகியும், ஞான வடிவமாகியும், வாடாத மலராகியும், விரும்பத் தகுந்த மணமுடையதாகியும், என்றும் அழிவில்லாத நான்முகன் முதலான தேவர்களும், அனைத்து வேத கீதங்களும் மனம் முதலியவற்றாலும் தொட முடியாத திருவடியுடையவள்.

3. **தொழுதுஎ ழாவிழா வாறு சுழலு மாறுஅ றாமாயைத்**
**துயரி னால்வி டாதுஆறு சொரிய வாய்வி டாநாளும்**
**அழுத பாலர் சீறாமல் அமிர்த வாரி யாய்ஊறி**
**அருள்ப யோத ரீயாகி அமிர்த பானம் ஈவாளே.**

என்றும் சக்கரம் போல் சுழல்கின்ற பிறவி மயக்கத்தினை விட்டு நீங்காத மாயையின் துன்பத்தினைப் பொறுக்காதவர் ஆகி, தினம் தோறும் மனம், வாக்கு, காயத்தால் வழிபட்டுச் சம்சார பந்தம் விட்டு எழுந்து, மீண்டும் அதில் விழா வண்ணம், கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருக, வாய்விட்டு எப்பொழுதும் புலம்பிக் கொண்டிருக்கும் உயிர்களான பிள்ளைகளைக் கோபிக்காமல், அமுத வெள்ளமாய்ச் சுரந்து அருட்பால் சுரக்கும் மார்புடைய தேவி அந்த அமுதத்தை உண்ணும்படி அருளுவாள்.

4. **கதிஇ லாத நாயான கடைய னேனை வாசூடு**
**கழல்எ னாஎன் ஊடுஊறு கருணைவாரி ஓர்கோல**
**மதிஇ லாமை யால்ஞான வடிவை வேறு கூறுஆக**
**வகைசெய்து ஏறு மாறுஆக மலைவ தோடு காதாளே.**

தேவியின் திருவடியன்றி வேறு கதியில்லாத நாயினும் கடைப்பட்ட அடியேனை, என் அருகே வா, வந்து என் திருவடிகளை உன் முடியில் சூட்டிக் கொள்வாய் என்றருளும் கருணைக் கடலாயிருக்கும் தேவியை, வேறுபாடற்ற வடிவினள் என்ற புத்தியின்மையால் அறிவு வடிவம் ஆனவளை வெவ்வேறு வகையாய்க் கூறுபாடு செய்து, ஏறு மாறாக உயர்வு தாழ்வு கருது மயக்கத்தைக் காதில் அணியும் ஓர் ஓலையாகச் செய்து அணிந்து கொண்டு இருக்கின்றாள்.

5. **மருவும் ஆகம் மால்மேவி வருகு ணாதி நேராக**
**மனனின் மாறி மீளாத மனனம் ஆதி வேரோடும்**
**ஒருவ மாறி மேல்நாடும் உணர்வு நானும் நேராகி**
**ஒழிய ஞான மேயாக ஒருசொல் ஓதும் வாயாளே.**

வினைக்கு ஈடாக வரும் தேகத்தின்கண், யான் எனது என்னும் மயக்கத்தை உண்டாக்கி, இராகத் துவேசம் முதலான பதின்மூன்று குணங்களை உண்டாக்கி, அவற்றை மனதின்கண் கொடுத்து, உலக விசயங்களில் இருந்து மீளாத மனத்தையும், அனைத்திற்கும் மூலமான அஞ்ஞானத்தையும் மூலத்துடன் நாசம் அடையச் செய்து, வீட்டுலகை நாடும் இறைஞானமும் உயிர்த் தத்துவமும் நீங்கி, அனைத்தும் அறிவாகி, இறையுடன் ஒன்றிட உபதேசம் செய்பவள் தேவியாவாள்.

6. **விகட நாம ரூபாதி விததி யோர்ஓ ரோர்கோடி**
**விரியும் மாகம் மீதுஓடி விரிவுஓ ணாத மேலான**
**மகுடம் நாடில் ஓர்கோடி மலரு தாள்கள் ஓர்கோடி**
**மனனும் நாவும் மேவாத வடிவ தான மாயாளே.**

பலவிதமான பெயர் வடிவங்களின் விரிவு ஒவ்வொரு கோடி அகன்ற பேருருவம் விண்ணும் மண்ணும் கடந்து, நினைக்க இயலாத உணர்ந்த மகுடங்களைப் பார்க்கும் இடத்து அவையும் ஒரு கோடியாம். இப்படி வாக்கு மனங்களுக்கு எட்டாத வடிவுடையவள் தேவி.

7. வெருவ ராமல் நாள்தோறும் வினையில் மூழ்கி வாளாரும்
விழியி னார்கள் பால்ஓடி விளைவது ஓர்வுஉ றாதேனை
அருவ ராமல் நாயேனும் அமர ராலும் ஆராலும்
அறிஒ ணாதது ஓர்கோலம் அருளு காதல் கூர்வாளே.

சதாகாலமும் தீவினையின் கண்ணேயே மூழ்கி, நூல்களுக்கும், சான்றோர்களுக்கும் அஞ்சாமல், வாள் போன்ற கூர்விழி மங்கையர் பால் சென்று, அதனால் உண்டாகும் துன்பத்தை அறியாத கொடியவனை, இகழ்ந்து தள்ளி விடாமல், நாயேனது மனத்தின்கண், இந்திராதி தேவராலும், நான்முகன் முதலிய தேவர்களாலும் காணுதற்கு அரிய ஒப்பற்ற வடிவத்தை நாம் காண விருப்பத்தோடு அருள் செய்வாள்.

8. அவனி நீரி னால்மாள அனலின் மாள நீர் காலின்
அனலும் மாள ஆகாயம் அதனின் மாள ஊடுஆடு
பவனன் வானின் மேலான பரம தேசி லேயான
படியில் மாள மாளாத பழைய பாழில் வாழ்வாளே.

உற்பத்தி முறைப்படி பூமி தன் தோற்றத்திற்குக் காரணமான நீரில் ஒடுங்கவும், நீர் அனலில் ஒடுங்கவும், நெருப்பு காற்றில் ஒடுங்கவும் எங்கும் சஞ்சரிக்கும் காற்று வானின்கண் ஒடுங்கவும், வானம் மேலான இறையின்கண் ஒடுங்கவும், தனக்கு அவ்வாறான நிலை ஒன்றும் இல்லாத படியினால் என்றும் அழியாத சூனிய வடிவில் வீற்றிருப்பவள்.

9. ஒருவி காரம் ஓர்காலும் உறநி லாமல் யாதானும்
உளது மாசி லாமேனி ஒழிய வேறுஓர் ஆதார
நிருபி ஆன ஓர்போதும் நிருபி யாத ஓர்போதும்
நிகழ்வுஉ றாமல் ஓர்போத நிலையை தாக நேர்வாளே.

ஒருவிதப் பரிணாமத்தை ஒரு பொழுதும் அடையாமல் வேறு குற்றம் இல்லாத வடிவம் உள்ளதா? (இல்லை) நூல்களாலும், சான்றோர்களாலும் நிர்ணயம் செய்யும் இடத்தும், செய்யா இடத்தும், ஒருவிதமான பெயர் வடிவ வளர்ச்சியுடன் விளங்காமல் ஒப்பற்ற ஞான வடிவமாக விளங்குகின்றவள் தேவி.

10. அனுப வம்தனில் அறிவது அன்றிஓர்
அளவை கொண்டுஅறிவு உறுவதுஒது

**அனுப வம்தனை ஒழிய வின்றிய**
**தகமை நின்றதுஓர் தனிமையே.**

உடல் முதலான உற்பத்தி நாசத்தோடு கூடிய இவ்வுலக வாழ்க்கை, தன்னைத்தவிர வேறில்லாத அத்வைத வடிவத்தைத் தனது சொந்த அனுபவத்தால் அறிவதே அல்லாமல். கண்ணால் காணும் சாட்சிகளில் ஏதேனும் ஓர் அளவை கொண்டு உணர இயலாத வடிவுடையவள் அம்மை.

11. **உருவம் என்பதும் அருவம் என்பதும்**
**உணர்வு கொண்டுஉணர ஒண்ணுமோ**
**அருவம் இங்கு ஒரு வடிவு கொண்டது**
**இதுஎ னும்பொருள் தன்னையே.**

வடிவம் இல்லாத இறை, ஈங்கு ஒரு வடிவம் தரித்து வந்து அதுவே இதுவென்று உபதேசிக்கும் பொருளை வடிவுடையது என்று சொல்வதையும். வடிவமற்றது என்று சொல்வதையும் உள்ளுணர்வு கொண்டு அறிய இயலுமோ எனில் இயலாது என்பதாம்.

12. **பொருது திரிபல சமய மதிவழி**
**புரிவு தருகலை புகல்வதோ**
**கருது பொருள்தோறும் மருவி அவைஅவை**
**கழல நிலவிய கண்ணையே.**

பாவனையால் காணுகின்ற பொருள்கள் தோறும் பொருந்தி அவை அவை அகன்ற இடத்து நிலவிய கண் போன்ற பரமான்மாவை. சண்டையடித்துத் திரியும் பல்விதமான சமய வாதிகளின் புத்தியானது எண்ணிய பொருளைக் கொடுக்க வல்ல சமய நூல்களைக் கூற முடியுமா?

13. **தத்தம் மதிகொடு தர்க்க சமயிகள்**
**சத்தம் அறிவதுஓர் தத்வமோ**
**சித்த மயலது கெட்ட அவர்தெரி**
**சிக்க உரியதுஓர் சித்தையே.**

காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களும் அற்ற ஞானிகளால் வணங்குதற்கு உரியதோர் அறிவு வடிவத்தைத் தங்கள் தங்கள் புத்தியின் வலிமை

கொண்டு, குதர்க்கமே பேசும் ஆறு சமய வாதிகளும் தாம் தாமே உணரும் படியான உண்மைப் பொருளா? அல்ல.

**14. மருவு றாத தற்குஉ ரைக்கும் வடிவும் இல்லை என்னவோ**
**கருஉ றாமல் ஆள வந்த கருணை மேனி கண்டுமே.**

அன்னையின் கருவை அடையாது ஆட்கொள்ள எழுந்தருளி வந்த கருணை வடிவமான மேனியைக் கண்டு வணங்கியும், வாக்காலும் மனத்தாலும் அறிய முடியாத பொருளுக்குச் சொல்லும்படியான வடிவம் இல்லை என்று சொல்லலாமா. (சொல்லக்கூடாது)

**15. தொல்லை ஆகி நின்றது உய்ய துணைம லர்ப்ப தங்களுக்கு**
**எல்லை ஆனது இல்லை யோஎன் உச்சி மீதுஇருக்கவே.**

அநாதியாக இருக்கும் தூயதான திருவடித் தாமரைக்கும் அளவு இல்லையா. (இருக்கின்றது) எவ்வாறு எனில் எனது தலையின்கண் இருக்கின்ற படியால் இல்லை என்று சொல்ல இயலாது.

**16. விளம்பும் எப்பொ ருட்கும் மேல்மி குத்த நீள்மு டிப்பரப்பு**
**உளம்பு குந்துஇ ருக்க எல்லை உன்ன வில்லை என்னவோ.**

வான் முதலான அனைத்துப் பொருள்களையும் உண்டாக்கிய பொருளுக்கு மேலே அணிய ஓர் உடை இல்லை என்று சொல்லலாமா? எனது இதயத்தின் உள்ளேயே அடங்கி இருத்தலால் என் உள்ளமே ஆடை

**18. அன்னை ஆகி அத்தன் ஆகி அஞ்சல் என்றுவந்து**
**என்னை ஆளு கோல நீர்மை என்ன தாஇ யம்பவே.**

அன்னையாகித் தந்தையாகி, அஞ்சாதே, அஞ்சாதே என்று ஓடிவந்து. என்னை ஆட்கொள்ளும் அழகிய தன்மையை என்னவென்று இயம்புவது?

**19. மாசுணமோ மறைத்லையோ மயானமோ வாக்குஇறந்த**
**தேசுஉணர்ந்த மெய்அடியார் சிந்தையோ திருந்துஅமளி.**

தேவியின் அழகிய படுக்கை ஆதி சேடனோ? வேத முடிவாய உபநிடதமோ? சுடலையோ? தன் உள் ஒளியை உணர்ந்து கொண்ட மகான்களின் மனமோ?

**20. சாத்தும்பூ மாலையினும் தமைஉணர்ந்த மெய்அடியார்.**
**ஏத்தும்பா மாலையிலே எப்போதும் திருவுளமே.**

அணியப் பெற்ற பூ மாலையைக் காட்டிலும், தன்னை அறிந்த மெய் அடியார்கள், எப்போதும் துதித்துப் பாடுகின்ற கவி மாலைகளை விரும்புகின்ற அழகிய உள்ளம் தேவியின் உள்ளமாகும்.

**21. பாதாதி கேசாந்தம் உவந்துஅணியும் பணிஅருளே**
**ஞாதாதி ஆம்மூன்றும் உவந்துஅயிலும் நல்அமிர்தே.**

அடி முதல் முடி வரை மகிழ்வோடு அணிந்து கொள்ளும் அணி அருளாகும். ஞாதுரு, ஞானம், ஞேயம் என்ற மூன்றுமே மெத்த மகிழ்வுடன் அருந்தும் நல்ல அமுதமாம்.

**22. வேதம் அவள்திரு வாயில் ஓது கீதம்**
**வேறு நினைவுஇலர் காணும் மேனி மேனி**
**பூதம் அவள்திரு வாசல் காவல் ஆகும்**
**போதம் அவள்திரு மேனி காவல் தானே.**

அம்பிகை தன் அழகிய வாயினால் சொல்லும் வாக்கே நல்ல வேதமாகும். தனக்குப் புறம்பாக வேறு நினைவு இல்லாது தன்மயமாகக் காணும் மகான்கள் கண்டு வணங்கும் திருமேனி அம்பிகைதன் திருமேனி. ஐம்பூதங்களே அம்பிகையின் வாயிற் காவல் ஆகும். உண்மையான இறை அறிவே அவள்திரு மேனிக்குக் காவல் ஆகும்.

**23. யோகி னிகள்கரு ணாதி ஆன மாதர்**
**யோக மருநிலம் மாசுஇல் ஞான யோகம்**
**கோக னகன்அறி யாத கோயில் கோயில்**
**கூற அரியபெரு வாழ்வை யாவர் கூற.**

மைத்ரி, கருணை முதலான பெண்கள் தேவிக்குத் தோழிகள். மகான்கள் சித்தத்தை ஒருமுகப் படுத்தப் பொருத்தி வைக்கும் ஞானம் ஆகிய பூமியே குற்றம் இல்லாத அம்பிகையின் ஞான சமாதியாம். தாமரை மலரில் எழுந்து அருளியுள்ள நான்முகனாலும் அறிய முடியாத ஆலயமே அவளுக்கு ஆலயம். சொல்லுதற்கு அரிய இத்தகைய பேரானந்தம் பற்றிக் கூற யாரால் இயலும்?

**24. கலைஏறு உவணம் களிஅன் னம்எனக்**
**கற்பித் திடவோ சொற்பித்து அதுவாம்**
**மலைஏ றுவணம் கிளிஅன்பு உறவந்து**
**அருள்போ தகமே அவள்வா கனமே.**

வெள்விடையும், கருடனும், மகிழ்வைத் தருகின்ற அன்னமும் அவ்வம்பிகைக்கு வாகனங்கள் எனக் கற்பிக்கலாமா? அப்படிச் சொன்னால் அது மயங்கிக் கூறும் உரை. உலகியல் மயக்கத்தில் இருந்து நீங்கி வீட்டு நெறி காணும்படி, கருணையுடனும், மகிழ்வுடனும் வந்து அருள் செய்யும் உபதேச ஞானமே அவள் வாகனம்.

**25. பஞ்சா யுதமே திரிசூ லம்மழுப்**
**படையே எனவோ பகைவெம் பிறவிக்கு**
**அஞ்சா முன்எழுந்து அருளா எறியும்**
**அன்பே திருஆ யுதமாம் அதுவே.**

சங்கு, சக்கரம், சாரங்கவில், கோதண்டம், கதை ஆகியன அவள் தன் பஞ்சாயுதங்கள், முச்சூலம் மழுப்படை என்று கூறலாமா? பகையாகிய கொடும் பிறவிக்கு அஞ்சி வருந்து முன்னம் எழுந்து அருளுடன் நம்மீது வீசும் அன்பே ஆயுதம்.

## தேவி நிறைவுற்றது

## 11. உட் பரிவாரம்

1. **அரணே அறிவே செறிவே அழகே**
**அருளே வடிவா கஅமைந் துவரும்**
**சரணே எனவந்து அடையும் அடியார்**
**தம்கோ லம்எலாம் இங்குஒ துதுமே.**

அனைத்து உயிர்க்கும் காப்பாக அமைந்தவளே. ஞான வடிவானவளே. எங்கும் நிறைந்து இருப்பவளே. அழகானவளே. கருணை வடிவானவளே. அடைக்கலம் புகுவோர்க்கு இடமானவளே என்று கருதி வந்து சேரும் அடியவர்தம் நிலைகளை எல்லாம் இங்கு கூறுவோம்.

2. **புரம்அ யோகம்உற பேதம்அறு போதம் உடனே**
**பரம யோகம்உறு வார்இறைவி பயிர வர்களே.**

உடல் தொடர்பானவற்றில் யான், எனது என்ற அகம்பாவம் இன்றி, வேறுபாடு கருதாத ஞானத்துடன் தேவியின் அடியவர்கள் மேலான யோகத்தை அடைவார்.

3. **புணரும் மைத்ரிமுத லானபொருள் உள்ள பரிசே**
**உணரும் மார்க்கம்வரு மாதவர்கள் யோகி னிகளே.**

மைத்ரி கருணை முதலான குணம் உடையவரும் பொருளை உள்ளபடியே அறியும் வழிகளைக் காண முயலும் தவ முனிவர்களும் யோகினிகளே.

4. **நித்திரை சாக்ரதம் அற்றதுஒரு நீர்மையினரே**
**நிட்டை யாதும்இலது ஆனதுஒரு நீதியினரே**
**முத்திரை ஞானம்எனும் முத்திரைஅலது ஏதும்இலரே**
**முத்தி நாயகர்கள் ஆன பவமோசகர்களே.**

நனவில் சுழுத்தி அடைந்த தன்மையினரும், ஆன்ம நிட்டை அன்றி வேறு நிட்டை இல்லாத ஒப்பற்ற நீதிமான்களும், சின்முத்திரையே அல்லாமல் வேறு சங்கு சக்கர

முத்திரை இல்லாதவர்களும், முத்தியில் திறமை உடையவர்களும் ஆனவர்களே, பிறப்பு இறப்பு என்னும் பகையை நாசம் செய்பவர்கள்.

**5. பெத்த முத்திஇல் ஆனதுஒரு சாதகர்களே**
**பித்து நற்கழலொடு ஆனதுஒரு பாவகர்களே**
**பத்தி சித்திஎன நாடிவரு தாபதர்களே**
**பத்தர் எய்ப்பில்அருள் கோலமிகு பைரவர்களே.**

பரந்த வீடுபேறு என்பது இல்லாததான ஒப்பற்ற சாதக நிலை உடையவர்கள். திருவடி மேல் பைத்தியம் கொண்டு தியானிக்கும் பாவனை உடையவர்கள். பத்தியும், ஞான சித்தியும் வேண்டும் என நாடி நின்ற தவசிகள். திருவடிப் பித்துப் பிடித்தவர்கள். வீடு பேறு விரும்புவோர் நினைத்தால் அவர்கள்பால் கருணை காட்டி வந்து அருள் செய்யும் தன்மை உடையவர் அடியவர்கள்.

**6. உரைஇறந்து உணர்வுஇறந்து இடம் உணர்ந் திடுவரே**
**உணவும்அங் கையில்வரும் பலிஉகந் திடுவரே**
**திரைஇரந்து அளவுஇறந்து உளபரங் கடலுளே**
**செறிதரும் படிவரும் திருஅகம் படியரே**

சொல்லும் சொற்கடந்து, உணர்வு கடந்து மனத்தால் அறிய முடியாததாய் உள்ள அற்புதமான பொருளை ஏற்றுள்ளவர் உள்ளன்புடன் ஏற்பர். இன்ப துன்பங்களாகிய அலைகள் இன்றி அளவிட்டுக் கூற முடியாத மேலான கடலுக்கு உள்ளே மூழ்கிக் குளிர்ந்த தன்மையினைப் பயின்றுவரும் சிவ பாவனை உடையவர்கள்.

**7. அழுதல்மா றுதல்இலா விழியர்பால் அருள்வரே**
**அவர்கள்ஆ கமும்எலாம் விழியதா மொழிவரே**
**எழுதல்மா றுதல்இலா இரவியாம் உருவரே**
**இகலும்ஆர் வமும்இலாது இலகுபை ரவர்களே.**

இல்லறத் தொடர்பை நினைந்து நினைந்து அதனை நீக்குவான் வேண்டிச் சதாப் புலம்பும் தன்மை உடையவர்பால் அருள் செய்பவர்கள் அந்த மகான்கள். இயற்றும் சாத்திரங்கள் அனைத்திலும் பார்க்கின்ற இடம் எல்லாம் பரமனே என்று போதிப்பவர்கள். தோற்றமும் மறைவும் இல்லாத சூரிய வடிவமாவர்.

8 **அவனிவான் அடையஓர் அணுவதா நெடியரே**
**அணுவுமே ருகிரியாய் அறவுநே ரியர்களே**
**புவனிவான் அடையஓர் பவனிபோ துவர்களே**
**புகலுகோ மளைவியா மளைபுரா தனர்களே**

பூமி முதல் வானம் வரையிலான சகல பூதங்களும் ஓர் அணு என்று சொல்லும்படியான பேருருவம் உடையவர்கள். கண்ணுக்குப் புலன் ஆகாதவாறு மேரு மலையையும் அணுவுக்குச் சமமாகச் செய்யும் சூட்சுமத் தன்மை உடையவர்கள். பூமி முதல் வான் வரையிலான அனைத்து அண்டங்களையும் ஒரு நொடியில் வலம் வருபவர். புகழ்ந்து சொல்லப்படுகின்ற தேவியின் திருமேனியை உடைய பழைய அடியவர்கள்.

9. **அலைபொ றாமல்ஒருகால் தலைஎடாது அமைவரே**
**அருள்பொறா மல்உருகா அருவிபாய் நயனரே**
**கலைபொறா மல்ஒருகோ வணவராய் விடுவரே**
**கவலைதீர் பலிகொள்நீள் கரகபா லிகர்களே**

சித்தம் அலைவதைப் பொறுக்க மாட்டாதவராய், ஒவ்வொரு முறையும் எழாது அமைதியுடன் இருப்பர். குரு பக்தி மேலீட்டல், உலகு படும் பாட்டைப் பொறுக்க மாட்டாதவராய் இரக்கமுற்றுக் கண்களினின்றும் தாரை தாரையாகக் கண்ணீர் வடித்து, நல்லாடை தரிப்பதால் உண்டாகும் துன்பம் தாங்க இயலாதவராய் ஒரு கோவணத்தையே உடுத்துவர். துயரம் சிறிதும் இன்றிப் பிச்சை ஏற்கும் கரத்தை உடையவர்கள்.

10. **சகலலோ கமும்எடா அயிலும்வாய் உடையரே**
**சதிர்எலாம் அழியாமல் தருவதாள் உடையரே**
**புகலுமோ கமும்அலோ கமும்எலாம் விழியரே**
**புகலமாறு அரியதாள் புணருபை ரவர்களே**

அனைத்து உலகங்களையும் எடுத்து உண்ணும் வாயுடையவர். அகங்காரம் அனைத்தும் கெடும்படி பக்தி தரும் திருவடியை உடையவர். பாராட்டிப் பேசப்படும் அனைத்து உலகங்களையும கண்களாக உடையவர். இவர்களே சொல்லுதற்கு அரிய தேவியின் திருவடியில் சேர்ந்திருக்கும் அடியார்கள்.

11. **உருகுவா சகம்எலாம் உடையசா கினிகளே**
**உயிர்எலாம் விரியினால் அயில்வர்யோ கினிகளே**

**பருகிஆர் அமிர்தையா டுவர்கள்மோ கினிகளே**
**பகருமாறு அரியநா யகிதா கினிகளே**

மனம்உருகும்படி பேசும் இயல்புடையவர்கள் தோழியர். தம்மைச் சரண் அடைந்தார் உயிர்களை எல்லாம் தம் பார்வையால் உண்பவர் யோகினியர். நிறைந்த அருளமுது பருகி மகிழ்ந்து ஆடுபவர் மோகினியர். சொல்லுதற்கு அரிய தேவியின் பாத சேவை செய்பவர் மற்றைய மகான்கள்.

**12.** **தமர்பிறர் அற்றார் சமயமும் அற்றார்**
**சகஇயல்பு அற்றார் தமையொழிபு அற்றார்**
**அமர்வுஇடம் அற்றார் அறமறம் அற்றார்**
**அறிவுஅயர்வு அற்றார் அவள்அடி யாரே.**

அம்பிகையின் அடியார்கள் உறவும் பகையும் இல்லாதவர் ஆறு சமயங்களையும் கடந்தவர். தோன்றி மறையும் உலக இயற்கையைக் கடந்தவர். அனைத்தும் தானாகக் காணும் தன்மய பாவனை உடையவர். வசிப்பதற்கென ஒரு நிலையான இடம் இல்லாதவர். புண்ணிய பாவங்களில் இருந்து நீங்கியவர். அறிவிலே தளர்ச்சி அற்றவர்.

**13.** **இருள்நெறி விட்டார் இருமையும் விட்டார்**
**இலகந டப்பார் உலகுக டப்பார்**
**அருள்நெறி நிற்பார் அமர இருப்பார்**
**அறிவுஉருவு உற்றார் அவள்அடி யாரே.**

அம்பிகையின் திருத்தொண்டாகள் குருவின் மூலம் அஞ்ஞான வழியை விட்டவர். இம்மை மறுமை இரண்டையும் கடந்தவர். தன் ஒழுக்கத்தினைப் பின்பற்றி மற்றவரையும் நடக்கச் செய்பவர். உலகைக் கடந்தவர். அருள் வழியில் நிலைத்து நிற்பவர். அமைதியாய் இருப்பவர்கள். ஞான வடிவுடையவர்.

**14.** **பொருளைவி ரிப்பார் புகழுதி றத்தார்**
**புளகிதம் உற்றார் புரளுதல் உற்றார்**
**அருளைவி யப்பால் அறியஉ ரைப்பார்.**
**அதிசயம் மிக்கார் அவள்அடி யாரே**

ஞானப் பொருளான தேவியின் அருளை விரித்துக் கூறுவார்கள். அனைவரும் புகழும் படியான வல்லமை படைத்தவர்கள். மகிழ்வால் உடல் மயிர்க் கூச்செரியப் பெற்றவர்.

வீதிகள் தோறும் பரமாத்மாவை நினைத்துப் புரண்டு கொண்டிருப்பவர். பிறர் வியந்து கேட்கும் படியாக அருள் பற்றி விரித்து உரைப்பவர்கள். அதிசயம் அநேகம் உடையவர் அம்மையின் பக்தர்கள்.

15. **தெளியும்உ ளத்தார் சிலவர்தெ ளிப்பார்**
**சிலவர்க ளிப்பார் சிலர்தி கைப்பார்**
**அளியும்உ ளத்தோடு அழுதுசி ரிப்பார்**
**அவர்கள் செயற்பாடு அறியஒ ணாதே**

தெளிவான சித்தத்தை உடையவர்கள். சிலபேரைத் தெளிவிக்கச் செய்வார்கள். சிலபேர் மகிழ்வுடன் இருப்பார்கள். சிலர் திகைத்து நிற்பார்கள். சிலபேர் கனிந்த உள்ளத்தோடு அழுவர். பின் சிரிப்பர். இத்தகு மகான்களது செயற்பாடு அறிய இயலாத ஒன்று.

## உட்பரிவாரம் நிறைவுற்றது

# 12 லீலை

## தேவியின் திருவிளையாடல்களைக் கூறுகின்றார்

1. ஆதி மூலம்ஒரு கோலமும்இ லாதவடிவில்
அகில லோகமும்அ றிந்துஅடையும் வண்ணம்அழகுஆர்
சோதி மூவடிவு கொண்டுஅருளி அந்தமறைமுன்
சொன்ன தன்மைதெரி யும்பரிசு சொன்னதுணிவும்

அனைத்திற்கும் மூலமான வடிவம், தனக்கென ஒரு பெயர் இல்லாத வடிவு உடையதாம். அழகு வாய்ந்த அந்தச் சோதி, அனைத்து உலகும் அறிந்து அடையும் வண்ணம் நான்முகன், சிவன், திருமால் என்னும் மூன்று வடிவங்கள் கொண்டு மும்மூர்த்திகளாகத் தோன்றி வேதங்களின் முடிவாய் உள்ள ஞான காண்டத்தினை, முன் தெரிந்து கொள்ளும்படி உரைத்திட்ட விதத்தை, அடியவர்கள் ஆகிய எங்களுக்குக் கருணை வடிவாக வந்து அருளிய தன்மையும்,

2. கயிலை மாமலையின் மேல்இனிது இருந்துஅருளிஅக்
கமல யோனிமுதல் எக்கடவு ளர்க்கும்அருளால்
மயிலை ஏறிவரும் மைந்தனுடன் நந்திமுதலாம்
மற்றும் வந்துஅடைப வர்க்கும்அருள் செய்தவகையும்

கயிலை மாமலையில் இனிமையுடன் வீற்று இருந்து, தன் அருளால் திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றி ஒரு தாமரை மலரிலே வீற்றிருக்கும் நான்முகன் முதலாய எல்லாத் தேவர்களுக்கும், மயில் ஊர்தியில் ஏறிவரும் மைந்தனாகிய முருகனுடன் நந்தி எம்பெருமான் முதலாக வந்து அடைகின்ற தேவர்கள் அனைவருக்கும் அருள் செய்த தன்மையும்,

3. ஆல நீழலின்இ ருந்துஅருளி அன்றுசுரரோடு
அசுரர் நெஞ்சின்அள விற்குஅளவு அறைந்துஅறிவுசேர்

**நாலு பேர்அறிய நாலுமறை சொன்னபரிசே**
**ஞான மானநய னம்தனைந யந்தநலனும்**

வடபால மரத்தின் நீழலில் எழுந்தருளி இருந்து, தேவர்களுக்கும், அரசர்களுக்கும் அவரவர் புத்தியில் படுமாறு தொகுத்துக் கூறியும், அறிவுடைய சனகாதி முனிவர்கள் நான்கு பேரும் ஐயம் திரிபின்றி உணருமாறு, இருக்கு ஆதி நான்கு வேதங்களும் கூறியவாறு ஞானப் பார்வை அருளிய தன்மையும்.

4. **இசைய ஐயன்ஒரு பாரதம்மு டிப்பவர்கள்போல்**
**இப்பி றப்புமுடி யும்பரிசுஇ யம்பும்இயல்பும்**
**விசையன் ஐயம்உரு நெஞ்சினை அறிந்துஅருளியே**
**விசுவ ரூபஇயல் காட்டிவெருள் வித்தவிரகும்.**

அடியவர்க்குப் பொருந்தும்படி திருமால் ஒரு பாரதப் போரை நடத்த வந்தவர் போல், வந்து அனைத்துஉயிர்களின் பிறப்பு இறப்புத் துன்பம் ஒழியும்படி பகவத் கீதையை உரைத்த விதமும், அருச்சுனனின் ஐயத்தைப் புரிந்து கொண்டு, தன் வாக்கில் உதித்த அமுதமாகிய கீதையை மீண்டும் உரைத்த தனது பேருருவத்தைக் காட்டி அஞ்சச் செய்த தன்மையும்,

5. **ஆயர் தம்மனையில் ஓர்வடிவு கொண்டுபதின்ஆறு**
**ஆயி ரம்திரும டந்தையரு டன்புணரினும்**
**துய பிரமச்சர் யத்தில்வழு வாமல்ஒழுகும்**
**சுத்த ஞானசரி தத்துஇயல்பு சொன்னவகையும்.**

ஆயர் குலத் தலைவனாகிய நந்தகோபனது வீட்டில் ஒப்பற்ற வடிவு கொண்டு, அளவு கடந்த ஆயர் குல மங்கையர்களுடன் திருவிளையாடல் செய்தும் பட்டத்து அரசியராகிய திருமகள்மார் எண்மருடனும், இன்னும் நரகாசுரனால் கொண்டு வரப்பட்ட அரச மகளிர் பதினாறாயிரம் பேர்களுடனும் திருவிளையாடல் செய்தும், தூய பிரம்மச்சரிய விரதம் மாறாமல் இருந்த தன்மையால், பெரியவரான முனிவர்கள்முன் பரீட்சித்துவைத் தீண்டி, தூய்மையான ஞான சரிதத்தைச் சொன்ன துணிவும்,

6. **வாத ஊரனைஒ ழிந்தவர்கள் பொன்அடியிலே**
**மன்ன என்உடலை மாற்றுகென ஆற்றல்இலனாய்**
**ஓதம் ஊறும்அமிர் தம்செவிகள் ஆர்வுறமுகந்து**
**உண்டுஇவ் வையகமும் உய்யும்வகை செய்தஉறவும்**

வாதவூரராகிய மாணிக்க வசகரைத் தவிர மற்றைய அடியார்களைத் தம் வடிவில் மறைத்து அருள, அப்போது என் உடலையும் அவ் அடியார்கள் கூட்டத்துடன் சேர்த்தருள வேண்டுமென்று கூறும் சாமர்த்தியம் இல்லாதவராய் மனமுருகித் திருவாசகத்தைப் பாடியருள, அதனால் உண்டான அமுதமயமான வெள்ளத்தை, ஈசன் தனது திருச் செவிகளினால் மிகுதியாக உண்டு, இவ்வுலகில் உள்ள அனைவரும் இத் திருவாசகத்தைப் பாடி இந்த உலகம் பிழைக்கும்படி செய்த தன்மையும்,

7. **தன்ப ராபர மதானதிரு மேல்நிலையில்**
**சலனம் இன்றிஒரு தன்மையினில் நின்றுஅருளியே**
**அன்பர் ஆனவர்கள் நெஞ்சில்உ வந்தவடிவாய்**
**அங்கு வந்தவர்கள் உய்யும்வகை செய்தஅருளும்**

அனைத்திலும் மேன்மை மிக்கதான தன்திருமேனி தன்னிலையில் அசைவின்றி, ஒரே விதமாக இருந்த படியே இருந்து. அன்பர்கள் தத்தம் மனத்தில் தியானித்த மூர்த்தி வடிவாய் அங்கு எழுந்தருளி வந்து, அடியவர் உய்யுமாறு செய்த அருளையும்,

8. **உலகமயக்கு உறாவண்ணம் உகம்தோறும் உகம்தோறும்**
**உதிப்பன் நான்என்று**
**இலகியமெய்த் திருவார்த்தை யாவர்க்கும் ஏறும்வகை**
**இக்கா லத்தே.**

உகம் தோறும் உகம் தோறும் இவ்வுலகு படும் துயரம் தீர்ப்பதற்காக நான் தவறாது உலகின்கண் அவதரிப்பேன், என்று கீதையில் அருளிச் செய்த வாசகத்தை அனைவரும் அறியும்படி இந்தக் கலி யுகத்தே,

9. **பெருமான் வந்துஅவதரித்துப் பீடுடை தரணிஉளோர்**
**பிழைக்கும் வண்ணம்**
**சொரூபானந் தச்சுடர்தன் துணைமலர்த்தாள் தரும்பரிசு**
**சொல்லிச் சொல்லி**

பெருமான் அவதாரம் செய்து எழுந்தருளி வந்து, பெருமை பொருந்திய இவ்வுலகத்து மக்கள் பிழைக்குமாறு சொரூபானந்த சுவாமிகள் என்னும் திருநாமம் கொண்டு, தன் திருவடித் தாமரைகளை நமக்களித்த தன்மையையும் துதித்துத் துதித்து,

**10.** **அண்டரெலாம் அலமாக்க அருட்சொரூப னந்தன்தன்**
**அடியார் வாழப்**
**புண்டரிக மலர்ப்பாதம் பொறித்துஅருளும் திருக்கருணை**
**போற்றி போற்றி**

தேவர்கள் எல்லாம் நமக்கு இந்தப் பாக்கியம் இல்லையே என்று வருந்தவும், கருணை வடிவு கொண்ட சொரூபானந்தம் என்னும் திருப்பெயர் பூண்ட எனது ஆண்டவன், தம் அடியவர் எல்லாம் பேரானந்த வாழ்வு பெற, தமது தாமரை மலர் போன்ற திருவடிகளை அவர்தம் முடியில் சூட்டியருளும் கருணை போற்றுவோம்.

**11.** **கூசாதே நாமும்எலாம் கொண்டாடும் படிஇந்தக்**
**குவல யத்தே**
**வாசாம கோசரன்ஓர் வடிவாகி வந்தஅருள்**
**வாழ்த்தி வாழ்த்தி**

பக்குவம் அற்ற நாம் எல்லாம் அஞ்சாமல் கண்டு களிக்கும் வண்ணம் இப்பூமியில் வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத பரம்பொருள் ஒரு திருவுருக் கொண்டு எழுந்தருளி வந்த கருணையைத் துதித்துத் துதித்து வணங்குகிறேன்.

**12.** **கரைத்தல் தீர வந்து உதித்த கருணை மேனி காதலோடு**
**உரைத்து வாழும் இவ்வி னோதம் இடைவி டாமல் உடையரே**

சம்சாரத் துயரை ஒழிப்பதற்காக இங்கு வந்து தோன்றிய கருணை வடிவான ஆண்டவனை. அன்புடன் வணங்கி பேரானந்தம் அடையும் இந்த விளையாட்டையே நிரந்தரம் மேற் கொண்டவர்.

**13.** **சாதல் ஆதல் வாழ்தல் ஆதல் தரையது ஆதல் சயனம் ஆதல்**
**காதல் ஆதல் காய்தல் ஆதல் கருது றார்கள் கணமுமே**

மரணம் வருவது பற்றிப் பயப்படார். வாழ்தல் பற்றியும் விரும்பார். பூமியில் கிடப்பதனாலும் வாடார். பஞ்சு மெத்தையில் படுத்தாலும் மகிழார். ஒன்றிலும் ஆசை கொள்ளார். வெறுப்படையார். கணந்தோறும் அது வேண்டும் இதுவேண்டும் என்ற சிந்தனை அற்றவர்.

**14.** **வந்த இச்ச கத்துஉ தித்து வந்த வாறு மாறுமா**
**இந்த விச்சை பாரும் என்றுஇ ருந்த விச்சை காட்டியே**

தோன்றிய இவ்வுலகத்தில் உற்பத்தியான விதத்தையும், மீண்டும் லயம் அடையும் தன்மையும், எஞ்சிய ஞான வடிவினைத் தரிசியுங்கள் என்று விரிவாகப் பிறப்பு இறப்பு என்றும் வித்தை உன்பால் இல்லை என்று கருதியும் மகான்கள் வீற்றுள்ளார்கள்.

## லீலை நிறைவுற்றது

# 13. பேய் முறைப்பாடு

1. அண்டம் உண்ட கண்டர் நிற்க அடைய உண்ண ஆதரம்
கொண்ட பேய்கள் அகல வந்து குறைகள் நின்று கூறுமே.

பிரம்மாண்டங்கள் அனைத்தையும் தன் ஆற்றலால் பருகிய களத்தினை உடைய மகான்கள் இருப்ப, அனைத்தையும் தன் வடிவமாக அனுபவிக்க வேண்டிய அன்பு நிறைந்துள்ள சாதுக்கள் என்னும் பிசாசுகள் தேவி முன்னர் வந்து, விரிவாகத் தனது குறைபாடுகளை முறையிடும்.

2. உலகி லேச னித்து நின்றுஉ ழைத்து நீர்பி ழைப்புஇலா
அலகை ஆமின் எனவ குத்தது என்கொல் அம்மை அம்மையே

அம்மையே, இவ்வுலகிலே அடிக்கடி பிறந்து இருந்து, கர்மங்களைச் செய்து நீங்கள் பிழைக்க இயலாத பிசாசுகள் ஆகப் போவீர் என்று எங்களை விதித்தது எதன் பொருட்டோ?

3. வாசகத்தால் ஆவியைநின்று உருக்கும் ஞான
மதயானை வாதவூர் வள்ள லோடு
மாசுஅகற்றி ஆயிரம்பேர்க்கு ஈச னார்நல்
அமிர்துஅளித்தார் எமக்குஇரங்கி அருளார் இந்நாள்.

ஈசர் தமது திருவாசகத்தால் கேட்பவரது தற்போதம் நீங்கும்படியாக இருந்து, மனத்தை உருகும்படி செய்யும், ஞான மதயானை என்று சொல்லக் கூடிய மாணிக்க வாசக வள்ளலுடன், ஆயிரக் கணக்கான மாணாக்கர்களுக்கு, அவர்களது மன மாசுகளை நீக்கி நல்லமுதமாகிய பேரின்பத்தைப் பருகும்படி செய்தார். நாங்கள் இதுநாள் வரை எதிர்பார்த்து இருந்தும், அப்படிப்பட்ட பேரானந்தத்தை எங்களுக்குக் கொடுத்தாரில்லை. தேவி தாங்களே கருணை கூர்ந்து அருள வேண்டும்.

4. தலைப்பான்மை மிகப்பெரிய காழி ஞான
சம்பந்தர் தாம்பிள்ளைத் தவத்தி னாலே

**முலைப்பாலைப் பகிராதே தாமே உண்டு**
**முத்தமிழும் பாடிஅற முதியர் ஆனார்.**

பெருமை மிக்க சிவபெருமான் எழுந்து அருளியுள்ள சீர்காழி என்ற சிறப்புடைய தலத்தின்கண் தோன்றிய திருஞான சம்பந்தப் பிள்ளையார். சிறு பிள்ளைத் தவத்தினால் ஞானாம்பிகையாகிய தாங்கள் கொடுத்த ஞானப் பாலை எல்லோர்க்கும் பகிர்ந்து கொடுக்காமல் தாமே பருகி, இயல் இசை என்னும் நாடக உலகில் இயல், இசை நாடகம் என்ற மூன்றுக்கும் பொருந்த அநேக திருப்பாசுரங்களை இயற்றியே பெரியோர் ஆயினர். ஆதலால் எங்களுக்கும் தாங்களே கருணையுடன் ஞானப்பால் தந்து காக்கவும்.

5. **திருநாவிற்கு அரசர்மிகத் தெள்ளத் தேறி**
**தெளிந்துதித் திக்கும்அருள் தேறல் முன்னம்**
**ஒருநாளில் பெற்றுஎம்மை ஒழியப் போய்உண்டு**
**ஒளிஉருவா யினர்நாங்கள் உலர்ந்தே போனோம்.**

திருநாவுக்கரசு என்னும் பெரியார் தெள்ளத் தெளிந்து முன்னாளில் தனக்குச் சூலைநோய் வந்த காலத்தில், தன் தமக்கையார் திலகவதிபால் ஆனந்த வடிவமான ஞானத் தேனை எங்களை விட்டு விட்டுத் தனியே சென்று உண்டு, அறிவு வெளியில் சோதி வடிவானார்கள். நாங்கள் உலக பந்தத்தில் அகப்பட்டு வாடிப்போனோம்.

6. **அடுத்தனவே செய்துதிரிந்து அற்ற நம்பி**
**ஆரூரற்கு இறைவர்திரு வருளி னாலே**
**தடுத்துஅவரை ஆட்கொண்டார் அமிர்தம் உண்ண**
**தாம்அளித்தார் எம்அளவும் தாயே காணோம்.**

திருக்கயிலையில் பரமனுக்கு வேண்டியவற்றையே செய்து வந்த நம்பி ஆரூரற்குப் பணிப்பெண்கள் மேல் மாறுபட்ட சிந்தனை உண்டானதால் கைலாயத்தினில் இருந்து நீங்கிய சுந்தர மூர்த்தி சுவாமிகளை அவர்தம் தோழன் ஆன சிவபெருமான் முன்னம் தடுத்தாட் கொள்ளுவேன் என்று அவரைத் தனக்கு அடிமை என்று கூறித் தன் அருளால் அவரைத் தடுத்தாட் கொண்டார். மேலும் அவர் பிறப்பு இறப்பு என்ற துன்பத்தை அடையா வண்ணம் பேரானந்த அமுதை அவர் கேட்காமலேயே எண்ணக் கொடுத்தார். எம்மிடத்தும் அவ்வாறு கொடுப்பார் என எதிர்பார்த்தோம். தாயே அந்தக் கருணையை நாங்கள் இன்னும் பெறவில்லை.

7. **சாந்தியினை நேராக உடைய நல்ல**
**சடகோபர் பராவமிர்தைத் தாமே உண்டு**
**தீந்தமிழ்என்று ஒருகோடி வேதம் ஆகச்**
**செய்யதிரு வாய்மலர்ந்தார் தேற மாட்டேம்.**

பொருமை முதலிய நற்குணங்களையும் சடகோபர் என்ற வைணவ அடியார், திருமால் கொடுத்த பேரானந்தப் பெருவாழ்வைத் தாமே அனுபவித்து அநேகக் கிளைகளையுடையது என்று சொல்லும்படி செந்தமிழ் வேதமாகத் திருவாய் மொழி என்னும் நூலைத் திருவாய் மலர்ந்தார். அதனாலும் நாங்கள் தெளிவடைய மாட்டோம்.

8. **சீவாக்கர் முதலாக முன்னம் தாம்தாம்**
**செய்தபாக் கியத்தால் இயக்கம் தீர்ந்தார்**
**நீபார்க்கப் பட்டவரே கண்டாய் எங்கள்**
**நிர்ப்பாக்கி யத்தைஇனி நீங்கப் பாராய்**

சிவவாக்கியர் முதலாகப் பெருமை பெற்ற பல மகான்கள் முன்னம் தாம் அநேகப் பிறவிகளில் செய்த பாக்கியத்தால் இந்தச் சம்சார மயக்கத்தில் இருந்தும் நீங்கினார்கள். அவர்கள் உன் கருணைப் பார்வைக்கு ஆளானமையால் இந்தப் பேற்றை அடைந்தார். எனவே எங்களுக்குற்ற இந்தப் பாக்கியமற்ற நிலை நீங்கும்படி அருள்வீராக.

9. **முத்திவரும் படிஅன்றி முற்றுஉடலம் விடும்அளவும்**
**கத்திவரும் படியாகக் கற்பித்தாய் எங்களையே**

பேரானந்த மயமான முத்திக்குரிய சாதனங்களைக் கடைப்பிடிப்பதை விடுத்து, மேலும் இவ்வுடலை விடும்வரை, சுகதுக்கங்கள் யாவும் என்செயலே என்று பிதற்றித் திரியும்படி அடியவர்களாகிய எங்களுக்குக் கற்பித்தாய்.

10. **ஆராத ஊண்உண்டுஉன் அடிஅகலும் வகைஎமக்குத்**
**தூராத குழிதூர்க்கை தொழிலாகச் செய்தனையே.**

உம் திருவடியை மறந்து நீங்கி இருக்கும்படி உணவு முதலியவற்றை உண்டும் நிரம்பாத வயிற்றுப் பள்ளத்தை நிரப்புதலே எமக்குத் தொழிலாக வைத்தாயே.

11. **பாகாய மொழிவாய்இப் படுதுயரம் ஒருகாலும்**
**போகாத உடலம்வெறும் பொய்யாலே செய்தனையே.**

பாகுபோல் இனிக்கும் சொல்லுடைய தேவியே, இப்போது இங்கே அனுபவிக்கும் பிறப்பு இறப்பாகிய துன்பமானது விட்டு நீங்காத உடலை வெறும் பொய் வடிவாகச் செய்தாயே.

12. **உங்கட்குத் தகும்இதுஎன்று உள்ளபடி உனைஉணரா**
**எங்கட்கு வடிவுவெறும் இடும்பையினால் எடுத்தனையே**

உள்ளபடி எம்மை அறியாத எங்களுக்கு இவ்வுடல்தான் வேண்டும் அதனால் பிறப்பு இறப்பாகிய துன்பத்தை அடைதல் தகும் தகும் என்று வெறும் துக்கத்தோடு கூடிய இவ்வுடலை எடுப்பித்தாயே.

13. **இப்பரிசே பலஇயம்பி இலகும்ஒரு பேயினைஉன்**
**மெய்ப்பரிசே விளைந்தகுறி விண்ணப்பம் செய்கெனவே.**

இவ்வாறு பலவிதமாக முறையிட்டுத் தலைமையாக விளங்கும் ஒரு சாதுப் பிசாசை நோக்கித் தேவியானவள், உன் மேனியின் கண்ணே முத்தி சானங்களை அறிவிக்கத் தோன்றியுள்ள அடையாளங்களை என்பால் விண்ணப்பம் செய்க என்றனள்.

# குறி

## முன்னுரை

சகுனக்குறி பலவற்றைச் சொல்லுவது

1. **அடிஅறிகின் றிலன்அடியேன் அறிவதுஒரு குறிஅல்ல**
**குடிபறியும் படிவந்து தோன்றியதுஓர் குறிஉண்டே**

மிகக் கடையனாகிய அடியேன் உன் திருவடியைக் காண்கின்றிலேன். ஆயினும் அப்படிக் காண்பது ஓர் அடையாளம் அன்று. ஆனால் நான் பல குறிகளைக் காண்கின்றேன். அவைகளில் சம்சார பந்தம் நீங்கும் படியான ஒரு சகுனக் குறி இருக்கிறது.

2. **பூண்கிற உடல்ஆதி யாம்இந்தப் புவனத்தில்**
**காண்கின்ற பொருள்எல்லாம் கனவாகக் கண்டனனே**

பொருந்தியுள்ள உடல் முதலான இந்த உலகத்தில், என்னால் அறியப்படும் பொருள்கள் அனைத்தையும் சொப்பனம் எனக் காண்கின்றேன்.

3. **உடலை ஒன்றிய உயிர்வி டும்பொழுது உணர்வது அன்றியிலே**
**நடலை கொண்டுஉடல் நழுவல் கண்டுஉளம்நடு நடுங்கிடுமே.**

உடலின்கண் பொருந்தியுள்ள உயிர் நீங்கும் காலத்து உண்டாகும் உணர்வு இல்லாமல் எக்காலமும் துன்பம் கொண்டு உடல் நழுவும் நிலையாமையைக் கண்டு மனம் நடு நடுங்கிக் கொண்டு இருக்கும்.

4. **அழியும் என்றுஅமர் உலகில் இன்பம்இது அமையும் என்றிடுமே**
**கழியும் என்றுஅமர் உலகம் என்பது கருது கின்றிலமே.**

இவ்வுலகத்தில் பொருந்திய இன்பங்களால் உண்டாகும் ஆனந்தம் அழியும் எனக் கருதி, இது போதும் போதும் இனி வேண்டாம் எனச் சொல்லும் இது போலவே

தேவருலகத்தில் உள்ள இன்பங்களும் நாசமாகும் எனச் சொப்பனத்திலும் நினைக்க மாட்டோம்.

**5. சமத மங்களை முதல்வ ரும்சில தலைமை வந்திடுமே
மமதை கொண்டுஇது நமதுஎனும்பெரு மயல்ம டங்கிடுமே.**

சமம், தமம், விடல், சகித்தல் சமாதானம், சிரத்தை என்னும் சமாதி நிலைக்கு உரியவற்றையும், அதற்கு முதலாவதாக வரும் இமய நியமாதி, காமமற்ற செயல், அறிவுத் தூய்மை, விவேகம், விராகம் முதலிய இவைகள் வந்துள்ளன. இதனால் என்னுடையது என மமதை கொண்டு இது நம்முடையது என்று சொல்லும் பெருமயக்கம் அடங்கிடும்.

**6. அழிவு அறும்பொருள் பொருள்எ னும்படி அறுதி வந்திடுமே
ஒழிவு அறும்பொருள் உணர்வுஅது என்றிடும் உணர்வு வந்திடுமே.**

அழிவில்லாத பொருளே பொருள் என்று சொல்லும்படி முடிவு வந்துள்ளது. நீக்கமின்றி எங்கும் நிறைந்துள்ள பொருளே அறியத் தக்கது என்று சொல்லும் முனிவர்க்குரிய தன்மை வந்துள்ளது.

**7. தெருள்உ றும்கலை பலஉ ணர்ந்துஒரு சிறித லம்பிறவா
அருள்உ றும்குரு பரன்இ ருந்துஇடம் அறிய என்றுஎழுமே**

ஞான நூல்கள் பலவற்றையும் அறிந்தவராய் ஒரு சிறிதேனும் சஞ்சலம் இன்றிப் பிரப நிட்டை உடையவராய் அருள் மிகுந்த குரு இருக்குமிடம் நாடி அவர் முன்னிலையில் என் உண்மை வடிவத்தைத் தெரிந்து கொள்வேன் என்று விரைவாக எழுந்து செல்வான்.

**8. அழுத கண்களும் உருகு நெஞ்சமும் அலரும் அன்புவிடாது
எழுத ரும்படி மொழிதல் இங்கு அரிதுஇது செயும்குறியே.**

நீர் வடியும் கண்களும், கசிந்துருகும் மனமும், விரிந்த பக்தியும், நீங்காமல் தோன்றும் வண்ணம், இது செய்யும் குறிகளை இங்கே கூறுவது அரியது.

**9. அளியும் நெஞ்சுடை அடியர் இங்குஇவை அழகுஇது என்றனரே
தெளிவை இன்றி அலகை யும்சில திகைம யங்கினவே.**

அன்பு நிறைந்த மனமுடைய அடியார் இந்தக் குறிகள் மிகவும் அழகுடையன என்று சொல்லுகிறார்கள். அறியாமையோடு கூடிய சில பிசாசுகள் நமக்கு இப்படி வரவில்லையே என்று திகைத்து மயங்குகின்றன.

**10. அழகுஇது என்றிடும் அதுகொ டுஞ்சில அழகு இதுஎன்றனவே**
**பழகி வந்ததுஓர் பரிச யங்கொடு பலப யந்தனவே.**

மேலே சொல்லும் அழகென்று கூறிய குறிகளைக் கொண்டு சில பிசாசுகள் நாம் எவ்வாறு எப்போது இவைகளைச் சம்பாதிப்போம் என்று பயப்படுகின்றனவாம்.

## குறி நிறைவுற்றது

# 15.விசேஷப் பேய் வரவு

## முன்னுரை

ஞானப் பேயின் வருகை

1. **வெருவ ரும்திறன் உரைசெய்து அங்குஅடி வீழ்வு உறும்பொழுதே**
**குருப ரன்பொரு களம்அ றிந்துஒரு குணலை வந்ததுவே.**

இவ்வாறு சாமானியப் பிசாசுகள், தாங்கள் சம்சார தாபத்தினால் பயப்படும் தன்மையைக் கூறி, அத் தேவியின் திருவடியை வணங்கியபடி வீழ்கின்ற காலத்து, குரு மூர்த்தியின் போர்க்களம் ஆகிய வீடுபேற்றின் வடிவத்தில், அஞ்ஞனை வெல்லும் தன்மையை அறிந்த ஒரு சிறப்புப் பேய் அவ்விடம் வந்தது.

2. **கடுக வந்திடும் அலகை வெம்பவம் கருவுஅறும் படிநீ**
**படுக எம்புக வினைவி ளைந்தமை பகரு கென்றலுமே.**

அதி விரைவாக அங்கு வந்த சிறந்த பேய் ஞான வேந்தனைப் பார்த்து, எங்களது கொடிய பிறப்பு இறப்பாகிய துன்பம் நீங்கும் வண்ணம் ஞான வேந்தன் ஆகிய தாங்கள் கலந்து கொள்ளும் வீடு பேறு அடைவதற்கான போர்க் களத்திற்குச் சாதுக்களே நீங்கள் செல்ல வேண்டும் என்று சொல்ல (ஞான வேந்தன் விளைந்ததென் கூறுக என்றலும் ஞானப்பேய் கூறத் தொடங்கிற்று).

3. **செயிர்அறம் மிக்கதி யங்கும் உடல்துயர் சிறிதுத ணித்துஎமதுஆர்**
**உயிரை அளித்துஅமர் உரையும் எனச்சில உதடுது டித்தனவே.**

மிக மிகத் துன்பம் உண்டாகும் உடல் துன்பத்தைச் சாந்தி செய்து, எங்களது உயிர் நீங்கா வண்ணம் காத்தருளிய தங்களிடத்தில் போர்க்களம் பற்றிக் கூறத் தொடங்குதும், கேட்பீர் எனச் சிறப்புப் பேய் முதலில் சில சொல்லத் தொடங்கியது.

4. **அறுதிப டத்தெளிவு அளவுதெ ரித்திடும் அடையஎ னாமுதுபேய்**
**உறுதிப டத்தெளி வால்அமர் உற்றதை உரையும் எமக்குஎனவே.**

அனைத்தையும் உறுதியாக அறியும் வண்ணம் சொல்லுகிறேன் என்று சிறப்பான அந்தப் பேய் கூற, ஞான வேந்தனாகிய எமக்கு உறுதி உண்டாகும்படி தெளிவான விளக்கத்தோடு போர் வந்து சேர்ந்ததை எமக்குக் கூறும் என.

5. **ஐயப்பா டோகெடுவீர் அஞ்ஞன்அழிந்த மைஇன்னம்**
**வையத்தே வந்ததுநான் மறைதேடும் பொருள்காணும்.**

நான்கு வேதங்களாலும் தேடுதற்கு அரிய பரம்பொருளே, இப் பூமியின்கண் குருவடிவாக வந்திருக்கிறது என்றால், அஞ்ஞன் அழிந்தான் என்பதில் உமக்கு இன்னும் சந்தேகமோ?

6. **பசியும்போம் உங்கள்பெரும் பாவமும்போம் இப்பத்துத்**
**திசையும்போய் முடிந்தபடு களத்தினொடு தினைத்துணையில்.**

இந்தப் பத்துத் திசைகளையும் சுற்றி வளைத்திருக்கும் தனது மோட்ச வடிவத்தில் உள்ள ஆனந்தத்தில் ஒரு தினையளவு உண்பதாலே உங்கள் பசியும் போம். உங்களது பெரிய பாவமும் போகும்.

7. **பல்லாயி ரத்துஆண்டு பலகோடி அண்டத்தார்**
**எல்லாரும் உண்டாலும் இத்தனையும் குறையாதே.**

பலகோடி ஆண்டுகளாகப் பலகோடி அண்டங்களிலுள்ள அனைத்து உயிர்களும் உண்டாலும் அணுவளவும் குறையாதே.

8. **பார்உண்ட மால்உண்டுஎன் படைப்பவனோடு அரண்உண்டுஎன்**
**ஆர்உண்டுஎன் ஆர்ஒழிந்துஎன் அருகாது பெருகாது.**

உலகை உண்ட திருமால் உண்டாலும் குறையாது. படைக்கின்ற நான்முகனோடு சங்கரன் உண்டாலும் குறையாது. யார் உண்டால் என்ன? யார் உண்ணா விட்டால்தான் என்ன? உண்பதால் குறையாது. உண்ணாமல் இருத்தலால் பெருகாது.

9. ஒழிந்து போன காணும் அஞ்ஞன் நாமம் என்று உரைக்கவே
மொழிந்த வாயை ஓடி வந்து முத்தம் உண்டு நிற்குமே.

அஞ்ஞான வேந்தன் பேர் கூட இல்லாது அழிந்து போனான் என்று சொன்னதும். அவ்வாறு கூறிய அந்த வாய்க்கு மிக விரைவாக வந்து முத்தமிட்டு நிற்கும்.

10. தொல்லை உள்ள பரிசு சொன்ன சுருதி யைக்கொண் டாடுமே
இல்லை என்ற பேயின் வாயில் எரியை வையும் என்னுமே.

அநாதியாக உள்ள பொருளின் தன்மையைச் சொன்ன வேதத்தினைக் கொண்டாடுங்கள். இல்லை என்று கூறும் பேயின் வாயில் நெருப்பை வையுங்கள் என்று சொல்லுமாம்.

11. மாயை நாமம் அஞ்ஞன் நாமம் மாறு மாறு வந்துநம்
நாய னார்அ ழித்த வாறு நவிலு கென்ன நவிலுமே.

மாயையின் பெயரும். அஞ்ஞானத்தின் பெயரும் அழியும் படியான தத்துவ வழியைக் கூறியருளிய நம் தலைவரின் பெருமையைக் கூறுங்கள்.

12. வாய்ஒரு கோடி கொண்டு மலரோன்உ தித்த
முதலாக இற்றை வரையா
ஆயிரங் கோடி கோடி மறைஓதி ஓதி
முடியாது காணும் அளவே.

ஒரு கோடி வாய்கொண்டு நான்முகன் தோன்றிய நாள் தொடங்கி, இன்று வரைக்கும் ஆயிரம் கோடி வேதங்கள் சொல்லிச் சொல்லிக் காண்பதற்கு முடியாமல் இருக்கிறது.

13. ஞானம் அலாத பாதம் உரையாடி ஞானம்
உரையாடு காலை அரனார்
மோனம் அலாது கூற முடியா மல்யாதும்
மொழியார் இதுயாவர் மொழிவார்.

பரமனே தென்முகக் கடவுளாக எழுந்தருளி, ஞான பாதமன்றி, ஏனையவையான சரியை. கிரியை. யோகம் என்னும் மூன்றுடன் கர்மம். பத்தி முதலான ஞானத்தை

உபதேசிக்குங்கால், மௌனமாக இருந்து உபதேசித்தாரே அல்லாமல் வாக்கால் ஒன்றும் சொல்லாமல் இருந்து விட்டான் என்றால் இந்த ஞானம் பற்றி யார்தான் மொழிவார்.

**14.** **வாய்உரை யாடும் எல்லை அலநாய னார்என**
**மனமே புகுந்த மொழிஇப்**
**பேய்உரை யாடு கின்றது எனநீர்கொ ளாது**
**பெரிதாக உன்னும் இதுவே.**

வாக்கினால் இவ்வளவிற்று என்று சொல்ல இயலாத குணங்கள் நிறைந்த குருமூர்த்தி எனது மனத்தின்கண் இருந்து கூறிய மொழியாம் இவ்வாக்கியம். இதனை ஒரு பேய் பிதற்றுகின்றது என்று எண்ணாமல் பெருமை உடையது என்று எண்ணும்.

## விசேஷப் பேய் வரவு நிறைவுற்றது

# 16. அஞ்ஞன் சரிதை

## அஞ்ஞன் வரலாறு கூறுவது

1. நாயகன் ஆளு கோல அருள்மேவ நீரும்
நலனோடு கேண்மின் நெடுநாள்
ஆயக னாஎன் மாயா புரம்மேவி நாளும்
அரசாளும் அஞ்ஞன் அளவே.

அருள் செய்யும் குருமூர்த்தியினது வடிவாக உள்ள ஞானத்தை நீங்களும் அடையும் வண்ணம் விருப்பத்தோடு கேளுங்கள். நீண்ட கனா என்னும் மாயா பட்டணத்தைப் பொருந்தி எப்போதும் அரசாண்டு வரும் அஞ்ஞனது காலத்தே.

2. மாயாபு ரத்துஉள்ள வலிகூறும் அளவோ
மாதாபி தாமாது லன்தாரம் மகவுஎன
ஆயாவ ரும்சுற்றம் வீழ்வோர்கள் ஏறற்கு
ஆதார மேபோல அமிழ்விக்கும் அகழே.

மாயா புரத்தில் உள்ள வலிமைகளைச் சொல்ல முடியுமா? தாய், தந்தை, மாமன், மனைவி, மைந்தன் என்று ஆராய்ந்து பார்க்காமல் வந்த சுற்றத்தவர் தொடர்பினால் சுகம் காணும் மனிதருக்கு அதனினின்றும் கரை ஏற ஒரு துணை போல் இருந்தும் நம்மை அமிழ்விக்கும் பெரிய அகழியுண்டு.

3. இன்னான் யான் இன்னன் இவன்என்று உயர்த்தாது
யான்என்னது என்கின்ற பதனம்செய்து ஈசன்
தன்னாலும் இதுபோக விடுமாறு முடியாச்
சங்கற்பம் ஆம்என்பர் சலியாத மதிலே

நான் இன்ன பெயருடையவன், நான் இன்ன சாதியினன், நான் இன்ன வருணத்தைச் சார்ந்தவன் என்றும், இவன் இன்னவன் என்றும் உயர்வுடைதாய்க் கூறி, யான் என்றும்,

என்னுடையது என்றும் விரும்பும்படியாக மதில் உயர்ந்து ஈசனாலும் தாண்ட முடியாத உறுதியுடன் இருந்தது.

**4. ஓராது அவாமூடி உணர்வுஎன் கடாரம்**
**உள்ளூடுஒ றுத்தற்கு ஒண்ணாமல் யாரும்**
**பாராத பொல்லா ஒழுக்காம் இழுக்கே**
**படைவீடு சூழப்ப டுங்காடு தானே.**

ஆராய்ந்து பார்க்க இயலாத ஆசாபாசங்களால் மறைத்து, ஞானம் என்னும் கோடரி கொண்டு வெட்டிப் பிளந்து உள்ளே சென்றிட இயலாமல், பெரியோர்களாலும், சாத்திர நூல்களாலும் நெருங்க முடியாத கூடா ஒழுக்கங்களாகிய குற்றங்கள் என்னும் படை வீடுகள் காடுகளாய்ச் சூழ்ந்துள்ளன.

**5. அலகுஅற்ற விபரீதம் விளைவிக்க உரியார்**
**அளவுஅற்ற படைவீரர் அவர்சுற்றம் உடனே**
**உலகத்தை முழுதுஆளும் உணர்வுஅற்ற கெடுவான்**
**உருவத்தை இருள்வேறொடு உவமிக்க அரிதே.**

அளவற்ற படை வீரர்கள் அவரவர் சுற்றத்துடன் கூடி, இவ்வளவிற்று என்று கூற முடியாத எல்லையற்ற விபரீதங்களை உண்டாக்கும் உரிமை உடையவராய் உள்ளனர். இவர்களோடு கூட, உலகம் முழுமையும் தானாட்சி செய்பவனும், அறிவு சிறிதும் இல்லாதவனும், தனது அழிவுக்குத் தானே வழி தேடுபவனும் ஆகிய அஞ்ஞ வேந்தனது உருவத்தை வான் மறைக்கும் நள்ளிருளுக்கும் சமம் என்றே கூற வேண்டும். அதற்கு மாறாகச் சொல்ல வேறு உவமை இல்லை.

**6. கருதும்ஒரு பொருளைஒரு கணம்அளவில்**
**அடையஇகல் கடவும்அவன் விடயரதமே**
**வருதிசைகள் முழுதும்ஒரு நொடிஅளவில்**
**வலிசுழல வருகமன மனதுரகமே.**

மனத்தால் நினைக்கும் ஒரு பொருளைக் கணப் பொழுதில் அடைவான். பகைவர் மீது செல்லும் அவனது இரதம் விஷய ரதம் என்று சொல்லப்படும். பத்துத் திசைகளையும் ஒரு நொடியளவில் சுழன்று வருகின்ற வலிமையால் காற்றும் பின்தங்கிடுமாறு செல்லும் அவனது மனக்குதிரை.

7. **பரன்ஒளிசெய் அருமறைகள் பகரும்மலர்**
**அடிஇணைகள் பரவநினை கிலர்கள்எனவோ**
**அரனொடு அரிஅயன்எனினும் இலதுஅகிலம்**
**அடையவெறும் அஞ்ஞகுல பதியாணையே.**

அரிய வேதங்கள் இறைவனின் அருள் ஒளியை விளக்கும். தாமரை மலர் போன்ற அவனது இணையடி மலர்களைப் போற்ற நினைக்கவில்லை என்று சொல்லவோ? சிவன், திருமால், நான்முகன் முதலிய மும் மூர்த்திகளும் படைத்தல் முதலான தொழில்களைச் செய்தல் வேண்டாம். ஏனெனில் அவை இயல்பாய் உண்டாம் என்று கூறும் மொழியைக் கொண்டே கடவுளை வணங்கார் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். இப்படி அனைத்து உலகங்களிலும் அஞ்ஞ வேந்தனது ஆட்சிக்கே இடம். வேறு ஆட்சிக்கு இடம் இல்லை.

8. **அந்தகன் ஆகும் செய்நன்றிக்கு ஆகா பழிநல் வழிஅளவி**
**இந்திரன் ஆகும் பிறர்ஒருவர் ஏதம் காணும் இடத்திலே.**

ஒருவர் செய்த நன்றியைக் கொல்வது எமன் செயலாகும். செய்த நன்மையை நாடாமை குருட்டுத் தன்மை. ஆகாத பழிச் செயல்களையே நல்வழி என்று கொண்டு அயலவர் குற்றங்களைக் காணும் போது இந்திரன் போல எண்ணற்ற கண்களை உடையவராம்.

9. **மெய்என்று இருப்பது உடம்பினையும்**
**விளங்குஇழை யார்தம் வார்த்தையுமே**
**பொய்என்று இருப்பது ஈசனையும்**
**புரைஅற் றோர்கள் புகல்வதுமே.**

உடலையும், ஒளிமிக்க நகையணிந்த மங்கையர்தம் சொற்களையும், உண்மை என்று கருதுபவராம். ஈசனையும், காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களும் நீங்கப் பெற்ற மகான்கள் கூறும் மொழிகளையும் சத்தியமன்று என்று கூறுபவராம்.

10. **நசைஉ ரைக்கில்அவன் நாஊமன் ஆகுமே**
**வசைஉ ரைக்கில்அவன் வாய்கோ டியாகுமே.**

பெரியோர்தம் புகழ் பற்றிக் கூறுகையில் அவன் நாக்கின்றி ஊமையாய் விடுவான். அவனது இகழ்ச்சியைக் கூறுமிடத்து அவனுடைய வாய் கோடி கோடியாய்ப் பெருகிவிடும்.

11. **எவ்வத்து ஏற்பவர்க்கு ஈயக்கை இல்லனே**
**கௌவ்வத் தேடின்ஒரு கோடி கையனே.**

ஏற்பது இகழ்ச்சி என்பதைக் கருதாது வாங்குபவருக்குக் கையே இல்லாமல் போய் விடுகின்றது. பிறர் பொருளைக் கவருபவர் ஒருகோடிக் கைகளை உடையவர் ஆகின்றனர்.

12. **இளமை யும்இடும் பைக்குஇடம் ஆகிய**
**வளமை யும்பெரிது என்றும திக்குமே.**

துன்பத்திற்குக் காரணம் ஆகிய இளமைக் கோலத்தையும் செல்வங்களையும் உயர்வு என்று கருதுமாம்.

13. **சாயை போலும்ச கட்டுஉருள் போலும்ஆம்**
**மாய வாழ்க்கை நிலையாய் மதிக்குமே.**

உடலின் நிழலைப் போலவும், வண்டிச் சக்கரம் போலவும் மாறி மாறி வரும் பெரிய மாயையின் வாழ்வை நிலையென்று கருதும்.

14. **மின்தன் எல்லைவி திஅற்ற யாக்கைகொண்டு**
**என்றும் இங்குஇருப் பார்போல் இருக்குமே.**

மின்னல் போன்ற நிலை இல்லாத உடலைக் கொண்டு என்றும் நிலையாக இருப்பரைப் போலக் கருதி வந்த செயலை மறந்து விடுவர்.

15. **அறம்சு ருக்கும்அ வலம்பெ ருக்குமே**
**புறம்சு ருக்கும்பு கழும்சு ருக்குமே.**

அறத்தைச் சுருக்கும். அறமல்லாதவற்றை விரித்து வாழ்வர். இகழ்ச்சியைப் பெருக்கிப் புகழைச் சுருக்கியும் வாழ்வர்.

16. **நிரயத் தோடுநெடு வான்மு கட்டொடும்**
**தரையத் தோடும்த னிஊசல் ஆடுமே.**

பாவ மிகுதியால் நரகத்தின் கண்ணும், புண்ணிய மிகுதியால் சொர்க்கத்தின் கண்ணும், தீ வினையால் பூமியின் கண்ணும் ஊசலாடுவர்.

17. **ஓதலும் உணர்த்தலும் உணவு சுட்டியே**
**சாதலும் பிறத்தலும் தவிர்க்க வல்லவே**

படித்தலும், படித்ததைப் பிறருக்கு உணர்த்தலும் ஆகிய இவற்றை உண்ணும் உணவு கருதிச் செய்வதே அல்லாமல், இப்பூமியில் பிறத்தலும் இறத்தலும் ஆகிய துன்பத்தை நீக்க அல்ல.

18. **இந்த மன்னனுக்கு என்றும் பவம்கொள**
**வந்த துன்மதி மந்திரி ஆகுமே.**

இந்த அஞ்ஞ வேந்தனுக்கு என்றும் பிறப்பு இறப்பை மாறாமல் அடைவித்தல் பொருட்டு வந்த மந்தத் தன்மை முதலியவற்றோடு கூடிய கெட்ட புத்தியே அமைச்சர் என்று சொல்லப்படும்.

19. **அற்பம் இல்லை அருந்தவ மாதரார்**
**கற்பும் இல்லை கழிந்தான் ஒழுக்கமே.**

ஒழுக்கத்தினின்றும் நீங்கியவனான அஞ்ஞ வேந்தனது அரசில் ஆடவர்பால் அரிய தவம் எள்ளவேனும் இல்லை. பெண்களிடத்திலோ கற்பொழுக்கம் இல்லை.

20. **ஆகமே வடிவு ஆகிஅ மைந்துஉள**
**மூகன் நீதி முடியாம் ஒழியவே.**

உடலே இன்ப வடிவம் என்ற உறுதியுடன் வாழ்ந்த அஞ்ஞ வேந்தனது அரசில் உண்டான அவலத்தைக் கூற முடியாது.

21. **முறைமை அற்றமை மூவுல கத்தினும்**
**இறையவர்க்கு அறிவிப் பாரும் இல்லையே.**

சொர்க்கம், மத்திமம், பாதாளம் என்ற மூவுலகங்களிலும் அதர்மம் பெருத்த தன்மையை இறைவனுக்குத் தெரியப் படுத்துவாரும் இல்லாமல் போய் விட்டனர்.

**அஞ்ஞன் சரிதை நிறைவுற்றது**

# 17. திரு அவதாரம்

## முன்னுரை

அஞ்ஞனது ஆட்சியில் உயிர்கள்படும் துன்பத்தை உணர்ந்து கொண்ட இறைவ உலகத்தின்கண் மானைக் காட்டி மானைப் பிடிப்பது போல, மனித உடலைத் தந்து நம்ம எலாம் ஆட்கொண்ட திரு அவதாரச சிறப்பு இங்கே கூறப்படுகின்றது.

**1. உண்மை இன்றி உலகத்து உளோர்படும்**
**தன்மை தம்பிரான் தானே அறியுமே.**

வாய்மை இழந்து, உயிர்களுக்கு எல்லாம் தலைவனாய் அனுபவிக்கின்ற இழிவை உயிர்களுக்கு எல்லாம் தலைவனாய் இருக்கக்கூடிய இறைவன் தனது ஆற்றலால் தாமே அறியும்.

**2. அவப்பிர காசஅு வலம்பெ ருத்தமை**
**சிவப்பிர காசன்தி ருஉளம் சென்றதே.**

அறியாமை இருள் கொண்ட அஞ்ஞ வேந்தனது அதர்மம் அதிகரித்த தன்மை எமது குருநாதராகிய சிவப்பிரகாசன் என்னும் பெயர் பூண்டு எழுந்தருளி வந்த இறைவனின் அழகிய உள்ளத்தில் போய்த் தாக்கியது.

**3. வன்பேய் அனையான் மேல்வரமெய்ப் பரனுக்குத்**
**தன்பேர் அருள்முற்றும் தான்ஓர் வடிவாயே.**

கொடும் பேய்க்குச் சமமான அஞ்ஞ வேந்தனுடன் போரிட, மெய்ப் பொருளான பரமனுக்கு உண்டான அருளால் ஒப்பற்ற திரு உருவம் தாங்கித் தோன்றினார்.

**4. ஆரா அமிர்தின் சேவடியைப் பிரியாஅச்**
**சீர்ஆர் அடியாரும் திருமேனிகள் கொண்டே.**

உண்ண உண்ணத் தெவிட்டாத தெள்ளமுது என்று கூறும்படியான தனது படிவத்தை விட்டு நீங்காத சிறப்புடைய மகான்களும் அழகிய திருவுருவம் தாங்கித் தோன்றினர்.

5. **குருநா யகனார்தம் கோலம் கூறப்பண்**
**தருநான் மறைகாணாது அறிவார் இனியாரே.**

மேலான அருள் வடிவமாய்த் தோன்றிய குருமூர்த்தியின் வடிவத்தைச் சொல்லுவதற்கு, அரியதான இருக்கு முதலிய நான்கு வேதங்களும் உணரவில்லை என்றால் அவர் வடிவத்தை அறிந்து இனிச் சொல்லுவதற்கு யார் உள்ளனர்?

6. **பிறிவுப் பகைவெல்வார் பிறிது;அற்று ஒருதானாய்**
**அறிவுஉற் றவர்என்றே அறையும் கழல்இட்டே.**

எவ்வித வேறுபாடும் இன்றி, எல்லாம் தானே என்று உணர்ந்த மகான்கள், பிறப்பு இறப்பு என்னும் பகையை வெல்பவர்கள், என்று ஒலி செய்யும் வீரக்கழல் அணிந்து இருந்தனர்.

7. **ஞான மேதிரு ஆபர ணங்களும்**
**ஞான மேதிரு மாலையும் சாந்தமும்**
**ஞான மேதிரு ஆனஅக் கோலமும்**
**ஞான மேஅருள் மேனியும் ஞானமே.**

ஞானமே அழகிய ஆபரணம். ஞானமே அழகிய மாலை. ஞானமே சந்தனம். ஞானமே அழகிய அறிவு வடிவம். ஞானமே அழகிய ஒளி பொருந்திய உடல்.

8. **ஞான மேஉடை ஆடையும் கூரிய**
**ஞான மேஉடை வாளும்ந லம்புனை**
**ஞான மேவரும் ஊர்தியும் யாவையும்**
**ஞான மேபிற வும்சில நல்கியே.**

ஞானமே அணிந்திருக்கும் உடை. ஞானமே மேலாடை, கூரிய ஞானமே உடைவாள். ஞானமே அழகுடன் ஏறிவரும் வாகனம். சொல்லாது விடப்பட்ட அனைத்து ஞானங்களுடன் வேறு சிலவான ஞானங்களையும் பொருந்தி இருந்தார்.

**9. கமல நான்முக னார்தம் கருத்தையும்**
**கடந்து லோகம் அடங்கக்க விப்பதுஓர்**
**விமலம் ஆகிவி ரிந்துஒடுங் காமலே**
**விளங்கு தண்கொற்ற வெண்குடை காப்பவே.**

தாமரை மலரில் எழுந்து அருளியுள்ள நான்முகனது கருத்தையும் கடந்து, அனைத்து உலகங்களையும் தனக்குள் அடக்கிக் கொண்டு குற்றம் அற்றதாகி எங்கும் விரிந்து ஒடுங்காமல் விளங்கும் வெண்கொற்றக் குடையானது அனைத்து உயிர்களையுப் காப்பான் வேண்டிக் கவிக்கப்பட்டு இருந்தது.

**10. பூவில் ஏறியும் போதகம் ஏறியும்**
**புள்ளில் ஏறியும் போர்மயில் ஏறியும்**
**சேவில் ஏறியும் தேரினில் ஏறியும்**
**செய்ய பொன்அடி சேரச் சேவிக்கவே.**

நான்முகன் தாமரை மலரில் எழுந்தருளியும், இந்திரன் அயிராவதம் என்ற யானையின் மீது ஏறியும், திருமால் கருடன் மீது ஏறியும், முருகப் பெருமான் போரில் வெற்றி கொண்ட மயிலில் ஏறியும், பரமேசுவரன் விடை வாகனத்தில் ஏறியும், சூரியன் ஏழு குதிரைகள் பூட்டிய தேரில் ஏறியும், குருமூர்த்தியின் அழகிய திருவடித் தாமரைகளை வணங்கும் பொருட்டு வந்தனர்.

**11. உம்பர் ஆனவர்க்கு அரிய தானுஇவ்**
**உணர்வி லானை ஒன்றாக உன்னியே**
**தம்பி ரான்அருள் கருணை யால்ஐயன்**
**தானும் வந்தனன் தரணி தன்னிலே.**

தேவர்களும், அசுரர்களும் காணுதற்கு அரிய நிலைத்த வடிவுடைய பரமாத்மாவும், இந்த அஞ்ஞ வேந்தனை ஒரு பொருளாக எண்ணி, அடியவர்க்குத் தலைவன் ஆகிய பரமேசுவரன் எமது குரு மூர்த்தியாக, உயிர்கள் மீது கொண்ட பெருங் கருணையினால், இதோ இவர்தான் என்று சுட்டிக் காட்டும்படி இவ்வுலகில் தோன்றினர்.

**12. மம்மர் அங்குஉழந்து அமரர் தேடஇம்**
**மண்ணின் வந்ததாள் இணைவ முத்தியே**

**எம்ம ருங்கும்நின்று அடியர் போற்றவே**
**எம்பி ரான்இருந்து அருளும் எல்லையே.**

தேவர்கள் எல்லாம் அங்கு மயங்கித் திரிந்து வருந்தித் தேடவும், இவ்வுலகின்கண் எழுந்து அருளியுள்ள இணையடித் தாமரை மலர்களை அடியார்கள் எங்கணும் சூழ்ந்து நின்று துதிக்கவும் எமது தலைவராகிய குருநாதர் எழுந்து அருளி இருந்த தன்மை இருந்தது.

## திரு அவதாரம் நிறைவுற்றது

# 18. காமாதி படைச் செருக்கு

## முன்னுரை

காமம், கோபம், லோபம், மோகம், மதம், அகங்காரம், பொறாமை என்றும் படைத் தலைவர்கள் அவரவர்கள் வல்லமை பேசி அகங்காரம் கொண்டிருந்த நிலையை விளக்குகின்றார்.

**1. புணர்வினோடு அருந்தல் என்றும் போற்றுதல் அன்றி வேறுஓர்**
**உணர்வுஅறும் அரசன் தன்பால் ஒற்றரும் ஒடிச் சென்றே**

உணவு முதலியவற்றை அருந்துதலும், மகளிர்களைச் சேர்தலும் ஆகிய இருவகைத் தொழிலையே எப்பொழுதும் செய்வதே அல்லாமல் வேறோர் உணர்வும் இல்லாத அஞ்ஞ வேந்தன்பால் தூதரும் அதி விரைவாகச் சென்று கூறுவது.

**2. மதித்தல்விண் ணவர்க்கும் ஒண்ணா மறைப்பொருள் மனுடன் ஆய்வந்து**
**உதித்தனன் என்னும் வார்த்தை உண்டுஎன உரைத்த போதே**

இந்திரன் முதலிய தேவர்களுக்கும் இதுதான் பரம்பொருள் என்று தங்கள் மனத்தினால் நிச்சயிக்க இயலாத, இருக்கு முதலிய நான்கு வேதங்களிலுள்ள பரம்பொருளானது மனிதனாக வந்து தங்களை வெல்லும் பொருட்டுத் தோன்றினான் என்று ஒற்றர்கள் சொன்ன அப்பொழுதே,

**3. இனிதினால் வாழும் என்னை ஈசன்என்று ஒருவன் வெல்ல**
**மனிதனாய் வந்தான் என்னும் வார்த்தையும் வார்த்தையாமே.**

உடலே ஆன்மா, மோகமே வீடுபேறு என்ற பேரின்பத்துடன் வாழும் என்னை வெல்லும் பொருட்டுப் பரமேசுவரன் என்பவன் இங்கு மானிடனாய்த் தோன்றியுள்ளான் என்று கூறும் வதந்தியும் உண்மை ஆகுமோ? நீங்கள் சொல்லும் வார்த்தையும் ஒரு வார்த்தையாகுமா?

4. ஒன்றுஇல்லை எனும்நீரும் ஒன்றுஉண்டு போலே
உரைத்தீர்கள் என ஒற்றர்தாம்
இன்றுஇல்லை என்னாதுஇ ரோம்இந்த உலகத்தின்
இயல்கூறி னோம்என்னவே.

இதுநாள் வரையில் உம்மைத் தவிர உயர்ந்தவர் ஒருவரேனும் இல்லை. நீர்தாம் மாமன்னர் என்று கூறிக் கொண்டிருந்த தாங்களும் யாரோ ஒருவன் தங்களை வெல்லத் தோன்றியுள்ளான் என்று கூறுகின்றீர்கள் என்று அரசன் கூறத் தூதுவரும் அஞ்சி, இப்பொழுதும் முன்பு போலவே தங்களை வெல்ல ஒருவரும் இல்லை என்று கூறி வருகின்றோம் அதற்குத் தடையில்லை. ஆனாலும் இவ்வுலகத்தில் மற்றவர் பேசுகின்ற இயல்பினைச் சொன்னோம் என்று கூற,

5. அளவுஇல்லை சமயங்கள் அவரேஉ ரைப்பார்கள்
அழைஎன்ன அவர்வந்துமெய்
உளவுஇல்லை வேறுஒன்றும் அறியோம்உ ரைப்பார்கள்
உரைஓதி னோம்என்னவே.

சமயங்கள் கணக்கு அற்றவை. அந்தந்த மதங்களுக்குரிய ஆச்சாரியர்களே அவ்வாறு உரைக்கின்றனர் என்று தூதுவர் கூற அஞ்ஞ வேந்தனும் அப்படிக் கூறுபவர்களை அழைத்து கெண்டு வாரும் என்று கட்டளையிட அவர்களை ஓடோடிச் சென்று அழைத்து வந்ததும், அச்சமய குருமார்கள் அஞ்ஞ வேந்தன் அருகில் வந்து உண்மையாய் இது இரகசியம் இல்லை. சொல்லுவார் பேச்சைக் கேட்டுச் சொன்னோம் என்று கூற.

6. சொன்னார்கள் சொன்னதை மெய்என்று உரைத்தார்கள்
சுற்றம் சிறைசெய்யவே
என்நாதன் முன்ஏவர் பொருளாக இக்காவல்
எனமாறன் இயல்கூறுமே.

உடனே அஞ்ஞ வேந்தனது முதற் தளபதியாகிய காமன் என்பவன் மிகவும் சினங்கொண்டு இவர்கள் எல்லாம் யாரோ கூறியதை இங்கும் வந்து கூறினார்கள். எனவே இவர்களை எல்லாம் சுற்றத்துடன் சிறை செய்ய வேண்டியதே, ஏன் என்றால் எம் தலைவன் முன்னர் யாவர் தான் வீரம் உடையவர்கள் என்று வருவர். வந்தாலல்லவா இவர்களுக்குப் பாதுகாப்புத் தர வேண்டும் என்று கூறத் தொடங்கினான்.

7. **மண்ணோரில் எனைஏவர் மலைவார்கள் முத்தேவர்**
**மாறுஆகி ஆன படிபோய்**
**விண்ஏறி னான்ஒருவன் மலைஏறி னான்ஒருவன்**
**வேலைக் குளான்ஒ ருவனே.**

திரிமூர்த்திகளே என்னுடைய ஒரு மலரம்பால் மாறுபட்ட சித்தம் உடையவரானதால் நான்முகன் கலைமகளோடு சத்திய லோகம் சென்று விட்டான். சிவனோ மலைமகளுடன் கயிலையங்கிரி சென்றுவிட்டான். திருமால் திருமகளுடன் திருப்பாற் கடலில் பள்ளி கொண்டான் என்றால் சாதாரண மனிதரோ எம்மை வெல்பவர்? எனவே தாங்கள் அஞ்ச வேண்டாம்.

8. **பண்டுஓர் நாள்மலர் பட்டுஇன்றும் அக்கறைக்**
**கண்டர்மேனிசெம் பாகம்க றுத்தவே.**

முன்னர் என்னால் விடப்பட்ட மலர் அம்பினால், இப்பொழுதும் நீலகண்டத்தை உடைய பரமேசுவரனின் திருமேனியில் ஒருபாதியான இடப்பகுதி கறுத்து இருக்கின்றது.

9. **வேலை ஞாலத்தவர் என்னை மீறவோ**
**மாலின் மார்பின் வ டுக்கண்டு வைத்துமே.**

திருமாலின் திருமார்பில் திருமகள் இருப்பதைக் கண்டு வணங்கியும், கடல் சூழ்ந்த இவ்வுலகத்தவர் என்னையும் வெற்றி கொள்ளவோ?

10. **விதியும் என்றன் விதியினை வெல்லுமோ**
**மதிஅ ழிந்து மகட்கும யங்குமே.**

விதியும் என் விதியை வெற்றி கொள்ள முடியுமோ? நான்முகனும் முன்னம் திலோத்தமையைப் படைத்து அவளது அழகிலே மயங்கி மோகம் கொண்டார் என்பதை நீ கேட்கவில்லையா?

11. **மலரோனும் மாலும் மதிசூடு வானும்**
**வடிவோடு கூடி வரும்யாரும்ஓர்**
**அலரோடு போதம் அழியாதஓர் ஓர்வும்**
**அணுகாமல் மாதர் அடிதாழ்வரே.**

நான்முகனும், திருமாலும் மதி சூடிய சிவபெருமானும் இன்னும் சொல்லா நின்ற யாவரும், ஒரு பூவினாலேயே அறிவு கெட்டு அழிந்து, எவ்வித விவேகமும் இன்றி மங்கையர் அடியே சொர்க்கம் என்று மயங்கிக் கிடப்பார்கள்.

**12.** **பரிஏறும் வீரர் பலகோடி ஓட மலைபோல யானை பலமோதியே**
**அரிஏறு நூறும் அதிசூர ரேனும் அலர்வாளி காணின்**
**இறைமாய்வரே.**

குதிரை ஏற்றத்தில் தேர்ச்சி பெற்ற அநேகம் கோடி சூரர்கள் ஓடும்படியும், மலை போன்ற யானைகளைத் தாக்கும் ஆண் சிங்கத்தையும் அழிக்கும். எப்படிப்பட்ட வீரர்களாயினும் மலர் வாளியைக் கண்டால் வலி குன்றிப் பெண்கள்பால் அடியவராவர்.

**13.** **கரும்புஎனினும் என்னுடைய கைச்சிலை அசோகம்**
**கமலநறும் முல்லைகழு நீரினொடு சூதத்து**
**அரும்புஎனினும் என்கணைசு ரும்புஎனினும் நாண்ஓர்**
**ஆவியுடை யார்கள்எனது ஏவல்பி ழையாரே.**

மன்மதனாகிய என்னுடைய கை வில்லை வளைக்கும் போதே ஒடிகின்ற கரும்பாய் இருப்பினும், அசோகம், தாமரை, முல்லை செங்கழுநீர், மாம்பூ ஆகிய மலர்கள் அம்புகளாய் இருந்த போதிலும் வளைக்கின்ற போதே ஒலியை உண்டாக்கும் நாண் ஆனது அறுகாற் பறை என்கின்ற வண்டுகளாய் இருந்த போதிலும், இத்தகைய அம்புகளால் நான் அடிப்பேனே ஆனால் உயிரோடு வாழும் யாவரும் எனக்கு அடிமைப் பட்டு என் வசமாவர் என்பது சிறிதும் தவறாது.

**14.** **தேன்நிலவு பூகவன மும்தடமும் யாறும்**
**செய்யஇசை ஏழும்உயிர் உய்யவரு காலும்**
**வான்நிலவு மாளிகையும் வான்நிலவும் என்கை**
**மாமலரும் உள்ளளவும் வந்துஉணர்வு உறாதே.**

தேன் சொட்டும் பூங்காவனமும், வாவியாம் குளக்கரைகளும் ஆறுகளும், ஏழு சுரங்கள் கொண்ட இசையும் நாம் உயிருடன் வாழ்வதற்கு உதவும் காற்றும், வானளாவிய மாட மாளிகைகளும், வானத்து முழுநிலவும் என் கையிலுள்ள மலர்ப் பாணங்களும் நம்மிடம் உள்ளவரை ஞானம் ஒருவருக்கும் தோன்ற மாட்டாது.

15. **தூமனனும் வாய்மையும் உறாதுமட வார்தம்**
**சொல்நவில உள்ளளவும் என்னும்அள வேயோ**
**காமன்எனும் நாமம்உள தாம்அளவு மாயைக்**
**கங்குல்கழி யாதுஒருவர் கண்ணும்விழி யாரே.**

புகழ் பற்றியும், அழகு பற்றியும் கூறும் மகளிர்களது சொல் இருக்கும் வரை தூய மனமும், உண்மையான வாக்கும் தோன்ற மாட்டாது. இவ்வாறு கூறுவது மட்டும் தானா. மன்மதன் என்னும் பெயர் இருக்கும் வரை மாயை என்னும் மோக இருள் நீங்காது. எப்போது மோக இருள் நீங்கவில்லையோ அப்போதே ஞானக் கண் திறக்காது.

16. **அனிச்சம் அஞ்சும் அடியினாரை யார்ம றப்பர் அறிவினால்**
**மனிச்சர் முன்புஇ ருந்துதான்வ டிக்கும் வார்த்தை வார்த்தையே.**

மெல்லிய அனிச்ச மலரும் நாணுமாறு மென்மையாக உள்ள பாதம் கொண்ட மகளிரை யாவர்தான் மறப்பர். அப்படியிருந்தும் தங்கள் புத்தியினால் மனிதர்கள் எனது திருமுன்பிருந்து பலர் கூடிய சபையில் மாதராசையை விட்டேன், காமனை வென்று விட்டேன் என்று பேசம் பேச்சும் ஓர் பேச்சு ஆகுமா?

17. **பாவம் மேவு கொலைவி னோடு படுக னல்செய் கொடுவிழிக்**
**கோப னேஎ ழுந்த போதில் உலகு நின்று குலையுமே.**

பாவம் பொருந்திய கொலைத் தொழில் என்னும் மனைவியுடன் பொருந்திய தீப்பொறியைக் கக்குகின்ற கொடிய பார்வையை உடைய கோபன் ஆனவன் தோன்றிய போது இவ்வுலக உயிர்கள் எல்லாம் அதனைக் கண்ட போதே வருந்தும்.

18. **குலைகுலைந் துஉளம்நினைந் திடுநினைந் திடுதொறும்**
**குடர்கரிந்து உலகுஅடங் கலும்நடுங் குதல்உறத்**
**தலைகுலைந்து உடைகுலைந்து அறிஞரும் பெரியதம்**
**தலைமைகுன் றிடஎழும் சலம்எனும் தழல்அதே.**

நினைக்கும் தோறும், நினைக்கும் தோறும் மனமானது தகர்ந்து வருந்தி, குடல்கள் எல்லாம் வெப்பத்தால் தீய்ந்து உலகிலுள்ள அனைத்து உயிர்களும் நடுங்கும்படி தலையிலுள்ள உரோமம் விரிந்து. உடை குலைந்து தன் பெரிய தலைமைப்பண்பு கெட எழுவது கோபம் என்னும் நெருப்பே.

19. **தெருள்தரப் பொருள்விரித்து அருள்தரத் திரிதரும்**
**தெளிஞரைத் தெளிவுஅறத் திசைமயக்கு உறவெறும்**
**குருடுஎனச் செவிடுஎனக் கொலைசினக் கனல்எழும்**
**கொதிபொறுப் பவர்கள்எக் குவலயத் தவர்களே.**

கேட்பவர் ஞானம் பெறும்படி சாத்திர நூற்பொருள்களை விரிவாக உபதேசித்துக் கொண்டு சஞ்சரிக்கும் அறிவுடைய மகான்களை, தெளிவான ஞானம் கெட்டு, நன்னெறி, தீநெறி தெரியாமல் மயக்குற்றுக் குருடு என்று சொல்லவும், செவிடு என்று சொல்லவும், வியக்கச் செய்து கொலை என்னும் மனைவியோடு கோபம் என்னும் தீ. தோன்றுமானால் எவ்வுலகத்தவர் கோபத்தின் கொதிப்பைத் தாங்குவர்.

20. **வருசெ ருச்செயா வகைஅ றத்தையே**
**வடநி ழற்கணே மதிபெ றச்சொனோன்**
**ஒருச ரத்திலே ஒருக ணத்திலே**
**உழல்பு ரத்தை நீறுஎழுஒ ருக்குமே.**

தேவர்களும், அசுரர்களும் அடிக்கடி போர் செய்யாதவாறு வடவால மரத்தின் கீழே அமர்ந்து அறம் உரைத்து, புத்தி சமாதானத்தால் அமைதி அடையும்படி உபதேசம் செய்த சிவபெருமானும், சினமுடையவன் ஆன என் வலிமையால் ஒரு கணப்பொழுதில் முப்புரங்களையும் பொடிப்பொடியாக்கினார்.

21. **மறுக உக்கிரத் தொழில் அரக்கர்தம்**
**மனமும் வாரியும் மதில்இ லங்கையும்**
**தெறுக னல்கொளச் சிலைவ ளைத்ததும்.**
**சிரம்உ திர்த்ததும் சினம்மி குத்தலே.**

கோபக் கொலைத் தொழிலாகிய பாவச் செயல்களை அடிக்கடி செய்யும் அரக்கர்களது மனமும் மயங்கும்படி பெருமதில் சூழ்ந்த இலங்கையும் அழகிய நெருப்பால் அழியும்படி வில் வளைத்ததும், அங்குள்ள அரக்கர் தலைகளைக் கொய்ததும் எதனால் என்றால் குணம் மிகுந்த இராகவனுக்கும் வந்த சினத்தினால் அல்லவா.

22 . **கோபம் மிக்கபோது ஏவர் ஆறுவார்**
**குறுகு வோர்தமைக் கொடிய நோய்புகும்**
**சாபம் இட்டுமா தவர்கள் ஆயினார்**
**தலைமை மிக்கதம் தவம்இ ழப்பரே.**

ஏற்கனவே சினமுடைய யான் மிக்க சினம் கொண்டால் யாவர்தான் பொறுப்பர். ஏன் எனில் என் கோபத்தை அடைந்தவர்க்குக் கொடிதான துன்பம் விளையும். மிகைபடக் கூறுவதேன். இந்தக் கொடுமையால்தான் பெருந் தவமுடைய துர்வாசர், விசுவாமித்திரர் முதலான மாமுனிவர்களும் கூட, இரக்கம் இன்றிச் சாபங்களைக் கொடுத்து, அதனால் முதன்மையான தன்தவ வலிமைகளை இழந்து விட்டனர்.

**23. அடல்லோபன் எழில்ஏவர் அமைவார்கள் அடையக்**
**கடலோடு அலைபோலத் தடுமாறல் காணே.**

வெற்றி கொண்ட லோபனாகிய யான் தோன்றினால் யாவர்தான் போதும் என்ற திருப்தியோடு இருப்பார்கள். மேலும் பொருளைப் பெறும் பொருட்டு, அனைத்து உயிர்களும் திரை கடல் ஓடியும் திரவியம் தேடு என்ற மொழியை இலக்காகக் கொண்டு கடல்களென்ன அலைகள் என்ன இவற்றை எல்லாம் கடந்து தத்தளிக்கின்றனர்.

**24. பேர்ஓதம் நேரான பேர்ஆசை கூர்போது**
**ஆரோடும் உண்டோஓர் அன்புஎன்பது அங்கே**

பெரிய கடலுக்கு ஒப்பான திருப்தி இன்றி, அதிக ஆசை யானது மிகுகின்ற காலத்து, அங்கே ஒப்பற்ற அன்பு என்ற இரக்கம் யாவரிடத்திலேதான் தங்கி இருக்கும்.

**25. ஆலம்சேர் மிடற்றானும் ஐயத்திற்கு உழந்திலனோ**
**மாலும்போய் மாவலிபால் மண்வேண்டி நின்றிலனோ**

ஆலகால நஞ்சைக் கழுத்தில் கொண்டுள்ள பரமசிவனும் திருப்தி இன்றிப் பிச்சைக்காக ஊர் எங்கும் சுற்றவில்லையோ. தவிரவும் அனைத்து உலகையும் காக்கும் திருமாலும் மாவலிச் சக்கரவர்த்தியிடம் சென்று மூன்றடி மண் இரந்ததும் யாரால்? என்னால் தானே.

**26. உரையாத பொய்உண்டோ உலோபனே உற்றக்கால்**
**தரைஆளும் பொருட்டுஅன்றோ தருமனும்பொய் சாற்றியதே.**

லோபனாகிய யான் ஒருவரிடம் பொருந்துவனே ஆனால் சொல்லாத பொய்யும் உலகத்தில் இருக்கின்றதோ? சான்றாகச் சத்தியமே பேசும் தருமனும் தனக்கு உள்ளது போதாமல் அல்லவோ போர்க்களத்தில் பொய் கூறினார் எனில் மற்றையோர் கதை என்னாம்?

**27.** **ஈசன்ஒளி ஓர்இடத்தும் நிகழா வண்ணம்**
**எவ்உருவும் தன்உருவாய் எங்கும் தான்ஆம்**
**ஆசையவன் ஓர்சேனா பதிஇன் றேல்இவ்**
**அஞ்ஞகுல பதிபெருமை அறிவார் யாரோ?**

இறைவனின் ஒளி ஓர் இடத்தும் விளங்காதவாறு எவ்வடிவும் தன் வடிவாய் விளங்கும் பேராசை என்னும் பெயருடைய தளபதி இல்லாவிடில் அஞ்ஞ வேந்தனின் பெருமையை யார்தான் அறிய விரும்புவர்?

**28.** **புகர்வெண்தேர் புனல்என்று புலன்கள் ஆரப்**
**போய்அலையத் திளைத்துஇளைத்துப் பொய்யே ஆர்ந்து**
**சகர்திண்டா டச்செய்யும் மோகன் அஞ்ஞன்**
**தான்ஆன சமன்வேறுஓர் தன்மை இன்றே.**

பொய்யாய்த் தோன்றும் பேய்த்தேரைக் கானல் நீர் என்று கருதிப் போய் அலைந்து மயங்கித் திரியும் தன்மை போலப் பொய்ச் செய்திகளின் மேல் விருப்புற்ற அனைத்து உயிர்களையும் திண்டாடச் செய்வான். மோகன் என்னும் யான் கொடிய நஞ்சு போன்றவன். அனைவரையும் மயங்கச் செய்பவன். இத்தகைய தன்மை உடையவனான எனக்குச் சமமாக வேறோர் தன்மை இல்லை.

**29.** **மோகம்உற வேமுனிவர் மூவர்முதல் தேவர்**
**நரர்யாவர் களும்இவை யும்எலாம்**
**ஆகம்அது யான்எனது தந்தைதமர் தாரம்**
**ஆக என்பதும் ஒழிந்தது இலரே.**

மோகன் ஆகிய யான் பொருந்த மும்மூர்த்திகள் முதலான தேவருடன் நரர்கள் ஆகிய யாவரும், மற்றுமுள்ள விலங்கு, பறவை முதலான யாவும் உடலே நான் என்றும், என் தந்தை, என் சுற்றம், என் மனைவி, என் புதல்வன் என்று சொல்லும் அனைத்தும் நீங்கினவராக இல்லை.

**30.** **மோகம்உற வேஎவரும் மோகம்அத னால்இடரின்**
**முந்துவர் முடிந்த விடமும்**
**சோகம்உற வேதுயர் அழுந்துவ தால்அதுது**
**ரந்துஉணர்வு கூற இலரே.**

யாவரும் மோகம் அடைய அதனால் துன்பம் அடைவர். பொருள் அழிந்த போதும் சோகத்தை அடைந்து துன்பத்தில் மூழ்குவரே அன்றி அவை நம்மை விட்டு நீங்கியதே என்று, அவைகள் மீண்டும் அணுகா வண்ணம் நிற்கும் இறை ஞானத்தைக் கூறும் தன்மையை அடையவில்லை.

**31. ஓசையி னில்பெரியேன் ஓதின்மி கப்பெரியேன்**
**உங்களில் எண்மடிநான் வங்கிசம் எனில்பெரியேன்**
**ஈசனெ னக்குஎதிரோ எவர்எ னக்குஎதிர்வேறு**
**என்னும்அ கங்காரத்து எவர்எதிர் ஏறுவரே.**

ஓசையில் என்னைவிட யார் இருக்கிறார். வேத அத்தியயனம் செய்பவருள்ளும் சுரங்களை விடாமல் அத்தியயனம் செய்வதில் என்னை விட யார் இருக்கிறர், உங்களை எல்லாம் விட எட்டு மடங்கு நான் பெரியவன் என்று சொல்ல வேண்டும். ஒருவரையும் தலையெடுக்க விடாத என்னுடைய அகங்காரத்தை என் முன்னிலையில் கடந்து செல்பவர் யார்?

**32. என்அளவு ஈசனும்வந்து ஏற்றுஒழியும் பலிசென்று**
**ஏற்றிலன் ஆகின்அயன் தேற்றம்இலன் திருமால்**
**தன்அள வோராவியும் சந்திரன் இந்திரனும்**
**சற்றர்எ னப்பகரும் தம்படை நம்படையே.**

என்னிடம் பரமசிவனும் வந்து நான் என்னும் பிச்சையை யாசித்து நீங்கும். அவ்வாறு செய்யாவிடில் நான்முகனும், திருமாலும் தோன்றிடவே முடியாது. இதுமட்டும்தானா சூரியன், சந்திரன், இந்திரன் ஆகிய யாவரும் துரும்புக்குச் சமம் என்று சொல்லும் படியான தம் படைகள் யாவும் என்னுடைய படைகளே.

**33. கதத்த யானை யைத்த ணிப்பர் களிமிகத்து எழுந்தமா**
**மதத்தை யார்த ணிக்க வல்லவர் மண்ணில் அன்றி விண்ணிலே.**

கோபம் கொண்ட யானையின் சினம் தணிப்பர். இருப்பினும் மிகுந்த மகிழ்வோடு தோன்றிய மிகுந்த செல்வத்தை அதனால் வந்த செருக்கை யார்தான் தணிக்க முடியும். பூமியில் ஒருவராலும் தணிக்க இயலாது போல விண்ணிலும் யாவராலும் தணிக்க இயலாது.

**34.** **எச்ச ரங்க ளும்த மக்குள திர்ந்து உளோர்க ளைப்படும்**
**மச்ச ரன்தன் ஆவி தன்னை வவ்வு தற்க வல்லரே.**

அனைத்து அம்புகளும் தனக்கு எதிர்ப்பட்டவர்களை நாசம் ஆக்கும். இருந்தாலும் மனத்தின் கண்ணே பொறாமையாகிய நான் வாசம் செய்து அவர்களைத் துன்புறுத்துகின்ற படியால் என் உயிரைப் பிடித்துக் கொல்வதற்கு யார்தான் இருக்கிறார்கள்.

**35.** **தம்த வப்ப யன்பு சித்தல் கண்டு நெஞ்சு தன்னுளே**
**எந்த அப்பொ றாமை தன்னை வெல்ல யாவர் வல்லவரே.**

தங்கள் தங்களது முன்வினைப் பயனை அனுபவித்தல் கண்டும், அதனைக் காண்பவர் மனத்தின் கண்ணே தகித்துக் கொண்டு இருக்கும் பொறாமை என்னும் என்னை வெல்ல வல்லவர் யாவர்.

**36.** **ஞானம் மாசுஇல் தன்ம வித்த காம நாம நாலையும்**
**ஈனம் ஆக்கும் நம்ப டைக்கொல் எல்லை சொல்வது எங்ஙனே**

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறதிப் பொருள் நான்கையும் அழிக்கும். அதனால் நமது காமனே முதலாகப் பொறாமை ஈறாகக் கூறிய படைகளுக்கு அளவு கூறுவது எவ்வாறு?

**37.** **இங்கு யாதும் இவன்இ யம்ப இன்பம் எய்தி இறைவனைச்**
**சங்கி யாமல் அஞ்ஞ சேனை தாம்ம கிழ்ந்துஇ ருக்கவே.**

ஈண்டு இந்த அகங்காரம் ஆனவன் இந்தப்படி யாவும் கூறப் பேரானந்தத்தில் மூழ்கியவராய், யாரோ நம்மை வெல்ல வந்திருக்கின்றார்களாமே என்று வினவாமல் அஞ்ஞ வேந்தனின் படைகள் தங்கள் பணிகளைச் செய்து கொண்டிருந்தன.

## காமாதி படைச் செருக்கு நிறைவுற்றது

# 19. ஞான வினோதன் படைச்செருக்கு

## முன்னுரை

அஞ்ஞ வேந்தனது படைகளாகிய காமாதி உட்பகைகள் தோன்றக் கண்ட இடங்களில் தமது வலிமை பேசிச் செருக்குற்று இறுமாந்திருப்பதை அறிந்து, அடியவர்கள் சிவப்பிரகாசரிடம் அறிவிக்க, அவர் அனைத்துயிர்களும் உய்யும் பொருட்டு, உடனே ஞான வினோதனாகிய சொரூபானந்தரை அழைத்தது, நீ சென்று அஞ்ஞ வேந்தனது உயிரைப் பருகி அடியவர்களுக்கு அருள் செய்க என்றார். அது கேட்ட ஞான வினோதன் படை அடைந்த மகிழ்ச்சி கூறப்படுகின்றது.

1. **எவ்உயிர்க்கும் உயிர்ஆய இறைவன் பொன்தாள்**
**எய்தஇரும் தவம்செய்தோர் இறைஞ்சிப் போற்றி**
**வெவ்உயிர்க்க வரும்அறியா வேந்தன் தன்னால்**
**விளைந்ததுஎல்லாம் விண்ணப்பம் செய்த போதே.**

அனைத்து உயிர்களுக்கும் உயிராகிய சிவப்பிரகாசரின் பொன்போன்ற திருவடியை அடையும் பொருட்டுப் பெருமை பொருந்திய தவமுடைய அடியவர்கள் வணங்கிக் கொடியதான பிறப்பு இறப்பு என்னும் உயிர்க்கேட்டைச் செய்துவரும் அஞ்ஞ வேந்தனது செயலால் உண்டான துன்பத்தையும் அடியவர்கள் அருளிச் செய்த போதே.

2. **போர்ஆரும் அஞ்ஞனவன் தன்னால் வையம்**
**புகுந்தபிழை கேட்டுஅருளிப் போத மூர்த்தி**
**சீர்ஆரும் அடியவரைத் திருக்கண் சாத்தத்**
**திருவடித்தா மரைஅவர்தம் சென்னி கொண்டே**

அனைத்து உயிர்களும் துன்பம் அடையுமாறு போராடும் அஞ்ஞ வேந்தனால், உலகில் உண்டான தீமைகளை எல்லாம் அடியவர் வாயிலாகக் கேட்ட பொழுதே, ஞான வடிவினராகிய சிவப்பிரகாசர் தம் திருக் கூட்டத்தினரை நோக்கி அருட்கண் காட்ட, அவர்தம் பாத தாமரைகளைத் தலைமேல் அணிந்து கொண்டு.

3. **எம்பிரான் திருக்கடைக்கண் பட்டார்க்கு அன்றோ**
**எளிதாகி இருப்பதுதான் ஏற்றம் மிக்க**
**உம்பரும்மா யாபுரத்திற்கு அஞ்சா நிற்பர்**
**ஒழிந்தவரோ இனி ஒழிப்பார் உலகத்து உள்ளே.**

அமுதம் உண்டாமையால் ஏற்றம் மிக்க தேவர்களும், மாயா பட்டணம் என்னும் இவ்வுடலோடு கூடியிருக்க அஞ்சுவார்கள் எனில் உலகிலுள்ள மற்றையவரோ ஒழிந்தே போய் விடுவர். ஆனால் எமது குருநாதரின் அருட்பார்வை பெற்றவருக்கு அன்றோ எல்லாம் எளிதாக இருக்கிறது.

4. **வருபாசக் கட்டுஅறுத்து மாமாயா**
**புரம்அழித்து மயக்கம் தீர்வார்**
**சொரூபா னந்தாஉனக்குத் தொழில்செய்வார்**
**பிறராலும் தொலைக்க லாமோ.**

எமது குருமூர்த்தியும், ஞான வினோதனுமான சொரூபானந்த சுவாமிகளான தங்களுக்குத் தொண்டு செய்பவர்கள், பிறவி உடம்பாகிய உலகத்தைப் பொய்யென்று நீக்கித் தான் கொண்ட மயக்கம் தீர்வார்கள். இவர்களை அன்றி மற்றையவர்கள் நீக்க வல்லவரோ?

5. **கச்சுஒருவும் கனதனத்தார் கலவியினும்**
**புலவியினும் கலக்கம் தீர்வார்**
**மெய்ச்சொருபா னந்தநினை மெய்ப்படத்தாம்**
**பெற்றவரே வேறுஆர் வல்லார்.**

தங்களின் மெய் வடிவை நன்கு அறிந்தவர்களே, கச்சை கிழியும்படியான தனங்களையுடைய பெண்களின் சேர்க்கையினால் உண்டாகும் இன்ப மயக்கம் நீங்குவர். மற்றையவர் வென்றவர் ஆகார்.

6. **என்று நின்றுஉரை செய்த எல்லையில்**
**எந்தை ஞான வினோதனைச்**
**சென்றுஅ வன்தன் ஆவி உண்டுதி**
**ரிந்திடு என்றுஅருள் செய்யவே.**

இவ்வாறு அடியவர் கூட்டம் கூறிய பொழுது சிவப்பிரகாசர் எம் தந்தை ஆகிய ஞான வேந்தர் என்னும் சொரூபானந்த சுவாமிகளை நோக்கி நீ இக்கணமே சென்று, அந்த அஞ்ஞ வேந்தனின் உயிரை உண்டு மீள்வாயாக என்று அருள் செய்தார்.

**7. தம்பி ரான்இருப தங்க ளும்தனது**
**சென்னி கொண்டுஅறிஞர் தம்பிரான்**
**எம்பி ரானைவிடை கொண்டுஅ வன்படை**
**எழுந்த ஆறுஎவர்இய ம்புவார்.**

தம் குருவாகிய சிவபெருமானின் இரு திருவடித் தாமரைகளையும் அடியவர் திருக்கூட்டத் தலைவரான சொரூபானந்தர் தம் தலைக்கு முடியாகச் சூட்டிக் கொண்டு, தம் குருநாதரின் அருளாசி பெற்றுச் செல்லும் அந்த ஞான வேந்தரின் படையான நால்வகைச் சேனைகளும் பெயர்ந்து செல்வதை யாவர் கூற முடியும்?

**8. கடல்என காம கோபலோப மாறுவ**
**கருணைநி ஷாதி யாய்விடாது பாய்வன**
**கருஎனும் நாமம் ஆன வீதி போவென**
**கலகம்அ றாத ஓசைமீள மீள்வன**
**உடலொடு கோபம் மேலும் மேலும் மூள்வன**
**உணர்வறி யாத வேடகூடம் ஓதுவ**
**உலகியல் தூர நாற வேபொ றாதன**
**ஒளிமத யானைகோடி கோடியே.**

பெருங்கடல் போன்ற ஆசை, பொறாமை ஈயாமையாகிய அஞ்ஞ வேந்தனின் தளபதிகளையும், அவர்தம் படையினையும் மாறுபட்டோடச் செய்து ஆறுதல் அடைந்து, இடைவிதாத கருணையோடு பிறப்பு என்னும் அறியாமை நீங்கும்வழிச் செல்வன. சமயச் சண்டைகள் நீங்கும்படி நீங்குவன. நாள்தோறும் உடம்பைப் பார்த்துப் பார்த்துஇன்னும் இளைக்கவில்லையே என்ற வெறுப்புடன் எழுவன. அறிவறியாத வேடதாரிகளின் இரகசியக் கூட்டத்தை அடித்துத் தள்ளுவன. உலக அனுபவமாகிய கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்று என்னும் கூட்டத்தில் சேராதன. அத்தகைய படைகள் இரக்கம், கருணை, உதாரம் என்னும் மும்மதம் கொண்ட யானைப் படைகள் மூன்று கோடிகளாம்.

9. **உறவொடு வேறுஇ லாத வாசி ஊர்வன**
**உலகில்இரு நாலும் ஆறும் மேலும் ஆவன**
**உடுபதி சூரி ஆதி காண்ஒ ணாதன**
**உயர்வது வேறு தான்அ லாதுஇ லாதன**
**துறவொடு சாலும் ஞான வீரர் சூழ்வன**
**சுருதிகள் போன நீதி வீதி போவன**
**துணிவுஉற வேறு பாடு சாடி ஓடுவ**
**சுடர்விடு ஞான ஆழி கோடி கோடியே.**

அனைத்து உயிர்களிடத்தும் பேதம் அற்ற நட்பு என்னும் குதிரைகள் ஊர்ந்து செல்வனவாய், ஈரேழு பதினான்கு உலகங்கட்கு அப்பாலும் கடந்து செல்வனவாய் விண்மீன்களுக்குத் தலைவனான சந்திரன், சூரியன் முதலிய மற்றத் தேவர்கள் அறிய முடியாதனவாய், தனக்கு உவமையாக வேறு ஒன்று இல்லை என்று எண்ணுமாறு துறவு பூண்ட ஞான வீரர்கள் புடை சூழச் செல்வனவாயும், வேத வழியில் செல்வனவாயும், மிக்க துணிவோடு சாத்திர பேதம், மதபேதம் முதலான வேறுபாடுகள் பலவற்றை அடித்துச் செல்வனவாயும் ஒளியுடன் செல்லும் ஞான ரதங்கள் இரண்டு கோடியாம்.

10. **சிதறவி டாமல் யாதும் ஆய நூறுவ**
**செறிஒ ணாத ஞான வாளி பாய்வன**
**திருகுதல் தீரு மாறு மாறு சேர்வன**
**சிலுகுஒழி யாது காதி ஓதும் வாதிகள்**
**குதறிய கூர்மை வாய்கள் மூட ஏறுவ**
**குணம்ஒரு கால்இ லாத தான நீர்மைய**
**குருபர னார்தம் ஏவல் வீதி போவன**
**குரகத ராசி கோடி கோடி கோடியே.**

தப்பி ஓடாதபடி மாயையின் செயல்கள் ஆகிய அஞ்ஞானம் முழுமையும் அடங்கும்படி செய்து, அருகில் நெருங்க இயலாத ஞான மயமான சிம்மங்கள் பாய்ந்து செல்வன. விபரீதமான எண்ணங்கள் நீங்கும் படியாய் உடல் முதலியன நிலையாமை உடையன என்றும் சத்தியமே நிலையானது என்று சேர்ந்திருப்பனவாம். ஓயாது சண்டையிட்டவாறு நிலையாத பொருள்களை நிலை என்று கூறித் திரியும் எதிரிகளின் வாய் மூடும்படி செய்வனவும், பிதற்றித்திரியும் சான்றோர் நெறி மண்மூடிப் போகுமாறு ஏறித் திரிகின்றனவும், முக்குணத்தோடு சேராமல் நற்குணத்தவர் என்று சொல்லும்படியான

தன்மையை உடைய சொரூபானந்தர் ஆகிய குருமூர்த்தி ஏவலின் வழிச் செல்வனவாகிய குதிரைக் கூட்டங்கள் மூன்று கோடி.

**11.** **இனியன கூறும் வாயும் ஆய வாய்மையும்**
**இறுதியது ஆன போதும் வாழு போதினும்**
**இயல்வழு வாத ஞான தீர பாவமும்**
**இலகிய ஞான வாளும் மோன வீரமும்**
**மனிபயத ஊண்அ லாதுஇ லாத ஆண்மையும்**
**அவரவர் சீல மொடு வாழும் நீர்மையும்**
**அளவுப டாமை ஏசு பாவம் ஆகையும்**
**அதிபயம் ஆன வீரர் கோடி கோடியே.**

இனிய சொல்லே கூறும் வாக்கு உடையவர்களும் ஆகி, கேட்பவர்கட்கு நன்மை பயக்கும் வாய்மை உடையவர்களாகியும், தனக்கு இறுதி ஏற்பட்ட போதிலும் இன்னும் அநேகம் கோடி காலம் வாழ்ந்திருந்தாலும், தான் சச்சிதானந்த வடிவம் என்னும் அனுபவம் நீங்காத ஞானம் உடையவரும், ஒளி பொருந்திய பற்றின்மை என்னும் வாளை உடையவரும், மோன நிலையில் இருக்கும் ஆண்மைத் தன்மை உடையவரும், தன் இயல்பான வடிவத்திற்கு வேறாகத் தோன்றுபவைகளை இல்லை என்று சொல்லும் உணவைத் தவிர வேறு உணவு இல்லாதவர்களாயும், அவரவர் ஒழுக்கங்களுக்கு ஏற்ப வாழும் இயல்பு உடையவர்களாயும், முழுமையாய் எங்கும் நிறைந்திருப்பதே நமது வடிவம் என்னும் இயல்பு உடையவர்களாயும், எமன் முதலான யாவரும் அஞ்சத்தக்க பயங்கர இயல்பு உடையவர்களும் ஆன வீராதி வீரர்கள் இரண்டு கோடியாம்.

**12.** **இந்த உலகு அந்தரம் செய்து எழுகடல்**
**எண்திசை கலங்கிநின்ற குலமலை**
**வந்துவிழும் அன்றும் ஒன்றும் அசைவுஇலர்**
**வந்தபடி கண்டுஇருந்து மகிழ்வரே.**

என்றும் அசைவிலாது இருக்கும் எட்டுக் குல மலைகளும் வானில் எழுந்து, இவ்வுலகிலுள்ள ஏழு கடல்களும், எட்டுத் திசைகளும் கலங்கும்படி வந்து தம்மிடம் வீழ்ந்த போதிலும் ஒரு சிறிதும் நடுங்க மாட்டார்கள். தம் பூர்வ வினைப்படி வருவனவற்றை அறிந்து அனுபவித்து மகிழ்ச்சியுடன் இருப்பார்கள்.

13. சந்தன குங்குமங்கள் புழுகுஅகில்
தண்பளிதம் சொரிந்து மகிழ்வுஇலர்.
நொந்தன கொண்டுஅரிந்து நுகர்என
நொந்திலர் முந்தைஎன்று நகுவரே.

சந்தனம், குங்குமம் முதலியவற்றோடு, புனுகு அகில் முதலியன சேர்த்து, நன்றாக அரைத்துப் பன்னீர் முதலிய வாசனைப் பொருள்களுடன் கலந்து, குளிர முழுக்கு ஆட்டினாலும் அதனால் மகிழ்ந்திலர். கெட்டுப் போன இறைச்சிகளை அரிந்து உண்ணுங்கள் என்று துன்புறுத்திய போதும் வருத்தம் அடையார். இது பாவவினை என எண்ணி முறுவலுடன் இருப்பர்.

14. நொந்தனர் கன்றிவந்து நலிபவர்
நுந்தனர் என்றுஅமைந்த கடன்அற
வந்ததுஎன்று இடும்பை வரமகிழ்
வந்தனர் அங்குஇரண்டும் உடையரே.

பிற உயிர்களை நோகும்படி செய்பவர்களை நெருங்கித் தம்மைத் துன்புறச் செய்தாலும், உம்முடைய உறவினர் என்ற பெருமைக் குணம் நீங்க, மேலே சொல்லிய துக்கமாகிய இன்பங்களை அனுபவிக்க இவ்வுடல் வந்ததென எண்ணி மகிழ்ந்திருப்பர். முந்திய உடலுடன் வினை செய்தவர்களே இங்கு தோன்றியுள்ளார்கள்.

15. செயலினை அற்றுஇருக்கும் முனிவர்கள்
செறிவினை யைக்கெடுக்கும் வகையினில்
முயல்வினை யைக்கெடுப்பர் அறிவினின்
முன்வினை யைப்புசிப்பர் அடையவே.

செயல் ஏதும் இன்றிச் சும்மா இருக்கும் முனிவர்கள், தம்பால் செறிந்த தீவினையை நீக்கும் பொருட்டுச் சும்மா இருப்பர், ஞானத்தினால் ஆகாமிய வினையைக் கெடுப்பவர்கள் அனைத்தையும் அவரே உண்பர். மேல் தோன்றாவகை முன்வினையையே புசிப்பர்.

16. எண்இ லாதஇயல் ஞான வீரர்தமை
எண்ணல் ஆகும்அளவு எங்ஙனே

**கண்ணில் வேறுபடல் இன்மை யால்ஒருவர்**
**காணு மாறுஅரிய காணுமே.**

படைவீரர் இவ்வளவு பேர் என்று கண்டு கருதல் அளவையால் கணித்தற்கும் இயலாத இயற்கை உடைய பற்றின்மை என்னும் வாளாயுதம் கொண்ட ஞான வீரர்கள் இவ்வளவுபேர் என்று கணக்கிட இயலாத தன்மையுடையோர்.

17. **கீழ்இ லாதபடி கீழும் மேலும்அதில்**
**மேல்இ லாதபடி கெழுமியே**
**சூழ்இ லாதபடி சூழு தானைநிலை**
**சொல்லல் ஆகும்அளவு அல்லவே.**

அப்படைகள் எவ்வாறு உள்ளது எனின், கீழே நோக்கும் இடத்து, பாதாளம் ஏழினும் கீழ், அதனினும் கீழ் வேறு ஒன்றும் இல்லாமல் இருப்பதுவும், அதற்கு மேல் மற்று ஒன்று இல்லை எனும்படி ஓங்கி எழுந்திருக்கின்றது. மேலும் சூழ்ந்திருக்கின்ற படைகளின் இருப்பு பத்துத் திசைகளிலும் பரந்து அதற்கு அப்பால் யாதொன்றும் இல்லை என்னும்படி அளவு கூற முடியாத நிலையில் உள்ளது.

18. **நிறைந்தபெரும் படைநோக்கி**
**நீர்அழிக்கும் பரிசுஎமக்குஇங்கு**
**அறைந்திடும்என்று அருள்செய்ய**
**அரியநிரு பகன்தொழுதே.**

நிறைந்து காணப்படும் படைகளைக் கண்ட ஞான வேந்தர் ஆகிய சொரூபானந்தர், எள்ளத்தனையும் இடமின்றிக் காணப்படும் இப்படைகளை என்ன உபாயத்தால் அழிப்பீர்கள் கூறக என்று தளபதிகளை நோக்கிக் கேட்ட போது, அரிய திறம் வாய்ந்த நிருபகன் என்னும் சேனாதிபதி கூறத் தொடங்குகின்றான்.

19. **தேராதார் அல்லரோ சேயிழையார் எனத்திகைப்பார்**
**ஆராயும் அறிவுஉடையார்க்கு அருவருப்பே அல்லவோ.**

குருவின் முன்னர் நிலையற்ற பொருள்களைப் பற்றி அறிந்து கொள்ளாதவர் அல்லவா பெண்கள் என்று சொன்ன மாத்திரத்தில் அதைக் கேட்டுத் திகைப்பு அடைந்து

நிற்பார்கள். அப்பெண்ணின் தேகம் நரம்பு, எலும்பு, மலம், மூத்திரம் நிறைந்த பாண்டம் என்று பிரித்து உணர்வார்க்கு அது மிகவும் அருவருக்கத் தக்கதே ஆகும்.

**20. மால்ஆயவர் அவர்அன்றி மாசும்அற்றார் மாண்இழையார்**
**கோலாக லங்களையும் ஒன்றாகக் கொள்ளுவரோ.**

உலக மயக்கம் உற்றவர்களே அல்லாமல், காமம், வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றம் அற்ற ஞானிகள் பெண்களுடைய ஆடை ஆபரண அலங்காரங்ளைக் கண்டாலும், அதனை ஒரு பொருளாகக் கருதமாட்டார்கள்.

**21. நரம்புஎலும்பு மூளைதசை நவைதருதோ லால்பொதிந்த**
**குரம்பையினைக் கற்றோரும் கொண்டாடல் என்கொண்டோ.**

உடலைப் பிணித்து இருக்கும் நரம்பு, எலும்பு, மூளை, தசை ஆகிய இவற்றைக் குற்றமான தோல் கொண்டு மறைக்கப் பட்ட உடல் என்ற கூட்டினை, அறிவு நூலன்றிக் கருவி நூல் கற்றவரும் போற்றிப் புகழ்வது என்ன கருதியோ?

**22. தசைஅ றாதமு கத்தை வந்துஎழு**
**சந்ர மண்டலம் என்பரே**
**வசைஅ றாமயிர் தன்னை யும்சூழல்**
**மங்குல் என்றும திப்பரே.**

தசையோடு கூடிய முகத்தைப் பார்த்து, இப்பொழுது தோன்றிய முழுநிலவு என்று சொல்லுவர். எண்ணெய்ச் சிக்கல், பேன் முதலிய குற்றங்கள் நீங்காத தலைமயிரைக் கரிய மேகம் என்று சொல்லுவார்கள்.

**23. கற்க நாறிம ணந்த குங்கும**
**களப வண்டலும் அளவுஇலாத்**
**துற்க நாறுதல் கண்டுஇ ருந்தும்சு**
**கந்தம் என்றுது திப்பரே.**

மிகவும் மணம் பொருந்திய குங்குமக் களபம் உடலில் பூசி இருந்த போதிலும், அளவிலாத துர்நாற்றம் வீசுவது கண்டும், அவற்றில் நறுமணம் உள்ளது என்று கூறி வணங்குவர்.

**24.** **பீளை ஆகிய கண்க ளைச்சில**
**பிணைகள் என்றுபி தற்றியே**
**சூளை யாரையும் ஒன்றுள னச்சிலர்**
**சொல்லு வார்அவர் புல்லரே.**

பீளை வடியும் கண்களைச் சிலர், மானின் கண்களெனப் பிதற்றுவர். நாடே அறியாது காட்டிலே வாழ்ந்த கலைக் கோட்டு முனியும், தொண்டரடிப் பொடியும் தன வசமாக மயக்கிய பெண்களையும் ஒரு பொருளாகச் சிலர் புகழ்ந்து பேசுவார். அவர்கள் அற்பரே.

**25.** **மெய்ம்மை யேகொடி எனது வேள்கொடி**
**மீன்வி டும்படை மாதரார்**
**தம்மை யேஎனது அவர்த மைத்துணி**
**செய்த தைர்ய சக்ரமே.**

சத்தியமே எனது கொடி. மன்மதன் கொடியோ மீன்கொடி. அக்காமன் செலுத்தும் படைகளோ பெண்கள். அப்பெண்களைச் சேதித்த என்னுடைய மனத்திடம் என்கின்ற சக்கராயுதம்.

**26.** **பாவை மார்உடல் பைம றிப்பதொர்**
**பார்வை யில்பொடி பட்டுஅறும்**
**பூவை மார்பொடி ஆக வேபொடி**
**ஆகி வேள்உயிர் போகுமே.**

பையைத் திருப்பிப் பார்ப்பது போல் பார்த்தால் பெண்களது உடல் துகளாகி விடும். பெண்கள் உடல் அழிவு அடைந்தால் மன்மதனுக்கும் அழிவு உண்டு என்பதில் ஐயம் இல்லை.

**27.** **இறைவன் முன்புஉற நிருப கன்தொழுது**
**இவைவி ளம்பிய எல்லையில்**
**பொறைவ லஞ்செய்து தொழுது உறும்பகை**
**பொடிப டும்படி புகலுமே.**

சொரூபானந்தராகிய ஞானவேந்தர் முன்னிலையில் தளபதியான நிருபகன் வணங்கி, இதுவரை தன் வலிமையைக் கூறி முடித்த பின்னர் பொறுமை எனப்படும் தளபதி எழுந்து, வணங்கி வலம் வந்து உண்டான பகைவர்கள் அணு அணுவாகச் சிதைந்து போகும் என்று கூறுகின்றான்.

**28.** **மாசுஆய நாவுடையார் வாய்திறந்தால் அவர்களுடன்**
**பேசாமல் இருந்துவிடும் அதுஅன்றோ பெருந்தகைமை.**

இழிவான வன்சொல் கூறும் நாவுடையவர்கள், வாய் திறந்து பேசத் தொடங்கினால், அவர்களுடன் ஒன்றும் பேசாமல் இருப்பதுவே பெரியோர் கூறும் பெருந்தன்மை.

**29.** **வைதாரை வாழ்த்தினர்போல் மதித்துஎன்றும் அறக்கொடுமை**
**செய்தாரை அறியாத செயல் அன்றோ செல்ஆதல்,**

இழிவான சொற்களைக் கூறி நிந்தனையாய்ப் பேசி ஏசுபவர்களையும், வாழ்த்துவது போல் மதித்து, தம்மைத் துதி செய்கின்றவர்களையும், அவர்கள் நமக்குச் செய்த தாங்கொணாத கொடுமைகள் பற்றி எண்ணாமலும் இருப்பது அல்லவா பெரியோர்களின் செயல்.

**30.** **பொதுஅதுவாய் நிறைந்தபதம் பொதுவேபோல் யாவர்க்கும்**
**அதுஅதுவாய் இருந்துவிடும் அதுஅன்றோ அவிவேகம்**

முழுமை பெற்ற யாவரும் எந்நாட்டவர், எக்குலத்தவர் எம்மதத்தவர் என்று கருதாமல் அனைவருக்கும் பொதுவாய் இருக்கும் அதுவல்லவா பெரியோர்களின் செயற்கரிய செயல்.

**31.** **இகழ்ஆ வதுஏது புகழ்ஏது தேரில்**
**இவையாவும் ஆவது உரையே**
**அகழ்வார்கள் யாவர் அருள்வார்கள் யாவர்**
**அனுபோகம் ஆகும் அவையே.**

இகழ்ச்சி என்பது எது? புகழ்ச்சி என்பது யாது? என ஆராய்ந்து பார்க்கும் இடத்தில் இவைகள் எல்லாம் வாய்ச்சொல் மாத்திரமே ஆகும். நம்மைத் துன்பத்தில் ஆழ்த்துபவர்கள் யாவர்? நமக்கு அருள் செய்பவர்கள் யாவர்? தாமே தமக்குச் சுற்றமும், தாமே தமக்குப் பகையும் என்றபடி தமது குண அனுபவங்களே இவை எல்லாம்.

**32.** **எரிஆன கோபம் எழுபோதில் ஆறி**
**இனிதுஆய கூறி எதிரே**
**சிரியாது இரார்கள் பெரியோர்கள் சீற**
**நினைவார்கள் வேறு சிலரே.**

நெருப்பைப் போலக் கோபம் வந்த பொழுது, அக்கோபம் வந்தவர்க்கு நாம் இனிய ஆறுதல் மொழிகளைக் கூறி இனிய சொற்களைச் சொல்வோமானால், அதனைக் கேட்ட சான்றோர் மகிழ்வுடன் சிரிக்காமல் இருக்க மாட்டார்கள். இன்னும் சிலர் முடியாத காரணத்தால் இவ்வாறு இரங்கி வருகின்றார்களோ எனக் கோபமாய் எண்ணுவார்கள்.

**33. முகுளி தம்பெருகு முகம்ஒ ழிந்துவிட**
**முறுவல் கொண்டுமுகம் மலர்வனே**
**வெகுளி தங்குமன வெரிகெ டும்பரிசு**
**மிகவும் அங்குஇனிமை விளைவனே.**

முகம் சுருங்கப் பொங்கி எழுந்த கோபம் ஆனது நீங்கிய உடனே, முகம் புன்சிரிப்புடன் மலர்ச்சி அடையும். மனத்தில் தங்கிய கோப வெந்தீ நீங்கிய போது கிடைப்பது மிகுதியான இன்பமே.

**34. மொழி தரும்கனலும் அவிய நின்றுஅமிர்த**
**மொழிஎ னும்தடினி பொழிவனே**
**அழித ரும்படிஎன் உடலில் வந்தனஎன்**
**அனுப வங்கள்என அயில்வனே.**

மிக் கொடிய வெம்மை உடைய கோபத்தீ தணியும் பொருட்டு நின்று, அழிவில்லாத இன்சொல் என்னும் அமுதம் பெரிய மழையாய்ப் பொழிதலால் அவை என் உடலில் உண்டான அனுபவ நெருப்பை உண்டுவிடும் தன்மையுடையன.

**35. மிகையாஎன் பொறைப்படைக்கு**
**விருந்துஆக்கி விடுகின்றேன்.**
**பகைபாவம் கொடுமைகொலை**
**படைஉடைய கோபனையே.**

மிகுதியான பொறுமை என்னும் என் படைக்கு, பகை, பாவம், கொடுமை, கொலை, விரோதம் ஆகிய பஞ்சமா பாதங்கள் என்னும் ஐவகைச் சேனைகளையும் கொண்டுள்ள கோபன் என்பவனை விருந்தாக்கி விடுகின்றேன்.

**36. பொறைபெரிதும் இவைஓதப்**
**புகழ்பெரிய சந்தோடன்**

**இறைஉடையான் அடிஏத்தி**
**நிறைவுடன்நின்று அறைவுறுமே.**

பொறுமை என்னும் பெரிய தளபதி, தன்னைப் பெரிதாக எண்ணிக் கூறிய பின்னர். பெரும்படையுடைய மகிழ்ச்சி என்ற தளபதி மனவுறுதி கொண்ட ஞான வேந்தனது அடி வணங்கி முழுமையான செய்திகளைச் சொல்லத் தொடங்கினான்.

**37. என்றும் பொருவரிய இன்பப் பொருள்உடையார்**
**பொன்றும் பொருளும் பொருளாகப் போற்றுவரோ.**

என்றும் அழியாத பேரின்பப் பொருளுடையவர்கள் மின்னலுக்குச் சமமாகத் தோன்றி மறையும் நிலையற்ற பொருளையும் பொருளாகப் போற்றுவரோ?

**38. வாழ்நாள் ஒழிந்தாலும் வாய்விண்டு தாம்வேண்ட**
**நாணாது ஒழிகுவரோ நன்றுஆய நாவுடையார்.**

நல் வாக்குக் கூறும் நாவுடையவர்கள், தன்னுயிர் போகக் கூடியதான துன்பம் வரினும், வாய் திறந்து பிறரிடம் ஒரு பொருளை வேண்டும் என்று வாய் விட்டுக் கேட்பதற்கு வெட்கம் அடைவார்கள் அல்லவா?

**39. உளம்படு பேராசை நோய்கூர மேன்மேல்**
**உழன்றவர் வாழாத வாகாண லாமே**
**வளம்பட வாழ்வோம்எ னாதார்கள் யாரே**
**வருந்தினும் வாராது வாராது தானே.**

மனத்திலுள்ள பேராசை என்னும் வியாதியைச் சொல்லும் இடத்து, தனக்குப் போதிய செல்வம் இருந்தும் மேன்மேலும் ஆசை கொண்டு அலைபவர்களை, மேலும் பொருள் தேடி உயிர் இழந்த பலரை நாம் காணலாம். எல்லா வளங்களுடனும் வாழ வேண்டும் என்று எண்ணாதவர் யார்? தனக்கு வர வேண்டியவை தானே வரும். வருந்தி வேண்டினாலும் வாராதது வாராது.

**40. புலன்தலை கொண்டுஏறு புன்போகம் மேன்மேல்**
**புணர்ந்திட உண்டாகி வந்தாலும் மாறா**
**வலந்தலை கண்டுஆசை ஒன்றோடுஉ றாதே**
**அறிந்தவர் சந்தோடம் வங்கூடிரி னாரே**

புலன்கள் மூலமாக நல்லதென ஏற்றுக் கொள்ளப்பட்ட அற்பமான போகப் பொருள்கள், அதிகமாகத் தனக்கு அனுபவிக்கக் கிடைத்தாலும், ஆறுதல் அடையாது துன்பப் படும் தனவந்தர்களை பார்த்து, எவ்விதமான பொருளுக்கும் ஆசைப் படாதவர் அவற்றை அறிந்த அறிஞர்கள் நிலைத்தது எதுவென அறிந்து பேரின்பத்தை அடைவார்கள்.

**41. இல்லாத பொழுதுஇன்பம் இதுஎன்று பிறர்பால்**
**செல்லாத செலவுஎன்ப செலவுஆய செலவே.**

இன்பம் தரும் பொருள்கள் ஒன்றும் தம்மிடம் இல்லாத காலத்தில், இதுவே இன்பம் என்று பிறர்பால் சென்று இரக்காது வாழ்கின்ற வாழ்வே சிறந்தது.

**42. படைத்தவன்இ றுந்திசைப டைத்தபொருள் எங்கே**
**எடுத்தவன்வி ழில்சுமைவி ழாமலும்இ ராதே.**

அவ்வுலகை உண்டாக்கிய நான்முகனே ஊழிக் காலத்தில் அழிவான் என்றால், அவனால் உண்டாக்கப் பட்ட எப்பொருள்தான் அழியாமல் இருக்கும்? சுமை தூக்கிச் செல்பவன் கால்இடறி வீழ்வான் எனில் அவன் எடுத்துச் சென்ற சுமையும் விழாமல் இராதே.

**43. ஆம்ஆகும் வழியால்அ ருந்தித்து அடையல்**
**தாம்மாய்தல் பொருள்மாய்தல் தவிராது பிரிவே.**

தனக்கு ஆகக் கூடிய நியாய வழியில் பொருள் சேர்த்து அனுபவிக்கும்கால், பழவினையே பிரித்துவிடும் என்பது உறுதியாகும். எவ்வாறெனில் ஒன்று தான் சாவான் அல்லது பொருள் போகும்.

**44. வாதுஆகி நுகர்கின்ற வயிறுஉள்ளது ஒருசாண்**
**ஏதால்இது அமையாதுஇ துஎன்எனஇது என்னே.**

எனக்கு முன்னம் இடுக, இன்னும் இடுக என்று வாது பேசி வாங்கி உண்ணும் வயிறு ஒரு சாணே. அதற்கு மேல் இல்லை. இப்பசி எந்த உணவாலும் தீராது. இது மிகவும் வியப்பே. வியப்பே.

45. **ஏசாத பற்றுஇன்மை எனும்ஆயு தத்தால்**
**ஆசாப சாசோடு மடலோபன் இறுமே.**

குற்றம் இல்லாத ஆசை என்னும் ஆயுதத்தால் பேராசை என்னும் பெரும் பேயோடு, மிக வலிமை பொருந்திய லோபன் என்பவன் அழிந்து விடுவான்.

46. **சந்தோ டன்இவைஇவை சாற்றவே**
**அந்தோ என்றுஅருளும் அளவிலே.**

வலிமை பொருந்திய சந்தோடன் என்பவன் இவை இவை இப்படி இப்படி அழிப்பேன் என்று கூறிய அளவில், இது என்ன ஓர் ஆச்சரியம் என்று கூறிய அளவிலே.

47. **விவகா ரபராமுகன் மேவரும்**
**பவகா லிபதம்பணிந்து ஓதுமே.**

விவகாரத்தை ஒரு பொருளாய் மதித்து மனத்தில் கொள்ளாதவன், மேல் வருகின்ற எம் பிறவியை அழிப்பவனது திருவடி பணிந்து தன் கருத்தை எடுத்துக் கூறுகின்றான்.

48. **அத்தனோடு அன்னைக்கு அன்புசெய் கின்றார்.**
**அளவுஇல் பிறப்புற்று அவைஅவை தோறும்**
**எத்தனை தாயும் தந்தையும் உற்றர்**
**இத்தனை அன்றோ இவர்களும் இங்கே**

தந்தைக்கும், தாய்க்கும் அன்போடு பணி செய்பவர்கள் அளவிலாத பிறப்படைந்து, அந்தந்தப் பிறவிகள் தோறும், எத்தனை தாய் தந்தையர்களை அடைந்தார்கள்? அவர்களும் இதுபோல் பிறந்தவர்களே.

49 . **சாலஉ திக்கும்பு ழுஉடல் தன்னில்**
**தகவுஇல்ம லத்தோடு ஒழுகும்உ டம்பே**
**போலஉ திக்கும்பு ழுவினை என்னே**
**புத்திரன் என்றே புந்திசெய் தாரே.**

மிகுதியும் தோன்றும் புழுக்கள் நிறைந்த தோற்பை என்னும் இவ்வுடலில், தகுதி இல்லாத மலமே ஒழுகிக்கொண்டிருக்கும் உடலைப் போன்றே தோன்றும் மனித உடல் என்னும் பெரும்புழுவை நம் பிள்ளை என்று கருதுகின்றார்களே.

**50.** **வந்தவ ழிக்கண் வந்திலர் போகும்**
**வழியினும் வருவார் இலர்இடை வழியார்**
**தந்தைம கத்தாய் தம்மொடு வந்தார்**
**தாரமும் உற்றார் தாமும்ள லாமே.**

தந்தையும், பிள்ளையும், தாயும், தன் உடன் பிறந்தார்களும், மனைவியும், உறவினர்களும் நாம் தோன்றும் போது நம்முடன் தோன்றவில்லை. நாம் இந்த உடலை விட்டு நீங்கும்போதாவது வருவார்களா என்றால் வரமாட்டார்கள். அவர்கள் எல்லாம் வழியில் சந்திக்கும் வழிப் போக்கர் போன்றவரே.

**51.** **அமரும்உ டம்போடு அழிதுயர் வந்தே**
**அலம்வரு போது அங்கு அனுபவி யாதே**
**தமர்கள்ப கிர்ந்தார் உளர்என உண்டோ**
**தம்உறவு ஆவார் தாம்அலது இன்றே.**

நம்மோடு பொருந்திய உடல் கொடிய நோய் வாய்ப்பட்டு அழியும் போது துக்கம் தாங்க இயலாது வருந்தும் சமயத்தில், அங்கு அத்துக்கத்தை நாம் அனுபவியாமல், அதனை நம் சுற்றத்தார் பங்கிட்டுக் கொண்டார்கள் என்று சொல்வது எங்கேனும் உண்டோ? தமக்கு உறவு தமது சுற்றமே.

**52.** **ஒழிந்தன வேறுஅற ஒன்றுஉடல் தானும்**
**அழிந்தது தம்உடன் ஆம்உறவு ஆரே.**

பொருந்திய உடலானது மூலத்தோடு நீங்குமே ஆனால் தம்மோடு பொருந்திய சுற்றத்தார் யார்?

**53.** **சுற்றமொடு உற்றது வந்துவம் எல்லாம்**
**மற்றவர் தம்உடல் நற்றவர் தாமே.**

பொருந்திய சுற்றத்தோடு உண்டான இன்ப துன்பம், லாப நட்டம், மான அவமானம் ஆகியவை அனைத்தும் பொருந்திய அவைகள் எல்லாம் தம்மைச் சார்ந்தவையே.

**54.** **கதறிய ஆழி ஆறி ஆடுதல்**
**கருதினர் யாவர் தாமி யாவையும்**

**உதறிஅ றாத போது நாள்தொறும்**
**ஒழுகவி டாதுஅவ் ஆர வாரமே.**

ஒலிக்கின்ற கடலில் அலை இல்லாத போது நீராடுதல் வேண்டும் என்று கருதினவர் யாவர்? ஒலி முதலியன நீங்காதபோது அங்கு தோன்றும் ஆரவாரங்கள் அங்கு நம்மைச் செல்ல விடாது.

**55.** **கழியநி லாத போது சேறுஅது**
**கழுவியும் இலாபம் ஏது யாவையும்**
**ஒழியநி லாத போது மாசுஅற**
**உதறஒ யாது பாசம் மூடுமே**

நடக்கும் வழி பாக்கி இருக்கும் போது, காலில் உள்ள சேற்றைக் கழுவிச் சுத்தம் செய்வதால் என்ன பயன்? அகப்பற்று, புறப்பற்று முதலியவை நீங்காத காலத்தில், ஆசையைக் குற்றமற நீக்க இயலாது. அது தன்னை மறைக்கும்.

**56.** **உறவாடு பந்தங்கள் எல்லாம்உ திர்ப்பன்**
**துறவுஅன்று வச்ராயு தத்தில்து ணித்தே.**

பற்றின்மை என்னும் மந்திர வாளால், பந்த பாசங்கள் என்னும் ஆசைகள் அனைத்தையும் வெட்டிச் சிதற அடிப்பேன்.

**57.** **வடிவுஅற்ற கோன்மைந்தன் முன்நின்று மறைநா**
**முடிவுஅற்ற பலகோடி மொழியாத முன்னே**

உருவம் அற்ற அரசிளங் குமரன் எதிரிருந்து முடிவிலாத வேதங்களின் அநேகம் கோடி உபநிடதங்கள் கூறா முன்னரே உள்ளவன் சுயம்பிரகாசன்.

**58.** **தத்தம்தொ ழில்கொண்டு தாழ்வின்மை இன்னே**
**முத்தன்பெ ரும்சேனை எல்லாம்ஒ ழிந்தே.**

ஞான வேந்தனது பெரும் படைகள் அனைத்தும் அவரவர் தொழில்களைச் செய்து, தனது மேலான வலிமைகளை இப்பொழுது எடுத்து இயம்பினார்கள்.

## ஞான வினோதன் படைச்செருக்கு நிறைவுற்றது

# 20. ஞான வேந்தன் படையெழுச்சி

1. **தம்சேனை கண்டுஅன்பு தாம்உற்றுஇவ் வாறே**
**நஞ்சேஅ னான்மேல் நடக்கின்ற பொழுதே.**

ஞான வேந்தராகிய சொரூபானந்தர் தம் படைகளை நோக்கி, கருணை கொண்டு நஞ்சு போன்றவன் ஆகிய, அந்த அஞ்ஞ வேந்தனுடன் போரிடத் தமது படைகளுடன் செல்கின்ற நேரத்தில்,

2. **வித்தக வேதங்க ளேவாசி யாவே**
**மெய்த்திறன் ஆய்நின்றது ஓர்பாகன் ஆவே**
**தத்துவம் ஆகின்ற தேர்ஏறி னாரே**
**தற்சொரு பானந்தர் தாள்சூடி னாரே.**

திறமை வாய்ந்த வேதங்கள் நான்கும் குதிரைகள் ஆகவும், மெய்யான தத்துவம் ஒப்பற்ற தேர்ப் பாகன் ஆகவும் மெய்ஞ்ஞானத் தேர் ஏறிச் சென்றார். பின் சொரூபானந்தரின் திருவடிகளைத் தலையில் சூடிக் கொண்டனர்.

3. **வாதகர் ஓடினும் ஆதர வோடு ஓர்கால்**
**வாசிஇ லாவாசி யேவாசி தான்ஆம்**
**போதமே போதகம் ஆம்தேர்வு தேர்தாம்**
**போல்பவ ரேவீரர் ஏதுஓதும் ஆறே.**

பகைவர் ஓடிய போது அன்புடன் ஒருசமயம், குற்றம் இல்லாத பிராணா யாமம் என்னும் குதிரையே குதிரையாம். ஞானமே யானைகளாம். தெளிந்த நிலையே தேர்களாம். அகம் ஒடுங்கிய தம் போன்ற வீராதி வீரர்களை என்னவென்று எடுத்து கூறுவது.

4. **தான்அது ஏதும்இலன் ஆதி ஆகவல்**
**தம்பி ரானுடைய தானைமால்**
**யானை தேர்புரவி அஞ்ஞ மன்னனது**
**மாய மாபுரம் அணைந்தே.**

சச்சிதானந்த வடிவானவன், நாம வடிவுள்ள பொருள்கள் ஆகியும், அது அல்லாதவனாகியும் விளங்கும் அடியவர்கள் தலைவன் ஆன ஞான வேந்தனின் மிகப் பெரிய சேனைக் கூட்டங்கள் மூன்று படைகளுடன் சென்று, அஞ்ஞவேந்தனின் மாயாபுரியைச் சூழ்ந்து கொண்டன.

**5. புறம்பு உறாதபடி சூழ நம்படைஞர்**
**போது கென்றுஅருளு போதில்ஓர்**
**அறம்பு காதபடை வீடு சூழவும்**
**அடங்க வும்படைஞர் ஆனதே.**

நம் படைஞர்களே எதிரி புறமுதுகிட்டு ஓடாத வண்ணம் மாயாபுரத்தை வளைத்துக் கொள்ளுங்கள் என்று சொன்ன அளவில் ஓர் அறம் கூட உட்செல்லாத பாசறையைச் சுற்றிலுமுள்ள அனைத்து இடங்களையும் ஞான வேற்றதனின் படைகள் சூழ்ந்து கொண்டன.

**6. முகுந்தன் அன்றுஅரனும் அன்று நாலுதிசை**
**முகனும் அன்றுஅவர்தம் மூலமே**
**புகுந்தது என்றுஇகல் புறம் கண்டவர்**
**அடங்க உள்புகுது போதிலே.**

திருமாலும் அல்ல, சிவபெருமானும் அல்ல, திசைமுகனும் அல்ல, அவர்களுக்கு எல்லாம் ஆதியாய் உள்ள துரிய வடிவமே இங்கு எழுந்தருளி வந்தது என எண்ணி, அவர்களது வீரத் திறமறிந்து அனைவரும் உள் முகமாகச் செல்லும் சமயத்தில்.

**7. மருவி எங்கும்உற நின்றபொருள் இன்று புரவிமேல்**
**வடிவு கொண்டுவரு கின்றதுஎன வந்து மொழிவார்**
**அருவரு என்றுமொழி கின்றபொருள் இங்கு வருவதற்கு**
**அடிஎன் என்றுசிலர் நின்றுநகை கொண்டு விடுவார்.**

எங்கும் நீக்கமற நிறைந்திருக்கின்ற பரம்பொருளே இன்று பூமியின் கண்ணே ஞான வேந்தனாக வடிவு கொண்டு வந்துள்ளது என்று சொல்வார்கள். உருவம் அற்றது என்று வேதங்கள் சொல்கின்ற பொருளே இவ்விடம் எழுந்தருளி வந்தமைக்குக் காரணம் என்ன என்று ஒரு சிலர் சிரித்தவாறு சொல்வர்.

8. **சமயம் என்பனவும் ஒன்றும்இலது என்று மொழிவார்**
**தவமு டிந்ததுமு டிந்ததுஎன நின்று சமைவார்**
**அமையும் நம்துழனி என்றுஅமைவு வந்து விடுவார்**
**அறிவி லன்புரம்அ ழிந்ததுஇனி என்றுஅ யருவார்.**

சமயம் என்று ஒன்று உண்டு என்றால் ஒன்றும் இல்லை என்று கூறுவார்கள். ▯ தவம் எல்லாம் முடிந்தது என்று அமைதி அடைவார்கள். ஆரவாரங்கள் இனிப் போது என்று சாந்தமாய் இருப்பார்கள். அறிவற்ற அஞ்ஞ வேந்தனது நகரம் இருந்த இடமான தெரியாமல் அழிந்து போய்விடும் என இரக்கத்தால் அயருவார்கள்.

9. **குடிகெ டும்படிபு குந்ததுஉணர்வு என்று தளர்வார்**
**குலம்அ டங்கலும்மு டிந்ததுஎன நின்று குலைவார்**
**முடிவில் வந்துஉறுவது ஒன்றுஎன மொழிந்த கணியார்**
**மொழியும் இன்றுதலை வந்ததுஎன நின்று மொழிவார்.**

நம் பிழைப்பு நீங்கும்படி விவேகம் உண்டானது என்று கூறித் தளர்வா குலமனைத்தும் ஒழிந்தது என நிலை குலைந்து மிகக் கலங்குவர். யுக முடிவில் எல்லா ஒன்று தான் என்று சோதிடர் கூறிய சொல்லும் இப்பொழுது முடிவாக வந்து சேர்ந்த என்று கூறுவர்.

10. **பறைவது என்கொல்பல இங்குஇவர்கள் நின்று கெடுவீர்**
**பவம்ஒ ழிந்துவரு கின்றபடி கண்டும் இனம்நீர்**
**இறைவன் அன்றுஎனஇ யம்புவதுஎன் என்று மொழிவார்**
**இருவர் தங்களில் இயம்புவது அடங்க இவையே.**

இவர்கள் இங்கிருந்து பல பேசி என்னபயன்? இப்பொழுது வீணாகக் கெட்( போவீர்கள். பிறப்பு நீங்கி வருவதை அறிந்து இருந்தும், இன்னும் நீங்கள் இறைவ இல்லை என்று இயம்புவது யாது காரணம் பற்றி? இவ்வாறு இருதிறத்தவரும் சொல்வ இதுவே.

## ஞான வேந்தன் படையெழுச்சி நிறைவுற்றது

## 21. அஞ்ஞ வேந்தன் படையெழுச்சி

**விடர்வி ளங்கு தானை அஞ்ஞ**
**வேந்த னுக்கு மாந்தர்போய்ச்**
**சுடர்வி ளங்கு ஞான சேனை**
**சூழ்ந்தது என்று சொல்லவே.**

காளைப் பருவம் உடையவர்கள் நிறைந்து காணப்படும் சேனைகளுடைய அஞ்ஞ வேந்தனிடம் மக்கள் சென்று, ஒளி பொருந்திய ஞான வேந்தனது படைகள் நம் நகரை வளைத்துக் கொண்டன என்று சொன்ன மாத்திரத்தில்,

2. **மூவர் சேனை என்கண் முன்பு**
**நிற்க வில்லை மொய்ம்பினோடு**
**யாவர் சேனை என்னை வெல்ல**
**இங்கு வந்தது என்னவே.**

நான்முகன், திருமால், சிவன் என்ற மும்மூர்த்திகளின் சேனைகளும் என் கண்முன் நில்லாமல் ஒடி மறைந்தன. அப்படி இருக்கும் என்முன்னே போரிட்டு என்னை வெல்லும் வலிமையுடன் என்னை அழிக்க வந்ததது யாவர் படை என்று வினவ.

3. **யாவர் சேனை என்ன யாம்அ**
**றிந்தது இல்லை எங்கணும்**
**தேவ தேவ தேவன் என்ற**
**சின்ன ஓசை என்னவே.**

இவை எவருடைய படைகள் என்று நாம் அறிந்தோம் இல்லை. எவ்விடங்களிலும் தேவர்க்கு எல்லாம் தேவனே என்னும் திருச்சின்னம் பிடிக்கும் ஒலியை மட்டுமே அறிந்தோம் என்றிட,

4. **ஏக முதலோன்வருவன் ஆகில்அமர் செய்யஅவன்**
**என்கண்எதிர் நிற்க வில்லையே**

**தேகம்உள னேல்அவனை மாரன்முதல் வீரர்படை**
**சிந்துவார்கள் சிந்தி விடவே.**

மும்மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்ட முழுமுதல் ஆகிய ஒருவன் என் முன்னே வந்து போர் செய்ய எதிர் நிற்க மாட்டான். அவன் உடலோடு கூடி இருப்பான் எனில், அவனை என்னுடைய காமன் முதலான படைத்தலைவர்கள் அழிந்து போகச் சிதறடிப்பர்.

5. **வானவர்கள் தானவர்கள் மானவர்கள்**
**ஆனவரின் யாவர்மறை கூறுபரிசே**
**ஞானபர ராகிமதர் ஆசான்முதல்**
**ஆனஇரு நால்வரையும் வென்றஅவரே.**

தேவர்களிலும், அசுரர்களிலும் மக்களாய்ப் பிறந்தவர்களுக்கு உள்ளே, வேதம் சொன்னவாறு யார்தான் ஞானவான்கள் ஆகிக் காமன் முதலான எனது சேனாபதிகள் எண்மரை இதுநாள் வரை வென்றிருக்கிறார்கள்?

6. **ஓதும்உடல் இந்திரியம் உள்ளுமனம் புந்திஉயிர்**
**ஓங்கியஅ கங்கரமும் இங்கு**
**யாதுஉறு சங்கமெனும் ஏழ்அணியின் ஒன்றுவிடு**
**விக்கில்அ வன்இங்கு இறைவனே.**

உடலும், மெய், வாய், கண், மூக்கு, செவி முதலான ஐந்து புறக் கருவிகளும், மனமும், ஆதாரமான உயிரும் ஆகிய இவை யாவும் ஒன்று சேர்ந்த கூட்டுறவு என்று சொல்லும்படியாய் அணி வகுக்கப் பட்ட ஏழு சேனைகளில் ஒன்றையாவது வென்று விட்டால் அவன் கடவுளே.

7. **ஆண்தகையன் ஆகின்எனை அஞ்சுதல்ஒ ழிந்துவரும்**
**அவனை எதிர்கண் டளவினால்**
**மீண்டிடுவன் ஆகில்எனை அஞ்ஞஅரசு என்றுஅழையேல்**
**வேறுபெ யர்இட்டு அழையுமே.**

தகுதியுடைய ஆண்களாக இருப்பார்களே ஆனால் எனக்கு அஞ்சாமல் வருகின்ற பகைவனை நான் என்முன் கண்ட மாத்திரத்தில் திரும்பினால் என்னை யாரும் அஞ்ஞ வேந்தனென அழைக்க வேண்டாம். வேறு பெயரிட்டு அழையுங்கள்.

**9. என்றுபல பாஷைகள்கொ டுத்துமதன் ஆதிபடை**
**ஏவிஇறை வன்கண் எதிரே**
**நின்றுபொர நேர்அறிவின் நெஞ்சின்நிசி கோடிஇருள்**
**நின்றதுஎனல் ஆகும் நிலையே.**

மேற் கூறிய வண்ணம் அநேக சபதம் செய்து ஞான வேந்தனது முன்னிலையில் மன்மதன் ஆகிய படைகளைச் செலுத்த அஞ்ஞ வேந்தன் விவேகம் இன்றிப் போர் செய்யும் நிலை எப்படி உள்ளதெனில் ஒரு கோடி இரவில் அநேகம் கோடி அமாவாசை இருட்டைப் போல் இருந்தது.

**அஞ்ஞ வேந்தன் படையெழுச்சி நிறைவுற்றது**

# 22. தொந்த யுத்தம்

1. **வேத கீதன் படையுடன் வெஞ்சினப்**
**போத கீனன்ப டைபொரப் போதவே.**

வேத கீதனாகிய ஞான வேந்தனது படையுடன் இன்பத்தால் பலவீனமுற்ற அஞ்ஞன் படை போரிடச் சென்றது.

2. **துன்னிட் டேகன போதகம் தோன்றலும்**
**வென்னிட்டு ஏகின ஐம்புல வேழமே.**

பூரண ஞானம் என்னும் யானைகள் தோன்றவும், மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்புல யானைகளும் புறமுதுகு காட்டியோடின.

3. **இரத மானர தத்துஎதிர் நின்றில**
**விரத மானவி டயர தங்களே.**

இனிய சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தம் என்னும் தேர்கள் சொரூபானந்தமாய் இருக்கும் தேர்களுக்கு முன் நிற்க மாட்டாமல் ஓடின.

4. **புரணப் பாய்பரி தோன்றப்பு ரத்துள**
**கரணப் பாய்பரி யாவும்க ரந்தவே.**

அறிவு வடிவுடன் பாய்ந்து செல்லும் குதிரைகள் எழுந்தவுடன் புறக்கரணங்கள் என்னும் குதிரைகள் ஓடி மறைந்தன.

5. **அறிவன்பெ ருஞ்சேனை கண்காண எதிரே**
**அஞ்ஞன்கொ டுஞ்சேனை அஞ்சாமல் எழவோ**
**எறிவெங்க திர்ச்செல்வர் எத்திக்கும் எழவே**
**இரியாமல் இருள்நிற்கில் இதுநிற்கும் எதிரே.**

ஞான வேந்தனின் பெரும் சேனைகளின் முன் நேர் நின்ற அஞ்ஞ வேந்தனின் படைகள் பயமின்றி எழுந்திருக்க மாட்டா. எட்டுத் திசைகளிலும் வெப்பத்துடன் கூடிய

கதிர்களுடன் தோன்றும் சூரிய குமாரர்கள் நீங்காமல் இருட்டு இருக்குமாகில் ஞான வேந்தனது படைகளுக்கு எதிரில் அஞ்ஞ வேந்தனின் படைகள் நிற்கும்.

**6. ஓடல் இன்றிஎதிர் நின்ற வீரர்தமை**
**வீரர்அங் கொருவர் ஒழிவரச்**
**சாடு கென்றருள வீரர் சொல்லுவர்**
**வணங்கி வீரன்இரு தாளிலே.**

தப்பி ஓடிப் போகாத வண்ணம் தமது முன் நிற்கும் அஞ்ஞன் படை வீரர்களில் ஒருவரையும் விட்டு வைக்காமல் அழிப்பீர்களாக என்று ஞான வேந்தன் கட்டளையிட அவர் இருதாள் பணிந்து வீரன் கூறுவான்.

**7. அறிவி லன்படையும் அளவில் நம்படையும்**
**அறிய இன்றிவரும் அறிவுறும்**
**குறியு றும்பரிசை அருளு கென்னஅவர்**
**குறியு றும்பரிசு கூறுமே.**

அஞ்ஞ வேந்தனது சேனைகளும், அளவிலாத நமது சேனைகளும் ஆகிய அவ்விருவர் செயல்களும் அறிந்து கொள்ள இயலாதன. அவர்களை அறிந்து அடையாளம் கண்டு கொண்டும்படியான தன்மையைக் கூறுவோம்.

**8. விண்டு இருந்துஎன்மெய் கண்டு உளோர்தவ**
**வேடம் மேவிஎன் கோடி மாதரைக்**
**கொண்டுஇ ருந்துஎன்அவர் செய்த தேதவம்**
**கொண்டதே கோலம் ஆகுமால்.**

சிவபரம் பொருளான வேறுபாடற்ற வடிவத்தைத் தன் ஆன்ம வடிவமாக அறிந்த பெரியோர்கள் முனிவர்களைப் போல இருந்தால்தான் என்ன? தண்டு கமண்டலத்துடன் சடை தரித்துத் தவக்கோலம் கொண்டிருந்தால்தான் என்ன? அவர்களின் செய்கை அனைத்தும் தவமே ஆகும். அத்தவ வேடமே சாலச் சிறந்த வடிவம் ஆகும்.

**9. நனவுநிலை போல அறிவும்அறி வார்கள்**
**நவையும் அறிவார்கள் நலம்உளோர்**

**கனவுநிலை போல எதுவும்அறி யார்கள்**
**அதுவும்அறி யார்கள் கயவரே.**

அறிவுடையோர் நனவு நிலையில் எல்லாவற்றையும் அறிவதைப் போலவே, கனவு நிலையிலும் அறிவார்கள். அறியாத மக்கள் கனவில் கண்டதை நனவில் காண இயலார்.

10. **கற்றவரும் மற்றவரும் ஒருவர் செய்யும்**
**கடுமையினில் கலுழும்வகை ஒத்தும் ஒவ்வார்**
**செற்றவர்மேல் உறும்செயிர்க்கு நோவர் நல்லோர்**
**தீயுடன்மேல் உறும்செயிர்க்கு நோவர் தீயோர்.**

கற்க வேண்டியவற்றைக் கற்றவரும், அவ்வாறு கல்லாத மற்றவரும் தன்னைத் துன்புறுத்தி அதனால் ஒருவன் அடைகின்ற துன்பம் கண்டு வருந்துவார்கள். தீயைப் போல மேலும் சினத்துடன் துன்பம் செய்ய வருபவரைக் கண்டு வருந்துவர் நல்லோர். தீயோர் அதனால் தமக்குத் துன்பம்வரின் வருந்துவர்.

11. **உள்ளம்அழிந்து உகும்அன்பர்க்கு அன்றி ஓரா**
**உலகர்திறத் தினும்உண்டுஅங்கு ஒவ்வார் மாதர்**
**கள்விழிக்கு அழிந்துஉகுவார் அறியார் ஈசன்**
**கலந்தவிழிக்கு அழிந்துஉகுவார் கவலை அற்றோர்.**

மனங்கசிந்து உருகும் தன்மை அன்பர்க்கு அல்லாமல், அறிவற்ற பாமர மக்களிடமும் உள்ளது. அவ்வாறு இருப்பினும் அவர்கள் அன்பர்க்குச் சமம் ஆக மாட்டார். பெண்களின் கள்ளம் பொருந்திய விழிக்கு மயங்கி உருகுவார் ஈசனை அறியார். மேலும் அவ்வாறு உருகி அவர்கள்பால் மயங்கியிருப்போர் கவலையற்றோர்.

12. **அறிவினால் மிகுபவரும் அறிவி லோரும்**
**ஆயுமாறு ஒன்றும்இலர் எனினும் ஒவ்வார்**
**பிறிவிலா மையில் அறியார் பிறவி நீத்தார்**
**பேர்இருளால் ஒன்றுஅறியார் பிறந்து சாவார்.**

அறிவினால் மிகுந்த அறிஞர்களும், அறிவிலாதவர்களும் ஆராய்ந்து பார்க்குங்கால் ஒன்று இல்லாதவராவர் எவ்விதத்திலும். ஒப்புமையாக மாட்டார். பிறப்பை நீக்கிய

பெரியோர்கள் இதுவெலாம் எனது வடிவென்னும் ஒருமைப் பாட்டால் வேறுபாடு காண மாட்டார். பிறந்திறக்கும் தன்மையுடைய அறிவிலார் அறியாமையினால் பிறந்து மீண்டும் அழிவர்.

**13. மகவருடப் பாலான கொங்கை இன்பம்**
**மயக்கமுயக்கு உறும்கணவன் வருடும்போது**
**மிகஉணர்ந்தோர்க் கும்பிறர்க்கும் செயல்கள் பார்த்தால்**
**வேறுஅறினும் பாவகம்தான் வேறு வேறு.**

குழந்தைகள் வருடும் போது பால் சுரந்த மார்பகங்கள் அவர்களது நாயகன் பிடிக்கின்ற காலத்து இன்ப மிகுதியால் புத்தி மயங்க அதிக ஆசை உண்டாகும். இதனை ஆராய்ந்து பார்த்தால் ஞானிகளுக்கும், அஞ்ஞானிகளுக்கும் இச்செயல்கள் வேறற்றதாயினும் ஏற்றுக் கொள்ளும் பாவனைதான் வேறு வேறாக இருக்கும்.

**14. அழுக்கிலவர் செயவேண்டும் தவமும் இல்லை**
**அழுக்குஉடையோர் செய்வதுஇலை ஆத லலே**
**ஒழுக்குஉடைய நல்வினையும் உயர்ந்தோர்க்கு இல்லை**
**ஒழிந்தோர்க்கும் இல்எனினும் ஒவ்வார் ஒவ்வார்.**

உள்ளத்தில் குற்றம் இல்லாத மகான்கள், செய்ய வேண்டிய தவம் வேறு ஒன்றும் இல்லை. மனத்தில் குற்றம் நிறைந்தோர் அது நீங்கத் தவம் செய்வதும் இல்லை. அதலால் நல்வினை உயர்ந்தவர்க்கு இல்லை. அது மூடர்களுக்கும் இல்லை. எனவே அறிஞரும், அறிவற்றவரும் ஒப்பாகார்.

**15. மேவிவிடும் அருட்படைக்கும் மருட்ப டைக்கும்**
**வேறுஅறிய இவ்வாறு விளம்பு வீரன்**
**ஏவிவிடும் அளவதனில் அஞ்ஞ சேனை**
**இறந்தபடி இதனையும்இங்கு இயம்பல் செய்வாம்.**

ஞானம் பொருந்திய ஞான வேந்தன் படைக்கும், அறிவற்ற அஞ்ஞ வேந்தன் படைக்கும் வேற்றுமை தெரிந்து கொள்ளும்பொருட்டு ஞான வேந்தன் அருள் செய்து தம் சேனைகளைச் செலுத்திய போது அவன் படை அழிந்த தன்மைகளையும் எடுத்துக் கூறுவோம்.

16. **உருபக மகளிர் திறத்தினை**
**உசாவொடும் அறமொடுஇ ழிப்பொடு**
**நிருபகன் மதனை அழித்தனன்**
**நிலவிய ரதியும் இறப்பவே**

நிருபகன் என்ற சேனாதிபதி அழகு பொருந்திய பெண்களது சாமர்த்தியத்தையும் வலிமையினையும் ஆராய்ந்து, அழகு பொருந்திய இரதி இறக்கும் படியாக அவளது கணவன் மன்மதனை அழித்தனன்.

17. **பாவனும் இகலும்இ ரங்கலில்**
**பாடுஉறு கொலையும் எரிந்துஎழு**
**கோபனும் அடையந லம்பல**
**கூறிய பொறையின் அழிந்ததே.**

எரிகின்ற தீ போலச் சினமுடைய கோபனும், அவனது தீய நெஞ்சமும், கொலைக் குணமும் ஆகிய எல்லாம் எல்லோர்க்கும் நலம் செய்யும் பொறுமை என்பவனால் அழிந்தது.

18. **மோகனும் உலக மயக்குற**
**முடிய மயலும் மிகுத்துஎழு**
**சோகனும் மகிழ்வும் நசித்தனர்**
**தூமதி கணவன்வி ழிக்கவே.**

தூய புத்தி அங்கு தோன்றிய போது, அதிக மோகத்தை உண்டாக்குபவனும், புத்தி மயக்கம் தருகின்ற சோகனும், விரும்பிய பொருள் கிடைத்தமையால் உண்டான மகிழ்ச்சியும், கொண்டு அழிந்தனர்.

19. **ஆனசந் தோடன்இல் லோபனும்**
**ஆசையும் பேசுகளவு ஆதியும்**
**மானசந் தாபனும் தீனனும்**
**மானமும் சேர உயிர்மாயுமே.**

மிகுந்த மன நிறைவுடையவனாகத் தோன்றும் சந்தோடனும் வறுமையும்,பேராசையும் இகழ்ந்து பேசப்படும் களவு முதலானவையும் யான் எனது என்ற அபிமானம் உடையவனும், பலவீனமானவனும் மானமும் ஒன்றாகவே உயிர் மாயும்.

**20.** **அறன்அ ழித்தனன்ம றத்தினைய சூயை தனைநல்**
**அமிர்த சீலனும்அ ழித்தனன் அடக்க னும்மதத்**
**திறன்அ ழித்தனன்உ பேட்சையில்அ பேட்சை பொடிநல்**
**தேர்வி லேபெரிய டம்பன்உயிர் சிந்தியதுவே.**

அறம் வென்றது. தான் அடைந்த இன்பம் பிறர்க்கு வரக் கூடாது என எண்ணுபவனை நல்லொழுக்கம் என்பவன் வென்றான். தன்னிலையில் மாறுபடாது அடங்கியோன் தன்னைப் பெரிதாக எண்ணுவோரை வென்றான். மதத்தை அடக்கன் என்பவன் வெல்ல, விருப்பம் பொடிப் பொடியானது. நல்ல ஆராய்ச்சியின் துணையால் ஆடம்பரம் என்பவன் உயிரை விட்டான்.

**21.** **ஆங்குஅரி யமும்பெரிய சாந்தியின்அ ழிந்ததுஉயிர்கட்கு**
**அன்னை போலும்அவி ரோதம்எழ ஆருயிரையும்**
**தீங்குஅ ருத்தியிடும் மச்சரன்அ ழிந்தயரவே**
**செய்யும் ஐயம்அழிவு உற்றதுமி கும்தெளிவிலே.**

கிடைத்தற்கு அரிய சாந்தத்தினால் அகங்காரம் என்பவன் அழிந்தான். அனைத்து உயிர்களுக்கும் தாயான சூரியன் தோன்ற மச்சரன் மாண்டான். மேலான உறுதியால் தெளிவால் அனைவருக்கும் துக்கத்தைச் செய்யும் சோகம் நீங்கியது.

**22.** **தற்க மோனம்ஏது விற்பொடித மம்பொடிவுஉறும்**
**சத்து வத்தில்வரு சங்கமும் அசங்கமுறநேர்**
**நிற்கு மோஒரும ருட்படைஅ ருட்படையின்முன்**
**நிற்க ஏதுநிணம் ஏதுகுடர் ஏதுநிலையே.**

மனம் மௌன நிலையை அடைந்தவுடன், மேலான கேள்வி பதில் என்னும் துகளானது அகக் கரணங்களால் அழிந்தன. தொடர்ந்து வரும் ஆசைகள் பற்றற்ற நிலையை அடைந்தன. அஞ்ஞ வேந்தனது மருட் படைகள், கருணைக் கடலாகிய ஞான வேந்தனின் படைகளுக்கு முன்னே நின்றபோது கொழுப்பு, குடல், தசை முதலியவற்றில் ஒன்றையும் காண முடியவில்லை.

## **தொந்த யுத்தம் நிறைவுற்றது**

# 23. அஞ்ஞன் அழிவு

## முன்னுரை

ஞான வேந்தனின் படைகள் அஞ்ஞ வேந்தனது அறியாமை என்னும் படைகளை வென்று, அஞ்ஞ வேந்தனையும் கைப்பற்றியபின் அஞ்ஞ வேந்தனை நோக்கி, ஞான வேந்தனின் படைகள் கூறுவன.

**1.** **ஆவியை ஒழிய எல்லாம்**
**அழிந்துஅகப் பட்ட அஞ்ஞப்**
**பாவியை எந்தை பாதம்**
**பணிஎனப் பகர்ந்தே போதே.**

அஞ்ஞ வேந்தனின் உயிர் தவிர அவனது படைகள் அனைத்தையும் அழித்து, அனைத்துத் துன்பங்களுக்கும் காரணம் ஆன அறியாமை என்னும் அரசனை நோக்கி, எம் தந்தையாகிய ஞான வேந்தரது திருவடியைப் பணிக என்று கூறிய அளவிலே.

**2.** **அறிவுஇலன் எனும்பேர் ஒன்றும்**
**அழிவுஉறாது இருக்க ஞானம்**
**கிறிவரும் படிஎன் தானை**
**கிளர்ந்துஎழும் என்னக் கேட்டே**

அஞ்ஞன் என்ற பெயர் நீங்காது இருக்கும் போது, உன்னிடம் இருக்கின்ற ஞானம் பொய்யாகும். இனி நீ பேச்சை விடுத்துச் செயல்படு. நீ எழுந்து ஞான வேந்தன் முன் நின்றால் போதும் என்று கூறியதைக் கேட்டு.

**3.** **இருள்துணிந்து இரவிமுன் நிற்குமோ பஞ்சுதான்**
**எரியின்முன் நிற்குமோ எங்ஙனே அரவமும்**
**கருடன்முன் நிற்குமோ ஞானமே வந்துஉறும்**
**கண்ணின்முன் நிற்குமோ எண்ணறும் கன்மமே.**

இருளானது துணிவுடன் சூரியன் முன் நிற்குமோ? பஞ்சு நெருப்பின்முன் நிற்க முடியுமோ? அதுபோலவே கருடனின்முன்னே பாம்பு நிற்க முடியுமா? அதுபோலவே அளவிலாத தீயவினைக் கன்மங்கள் ஞானத்தின் முன் நிற்க இயலுமா?

**4. அழியும்இக் காயமும் கழியும்முன் இளமையும்**
**அன்புறும் கிளைஞரும் இன்புறும் போகமும்**
**மொழியும்இச் செல்வம்ஒன்று ஆகநீ உன்னியோ**
**உடையநா யகனைநெஞ்சு உணர்வுஉறாது ஒழிவதே.**

காலவசத்தால் அழிகின்ற இந்த உடலும், அதற்குமுன் உண்டான இளமையும், அன்போடு கூடிய சுற்றமும், இன்பத்தை அனுபவிக்க உதவும் போகப் பொருள்களும், சிறப்பித்துச் சொல்லப்படும் செல்வமும் ஆகிய இவை உலகிலே நிலையானவை என்று நினைத்தோ எம்மை ஆளுடைய நாயகனை நெஞ்சில் நினையாது நீங்கினை.

**5. தேவர்களும் முனிவர்களும் செழுமறையும் பழையஒரு**
**மூவரும்என்று இருந்தனையோ முழுமுதல்என்று அறிந்திலையோ.**

அமரர்களும், இங்குள்ள முனிவர்களும், செழும்பொருளே எனக் கூறும் இருக்காதி நால் வேதங்களும் சிறப்பித்துப் பேசும் பழைமை வாய்ந்த ஒப்பற்ற மும்மூர்த்திகள்தானே என்று எண்ணினை போலும்? ஆனால் அதற்கும் அப்பாற்பட்ட முழுமுதற் கடவுள் என்று நீ அறிந்து கொள்ளவில்லையோ?

**6. இந்த உல கத்தின்இடர் கெடும்பரிசுஇங்கு எழுந்துஅருளி**
**வந்தவன்என்று அறிந்திலையோ மானிடன்என்று**
**இருந்தனையோ.**

பொருள் இப்பூமியில் உள்ள அனைத்து உயிர்களும் காலவசத்தால் தவிக்கின்றனவே என்னும் கருணையால் தோன்றி, இங்கு சொரூபானந்தர் ஆக வந்தவர் என்று நீ அறியாது மானிடன் என்று கருதி விட்டாயோ?

**7. அதிரேக அழகுடையான் ஆளுடையான் தாளுடையான்**
**எதிரேநின் றனைஆவி இப்பொழுதே இழந்தனையே.**

அதிசயிக்கத் தக்க அழகு கொண்டவன். நம்மை அடிமை கொண்டுள்ளவன். பணிவாரைக் காக்கும் அடிகளை உடையவன். அவன் முன் மூர்க்கத் தனமாகப் பேசாதே. இப்பொழுதே உன் உயிர் நீங்கினது போலத்தான்.

**8. நாய னார்அடி யார்கள் நவில்தொறும்**
**பேய னானும் பெருகச்சி னம்செய்தே**

எவ்வுயிர்க்கும் தலைவரான இறைவனின் அடியார்கள் இவ்வாறு எடுத்துக் கூறிய போது, உணர்ந்தோர்களால் ஒன்று எனக் கூறப்பட்டதை இல்லையெனச் சொல்லும் இழிவான பேய் போன்றவனும் மிகுதியான கோபம் கொள்ள,

**9. ஞான வேந்தன்வந்து என்எதிர் நண்ணுறல்**
**ஆன எல்லையில் காணும்என் ஆண்மையே.**

ஞான வேந்தன் எனது முன்னிலையில் போர் செய்ய வரும் போது, அஞ்ஞ வேந்தனாகிய என்னுடைய ஆண்மையைக் கண்டு கொள்ளுங்கள்.

**10. என்ற வன்மொழி எந்தைதி ருச்செவி**
**சென்ற எல்லைசி ரித்துஅருள் செய்யுமே.**

அஞ்ஞன் இவ்வாறு கூறிய கடுஞ் சொற்கள் எம் தந்தையான ஞான வேந்தனின் திருச்செவி புகுந்த மாத்திரத்தில் புன்முறுவலோடு அருள் செய்யத் தொடங்கினார்.

**11. உம்பர் இம்பர் உவப்பஒ ளிமிகு**
**தம்பெ ருந்தன்மை காட்டச்ச மைந்ததே.**

தேவர்களும், மனிதர்களும் உய்யும் பொருட்டுச் சூரியன் முதலியவற்றை ஒளி வடிவமாய் இருக்கச் செய்து, தானும் சுயஞ் சோதியாய் இருந்தபடியே அனைத்துயிரும் இன்புறுக எனக் கருணை செய்தார்.

**12. பழுதுப டாமறை வான்உளோர்**
**பண்டை யோர்மூவர் கள்இன்றுகால்**
**அழுதுபெ றாஅடி அஞ்ஞன்மேல்**
**ஆகஇ சைந்தனன் அண்ணலே.**

குற்றம் இல்லாத இருக்காதி நால் வேதங்களும். தேவரும் தொன்று தொட்டு முத்தொழில் செய்யும் மும்மூர்த்திகளும் உலகம் தோன்றிய நாள்முதல் இதுவரை துயருற்றுத் தேடியும் காணாத திருவடி அஞ்ஞன் மேல்பட அருள் செய்தனர்.

**13.** **வெருவரு நான்முகன் ஆதியாம்**
**விண்ணவர் மண்ணவர் வேறுஓர்**
**ஒருவர்பெ றாஅடி உணர்விலான்**
**உச்சியின் மீதும்உ தைத்ததே.**

அஞ்சத் தக்க நான்முகன் ஆதியாய கடவுளரும். மண்ணுலகத்தவர்களும், மற்றையவர்களும் பெறற்கு அரிய திருவடிகள் அஞ்ஞ வேந்தனின் தலைமீது பொருந்தியன.

**14.** **தென்திசை யின்துயர் தீர்த்தநாள்**
**செய்துஅரு ளும்படி தெரியுமோ**
**இன்றுஇசை கின்ற அல்லவோ**
**இத்தலை மீதும்இ ருக்கவே.**

தெற்குத் திசையின் காவலன் ஆகிய எமனால் உண்டான துன்பம் போக்கிய திருவடி, இந்நாளில் இன்னாருக்கு அருள் செய்யும் என்பதை யாம் அறியக் கூடுமோ? அனைத்து உயிருக்கும் துன்பத்தை உண்டாக்கிய அஞ்ஞ வேந்தனின் தலையின் கண்ணும் இருக்க மிகவும் இசைகின்றதே.

**15.** **பெரியவர் தம்செயல் ஆவதும்**
**பிறர்அறி வால்அறி வோம்எனத்**
**தெரியும தன்றது தெரிவதும்**
**செய்துமு டிந்திடு திசையிலே.**

பெரியவர்கள் ஆகிய மகான்களின் செயலைப் பிறரால் அறிந்து கொள்ளலாம் என்பது இயலாதது. அவ்வாறு அறிந்து கொள்வதும் செய்ய வேண்டியதைச் செய்து முடித்த பின்னே ஆகும்.

அதிசயிக்கத் தக்க அழகு கொண்டவன். நம்மை அடிமை கொண்டுள்ளவன். பணிவாரைக் காக்கும் அடிகளை உடையவன். அவன் முன் மூர்க்கத் தனமாகப் பேசாதே. இப்பொழுதே உன் உயிர் நீங்கினது போலத்தான்.

**8. நாய னார்அடி யார்கள் நவில்தொறும்**
**பேய னானும் பெருகச்சி னம்செய்தே**

எவ்வுயிர்க்கும் தலைவரான இறைவனின் அடியார்கள் இவ்வாறு எடுத்துக் கூறிய போது, உணர்ந்தோர்களால் ஒன்று எனக் கூறப்பட்டதை இல்லையெனச் சொல்லும் இழிவான பேய் போன்றவனும் மிகுதியான கோபம் கொள்ள,

**9. ஞான வேந்தன்வந்து என்எதிர் நண்ணுறல்**
**ஆன எல்லையில் காணும்என் ஆண்மையே.**

ஞான வேந்தன் எனது முன்னிலையில் போர் செய்ய வரும் போது, அஞ்ஞ வேந்தனாகிய என்னுடைய ஆண்மையைக் கண்டு கொள்ளுங்கள்.

**10. என்ற வன்மொழி எந்தைதி ருச்செவி**
**சென்ற எல்லைசி ரித்துஅருள் செய்யுமே.**

அஞ்ஞன் இவ்வாறு கூறிய கடுஞ் சொற்கள் எம் தந்தையான ஞான வேந்தனின் திருச்செவி புகுந்த மாத்திரத்தில் புன்முறுவலோடு அருள் செய்யத் தொடங்கினார்.

**11. உம்பர் இம்பர் உவப்பஒ ளிமிகு**
**தம்பெ ருந்தன்மை காட்டச்ச மைந்ததே.**

தேவர்களும், மனிதர்களும் உய்யும் பொருட்டுச் சூரியன் முதலியவற்றை ஒளி வடிவமாய் இருக்கச் செய்து, தானும் சுயஞ் சோதியாய் இருந்தபடியே அனைத்துயிரும் இன்புறுக எனக் கருணை செய்தார்.

**12. பழுதுப டாமறை வான்உளோர்**
**பண்டை யோர்மூவர் கள்இன்றுகால்**
**அழுதுபெ றாஅடி அஞ்ஞன்மேல்**
**ஆகஇ சைந்தனன் அண்ணலே.**

குற்றம் இல்லாத இருக்காதி நால் வேதங்களும். தேவரும் தொன்று தொட்டு முத்தொழில் செய்யும் மும்மூர்த்திகளும் உலகம் தோன்றிய நாள்முதல் இதுவரை துயருற்றுத் தேடியும் காணாத திருவடி அஞ்ஞன் மேல்பட அருள் செய்தனர்.

**13.** **வெருவரு நான்முகன் ஆதியாம்**
**விண்ணவர் மண்ணவர் வேறுஓர்**
**ஒருவர்பெ றாஅடி உணர்விலான்**
**உச்சியின் மீதும்உ தைத்ததே.**

அஞ்சத் தக்க நான்முகன் ஆதியாய கடவுளரும், மண்ணுலகத்தவர்களும், மற்றையவர்களும் பெறற்கு அரிய திருவடிகள் அஞ்ஞ வேந்தனின் தலைமீது பொருந்தியன.

**14.** **தென்திசை யின்துயர் தீர்த்தநாள்**
**செய்துஅரு ளும்படி தெரியுமோ**
**இன்றுஇசை கின்ற அல்லவோ**
**இத்தலை மீதும்இ ருக்கவே.**

தெற்குத் திசையின் காவலன் ஆகிய எமனால் உண்டான துன்பம் போக்கிய திருவடி, இந்நாளில் இன்னாருக்கு அருள் செய்யும் என்பதை யாம் அறியக் கூடுமோ? அனைத்து உயிருக்கும் துன்பத்தை உண்டாக்கிய அஞ்ஞ வேந்தனின் தலையின் கண்ணும் இருக்க மிகவும் இசைகின்றதே.

**15.** **பெரியவர் தம்செயல் ஆவதும்**
**பிறர்அறி வால்அறி வோம்எனத்**
**தெரியும தன்றது தெரிவதும்**
**செய்துமு டிந்திடு திசையிலே.**

பெரியவர்கள் ஆகிய மகான்களின் செயலைப் பிறரால் அறிந்து கொள்ளலாம் என்பது இயலாதது. அவ்வாறு அறிந்து கொள்வதும் செய்ய வேண்டியதைச் செய்து முடித்த பின்னே ஆகும்.

**16.** **செறித ரும்பிறவி முறிய வந்துஇறைவர்**
**திருவி ளங்குகழல் அருளுநாள்**
**அறிஞர் என்றும்இலர் அவலர்**
**என்றும்இலர் அவர்சுதந்தரம்அ டையவே**

தொடர்ந்து வரும் பிறவித்துயர் நீங்க, இறைவன் எழுந்து அருளி, செல்வம் தரத்தக்க திருவடிகளைச் சூட்டி அருள் செய்யும் போது, அறிவற்றவன், அறிவுள்ளவன், உயர்ந்தோன், தாழ்ந்தோன் புண்ணியவான், பாவி, பக்குவம் உள்ளவன், பக்குவம் இல்லாதவன் என்பது இல்லை. அந்நியரின் கட்டுப்பாடு இல்லாதவர் இயல்பான நிலையில் வாழ்வர்.

**17.** **பிறிவுஇ லாதகுரு பரம னார்தமருள்**
**பெருக வேஉடைய திருவினான்**
**அறிவுஇ லான்உடன் இவ்அகில மாயைஉயிர்**
**அடைய நூறும்வகை அறைகுவாம்.**

எங்கும் நீக்கமற நிறைந்து இருக்கும் பரம குருவாகி விளங்கும் ஞான தேசிகர் அருளை நிறையைப் பெற்ற ஞான வேந்தன் அஞ்ஞ வேந்தனுடன் அவனுக்குள்ளே இருந்த மாயையுடன் அழிக்கின்ற தன்மையை அருளிச் செய்வாம்.

**18.** **சலிக்கும்மனத்து எழுச்சிஅறத் தவிர்த்துஇதம் விட்டுஅ கத்தே**
**சிலுத்துஎழும்அத் துடிப்பும்அறத் திரித்துஅடையக் கெடுத்தே.**

மல வாசனையால் துன்பமுறும் மனத்தின் எழுச்சியினை நீக்கி, மேற் கூறிய அம்மனத்தின் இயல்பை மிகவும் மாறுபட அழித்து,

**19.** **குறித்திடல்அற்று இடத்ததனைக் குறிப்பவரைக் கெடுத்தே**
**கறுத்தஇருள் தனைக்கதுவக் கருத்தனைவிட்டு அழித்தே.**

ஒன்றைக் குறித்துச் சொல்லும் நிலையற்று, அவ்வாறு குறிப்பவர்தம் அறியாமையைக் கெடுத்து, அறியாமையாகிய பேரிருள் அழியச் செய்பவனாய் நீக்கி,

**20.** **குறித்தல்குறிப் பிறத்தல்என்இக் குறிப்புஅழியக் குலைத்தே**
**மறித்தஇடத் திற்பரிசித்து அகத்துஎனல் மற்றுஒழித்தே**

ஒன்றைக் குறித்துச் சொல்லிப் பின் அவ்வாறு சுட்டிக் காட்டிய தன்மையை நீக்கி மீண்ட நிலையில் அந்தப் பொருள் மற்றவற்றை நீக்கி அகத்தில் இருக்கும்.

21. **தனிச்சுடர்இச் சகத்துஒளிரத் தனைக்கெடஅக் கணத்தே**
**பனித்திவலைத் தடிப்புஒழியப் பரச்சுடர்விட்டு அழித்தே**

இவ்வுலகில் ஒப்பற்ற சுடராக ஆன்மா ஒளிர, உலகக் காட்சி அப்பொழுதே நீங்க, இறைவனாகிய சுடர் மூலம் பனித்துளி அளவும் இல்லாது நீக்க வேண்டும்.

22. **ஒருக்கிவிரித்து அதில்சுழல்வுற்று உழற்றும்இருள்த னைப்பேர்**
**அருக்கன்உதித்து அலக்கண்அறுத்து அதில்பிரபைஇட்டு**
**அழித்தே.**

ஒளியுடைய ஆத்மாவின் மலவாசனையைக் கெடுத்து அழியச் செய்து, ஊழிக் காலத்தில் தன்னுள் அடக்கிப் படைக்கும் காலத்தில் தோற்றுவித்தும் அவற்றில் உழன்று துன்புறுமாறு செய்யும் பொய்யான இருள் துன்புறுமாறு ஒளியைச் செலுத்தி அழிக்கும்.

23. **செகத்துஒழியத் திரித்தஇடத் தெளிர்ச்சியுறச் சிதைத்தே**
**விகற்பம்அறத் தனிச்சுடர்விட்டு எரித்துஅயர்வைக் கெடுத்தே**

உலகம் தோன்றாமல் மாறுபட்ட நிலையில் நினைவு ஒழிய மறதியும் நீங்க, தனித்த ஒளியினால் அவ்விருளை அழித்துத் தளர்வை நீக்கி,

24. **கலுழ்ச்சிகளிப்பு அகத்தெளிவுள் கலக்கம்மிகுத்து இகத்தே**
**செலுத்தல்திரித் தல்அற்றுஅடையச் சிவச்சுடர்விட்டு எரித்தே.**

துன்பமும், இன்பமும், உள்ளத்திலுள்ள விளக்கமும் மனத் தெளிவின்றிக் கலங்கியவிடத்து உலக விஷயங்களில் சென்று மீளுதல் இன்றி அனைத்தையும் தன் சுய ஒளியினால் அழியும்படி செய்து,

25. **தனில்பிறிதுஅற்று இருக்கும்அருள் தனிச்சுடர்தற் பதத்தே**
**இனிப்பிறிதுஅற்று இருக்கஇசைத்து இடுக்கண்அறுத் துவிட்டே**

தனக்கு வேறாக இல்லாமல், தானாகவே இருக்கின்ற ஒப்பற்ற தனிச்சுடர், தற்பதத்தில் மேலும் வேறுபாடின்றி விளங்கும்படி செய்து, சோகம் நீங்கி இருப்பான்.

26. **சகப்புரணத்து அடிப்படைஅச் சமித்துஇடத்தில்உற்று இடத்தே**
**சுகத்தெளிவில் சிவப்பிரவையில் களிப்பதனைத் தொலைத்தே.**

உலக மனோவிருத்தி அனைத்தும் ஒழிந்தவிடத்துத் தெளிந்த ஆனந்தமாகிய சிவச்சோதியில் களிப்பு மிகுந்திருக்கும் நிலைமையும் கடந்து மேற்செல்லல் வேண்டும்.

**27. காயா திகள்ஏழு மாயா விசையத்தே**
**கையற்ற அறிவின்கா ரணம்ஆ திகள்ஏழும்**
**மாயா விசைத்தே மாயச் சுகசற்சின்**
**மயபூ ரணமேதன் வடிவுஆ னதுவந்தே**

உடல், இந்திரியம், உயிர், மனம், புத்தி வித்தம், அகங்காரம் ஆகிய ஏழும் மாயா சோதனையில் நீங்கி, அறிவின் காரணமாக உள்ள சர்வக்ஞன், சர்வேஸ்வரன் சர்வஅந்தர்யாமி, சர்வகாரணன், சர்வசிருஷ்டர், சர்வதிதியுடையோன், சர்வசம்மாரன் என்ற ஏழு நிலைகளும் தற்பதச் சோதனையால் விசாரித்த மாத்திரத்தில் இல்லாமல் போகின்றதோ, அப்போது சச்சிதானந்த வடிவாய் எங்கும் நிறைந்த முழுமையான இறை இயல்பு வடிவான ஆன்ம வடிவுடன் விளங்கும்.

**28. கோதுஅற்று அமிர்துஆகிக் கூறுஅற்று உணர்வுஆகிக்**
**கூறற்கு அரிதுஆகிக் கோசப் புலன்மாறித்**
**தீதுஅற் றவர்காணத் தேன்ஒத்து இனிதுஆகித்**
**தேசத் திசைமாறித் தேறித் தெளிவாயே.**

குற்றம் அற்ற பேரின்பமாய் அமிர்தமாகி வேறுபாடு நீங்கி இயல்பான வடிவாகவும், இவ்வாறு என்று சொல்லுவதற்கு அரிதாகியும் பஞ்ச கோச வடிவான உடலில் உள்ள ஐம்புல விஷயங்களும் நீங்கி மனம் உள்முகமாகி, தீதில்லாதவர் காண, நீ சென்ற திசை மாறித் தேன் போல் இனிமையாய் இரு.

**29. எம்பிரானை வந்துஎ திர்த்துஇ றந்த அஞ்ஞன் இங்குஉறான்**
**உம்பர் வான்உ றாதுஇ றாமல் ஒன்றி னான்அவ் ஒளியொடே...**

ஞான வேந்தனை எதிர்த்துப் போரிட்டு மடிந்திட்ட அஞ்ஞ வேந்தன் இப்பூமியின்கண் வீழ்ந்திலன். விண்ணுலகையும் அடையவில்லை. தனக்கென்று ஒரு வடிவமும் இன்றி விளங்குகின்ற ஒப்பற்ற சுயஒளி வடிவத்தில் மறைந்தான்.

**30. அல்லல் ஆன காம ராசன் ஆதி ஆன சேனையும்**
**இல்ல ஆகி ஞான ரூபம் ஆகி யேஇ லங்குமே.**

அனைத்து உயிர்களுக்கும் துன்பம் தரக் கூடிய மன்மதன் சேனைகள் முழுவதும் பெயர்கூடச் சொல்வதற்கில்லாமல் தன் இயல்பான ஆன்ம வடிவமாகவே விளங்கியது.

**31. அறிவுஅறி யாமை அழிந்தனரே**
**அறிவுஅறி யாமை அழிந்தனரே**

தனது ஆன்மாவில் உள்ள அஞ்ஞானத்தை அழித்தனர். தான் அனைத்தும் அறிவோம், அறியோம் என்ற நிலையையும் அழித்தனர்.

**32. பிறிவுஅறி யாமைபி றழ்ந்தனரே**
**பிறிவுஅறி யாமைபி றழ்ந்தனரே.**

தன்னையும், பிறவற்றையும் அறியாதது சடம் என்று நீக்கினார். தனக்கு வேறாக ஒன்றையும் காணாமையால் ஒன்றாக விளங்கினார்.

**33. கரக்கும்உ ளத்தவர் ஆயினரே**
**கரக்கும்உ ளத்தவர் ஆயினரே.**

வஞ்சனை நீங்கித் தன் வடிவத்தில் கலந்து மறைந்த உள்ளம் உடையவர் ஆனார். மறைக்கப்பட்ட மனத்தையுடைய தவச் செல்வர்கள் ஆனார்.

**34. இருக்கமு டிந்தஅ ருள்பொருளே**
**இருக்கமு டிந்தஅ ருள்பொருளே**

சித்தாந்தமான அருட்பெரும் பொருள், எப்பொழுதும் சிவமாய் இருக்க, சிந்தித்தவர்களது ஆன்மாவாம் சமாதியில் இருக்கும் அருட்பெரும் பொருள்.

**35. அழிந்துஅற மாயைஇ ருட்டுஎலாம்**
**அறிவுஉரு ஆகநம் அண்ணலார்**
**மொழிந்ததும் இங்குஒரு வார்த்தையே**
**மூவுல கும்ஒரு வார்த்தையே.**

மாயை ஆகிய இருள் எல்லாம் அழிந்து, அறிவுருவாகிய நம் குருநாதர் இங்கு வந்து உரைத்த மொழியும் ஒப்பற்ற மொழியே. அது மூவுலகுக்கும் ஒப்பற்ற ஒரு சொல்லாகும்.

**36.** **உழுந்துஉரு ளும்துணைப் போதிலே**
**உணர்வுஉரு ஆகநம் உச்சிமேல்**
**எழுந்துஅரு ளும்இரு போதுமே.**
**ஏத்துவது என்றும்எப் போதுமே**

உழுந்து ஒருமுறை உருள்வதற்கு உள்ளாகவே உணர்வு வடிவமாக விளங்கிய இறைவனின் அடி நம் தலை உச்சியின்கண் எழுந்தருளிய போது எப்பொழுதும் துதித்து இறைஞ்சப் படுவதும் அவனடியே.

**37.** **அறிவி லாள்உயிர்க்கு இறுதி செய்தபின்**
**அறிஞர் தம்பிரான் அரிய தாள்இணைப்**
**பிறிவுஇ லாததம் படையை மீள்கெனப்**
**பெரிய சேனையும் திரிய மீளுமே**

அறிவிலான் ஆன அஞ்ஞ வேந்தனின் உயிரை வாங்கி முடித்தபின், இறைவனின் திருவடியைப் பிரியாத ஞான வேந்தனின் சேனையும் திரும்புங்கள் என்று சொன்னவுடன் தமதிடம் அடைந்தன.

## அஞ்ஞன் அழிவு நிறைவுற்றது

# 24. வெற்றி சாற்றல்

## முன்னுரை

ஞான வேந்தனது படைத் தளபதிகளான ஞானம் முதலியோர், அஞ்ஞ வேந்தனின் காயாபுரி என்னும் மாயாபுரத்தை முற்றிலுமாக அழியச் செய்து வெற்றி கொண்டு மீண்ட போது கூறியது.

1. **காயம் ஆகிவாழ் மாய மாபுரம்**
**கட்டடுஅ டங்கவே சுட்டல் கண்டுளோர்**
**தூய ஞானநல் சுடர்வி ளங்குமெய்ச்**
**சொரூப னார்பதம் தொழுது ரைப்பரே.**

உடலே தான் என்று வாழ்கின்ற மாயாபுரிக் கோட்டையை முற்றிலுமாக அழித்தது அறிந்து அதில் பற்று நீங்கி இருப்பவர்கள் முக்குற்றங்களும் நீங்கித் தூய அறிவு மயமாய் ஒளிவிட்டுக் கொண்டு இருக்கும் மெய்யறிவு வடிவான சொரூபானந்தராம் ஞான வேந்தரது திருவடிகளை வாழ்த்திச் சொல்லத் தொடங்கினார்.

2. **அடியேம் உள்ளங் கருப்பதுநல்**
**அம்போ ருகங்கள் சிவப்பதும்இப்**
**படியே வந்த பரனேநின்**
**பாதம் காட்டாப் பண்டுஅன்றோ**

சொரூபானந்த சுவாமிகளாகிய தங்களது அடியவர்களான எங்கள் மனம், ஆசை என்கின்ற இருள் மூடிக் குற்றமாய் இருப்பது பண்டைய அடியவர் போற்றும் தங்களது புனிதத் திருவடித் தாமரைகள் சிவக்கும் படியாக அப்புனித பூமியில் தோன்றி வந்த பரம்பொருளே அது தங்கள் திருவடிப் பேறு காட்டி அருள் செய்யும் முன்னம் அல்லவா?

3. **செய்யப் படும்தே வரும்உலகும்**
**சிறியோம் வாழ்வும் தீப்பிறப்பும்**

**பொய்யற்று இருப்பது எம்பெருமான்**
**புவியில் போதாப் போதன்றோ.**

நான்முகனால் படைக்கப் பட்ட தேவரும், பதினான்கு உலகங்களும், அற்பர்களாகிய எங்களது குறைந்த வாழ்நாளும், தீய பிறப்பும் மெய்யென்று கருதி வாழ்ந்ததும் எம் தலைவராகிய தாங்கள் இப்பூமியில் எழுந்தருளி வாராத காலத்தல்லவா?

**4. போக்கும் வரவும் பொன்னாடும்**
**புழுஆர் நரகும் புசிப்பனவும்**
**ஆக்கம் அழிவும் திருக்கடைக்கண்**
**அணுகாது இருக்கும் அளவுஅன்றோ.**

பிறப்பும், இறப்பும், சொர்க்கம் செல்வதும், புழுக்கள் நிறைந்த நரக வாசமும் நல்வினை தீவினை காரணமாகச் சுகதுக்கங்கள் அனுபவிப்பதும் செல்வப் பெருக்கும் அழிவும் குருமூர்த்தியாகிய தங்களது அருட்பார்வை படாதிருக்கும்வரை இருந்தது. தங்களின் அருட்பார்வை பட்டபின் யாவும் நீங்கின.

**5. சாவுஆ கின்ற பெரும்பிணிக்கும்**
**சனிக்கும் பிணிக்கும் தடுமாற்றம்**
**ஆவா என்றுஉன் திருக்கரத்தால்**
**அஞ்சேல் என்னும் அளவுஅன்றோ**

பெரு நோய்க்கும், பிறப்புக்கும், மூவகை நோய்க்கும் (தன்னால், பெற்றோரால், முன்வினையால்) ஐயோ என்றேங்கிக் கலங்குவது எல்லாம், தங்களது திருக்கரத்தால் அஞ்சேல் என்று அருள் செய்யும் வரையல்லவா எங்களுக்கு இருந்தது.

**6. முத்திக்கு அரசே நீஎங்கும்**
**முழுந்தி இருப்ப விழுந்துஉழலும்**
**புத்திக் கிலேசம் தலைமிசைஉன்**
**பொன்தாள் பொறியாப் போதுஅன்றோ.**

முத்தி உலகாளும் அரசே. தாங்கள் எங்கும் நீக்கமற நிறைத்திருப்பதை அறியாமல், மனக்கவலையால் புத்தி மாறுபட்டிருந்தது எம் தலைமீது உம் பொன்னார் திருவடிகளைச் சூட்டிக் கொள்ளாத காலத்தில்தானே.

7. **அந்தக் கரணம் புறக்கரணம்**
**அவத்தை பலவோடு அகம்புறமாம்**
**தொந்தக் கலாதி யாவையும்நின்**
**துணைத்தாள் சூடார் சொல்அன்றோ.**

துணைத்தாள் உட்கருவிகள் என்றும். மெய், வாய், கண், மூக்கு, செவி, வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபத்தம் ஆகிய புறக்கருவிகள் என்றும், அவத்தை பலவற்றுடன் உள்வெளி என்னும் தொடர்புள்ளவை எல்லாம் உமது தூய திருவடியை அறியாதார் சொல் அல்லவா?

8. **சமயா எந்தச் சமயமும்எச்**
**சவலைச் சடங்கும் தனமும்எல்லாம்**
**அமையா ததுநின் திருப்பவளம்**
**அலராது இருக்கும் அளவுஅன்றோ.**

அமைதி தராத எந்தச் சமயமும், உலகில் செய்யும் சமய வைதிகச் சடங்குகளும் அமைதியைத் தர மாட்டாது. அதுவும் தங்களது அழகிய செம்பவள இதழ் திறந்து அருளும் வரைதானே.

9. **எவ்வளவும் அளவுபடாது இருக்கை உன்றன்**
**இயல்பாகும் எங்களைஎவ் அளவில் வைத்தாய்**
**அவ்அளவே அளவுஆகி இருக்கை எங்கள்**
**அளவுஆகும் உன்பெருமை அறிவார் யாரோ.**

எவ்விடத்திலும் முழுமையாக நிறைந்திருப்பது ஞான வேந்தராகிய தங்கள் இயல்பு. எம்போலுள்ளாரை எந்த அளவில் அமைத்தாயோ அந்த அளவே என்று சொல்லும்படி அமைந்திருப்பதே அந்த அளவாகும். அப்படிப்பட்டவராகிய நம் பெருமையை இங்கு யார் அறிவார்?

10. **கடம்படும்இவ் உடம்புஆனோம் கரணம் ஆனோம்**
**கண்டுஇருந்த கரிஆனோம் காட்சி தீர்ந்த**
**திடம்படுபேர் உணர்வுஆனோம் எல்லாம் ஆனோம்**
**திருவிளையாட்டு இருக்கின்ற செயல்இது என்னே.**

அறியாத காலத்தில் கடம் போலத் தனக்கு வேறானது இந்த உடல்தான் என்று இருந்தோம். சற்று அறிந்த போது நீர்க்குமிழி போல அழியும் இவ்வுடல் தானல்ல. இதற்கு வேறான கருவி மனம்தான் என்றிருந்தோம். மேற் கூறிய மனத்தின் தொழிலான நினைத்தல், மறத்தலாகிய அனைத்தும் அழிகின்ற சாட்சிப் பொருளே. சுட்டிச் சொல்லும் திண்ணிய ஞானம்தான் நிலையானது என்று உணர்வு பெற்றோம். எல்லாம் ஆனோம். உன்னுடைய திருவிளையாட்டு இருக்கின்ற செயல்தான் விந்தையானது.

**11. அஞ்ஞானம் என்னவும்அங்கு அதனால் ஆய**
**அநேகபவம் என்னவும்அவ் அயர்வு தீர்ந்த**
**மெஞ்ஞானம் என்னவும்நின்று ஒருநீ தானே**
**விளையாடல் தோற்றுவித்த விரகீது என்னே.**

அறியாமை எனவும், அதனால் பல பிறப்பு எடுத்தோம் என்று, அப்பிறப்பால் உண்டான சோகம் நீங்கி, உண்மை அறிவே ஆத்ம ஞானம் என்றும், ஒப்பற்ற தாங்கள் ஒருவரே இவ்வாறிருந்து திருவிளையாடலை உண்டாக்கிய திறத்தை என்னவென்று சொல்வது.

**12. ஒழியாத பரஒளியாய் ஓங்குசொரு பானந்தன்**
**வழியான செயல்உறுதி வாழ்வுஅன்றோ வாழ்வுஆதல்**

நீக்கமற நிறைந்திருக்கின்ற மேலான ஒளியே வடிவான ஆனந்த வடிவினன். ஞான வேந்தனாகிய சொரூபானந்த மூர்த்தியின் செயலுறுதியே நல் வழியெனக் கொண்டு வாழ்தலே வாழ்க்கையாகும். அதுவே மெய் வாழ்க்கை.

## வெற்றி சாற்றல் நிறைவுற்றது

# 25. திருமுடி சூட்டல்

## முன்னுரை

ஞான வேந்தராகிய சொரூபானந்த சுவாமிகள் அஞ்ஞ வேந்தனை வென்று, தம் அடியார்களுக்குத் தம் திருவடி சூட்டி அருள் செய்தல்.

**1. அடங்காமல் புலன்உருக அடிஇணையே வெளிஆன**
**திடம்காணல் கண்டுஇருக்கும் தெளிவுஅன்றோ தெளிவுஆதல்**

மனம் முதலிய அகக் கருவிகள் அனைத்தும் அடங்காமல் உருகவும், சிதாகாச வடிவான திருவடியைப் பொருளென அறிதல் அறிவல்லவா? அதுவே தெள்ளிய ஞானமாகும்.

**2. தோன்றும்வினை வழிஒழியத் தோன்றாத பொருள்தோன்றிச்**
**சான்றதுவே தான்ஆகும் தற்சிவமாய் நிறைந்ததுவே.**

இன்ப துன்பங்களைக் கொடுக்கும் வினைவழி நீங்கப் பக்குவம் அற்றவருக்குத் தோன்றாத பொருள் தோன்றி, அந்த அனுபவ ஆன்மா சார்ந்த சாட்சியே தனக்குத்தானே சமமாய் இருக்கும் பிரம வடிவம்.

**3. எல்லை யில்பவ வேலை வீரன்**
**எறிந்த ஆண்மை அறிந்துஎமால்**
**சொல்ல வில்லினி வல்ல வரடி**
**தொழுகை என்றுஇவர் தொழுவரே.**

அளவிட இயலாத பிறவிக்கடலை ஞான வேந்தன்தன் ஞானவாள் வீசி வென்ற ஆண்மைத் தன்மை எம்போன்றோர்களால் தெளிந்து உரைக்கத் தக்கதோ? அன்று. இனி என்னால் முடிந்தவாறு அந்த ஞான வேந்தனின் திருவடியை வணங்கித் துதிப்போம் என்று அடியவர் குழாம் நினைத்து வணங்கி வாழ்த்தினர்.

4. **வீர ஞானவி னோதன் ஆண்மையை**
**விளம்பு வார்கள்வி ளம்பஅத்**
**தீர னார்தமை ஆளு நாயகர்**
**செம்பொன் மெல்அடி சேரவே.**

உட்பகை, புறப்பகைகள் அனைத்தையும் வென்ற அரிய திறமுடையவனது ஆண்மையைப் போற்றிப் பாடும் புலவர்கள் பாடட்டும். மனம் முதலிய உட்பகைகளை வென்ற அந்த ஞான வேந்தனாகிய எம்மைத் தடுத்தாட் கொண்ட தலைவரது செம்பொன் போன்ற அடிகளைச் சேருவோர் சேர்ந்து அடைக்கலம் பெறலாம்.

5. **ஞான சக்கி ரம்என்று நீர்ந டாத்து கென்று நல்லதாள்**
**ஆன ரத்ன முடிக விக்க அருளி னான்இவ் அண்ணலே.**

அறிவென்னும் ஆயுதத்தைத் தரித்துக் கொண்டு எப்பொழுதும் நீங்கள் ஆட்சி புரியுங்கள் என்று அருளிச் செய்து, தன்னை அறிந்து வணங்குவார் தலையின் மீது தம் பொன்னான திருவடிகளை மணிமுடியாய்ச் சூட்டிக் கொள்ளும்படி அருளினான்.

. **ஞான வானைத் தாள்கள் சூடி நாயன் மார்கள் தாம்எலாம்**
**ஆன ஆன அதிச யங்கள் யாவர் கூறல் ஆகுமே.**

ஞான வேந்தராகிய சொரூபானந்தரின் திருவடிகளை முடியாக அணிந்து கொண்ட டைத்தலைவர்கள் அனைவரும் அவரவர்களுக்குள் அடைந்த மகிழ்ச்சியை யாரே ளவிடல் ஆகும். ஆயிரம் நாக்குகளை உடைய ஆதிசேடனாலும் கூற இயலாது.

**ஒழிவுஅற்ற தன்சோதி உருவத்தை நம்பால்**
**உள்ளங்கை நெல்லிப்ப ழம்போல உடையான்**
**மொழிவுற்ற விரகேச னாநின்று மொழிவார்**
**முன்னோன்ம லர்ப்பாதம் முடிமீது கொள்வார்.**

**தன்செய்ய திருமேனி யேஅன்றி வேறுஓர்**
**தான்ஒன்றுஇ லாவண்ணம் எந்தம்பி ரானார்**
**என்செய்த வாறோஇது என்என்று மொழிவார்**
**என்னேஇது என்னேஇது என்னேஇது என்பார்**

தன்னுடைய செம்மையான திருமேனியே அன்றிப் பார்த்த இடமெல்லாம் வேறொன்றில்லாத வண்ணம் எம் தலைவராகிய நாயகன் என்ன மாயம் செய்தாரோ? இது என்னவென்று சொல்வார். என்னே இது வியப்பாக அன்றோ இருக்கிறது என்று அதிசயத்துடன் கூறத் தொடங்கினர்.

**9.** **பொருள்ஏதும் இவர்அன்றி வேறுஇல்லை என்பார்**
**போதங்கள் தீர்செய்ய பொன்மேனி என்பார்**
**அருள்ஏகி டீர்வந்த திருமேனி என்பார்**
**அளவுஆவ தேஇந்த அருள்என்று மொழிவார்.**

சொரூபானந்தராகிய இவரையன்றிப் பிரம்மமான வேறு பெரும்பொருள் இல்லை என்பார். ஒளி பொருந்திய பொன் போன்ற இவரது திருவுருவமே ஞான வடிவம் என்று அருளிச் செய்வர். கருணையே சொரூபானந்தர் என்ற வடிவம் தாங்கி வந்துள்ளது என்பர். எங்கும் நிறைந்த இவ்வருள் ஒரு உடம்பிற்குள் இருக்கின்ற அளவே அளவு என்பர். இதுதான் அவரது திருவருட் திறமோ என வியந்தனர்.

**10.** **பொய்யோடு மெய்ஏதும் இல்லாத பெருமான்**
**புவனிக்கண் எம்மைப்பு குந்துஆள இதுவும்**
**ஐயோஓர் அளவுஆவ தேஎன்று மொழிவார்**
**அருளோஇது அருளோஅது அருளோஇது என்பார்.**

பொய்யும் மெய்யும் இல்லாத பெரும் பொருளாய் விளங்குகின்ற பெருமான், இப்பூவுலகில் எம்போன்றவர்களை ஆட்கொள்ளும் பொருட்டு, அய்யோ, இந்தத் திருவுருவம் தாங்கிச் சொருபானந்த வடிவமானது என்று சொல்லி வாழ்த்துவர். இதுதான் திருவருள் செய்யும் கருணையோ என வியப்பர்.

**11.** **எண்ணாத பெருவாழ்வு எமக்குஆய பெருமான்**
**எழுதப்ப டாமேனி இதுகாண எங்கும்**
**கண்ஆனது இலையேஎ மக்குஎன்று மொழிவார்**
**கண்அல்ல காணாத கண்என்று உரைப்பார்.**

கருத முடியாத பெருவாழ்க்கையை எம் போன்றார்க்கு ஆக்கிக் கொடுத்த பெருமான், ஓவியத்தாலும் எழுத இயலாத திருவுருவம் கொண்டு வந்த இந்தச் சொரூபானந்தரின் திரு உருவத்தைக் கண்டு வணங்க உடலெங்கும் கண்கள் இல்லையே என்றுரைப்பார்கள்.

**12. ஏயாத எமைஆளும் பெருமானை என்னே**
**இரும்போநம் உடல்கொண்டுஎவ் இடம்எங்கும் எங்கும்**
**வாயாய்வ ழுத்தாது இராநின்றது என்பார்**
**மலர்ப்பாதம் மீதுஉள்ளம் மால்ஆகி வீழ்வார்.**

ஒன்றுக்கும் பற்றாத எம்மை ஆட்கொண்டு காத்த பெரியவனை, உடம்பெல்லாம் வாயாகக் கொண்டு வாழ்த்தாதிருப்பது ஏன்? நம்உடல் வலிய உலோகங்களில் ஒன்றான இரும்புதானோ? அல்லது கல்லோ? வண்டுபோல் மயங்கி அவருடைய திருவடித் தாமரையில் விழுந்து விடுவார்கள்.

**13. அருகேசெ லச்செல்லு வார்அஞ்சி நிற்பார்**
**அஞ்சாது சென்றாலும் எஞ்சாது புல்லற்கு**
**ஒருகோடி கைஇல்லை யேஎன்று மொழிவார்**
**ஒன்றாலும் ஆராது காண்என்றுஉ ரைப்பார்.**

அடியவர்கள் அனைவரும் அவரருகே செல்வோம் என்று விரைவார்கள். பின் அஞ்சி நின்று விடுவார்கள். அவ்வாறு அஞ்சாது சென்ற போதிலும் விடாது பற்றிக் கொள்ள ஒரு கோடிக் கைகள் இல்லையே என்று சொல்வார். எவ்வாறு செய்தாலும் திருப்தி அடைய மாட்டோம் என்பர். இவ்வாறு எப்பொழுதும் சொல்லிக் கொண்டே இருப்பர்.

**14. அன்னேஅங்கு அவர்கள்செயல் என்னால் இங்குஒன்று**
**அறையும்அளவு இலகண்டே அறியின் அல்லால்**
**இன்னேதம் குறைக்காலம் கழித்தார் என்ன**
**இக்காலம் என்னைஎன இயம்பல் உற்றே.**

தாயே, பராசக்தியே, அப்போர்க் களத்தின் கண்ணே அவ்வடியவர் செயல்களைக் கண்டே அறியின் அல்லால், என்னால் இங்கு எடுத்தியம்பக் கூடிய அளவில் இல்லை. அன்பின் பெருமை காரணமாக இவ்வாறு வாழ்த்திக் கொண்டு தங்களது காலத்தைப் போக்கினார்கள் என அப்பேய் கூறியது.

**15. செய்துஅருளும் படிக்குஇதுவும் அன்றே தீர்க்கை**
**தேசிகனுக்கு ஒருபொருளோ திரித்தல் பின்னும்**
**உய்தரவந்து அருளுகழல் உவந்து வாழ்த்தி**
**உடம்புஎடுத்த பயன்சிலநாள் உறுதற்கு அன்றோ.**

இவ்வாறு மேற் கூறிய வண்ணம் இவ்வுலகின்கண் உபதேசம் செய்தருளிய பெருமானுக்கு இச்செய்கை ஒரு பொருளாக மாட்டாது. பின்னும் வேறு வழிகளில்

செல்லும் மனவளர்ச்சியை உள்முகமாக மாறுபடுத்தி நாம் பிறவிக்கடல் நீங்க அவதரித்திட்ட பெருமானின் திருவடிக் கழலைக் களிப்போடு போற்றி வணங்குவதே இவ்வுடல் எடுத்த பயனாகும். அதுவும் விரைவில் எழுவதற்கன்றோ.

**16. முழுந்தியஅன் பினர்மலர்த்தாள் முடிமேல் சூட**
**மூவர்களும் தேவர்களும் முழுதும் போற்ற**
**எழுந்துஅருளி இருந்தனன்இங்கு இறைவன் செய்த**
**இயல்புஇதுஎன்று இறைவிபதத்து இறைஞ்சல் உற்றே.**

குருபக்தியில் மூழ்கிய அன்புள்ளத்தினர் குருமூர்த்தியாகிய சொரூபானந்தரின் திருவடித் தாமரைகளைத் தம் முடிமீது சூடிக் கொண்டார்கள். மூவர்களும், தேவர்களும் இரவு பகல் விடாது துதிக்க அருளோடு வீற்றிருந்தான். இதுதான் இறைவன் செய்த இயல்பென்று கூறி இறைவியின் பாதத்தை வணங்கியது.

**17. எனக்குஇனிய சொரூபானந் தனைஎம் கோனை**
**ஏத்திஇவன் புகழினையே இயம்பா நின்ற**
**உனக்குஇனிஎன் செய்வன்என இறைவிஅன் போடு**
**உச்சியைமோந் திடும்தழுவும் உவகை உற்றே.**

எனக்கு அனந்த வாழ்வளிக்கக் கூடிய சுவாமியை எம் தலைவனை வணங்கி, அவன் புகழையே பெரிதும் போற்றுகின்ற உனக்கு மேலும் என் கைம்மாறு செய்வேன் என்று இறைவியானவள் அன்போடு அப்பேயின் உச்சந்தலையை மோந்து மிக்க மகிழ்வுடன் தழுவிக் கொண்டாள்.

**18. உடையசோ தியில்ஓர்மாசு அறஇனா நிலனில்ஓர்**
**உருவமாய் அருவமா சொரூபனார் உடையசீர்**
**இடையறாது உருகிஓ திடுதலே உரியையாம்**
**இதனைநீ பெறுகெனா இறைவிதான் அருளியே.**

நம்மையாளும் ஒளி வடிவத்தில் ஒரு குற்றமுமின்றி இந்தக் கலியுகத்தில் இப்பூமியின்கண் அருவமாய் விளங்கும் சொரூபானந்த மூர்த்தி திருவுருத் தாங்கி வந்த அழகினை இரவு பகல் இடையறாது தொடர்ச்சியாக, மனம் உருகி நீ உரிமையுடன் ஓதுதலே உனக்குரிய பணி. இவ்வின்பத்தை நீ என்றும் பெறுக என்று இறைவி அருள் செய்தாள்.

## திருமுடி சூட்டடல் நிறைவுற்றது

## 26. களங்காட்டல்

1. இலகுநா யகிதன்ஆர் அருஎதாம் விழியினால்
இறைவனார் செயல்இதாம் எனஇனே அருளவே
அலகைபோய் அடையயோ கினிகளாய் அருளினார்
அடிதொழா அமர்செய்மா களம்எலாம் அளவியே.

கருணை வடிவாக விளங்கும் தேவி, தனது அருட் பார்வையினால் இறைவர் செயல் இத்தன்மையது என்று அன்புடன் அருள் செய்த மாத்திரத்தில், தன் பேரருட் திறத்தினால், பேய்த்தன்மை நீங்கி, அனைவரும் யோகிகளாய் மாறித் தேவியின் திருடிவ வணங்கிப் போர்க்களம் அனைத்தையும் சுற்றிக் காத்தார்கள்.

2. ஓராத மயலார்விட்டு ஒழிந்த போதே
உடன்ஆகும் பிணிதன்னை ஒழியாச் சுற்றம்
பேராத துவந்துவங்கள் போதல் துக்கம்
பிணம்போகப் போமாபோல் காண்மின் காண்மின்.

எதையும் ஆய்ந்தறியாத மயக்கம் உடையவர், அம்மயக்கம் விட்டு நீங்கியபோது, நம்மைவிட்டு நீங்காத நோயும், தன்னை விட்டு நீங்காத உறவினர் போல, தன்னை விட்டு நீங்காத இரட்டைகளான சுகதுக்கம் இலாபநட்டம், மானஅவமானம் ஆகிய இவைகள், தன்னை விட்டு நீங்குவது எதுபோல எனில், பிணமானது இடுகாடு போய்ச் சேர்ந்த பின்னர், அப்பிணத்தின் உறவினர்களுக்கு எப்படி அழுகை நீங்குமோ அதுபோன்று காண்மின், காண்மின்.

3. தொத்துஅறவே மனம்துஞ்சப் புலன்கள் ஐந்தும்
துஞ்சியவா நஞ்சுஉமிழ்வாய் அஞ்சும் சேரக்
கத்துஅறவே அடிக்கழுத்தை அரிய மாய்ந்த
கறைஅனல்கட் செவிஒத்தல் காண்மின் காண்மின்,

அகம் புறம் என்னும் இருவகைப் பற்றும் நீங்கியவுடன் வாசனையோடு கூடிய தூலமனமும், உருவமனமும் ஒழிந்தன. மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து

புலன்களும் ஒழிந்ததைப் போல் கொடிய நஞ்சைக் கக்கும் பாம்பினது ஐந்து முகமும் ஒன்றாகச் சேர்ந்து சிறுதலையுடைய பாம்பின் தலையை அடிப்பாகத்தில் அரிந்த உடனேயே கண்ணே காதாகக் கொண்டு கறையான் புற்றில் வாழும் பாம்பைப்போல ஒத்திருப்பதைக் காண்மின் காண்மின்.

**4.** **மைப்படியும் நறுங்குஞ்சி மாயை மாய**
**மாய்ந்தபடி வையம்எரி மருவ வேரில்**
**கப்புடனும் கிளையுடனும் மரம்நேர் ஆகக்**
**கரிசுஅறப்பட் டமைஒத்தல் காண்மின் காண்மின்.**

மைபோலக் கருத்து நறுமணத்துடன் விளங்கும் கூந்தலுடன் கூடிய பொற்புடைய பெண் நசிக்க, அப்பொய்யால் மாயை கொண்ட காரிய உலகம் அழிந்தது போல், மூலாதாரத்தில் நெருப்புப் பற்றிய உடனே, கப்பும் கிளையுமாய் இருக்கும் பெருமரமானது நேருக்கு நேர் பார்க்கும்போது, உலர்ந்து போனமைக்குச் சமமாக இருப்பதைக் காண்மின். காண்மின்.

**5.** **அவிழாத பிணியாக்கை உடைய அஞ்ஞன்**
**அழிந்தபடி தான்சாவ உலகம் எல்லாம்**
**கவிழாதோ என்னும்உரை யார்க்கும் ஏமற்கக்**
**கரமணிபோல் காட்டியவர் காண்மின் காண்மிண்**

கெடாத நோயால் கட்டப் பட்ட உடலோடு பொருந்திய அறியாமை நீங்கியது போல், அஞ்ஞன் அழிந்தது. நாம் பார்த்து இருக்க இவ்வுலகம் அனைத்தும் அழிந்தே விடும். கெடும் உலகு இது உண்டு என்றால் உண்டு, இல்லையெனில் இதனைக் கெடுத்தல் செய்வோம் என்று வசிட்டர் கூறிய மொழி, இவ்வுலகிலுள்ள அனைவரும் சம்மதிக்கும்படி உள்ளங்கை மணியெனக் காட்டிய தன்மையைக் காண்மின், காண்மின்.

**6.** **நெய்விட்ட கருங்குழலார் தம்பால் வைத்த**
**நெஞ்சுஒழிந்தார் ஐம்புலன்சேர் இன்பம் நேராக்**
**கைவிட்டார் ஒழியாஆ னந்த போகக்**
**காமுகராய் முடிந்தபடி காண்மின் காண்மின்**

நெய் தடவிய கூந்தலையுடைய பெண்கள் தம்மிடம் செலுத்திய மனம் மாறியவர்கள், ஐம்புலன் வழியே வந்த இன்பத்தை விட்டு அப்படியே நீங்கினார்கள். அக்கணமே தன்னை

விட்டு நீங்காத பேரின்ப வெள்ளத்தால் பேராசை கொண்டமையைக் காண்மின் காண்மின்.

**7. இணைப்புஅரிய பேர்இன்பம் தன்னில் மூழ்கி**
**இன்புறப்பட்டு எவ்விடத்தும் எக்கா லத்தும்**
**கணப்பொழுதும் இன்பம்இலா உடம்பர் இன்பம்**
**கைவிடநீத் தமைகாட்டல் காண்மின் காண்மின்.**

எவ்விடத்தும், மூன்று காலங்களிலும், சமம் இல்லாத பேரின்ப வெள்ளத்தில் திளைத்து, கணப்பொழுதும் இன்பம் என்பது கொஞ்சம் கூட இல்லாத மகளிரின்பத்தைக் கைநழுவியது போல் விடுபவரைக் காண்மின், காண்மின்.

**8. செற்றவர்கள் தம்முடனும் செறுதற்கு என்றும்**
**சிந்தைசெயும் திறன்மறந்து சிறப்பே செய்யக்**
**கற்றவர்தம் உடனான பிறப்பை எல்லாம்**
**கரிசுஅறுத்த பெரியசினம் காண்மின் காணிமின்.**

தம்மீது கோபம் கொண்டு பெரிய துன்பம் செய்தவர்களுக்கு எப்பொழுது துன்பம் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தின் தன்மையை மறந்து, மீண்டும் அவர்களுக்குச் சிறப்புச் செய்யும் தன்மையால், கற்க வேண்டிய கற்று அதன்படி நின்று ஆய்ந்தடங்கிய தன்மையால், அவர்பால் தோன்றிய பிறப்பனைத்தையும் மீதமின்றி அழித்த கோபம் என்பவன் இதோ இறந்து கிடக்கின்றான் காண்மின் காண்மின்.

**9. பழிப்புஆகி ஒருகாலும் இதுகொண்டு கௌவுற்ற**
**பயன்அற்ற பொருள்விட்டுஎலாம்**
**அழித்தாலும் அழியாத பொருள்பேணி இவர்உற்ற**
**வாராமை காண்மின்களோ.**

நிந்தையோடு கூடிய பேராசையை வைத்துத் தேடிக் கொண்ட ஒரு பயனும் இல்லாத பொய்யான செல்வங்களை நீக்கி, அழிக்க முயன்றாலும் ஊழிக் காலத்திலும் அழியாத பொருளைப் பேணி அடைந்த பெரியார்களது பேராசையைக் காண்மின், காண்மின்.

**10. ஓர்ஆக மேபண்டு வடிவுஎன்று இருந்தார்கள்**
**உணர்வுஅற்றும் ஒழிவுற்றதோ**
**நேராக வும்தங்கள் வடிவானது இவர்நேதி**
**நேதித்தல் காண்மின்களோ.**

முன்னர்ப் பொருந்திய ஒப்பற்ற தன் உடலே இயல்பான வடிவமென எண்ணி வாழ்ந்தார்கள். உடலுக்கு வேறாகத் தன்னை அறிந்திருந்தாலும், அது உடல்தான் அல்ல, சச்சிதானந்த வடிவமே என்றறிந்திருந்தும், கண்ணெதிரே தன் இயல்பான ஆன்ம வடிவத்தை வேறாக அறியும பொருட்டு, இது நானல்ல நானல்ல என்று தள்ளியதைக் காண்மின், காண்மின்.

**களங்காட்டல் நிறைவுற்றது**

## 27. கூழ் அடுவார்

1. இந்தக்க ளம்பட்ட பாட்டுக்குநேர்
ஒப்பி டத்தேடி டாதுஈசனார்
சந்திக்க இதுபட்டது ஒப்பப்பெ
ருங்கூழ்ச மைப்பாரை அழைமின்களோ.

ஞானவேந்தன் எதிர்ப்பட்ட மாத்திரத்தில் இந்தப் போர்க்களத்தில் அழிந்த அஞ்ஞ வேந்தனுக்குச் சமமான உவமை உண்டு. ஆனால் போர்க் களத்தில் நிகழ்ந்த செயல்களுக்கும், அஞ்ஞனது அழிவுக்கும் உவமை கூறிட இயலாது. ஏனெனில் அவர்களுக்கு அவர்களே சமம். எனவே இதற்கு வேறோர் உவமை தேடிடாமல் கூழ் சமைப்பாரை அதி விரைவில் அழையுங்கள் என்றனர்.

2. சாந்நீ உளவரு தாந்தீ வந்துஅடி தந்தார் திருவருள் தன்னோடே
மாந்தீ நல்அறி மாலாய் கூழ்அட வாரீர் கூழ்அட வாரீரே.

சாந்த குணத்தை உடையவளே, உள்ளத்தையும் ஐந்து புலன்களையும் அடக்கியவளே, இங்கு எழுந்தருளி வந்து குருமூர்த்தியின் இடமாகத் திருவருளைப் பருகியிருப்பவளே, நல்ல ஞான மயமான சாட்சி வடிவத்தில் மனம் கரைந்து, அதில் தானே மயங்கிக் கிடப்பவரே கூழ் சமைக்க வாருங்கள், கூழ் சமைக்க வாருங்கள்.

3. மேலா ரொடுமிகும் உறவீ தீவினை மிகுவா ரொடுவிடு துறவீஅம்
மாலா ரொடுவரு கருணாய் கூழ்அட வாரீர் கூழ்அட வாரீரே.

தம்போன்ற ஞானியர்களாகிய பெரியவர்கள்பால் அன்பு கொண்டு, நட்புடனும், உறவுடனும் வாழும் தோழியே. தாழ்ந்து போன குணங்களுடன் இழிதொழில் செய்யும் பாவிகளிடத்து விருப்பு வெறுப்பு இன்றிநீங்கியிருக்கும் பற்றற்றவளே. உலகம்சத்தியமானது என்றும் நாம் நிலையாய் இருப்போம் என்றும் எண்ணி, புண்ணியம் செய்வார்களிடத்தில் இரக்கமுடையவளே எல்லோரும் கூழ் சமைக்க வாருங்கள், கூழ் சமைக்க வாருங்கள்.

**பொறையே மிகவரு நிறைவீ புகழ்புனை**
**பொன்னீ அருளினை யுன்னீ அக்**
**குறையா நிறைவுஉறு திருவீ கூழ்அட**
**வாரீர் கூழ்அட வாரீரே.**

பொறுமை உடையவளே, உள்ளது போதுமென்று மன நிறைவுடன் இருப்பவளே, கழ்கொண்ட பொன்னியே, திருவருளைப் பெறக் கருதி மனக்குறைவின்றி முழுமையான சல்வம் பெற்றவரே, கூழட வாருங்கள், கூழட வாருங்கள்.

.

**முடிவேது இதுவரு முதலேது எனஒரு**
**மொழியால் அளவிட முடியாத**
**வடிவே அடைவதுஓர் மதியே கூழ்அட**
**வாரீர் கூழ்அட வாரீரே.**

இப்பொருள் தோன்றிடக் காரணம் எது? இப்பொருள் முடியும் இடம் எங்கே? என்று ஒப்பற்ற மொழியால் இவ்வளவினது என்று அளவிட்டுக் கூற இயலாத வடிவுடைய பரம்பொருளை அடைவது உறுதி என்ற எண்ணமுடையவளே கூழ் சமைக்க வாருங்கள், கூழ் சமைக்க வாருங்கள்.

6. **பணியே சூடிய அணியே பாடிய**
**பத்தீ வடிய சித்தீநிர்க்**
**குணியே கோமள மொழியே கூழ்அட**
**வாரீர் கூழ்அட வாரீரே.**

ஒழுங்கை அணியெனக் கொண்டவளே. நீங்காத அன்புடன் போற்றி வழிபாடு செய்பவளே, அறிவை வென்று அட்டமாசித்தியும் கைவரப் பெற்றவளே, முக்குண வயப்படாமல் இருப்பவளே, இனிய மொழியினை உடையவளே, கூழ் சமைக்க வாருங்கள், கூழ் சமைக்க வாருங்கள்.

7. **தன்போல் எவரொடும் அன்பே விளைவதுஓர்**
**தாயே பவம்எனும் மாயாஇவ்**
**வன்பே கெடவரும் அன்பே கூழ்அட**
**வாரீர் கூழ்அட வாரீரே.**

தன் ஆன்ம வடிவத்தில் வைத்திருக்கும் மிகுதியான அன்பு போன்று, தமக்கு வேறான மற்றவர்களிடமும் அன்பையே உண்டாக்கும் அம்மையே, பிறப்பென்னும் நீங்காத மாயையின் செயலான இப்பொல்லாங்கு நீங்க, எனது மேலான அன்புக்கு ஏதுவாய் இருப்பவளே கூழ் சமைக்க வாருங்கள், கூழ் சமைக்க வாருங்கள்.

**8.** **ஒருமை எனமுன் வகித்த சித்ரம் ஆகிய**
**உலக உரை அமைத்து உலக்கை யாகஇவ்**
**உலோகர் பழுவை ஒடித்துஒ டித்து நீள்எயிறு**
**உதிர்செய்து அரிசி புடைத்துஇ டித்து மேல்அவர்,**

**பெருமை முடியை அடுப்பு வைத்து மேல்உறு**
**பிணிசெய் உடல்க டத்துஉ லைச்செய்து ஆர்உயிர்**
**பெரிய இருளை நெரித்துஎ ரிப்ப தாய்வினைப்**
**பிதிர்செய்து அமிர்தம் இனிச்ச மைக்க வாருமே.**

ஒன்று என்று முன்னரே அமைத்து வைத்துப் பொய்யான உலகம் என்னும் அரைக்கல்லை அமைத்து, பெரியோர்களது முதுகெலும்பு என்னும் உலக்கையைக் கொண்டு, அவரது இருவினைகள் என்ற பற்களைப் பொடியாக்கி அரிசியாக ஆக்கி, தவிடும் உமியும் போம்படி முறத்திலிட்டுக் குத்தி, அகங்காரமான பெரிய தலையை அடுப்பாக்கி, நோய் குடி கொண்ட உடம்பாகிய பானையில், பொருந்திய உயிரை உலைநீராக வைத்து, அறியாமை மயக்கத்தைக் கெடுத்து, ஊழ்வினைகளைக் கொண்டு எரித்துப் பேரின்பமாகிய சாவா மருந்தை இனிச் சமைக்க வாருமே.

**9.** **பரவை உலகம்அ னைத்தும் உற்றுஎம் ஆர்உயிர்**
**படர்செய் உடலம் எடுத்துஅ ழித்து நோயொடு**
**பகலொடு இரவு பசித்துஇ ளைத்தி டாவகை**
**பவம்என் இருளை அறுத்துஉ தித்த சோதிசெய்**

**அரவ மறைகள் சிரத்து நிர்த்தம் ஆடிய**
**அரிய சொருபன் எனக்கு வைப்புஎன் ஆர்உயிர்**
**அமலர் அடியர் சிரத்தில் வைத்த மாமணி**
**அடிகள் பரவி உலக்கை குத்த வாருமே.**

கடல் சூழ்ந்த உலகனைத்து நெருங்கித் துன்பமுற்ற உயிர், பாவ புண்ணியங்களுக்கு ஈடாக அநேக உடல்களைத் தாங்கி வினை நீங்கக் கெடுத்து, இரவு பகல் பசியால்

இளைத்திடாவகை பிறவியைத் தரும் ஆசை என்னும் அறியாமை இருட்டை அகற்றிச் சோதி வடிவாய் விளங்கச் செய்து, ஒலிசெய்யும் வேதங்களே தலையாகக் கொண்டு விளங்கும் உபநிடதங்கள் என்னும் பாம்பில் நடனமாடிய திருமாலும் நான்முகனும் காண இயலாத சொரூபானந்த மூர்த்தியே எனக்குக் கிடைத்த புதையல் ஆவார். மும்மலங்கள் அற்ற அடியவர் திருக் கூட்டம் தம் தலையில் அணிந்து கொள்ளும் சிகாமணி. அந்த ஒளி பொருந்திய மங்களமான திருவடியைத் தொழுது வணங்கி உலக்கை கொண்டு இடிக்க வாருங்கள்.

**கூழடுவார் நிறைவுற்றது**

# 28. சும்முலக்கை

## முன்னுரை

கூழ் சமைப்பாரை அழைத்து, அவ்வாறு சமைக்க அரிசி தீட்டல் என்னும் உலக வழக்கம்போல் உலக்கை போடச் சொல்வது. அப்பொழுது குருமூர்த்தியின் புகழ் உரைப்பது.

**1. அருவரைஆ யிரம்சிரம்கொண்டு அருமறைகள் அறியாத**
**சொருபரையாம் கண்டனமே சும்மேலோ சும்உலக்காய்.**

தமக்கென ஒரு வடிவமின்றிப் பெருமை மிக்க இருக்கு முதலான நான்கு வேதங்களும், அவற்றின் தலையாய உபநிடதங்களும் ஆகிய ஓராயிரம் முகங்களும் காண இயலாத சொரூபானந்த சுவாமிகளை வணங்கினோம் எனக் கூறிச் சும்மு சும்மு என்று உலக்கை போடுவோம்.

**2. மாயவடி வளவாகி மதியிலியா யுழல்வேற்குத்**
**தூயவடி சூட்டினர்காண் சும்மேலோ சும்முலக்காய்.**

பொய்யான இந்த உடலை நான் என்று எண்ணி, அறிவின்றி வருந்துகின்ற எனக்குத் தம்முடைய தூய திருவடியை எம் தலைக்கு அணிகலனாகச் செய்தார். மும்மலங்களும் நீங்கும் பொருட்டுச் செய்தார் என்று கூறிச் சும்மு சும்மு என்று உலக்கை போடுவோம்.

**3. பின்னமொழி வகைபுரிந்துஎம் பெருங்கருணைப் பெருமானார்**
**சொன்னமொழி ஒன்றேகாண் சும்மேலோ சும்உலக்காய்.**

வேற்றுமைச் சொல்லின் தரம் அறிந்த எம் பெருமானாகிய பெருங்கருணையாளர் அருளிய சொல் ஏகம்தான் என்ற ஒன்றே என்று சொல்லிச் சும்மு சும்மு என்று உலக்கை போடுவோம்.

4. **நம்மாலே காண்கின்ற நாமும்போய் நாம்ஆகிச்
சும்மாவே இருந்தனம்காண் சும்மேலோ சும்உலக்காய்.**

நம்மாலே காணப்படும் பொருளாய், காமம் போய் ஞான மாகிய பொருளில் ஒடுங்கிச் சிவமாகி மௌன நிலையில் இருந்த தன்மையைக் காணுங்கள் என்று கூறித் சும்மு சும்மு என்று உலக்கை போடுவோம்.

5. **வான்துடங்கும் உலகுதனில் மன்னுசரா சரங்கள்எலாம்
தோன்றும்இடன் பிறிதுஉண்டோ சும்மேலோ சும்உலக்காய்.**

வானம் முதலாகத் தோன்றிய உலகில் பொருந்திய அசையும் பொருள், அசையாப் பொருள் யாவும் தோன்றுமிடம் தன் இயல்பு வடிவமான ஆன்மாவிற்கு வேறாக இல்லை என்று கூறிச் சும்மு சும்மு என்று உலக்கை போடுவோம்.

6. **உலகுஆகி உயிர்ஆகி உணர்வுஆகி ஒருபொருளே
துலங்காமை கண்டாயே சும்மேலோ சும்உலலக்காய்.**

உலகாகியும், உயிராகியும், உணர்வாகியும், ஒப்பற்ற பொருளாகியும், எல்லாமுமாய் இருந்தும் நம் அறிவுக்கு விளங்காது இருக்கின்ற தன்மையைக் கண்டாயோ என்று கூறிச் சும்மு சும்மு என்று உலக்கை போடுங்கள்.

7. **சாத்திரம்என் செயநமக்குத் தர்க்கமயல் அறுத்தபிரான்
தோத்திரமே அமையும்அது சும்மேலோ சும்உலக்காய்.**

மெய்யடியார்களாகிய நமக்குச் சாத்திரங்களால் என்ன பயன்? தருக்கம் மனமயக்கம் முதலியவற்றை நீக்கிய தலைவனாகிய குரு மூர்த்தியின் புகழைக் கூறும் பாக்களே போதும் என்று சொல்லிச் சும்மு சும்மு என்று உலக்கை போடுங்கள்.

8. **வல்லவகை பரன்அருளே வாயார வாழ்த்தாதே
சொல்லுவது பிறிதுஉண்டோ சும்மேலோ சும்உலக்காய்.**

குருமூர்த்தியின் பேரருளை இயன்றவகை வாயாரப் புகழ்ந்து பாடாமல் நாம் சொல்வதற்குப் பிறிதென்ன இருக்கின்றது என்று கூறிச் சும்மு சும்மு என்று உலக்கை போடுவோம்.

**9. சத்தம்ஆ திகளும்எலாம் தற்சொரூபம் ஆனபரி**
**சுத்தமாய் விட்டதுகாண் சும்மேலோ சும்உலக்காய்.**

ஒலி வடிவாய் அமைந்த அறுபத்து நான்கு கலைகள் அனைத்தும், தன் இயல்புவடிவான ஆசை நீங்கிய ஆன்மாவால் மிகத் தூய்மையாகி வட்டது பாருங்கள் என்று கூறிச் சும்மு சும்மு என்று உலக்கை போடுங்கள்.

## சும்முலக்கை நிறைவுற்றது

# 29. கூழ் சமைப்பு

1. **மிடைஇரு வினைகள் பற்கள் மேவரும் அறியார் பற்கள்**
**அடையவும் இடித்தீர் ஆகில் அடங்கவும் உலையுள் பெய்யீர்.**

நல்வினை தீவினை, அடைதற்கரிய ஆகாமிய சஞ்சித வினைகள் அனைத்தையும் இடித்து முடித்திருந்தால் அவையனைத்தையும் உயிர்நீர் உள்ள உடலாகிய பானையில் கொட்டுவீர்களாக.

2. **இழைக்கும்வல் வினைஎ ரித்துஇங்கு**
**எலும்புஎலாம் உருக்கி உள்ளம்**
**குழைக்கும்மெய்ப் பத்தி வந்து**
**குறைவுஅறக் குழைக்கச் சொல்லீர்.**

பிறப்பைத் தரும் கொடிய வினைகளை எல்லாம் அடுப்பில் வைத்து எரியச் செய்து, எலும்பு எல்லாவற்றையும் உருக்கி, மனத்தைக் குழையச் செய்து, உண்மையான அன்புடன் நன்கு குழையச் செய்வீர்.

3. **செப்பாதே பலவும் நின்று சிலுப்புஅற விருத்தி இன்பம்**
**தப்பாதே பதத்தைப் பார்க்கச் சாந்தியை இருத்திக் கொள்வீர்.**

அநேகம் சொல்லுதலை விடுத்துப் பேசாமல், கலகமற்ற உயிரின்பம் என்னும் நீங்காத பக்குவத்தைக் காணச் சாந்தியை எப்பொழுதும் நிலைபெற இருத்திக் கொள்ளுங்கள்.

4. **கனித னக்குநிகர் நெக்கு நெஞ்சங்கள்**
**கரைந்து கன்னலொடு பாலும்ஒத்து**
**இனிதின் இப்படிச் மைத்த போனகம்**
**எடுத்து மெத்தென இருத்துமே.**

நன்றாக முதிர்ந்து கனிந்து தானே சாறொழுகும் பழங்கள் போல் நெருப்பிலிட்ட வெண்ணெய்யெனப் பக்குவப் பட்ட மனங்கள் உருகிக் கரும்பின் சாறொடு பசுவின் பால் சேர்ந்ததைப் போல இனிமையாகப் பக்குவம் செய்யப் பட்ட உணவை எடுத்து அனைவருக்கும் மெதுவாக வையுங்கள்.

**கூழ் சமைப்பு நிறைவுற்றது**

## 30. கூழ் வார்ப்பு

1. **தண்மை ஆரும்வகை மீளும் ஆளுடைய**
**தம்பிரான் அரியதாள் கள்தாம்**
**உண்மை யால்உரிய அன்பர் இன்புறும்**
**உளக்க லங்களைவி ளக்கியே.**

சாந்தி கிடைக்கும்படி மீண்டும் நம்மை ஆட்கொண்டருளிய அடியவர் தலைவனின் காணுதற்கரிய திருவடியானது, மெய்யாக இதயத்தில் இருப்பதால் அன்பர்களுக்கு உரித்தானது ஆகையால் குருபுத்திர சிரோன் மணிகளால் இனிமையாய் அனுபவிக்க, உள்ளமாகிய வட்டில்கள் அனைத்தையும் நன்றாகத் துலக்கினர்.

2. **கடங்க ளோடும்உளம் ஆன மெய்ப்பரி**
**கலங்க ளோடும்உள ஆவிதான்**
**அடங்க நீஅமிர்து செய்க என்னவருள்**
**ஐயை தான்அமிர்து செய்யுமே.**

உடலாகிய பாண்டங்களுடனும், உள்ளம் முதலான நற்குணங்கள் என்னும் வட்டில்களோடும், எங்களது உயிர்த்தன்மை அனைத்தையும் தாயே நீ அமுது செய்தருள்க என வேண்டின.

3. **அணங்கு தன்திருவு ளப்ர சாதம்அது**
**அடைய வேநிறைய அயிலுவீர்**
**உணங்கு கின்றஉடல் ஆன பேய்களையும்**
**உடைய நீர்அழையும் உண்ணவே.**

தேவியின் திருவுள்ளமாகிய அருட்பிரசாதத்தைக் குறைவின்றி முழுதுமாய் நிறைய அருந்துங்கள். வாட்டமுடன் இளைத்து உடல் வறண்ட பிசாசுக் கூட்டங்களை வைத்திருக்கும் நீ அவற்றையும் உண்ண அழைப்பாயாக.

**4. வெந்த உடலம் விடும்பரிசு வீடு வினவி மிகப்பசித்து**
**வந்த பேய்க்குப் பசிதீர வாரீர் மெத்த வாரீரே.**

வெந்து போகும் இந்த உடலை விட்டுவிட்டு, அது நீங்குவதற்காக வீடு ஒன்றினையே விரும்பி, அதனை விரும்பிக் கேட்டு மிகப் பசித்து வந்த அதன் பசிதீர, அது வேண்டுமளவிற்கு அதிகமாக ஊற்றுங்கள்.

**5. நசித்தேன் இந்தக் கணத்துள்ளே நசியா வண்ணம் நல்குமிகப்**
**பசித்தேன் என்று பதைக்கின்ற பதைப்பைத் தணிக்க வாரீரே.**

அப்பொழுதே என்னைக் காப்பாற்றா விடில் உயிர்த்தியாகம் செய்து விடுவேன். கிடைத்தற்கரிய இந்த மனித உடல் வீணாய் அழிந்து போகுமுன் இப்பொழுதே கொடுத்து அருளுவீர். நான் மிகவும் பசித்துள்ளேன் என்னுடைய பதைப்பைத் தணிக்க வாருங்கள். வந்து நான் திருப்தி அடையும் வண்ணம் கூழ் ஊற்றுங்கள்.

**6. எட்டுக் கரும் முட்டுஅறச்செய்து எட்டுக் குணத்தோடு எழில்முத்தி**
**வட்டத்து இருக்கப் போம்ஊத்தை வாய்ப்பேய் தனக்கும் வாரீரே.**

ஞானத்திற்குரிய கருமங்கள் எட்டினையும் தடையின்றிச் செய்தபின் எட்டுக் குணங்களோடு, அழகிய வீடுபேற்று வட்டத்திற்குள் விரும்பிச் செல்லும் சுத்தமில்லாத வாயையுடைய பேய்களுக்கும் கூழை ஊற்றுங்கள்.

**7. ஒளிதங் கியமா மறைஓதி உள்ள பொருளை உணராதே**
**பளிதம் சுமந்த கழுதையாம் பனவப் பேய்க்கும் வாரீரே.**

ஒளி பொருந்திய வேதங்களை நன்கு கற்றும், அதில் கூறியுள்ள சிவபரம் பொருளை அறியாமல், கற்பூரம் சுமந்த கழுதை என்று கூறப்படும் அந்தணப் பேய்களுக்கும் ஊற்றுங்கள்.

**8. படித்து மறைகள் பொருள்படுத்திப் பயனின் எட்டிப் பாராதே**
**வடித்த கிளிபோல் வரும்மாயா வாதப் பேய்க்கும் வாரீரே.**

வேதங்களை நன்கு ஓதியும், அதன் மெய்ப்பொருள் அறிந்திருந்தும் அதன் பயனை அறியாமல் சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை போன்று பிறருக்கு எடுத்தோத வரும் மாயா வாதப் பேய்க்கும் கூழை ஊற்றுங்கள்.

**9. வேதா கமங்கள் சொன்னபொருள் மெய்ம்மை அறிவார் போலிருந்து**
**பேதா பேதம் சாதிக்கும் பெரும்பேய் தனக்கும் வாரீரே.**

இருக்காதி நால் வேதங்களும், காமிகம் முதலான இருபத்தெட்டு ஆகமங்களும் சொன்ன பொருள் ஆன சிவபரம்பொருளையும் அதன் உண்மைத் தத்துவங்களையும் தெரிந்தவர்களைப் போல் இருப்பவர்கள், ஓரிடத்தில் வேறுபாடும், இன்னோரிடத்தில் வேறுபாடின்மையும் நிலை நாட்டிப் பேசும் பெரிய பேய்களுக்கும் கூழை ஊற்றுங்கள்.

**10. சுத்தப் பிரமம் அதுநிற்கத் தொள்ளைச் செவியில் உணவுஆன**
**சத்தப் பிரமம் என்றுஓதும் சனப்பேய் தனக்கும் வாரீரே.**

தூய பொருளாகி நீக்கமற எங்கும் நிறைந்திருக்கும் அதனை விடுத்துத் துவாரத்துடன் உள்ள காதிற்கு உணவாக ஒலி வடிவில் உபதேசம் செய்வதே பொருள் எனக் கூறும் மூர்க்கத் தனமான வையாகரணியர் என்னும் பேய்களுக்கும் ஊற்றுங்கள்.

**11. பணிப் படுவார் உள்இருக்கும் பரதே வதையைப் பாராதே**
**மணியைத் துலக்கிக் கிணுகிணென வரும்பேய் தனக்கும் வாரீரே.**

பணிகின்றவர் இதயத்துக்குள்ளே இருக்கும் மேலான தெய்வத்தை வணங்காமல், மணியைத் துலக்கி மாசு நீக்கிக் கிணு கிணு என்று ஒலி எழுப்பிக் கொண்டு வரும் பேய்களுக்கும் கூழை ஊற்றுங்கள்.

**12. ஞானம் போலே பலசொல்லி நாடற்கு அரிய முத்தியினும்**
**தானும் சிவனும் பாசமும்என் சைவப் பேய்க்கும் வாரீரே.**

ஞானம் உதயமானது போல அநேகம் கருத்துக்களைக் கூறியும், மனத்தாலும் நினைக்க முடியாத, வீடுபேற்று நிலையிலும உயிரும், பதியும், பாசமும் உண்டு என்று கூறும் சைவப் பேய்க்கும் கூழை ஊற்றுங்கள்.

**13. துரியா தீதம் பதினாலில் தோன்றி எவர்க்கும் தோன்றாத**
**பெரியார் தம்மை நான்என்னும் பிரமப் பேய்க்கும் வாரீரே.**

நனவு, கனவு, துயில், சொரூபநிலை, தேகம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற ஏழு சர்வேஸ்வரன், சர்வக்ஞன், சர்வவியாபகன், சர்வகாரணன், சர்வசிருஷ்டி, சர்வதிதி, சர்வசம்மாரம் என்ற ஏழு ஆகப் பதினான்கு

அவத்தைகளில் தோன்றியும் தனக்குத் தானாக விளங்கியும் எவர்க்கும் தோன்றாத, குருபக்தி இல்லாதவர்களால் அறிய முடியாத பெரும் பொருள் நானாக இருக்கின்றேன் என்று சொல்லும் பிரமப் பேய்க்கும் கூழை ஊற்றுங்கள்.

**14. வெறுவாய் கொண்டு மென்றுமன விகாரம் கொண்டு சிலபிதற்றிப்
பெறுவார் அன்றி முத்திபெறும் பிடகப் பேய்க்கும் வாரீரே.**

மந்திரத்தை மனத்தில் வைத்துக் கொண்டு வெறும் உதடுகளை மட்டும் அசைத்துக் கொண்டு மாறுபட்ட மனத்துடன் சிலவற்றைப் பிதற்றி வீடு செல்ல விரும்பும் பௌத்தப் பேய்க்கும் கூழை ஊற்றுங்கள்.

**15. உடலை விடுகை முத்திஎன உரைத்த உண்மை உணராதே
முடலை உடலை நான்என்னும் முழுப்பேய் தனக்கும் வாரீரே.**

உடலை விடுவதே சொர்க்கம் என்பதை உணராது துர்நாற்றம் பொருந்திய உடலைத் தானென மதித்து அதனை அலங்கரித்துப் பார்க்கும் பெரிய பேய்க்கும் கூழை ஊற்றுங்கள்.

**16. தியக்கந் தீர்வார் நன்முத்தி சேர்வார் என்னுந் திறங்கேட்டு
மயக்கஞ் செய்யும் வாமப்பேய் வாய்க்கே நெருப்பை வாரீரே.**

துன்பம் தீர்ந்து நல்ல வீடு பேற்றை அடைவார் என்ற தன்மையைக் கேட்டு, நம்மை மயக்கத்திலாழ்த்தும் வாமப் பேயின் வாயில் நெருப்பை ஊற்றுங்கள்.

**17. அச்சந் ததிகள் எல்லாமாய் அல்லாது இருக்கும் அறிஞரையும்
எச்சந் ததியும் தமக்கேஎன்று இயம்பும் பேய்க்கும் வாரீரே.**

இதுவரை கூறிவந்த சந்தானங்கள் அனைத்துமாய் இருப்பதும், அவை இல்லாது இருப்பதுவுமான ஞானியையும், எப்படிப்பட்ட திறமையுடையவர்கள் ஆயினும், அவைகள் அனைத்தும் தமக்கே என்று கூறும் பேய்களுக்கும் கூழ் வார்ப்பீர்களாக.

**கூழ்வார்ப்பு நிறைவுற்றது**

## 31. தோத்திரமாகிய குணலை வாழ்த்து

1. **நின்ம லன்கருணை யாய்அ டங்கிடவும்**
**நெஞ்சுஇ றத்திடநி னைந்தபின்**
**பொன்ம லர்ந்தஇரு தாளின் நல்லஅருள்**
**புகழு வாரும்உளம் மகிழவே.**

மும்மலம் அற்றவனது கருணை நிறைத்திருக்கவும், கண்ணுக்குத் தெரியும் மனம் அழிந்து, பின் நுண்மனத்தால் எண்ணி, பொன்மலர் போன்ற இணையடிகளில், தூய திருவருள் காரணமாகச் சிந்தை மகிழும்படி, வீடு பேற்றை விரும்புகின்ற சாதுக்களான நாம் அனைவரும் போற்றித் துதிப்போம் வாருங்கள்.

2. **பாவிடை நூல்படு சிந்தையினில்**
**பதைப்புஅற வந்தப ராபரனார்**
**சேவடி தந்தமை பாடீரே**
**செய்ய கருணையைப் பாடீரே.**

நெய்யும் தறியின் ஊடே அங்கும் இங்குமாக ஓடிச் சலிப்பது போல் சலிக்கும் மனத்துடிப்பு அடங்கும்படி எழுந்தருளி வந்த மேலான பரம்பொருள், சேவடிகளை நமக்குத் தந்தமையைப் பாடுங்கள், அவனது செம்மையான அருளைப் பாடுங்கள்.

3. **மீட்டவி ரகினைப் பாடீரே**
**விளம்பியது ஒன்றுஎன்று பாடீரே**
**நாட்டஅ ருளினைப் பாடீரே**
**ஞானவி நோதனைப் பாடீரே.**

எப்பொழுதும் புறச்செய்திகளைப் பற்றி அலைந்த நம்மை மீட்டு அருள் செய்த திறமையைப் பாடுங்கள். திருவருளில் நம்முடைய நாட்டம் பதியுமாறு செய்த ஞான வினோதனின் புகழ் சொல்லிப் பாடுங்கள்.

4. என்னைஒ ழித்தமை பாடீரே
என்உயிர் உண்டமை பாடீரே
தன்னைஅ ளித்தமை பாடீரே
தத்துவ நாதனைப் பாடீரே

என்னைவிட்டு நீங்காத அகங்காரத்தினை அழியச் செய்த தன்மையைப் போற்றிப் பாடுங்கள். என் உயிர்த்தன்மையை உண்ட அருளாற்றலை நினைந்து பாடுங்கள். யானே நீ என்னும் இயல்பான சச்சிதானந்த வடிவத்தை எனக்கருளிய தன்மையைச் சொல்லி பாடுங்கள்.

5. துன்னிநி றைந்துஒழி யாது நின்ற
சொரூபா னந்தச் சுடர்வையம்
தன்னில்ந டந்தமை பாடீரே
தான்எனை ஆண்டமை பாடீரே.

எல்லா இடங்களிலும் நீக்கமற் நிறைந்து பரந்திருக்கும் சுயம்பிரகாச வடிவினர், இவ்வுலகு புனிதமுற எழுந்தருளி வந்த கருணையைப் பாடிப் போற்றி வணங்குங்கள். தானே வலிய வந்து என்னை ஆட்கொண்ட தன்மையைப் பாடுங்கள்.

6. ஞானமும் ஞேயமும் நானும்என்று
நாடிட ஒன்றுஇன்றி நின்றதுநாம்
ஆன முழுநலம் பாடீரே
அவ்வதுஇல் லாமை பாடீரே.

அறியவன், அறிவு, அறியும் பொருள் என்று நாடிட, ஞாதா, ஞானம், ஞேயம் என்ற திரிபுடி தோற்றம் நீங்கி எதுவும் இல்லாமல் இருந்தது, காண்பான், காட்சி, காணப்படு பொருளின்றி நின்ற துரிதத்தில் நாமாக விளங்கிய முழுநலத்தைச் சொல்லி வணங்குவீராக, அதுவன்றி வேறு தோற்றம் அற்ற தன்மையையும் பாடி வணங்குங்கள்.

7. மதிஇலி யாஉழல் கின்றநம்மை
மானுடன் ஆய்அவன் ஆளவந்த
அதிசய மேநினைந்து ஆடீரே
ஆர்த்துஎழுந்து ஆர்த்துஎழுந்து ஆடீரே.

புத்தி இல்லாது துன்பப்படும் நம் போன்ற பக்குவம் அற்றவர்களையும், அந்தக் குருநாதன் ஆட்கொள்ளும் பொருட்டு, மானிட வடிவில் வந்து அருளிய அதிசயத்தை நினைந்து பாடுங்கள். ஆனந்த மேலீட்டால் ஆப்பரித்து ஆப்பரித்து ஆடுங்கள்.

**8.** **என்றுஇவை யேமிகப் பாடிப்பாடி**
**எழுந்துவி ழுந்துஎழுந்து ஆடிஆடி**
**நன்றித ரும்கணம் ஆனதுஎல்லாம்**
**நாநாவி தம்பட நட்டம் இட்டே.**

மேற்கூறியவண்ணம் இவ்வாறு பாடித் துதித்து, எழுந்தும், விழுந்தும், இருந்தும், மேற்கிளம்பியும், குதித்தும் ஆடியாடிச் செய்ந்நன்றி மறவாத பேய்க் கூட்டங்கள் அனைத்தும் பலவிதமாக நடனம் செய்தன.

**9.** **வரவுசெலவு உறுபழைய வழிஒழிய மொழியும்**
**குரவன்அடி பரவியிடு குணலைபல பலவே.**

செய்த வினைக்கு ஈடாகப் பிறப்பதும், அவை முடிந்தபின் இறப்பதும் ஆன என்றும் உள்ள பழையவழி நீங்கும்படி உரைக்கும் குரு நாதனது திருவடியை வணங்கும் பேய்க்கூட்டங்கள் அநேகம் உள்ளன.

**10.** **உரைகழிய உளம்அழிய உணர்வுஅழிய அணையும்**
**குரைகழல்கள் பரவியிடு குணலைபல பலவே**

சொல்லுக்கு அப்பாற் பட்டதும், உள்ளத்தால் கருத முடியாததும், உணர்வு அழிந்தபோது, நம்மை அணையும் ஒலிக்கின்ற கழல் அணிந்த திருவடிகளைப் போற்றி வணங்கும் சாதுக்களாகிய பேய்க்கூட்டம் அநேகமுள்ளன.

**11.** **மதமதென விழிசொரிய மயிர்புளகம் வரவே**
**குதுகுதென உளம்உருகு குணலைபல பலவே**

கண்கள் மதமதென நீர் சொரிய உரோமம் சிலிர்த்துப் புல்லரிக்கவும் விருப்பத்தோடு மனமகிழ்ச்சியால் உள்ளம் நெகிழ்ந்திருக்கவும், கூத்தாடிக் கொண்டிருக்கும் பேய்கள் பலவாகும்.

12. **கொடியபவம் முடிவுசெய்த குரைகழல்கள் பரவா**
**முடியஇவர் இடுகுணலை மொழியமுடிவு இலதே.**

துயர்தரும் கொடிய பிறப்பு நீங்குமாறு அருள் செய்யும் கழல்கள் ஒலிக்கின்ற திருவடியை வணங்கி எல்லா இடங்களிலும் இக்கொடிய பேய்க் கூட்டங்கள் செய்யும் கூத்தினை இயம்பிட இயலாது.

13. **பிணக்குஉறு மாறுச மயங்கத்திப்**
**பேர்இருள் சேர்மனங் கொண்டுநின்று**
**கணக்கிடு மாறுத விர்த்தபிரான்**
**கழல்இணை பாடிக் களித்தனரே.**

மாறுபட்ட கொள்கையுடைய அறுசமய வாதிகளும், பேரிருளான அறியாமை இருள் வந்த மூடிய மனத்தினராய், அவர்கள் கூறும் மாறுபட்ட இலக்கணங்களை மாற்றிய நமது தலைவனின் கழல் ஒலிக்கும் திருவடிகளைப் பாடி வணங்கி மகிழ்ச்சியுடன் இருந்தார்கள்.

14. **பாசமலம் அறஅருளு பார்வையான் வாழியே**
**பாடுமறை முடிவில்நடம் ஆடுவான் வாழியே**
**வாசமலர் எனமுழுதும் மேவினான் வாழியே**
**மாகர்அறிவு அரியஇரு தாளினான் வாழியே.**

தொன்று தொட்டு நம்மை மறைத்திருந்த ஆணவ மலமாகிய இருள் நீங்கிட அருட்பார்வை காட்டிய குருபரன் வாழ்க. மணம் நிறைந்த மலர்களைப் போல எங்கும் நிறைந்திருப்பவன் வாழ்க. தேவர்களாலும் காண்பதற்கரிய இருதாளுடையவன் வாழ்க.

15. **கோசமொடு முழுதும்அற நூறினான் வாழியே**
**கூறவிரகு அரியமொழி ஓதினான் வாழியே**
**நாசம்அறும் அறிவுஉ ருவம் ஆயினான் வாழியே**
**நாடில்அது கழலநிகழ் மேனியான் வாழியே.**

அன்னமய கோசம் முதலாக ஆனந்தமய கோசம் ஈறாகச் சொல்லப் பட்ட பஞ்ச கோசங்களுடன் அஞ்ஞானம் முதலிய அனைத்தும் நீங்கச் செய்தவன் வாழ்க. எவராலும் இன்னதெனச் சொல்வதற்கு இயலாத ஒப்பில்லாத ஒரு மொழியை உபதேசித்தவன் வாழ்க. என்றும் அரிய அறிவுருவமானவன் வாழ்க. ஆராயும் போது அச்சுட்டு ஞானமும் நீங்கிய ஒளி விளங்கும் வடிவுடையான் வாழ்க.

**16. நினையும் ஆறது இன்றி நின்றுஇ லங்கு சோதி வாழியே**
**நேச மொடும் ஈசன் என்ன நெஞ்சுஇ லாத வஞ்சனாம்**
**எனையும் நீதி அன்ப ரோடு வந்த நாதன் வாழியே**
**என்னை ஆள வந்த கோலம் என்றும் வாழி வாழியே.**

இன்னதெனக் கருத இயலாதபடி நின்று விளங்கும் சோதியே வாழ்க. மிகுந்த அன்போடு இவனே இறைவன் என்று மனத்தில் கொள்ளாதவனும், வஞ்சகனுமான என்னையும், நீதி தவறாத அடியவர்களோடும் என்றும் தன்னை விட்டுப் பிரியாத பழவடியார்களுடனும் என்னை ஆட்கொள்ளும் பொருட்டு எழுந்தருளி வந்த தலைவன் வாழ்க. என்னை ஆட்கொள்ளச் சொரூபானந்தர் என்ற கோலத்துடன் வந்தவர் என்றும் வாழ்க.

**17. பந்த பாசம் வேரொடும் பறித்து வீழ என்முடி**
**தந்த பாதம் வாழியே சமைந்த பார்வை வாழியே.**

அகப்பற்று, புறப்பற்று ஆகிய பந்த பாசங்களை மூலத்துடன் பறித்து என் பழவினைகள் நீங்க என் தலைக்கு அணிவித்த திருவடி வாழ்க. நான் ஈடேறக் காட்டிய அருட்பார்வை வாழ்க.

**18. வைத்த வைத்தகண்அ ழித்தஅடி வாழியே**
**வைப்புஇ லாதகண்அ ளித்தஅடி வாழியே**
**எத்தி முத்தியருள் ஈசன்அடி வாழியே**
**என்னை ஆளுடைய எந்தைஅடி வாழியே.**

இந்திரியங்களின் மேல் சென்ற கண் பார்வையை நீக்கிய திருவடி வாழ்க. நாம ரூபங்களைப் பற்றாத புத்தியில் பற்றாவிடத்து அருளிய திருவடி வாழ்க. தாளால் உதைத்து என்னை உலகத் தொடர்பினின்றும் விடுவித்துத் திருவடி காட்டிய ஈசன் வாழ்க. என்னையும் ஆட்கொண்டு அடியார் நடுவில் இருக்கச் செய்த எந்தை திருவடி வாழ்க.

**19. சுத்தம றைதொடர்ந்த தாளினான் வாழியே**
**துற்றிவரும் பெரும்பவ நாசன்நீ வாழியே**
**தத்துவ நெறிதிறந்த சேவகன் வாழியே**
**தர்க்கச மயம்கண்ட மாருதன் வாழியே.**

தூய வேதங்கள் தொடர்ந்த திருவடியை உடையவன். தொடர்ந்து வரும் பிறவியை நீக்கியவன் நீ ஆதலால் வாழ்க. உண்மை வழி காட்டிய தொண்டனே நீ வாழ்க. நியாயநூல் கூறும் ஆதிசேடனுடன் வாதிட்டுக் கைலை மலையைப் பறித்து வீசிய பெருங்காற்றைப் போல் வலிமை கொண்ட குருநாதனே நீ வாழ்க.

**20.** **வாழிதம் குருபரன் மெய்ப்பத்தர் ஆனவர்**
**வாழிமறை துணிபொருள் சித்தித்து வாழ்பவர்**
**வாழிபர மானந்தம் தித்திக்க வாழ்பவர்**
**வாழிசொரு பானந்தன் தத்துவப்ர காசனே.**

நம் குருமூர்த்தியின் உண்மைத் தொண்டர்கள் வாழ்க. வேத முடிவான உபநிடதங்களில் நிச்சயித்துக் கூறிய பேரின்பத்தை அடைந்து மகிழ்ந்திருக்கும் ஞானிகள் வாழ்க. மேலான ஆன்மசுகம் பெற்றவர்கள் வாழ்க. உண்மை ஒளியாய் விளங்கும் சொருபானந்தன் என்னும் தத்துவ ஒளியானவன் வாழ்க.

## தோத்திர மாலையாகிய குணலை வாழ்த்து நிறைவுற்றது

## ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் எழுதிய அஞ்ஞவதைப் பரணிக்குரிய பொருள் நிறைவுற்றது

ஸ்ரீ தத்துவராய சுவாமிகள்

மொழிபெயர்த்தது

# ஈசுவர கீதை

(கூர்ம புராணத்தில் உள்ளது)

உ

சிவமயம்

# ஈசுவர கீதை

## (கூர்ம புராணத்தில் உள்ளது)

## மொழி பெயர்த்தவர் ஸ்ரீ தத்துவராய சுவாமிகள்

## பாயிரம்

1. பூதம் ஐந்தோடு இரவிமதி
புருடன் ஆகிப் புணர்ந்துஎன்றும்
பேதம் இல்லா அறிவுஉருவாய்
பிறங்கு கின்ற பேர்ஒளியோன்
ஆதி மூவர்க்கு அறிவுஅறியேன்
அரிவை பாகன் ஆம்அமலன்
பாத பங்க யங்கள்தலை
வைத்தே பணியும் பரிசினனால்.

மண், விண், காற்று, நீர், தீ எனப்பட்ட ஐம்பூதங்களோடு வேறுபட இயலாத அறிவு வடிவமாகியும் விளங்குகின்ற பேர் ஒளியுடையவனும், முதன்மை பெற்ற நான்முகன், திருமால், ஆகிய மும்மூர்த்திகளால் அறியப்படாதவனும், உமையவளை இடப்பாகம் கொண்டவனும், குற்றமற்றவனும் ஆகிய பரமனது திருவடித் தாமரைகளைத் தலைவைத்து வணங்கும் தன்மையை உடையவனும் ஆவான் பரம்பொருள். இப்படிப்பட்ட பரம்பொருளை வணங்கிடுவோம்.

2. இலங்கிய மறைகள் நான்கும்
இயம்புதற்கு இயலாது என்ன
மலங்கிய சிந்தை யோடு
வானவர் மூவர் நிற்க
விலங்குஇயல் அனைய என்னை
வேதகம் செய்துஎன் உள்ளே

**துலங்கிய சொரூபா னந்தன்**
**துணையடி தொழுதல் செய்வாம்.**

விளங்கிய வேதங்கள் நான்கும் சொல்லுதற்கு இயலாது எனவும், தேவர்களும், மும்மூர்த்திகளும் கலக்கமுடைய மனத்தோடும் இருக்க, விலங்குக்குச் சமமான அறிவுடைய என்னை உபதேச மொழிகளால் மாற்றி என் இதயத்தின் கண்ணே விளங்கும் சொரூபானந்த சுவாமிகள் திருவடியை வணங்குவாம்.

3. **முன்மதி அணிந்த செக்கர்நன் மவுலி**
**முதல்வனே என்னமுன் நின்று**
**நன்மதி முனிவர் கேட்பஅன் போடு**
**நல்கிய நான்மறைப் பொருளைப்**
**புன்மதிச் சொலவும் பொருளும்ஒன்று உணரேன்**
**போதகம் செயப்புகும் இதுகண்டு**
**என்மதி எனக்கே நகைசெயும் ஆனால்**
**ஏதிலார்க்கு என்செயாது இதுவே.**

பிறைமதி அணிந்த சிவந்த ஒளி பொருந்திய சடையினை உடைய முதல்வனே என்று திருமுன் நின்று நன்மதிசேர் முனிவர்கள் வினவிட, அன்புடன் உரை செய்த நான்மறைப் பொருளைஅற்ப புத்தியையுடைய அடியேன் சொல்லுதற்கு உரிய பொருள் ஒன்றும் உணரேன். அறியாதவனாகிய நான் உபதேசம் செய்யப் போகும் இந்நிலை கண்டு எனக்கே சிரிப்பு வருமாயின், மற்றவர்க்கு ஏன் இது நகைப்புக்கு இடம் ஆகாது.

4. **சிவன்திரு உருவு கொண்டுமுன்பு அருளிச்**
**செய்ததுஓர் புராணம் ஆதலினால்**
**சிவன்தனை அளித்த பரன்திரு நாமம்**
**சிவப்பிர காசமாம் அதனால்**
**சிவந்தசெந் தமிழால் யார்க்கும்இந் நிலத்தே**
**சிவம்தனைத் திகழ்ந்திடும் தெளிவால்**
**சிவன்தனக்கு உரியது ஆதலால் நாமம்**
**சிவப்பிர காசம்என்று உரைப்பாம்.**

சிவன் திருவுருக் கொண்டு எழுந்தருளி வந்து முன்பு கூர்ம நாராயணருக்கு அருளிச் செய்த ஒப்பற்ற புராணம் ஆதலினாலும், சிவனையே கொடுத்த ஆசிரியரின் அழகிய பெயர் சிவப்பிரகாசம் என்பதனாலும், அனைவர்க்கும் சிறப்பான செந்தமிழால்

இந்நிலத்தில் சிவனை விளக்கும் தன்மையினாலும், சிவனுக்கே உரித்தாயது ஆனதாலும் இந்நூலின் பெயர் சிவப்பிரகாசம் என்று உரைப்போம்.

## 1. இருடிகள் வினவும் அத்தியாயம்.

1. **பிரமர்அண் டங்கள் படைத்தஅப் பரிசும்**
**பெருமையும் மனுக்கள்எல் லைகளும்**
**வரம்உற உரைத்தாய் வளம்பெற அதிலே**
**வாய்மையால் வருணம்நான் கினினும்**
**தருமதற் பரர்ஆய் ஞான யோகத்தே**
**சாலஆ தரிப்பவர் தம்மால்**
**திறம்உறப் பரவும் தேவதே வர்க்கும்**
**தேவன்உண்டு என்று செப் பினையால்.**

பேருலகங்களை உண்டாக்கும் அத்தன்மையினையும், பெருமையையும், அந்தந்த மனுக்களின் எல்லைகளையும், சிறப்பாய் உரைத்தீர். வளம் பொருந்திய அதில் வாய்மையால் நான்கு வருணத்தவரும் தருமங்களைக் கடைப்பிடிப்பவராய் ஞான யோகத்தினை மிகுதியாக ஆதரிப்பவர்களால் திறமாகப் பொருந்திப் பரவும் தேவாதி தேவர்களுக்கும் தேவனாகிய பொருள் இருக்கின்றது என்று கூறினீர்.

2. **நாதன்ஆய் அரிய நான்மறை தெரிந்து**
**நன்னெறி அளிக்கும்நா ரணன்ஆம்**
**ஆதவ முனிபால் அறிவுஎலாம் அறிந்தாய்**
**ஆதலால் அரும்பரம் திகழ்த்தி**
**ஏதம்ஆர் பிறவி அறுப்பதாம் ஞானம்**
**ஏதுஅது இயம்புவாய் என்று**
**சூதமா முனியைச் சௌநகன் முதலாம்**
**தொல்மைமா முனிவர்கள் சென்னார்.**

தலைவனாகி அறிதற்கரிய நால் வேதங்களை உணர்ந்து நல்ல வழியை உபதேசிக்கும் நாராயணன் அம்சமாகிய மிக்க தவமுடைய வியாச பகவானிடத்து அறியத் தக்க அனைத்தையும் அறிந்துள்ளீர். ஆனபடியால் அருமையான இறை பற்றி விளக்குவீர். குற்றமுள்ள பிறவியை நீக்குவதாகிய ஞானம் எதுவோ அதனை இயம்புவீரெனச் சூத முனிவரைப் பார்த்துச் சௌநகன் முதலான பண்டைய முனிவர்கள் சொன்னார்கள்.

3. சூத மாமுனி முனிவர்கள்
சொன்னவா கேட்டுப்
போதம் ஆம்நெறி அளித்தநல்
புராணனை நினைவுற்று
ஓது வான்ஒருப் படஅவன்
தனக்குஉணர்வு அளித்த
நாதன் ஆகிய வியாதனும்
உறைவிடம் நடந்தான்.

சூத முனிவரும், சௌனகாதி முனிவர்கள் கூறியவற்றைக் கேட்டு ஞான நெறியினை உரைத்த நல்ல பண்டைப் பெருமை வாய்ந்த குருர்த்தியாகிய வியாச பகவானை நினைந்து சொல்லுவதற்குச் சம்மதிக்க, அந்தச் சூத முனிக்கு ஞான நெறியுரைத்த தலைவனாகிய வியாச முனியும் தான் இருக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தான்.

4. கார்முகில் போலும் மேனிக்
கமலமா மலர்போ லும்கண்
ஏர்மிகு முனியை எல்லா
முனிவரும் இறைஞ்சச் சூதன்
பார்மிசைத் தெண்டம் பண்ணிப்
பன்முறை வலமாய் வந்து
கூர்மிகும் அன்பில் சென்னி
குவித்தகை யோடு நின்றான்.

கரிய மேகம் போன்ற உடலும், பெரிய செந்தாமரை மலர் போன்ற கண்களும் உடைய, அழகிய வியாச பகவானை, சௌனகாதி முனிவர் அனைவரும் வணங்கிட, சூத முனிவர் பூமியின் மீது விழுந்து தண்டனிட்டு வணங்கி, பலமுறை வலம் வந்து மிகுந்த அன்புடன் தலை மீது கூப்பிய கையுடன் நின்றார்.

5. அருந்தவத் தோர்கள் எல்லாம்
அநாமயம் உரைத்து அவர்க்குப்
பொருந்தும்ஆ தனம்கற் பிக்கப்
பூசுரர் முகங்கள் நோக்கி
இரும்தவம் கல்வி கேள்விக்கு
இல்லையே இடையூறு என்று

**பெருந்தகை உரைத்தான் சூதன்**
**பின்னரும் வணங்கிச் சொல்வான்.**

அரிய தவமுடைய சௌனகாதி முனிவர்கள் அனைவரும் வியாச பகவானிடம் நலம் விசாரித்து, அவருக்குப் பொருந்துமாறு தக்க இருக்கை ஒன்று அமைத்திட, பெருமை பொருந்திய வியாச முனி அதன்மேல் இருந்து கொண்டு முனிவரது முகங்களை நோக்கித் தவம் செய்தற்கும், கல்வி கேள்விகளில் ஈடுபடுதற்கும் ஏதும் இடர் இல்லையே எனக் கேட்டனர். அதன்பின் சூத முனிவர் மீண்டும் சொல்வராயினர்.

6. **இத்தபோ தனர்கள் சாந்தியால் அறத்தால்**
**இறந்தவர் இறைஇயல்பு அறிவான்**
**பத்தர் ஆனவர்கள் ஏவலே செய்யும்**
**பாவகம் பிறந்தன எவர்க்கும்**
**அத்தன்ஆம் அரிபண்டு ஆமையாய் முனிகட்கு**
**அருளியது ஏதுஎனக்கு அளித்த**
**சுத்தஞா னத்தை இவர்களுக்கு அருளால்**
**சொல்எனத் துணைஅடி தொழுதான்.**

தவத்தையே தனமாய்க் கொண்ட முனிவர்கள், சாந்தி வழியிலும் தர்மத்திலும் மூழ்கியிருப்பவர். இறைவனது நிலைத்த தன்மையை உணரும் பொருட்டுப் பக்தியுடையவர்கள். அனைவருக்கும் பணிவிடை செய்யும் தூயதன்மை உடையவர்கள். ஆகையால் தலைவனாகிய திருமால், முன்பு ஆமையவதாரமாக (கூர்ம நாராயணர்) இருந்து முனிவர்களுக்கு உரைத்து அருளியது எதுவோ அந்த இறையறிவை எனக்கு உரைத்தருளிய தாங்கள் அந்த இறையறிவைச் சௌனகாத முனிவர்களாகிய இவர்களுக்கு உரைத்திடுவீர் என்று இரு திருவடிகளிலும் வீழ்ந்து வணங்கினார் சூத முனிவர்.

7. **சொன்ன வாசகம் உளம்கொ ளாஇறைது**
**ணைப்ப தங்தளைநி னைந்துதன்**
**சென்னி யால்உறவ ணங்கி விண்ணவர்கள்**
**தேவனும் பரவு தேவனே**
**முன்னொர் நாள்மிகுச நற்கு மாரன்முதல்**
**முனிவர் கட்குஉலகின் மூலம்ஆம்**
**தன்னை ஆர்அருளின் ஓதி னான்இனிது**
**கேண்மின் என்றுமுனி சாற்றினான்.**

சூத முனிவர் சொன்ன வாக்கியத்தை உளங்கொண்டு இறைவன் திருவடிகளைத் தன் தலையமுந்த வணங்கி, தேவர் தலைவனாம் இந்திரனும் போற்றும் கடவுளே, முன்னொரு காலத்தில் மிகுந்த பக்தியினை உடைய சனற்குமாரன் முதலான முனிவர்களுக்கு உலகின் மூலமாகிய தன்னை மிகுந்த கருணையால் இனிது உரைசெய்தானோ, அதனை ஒருமித்த மனத்தோடு கேளுங்கள் என்று வியாச பகவான் சொல்லினான்.

**8.** **தலைமைசேர் சனற்கு மாரன்**
**சநந்தனன் சநகன் வெள்ளி**
**அலைவுஇலா உருத்தி ரன்தான்**
**அங்கிரா வாமதேவன்**
**கலைதெரி பிருகு யோகி**
**கபிலன்அத் திரிக ணாதன்**
**மலைவுஅறு வசிட்ட னோடு**
**மரீசிஆம் மதியின் மிக்கோர்.**

இறையுணர்வை அடைய முதன்மையான சனற்குமாரரும், சனகரும், சுக்கிரனும் அசைவிலா உருத்திரனும், அங்கிரா முனியும், வாம தேவரும், எல்லாக் கலைகளையும் கற்ற பிருகு முனியும், கண நாதரும், மயக்கம் இல்லாத வசிட்டரும் மரீசியும் ஆகிய புத்தியிற் சிறந்த மேதாவிகள்.

**9.** **பரமனது அருளால் அன்றியே பரத்தைப்**
**பரப்புஉறப் பார்த்ததம் மதியால்**
**ஒருவரோடு ஒருவர் பன்னெடும் காலம்**
**உசாவிஒன்றும் உணர்வுஉறப் பெறாமல்**
**வரம்மிகு பதரி வனம்அடைந்து அரிய**
**மாதவம் வருந்தினார் வருந்த**
**நரனொடு நாரா யணன்ஒரு முனியாய்**
**நற்றவர்க்கு அருள்செய நடந்தான்.**

பரமனது கருணை இல்லாமல் இறையை விரிவாகக் கண்ட தம் அறிவினால் ஒருவரோடு ஒருவர் நெடுங்காலம் வினவி ஞானத்தை அடையாமல் சிறப்பு மிகு பதரிவனம் சென்று அரும்பெரும் தவத்தினை வருத்தத்துடன் செய்தனர். அந்தத் தவத்திற்கு இரங்கி

நர நாராயணர் ஒரு முனிவராய் நற்றவமுடைய அவர்கட்கு அருள் செய்ய அவ்விடம் தோன்றினார்.

10. **நாரணன் அருளில் பணிந்துமா முனிவர்**
**நான்மறை மொழியினால் வழுத்தக்**
**காரணம் தன்னை அறிந்துநீர் தபித்த**
**காரணம் என்னக் கண்ணன்**
**ஏர்அணி மறையின் பொருள்தெரிந் திடுதற்கு**
**எங்களால் இயன்றிலது இறைவா**
**ஆரணப் பொருளை அறிகுவாய் நீயே**
**ஆதலால் உன்னையே அடைந்தோம்**

திருமாலின் அருளால் முனிவர்கள் அவரை வணங்கி நான்கு வேத வாக்கியங்களால் போற்றி வணங்கக் கண்ணன் அவர்கள் வருந்தும் காரணத்தை அறிந்து இருந்து நீர் தவம் செய்த காரணம் யாது? என்று வினவிட முனிவர்களும் அவரை நோக்கி, அழகான வேதக்கருத்தினை உணர்தற்கு எம்மால் இயலவில்லை கடவுளே நீர் வேதத்தின் பொருளை உணர்ந்திருக்கின்றீர், ஆதலால் உம்மை நாங்கள் சரண் அடைந்தோம்.

11. **ஏதுகா ரணம்இவ் உலகினுக்கு எல்லாம்**
**என்றுநின்று அளிப்பவன் எவன்தான்**
**ஏதுதான் ஆன்மா ஏதுவீடு ஏவன்**
**பிறப்பவன் எவன்பிறப் பிப்பான்**
**ஏதுஆ ராலே கண்டிடப் படுவது**
**இணைஅறு பிரமம்ஏது எல்லாம்**
**ஓதுவாய் எங்கள் ஐயம்நீ அல்லால்**
**ஒழிப்பவர் இல்லைஎன்று உரைத்தார்.**

இவ்வுலகிற்குக் காரணம் யாது? முக்காலத்தும் இருந்து அனைத்தையும் அளிப்பவன் எவன்? ஆன்மா என்பது யாது? மோட்சம் என்பது யாது? பிறப்பவன் எவன்? பிறப்பிப்பவன் எவன்? எவரால் அறியப் படுவது? இணையிலாத பிரமம் எது? அனைத்தையும் எமக்குத் தெளிவாய் உறைத்தருள்க. தேவரீர், உம்மையன்றி எங்கள் சந்தேகம் தீர்ப்பவர் எவரும் இலர் என விண்ணப்பித்தனர்.

12. **அந்த எல்லையில் அம்புயை கேள்வனும்**
**வந்த தன்தவ வேடத்தை மாறியே,**

**சிந்தை யால்இமை யோர்க்கும்தெ ரிக்கஒணா**
**எந்தை தன்ஒளி யாலே இலங்கினான்.**

அந்தச் சமயத்தில் தாமரையில் பிறந்த திருமகள் கணவனும் முன்னர் வியாச பகவானாக வந்த தன் தோற்றத்தை மாற்றி, எந்தையாம் திருமாலானவர் தேவர்களும் மனத்தினால் உணர இயலாத தன் ஒளியுடன் விளங்கினான்.

13. **திங்கள் ஞாயிறு போலத்தி கழ்ந்தவெண்**
**சங்கும் ஆழியும் தண்டம்சா ரங்கமும்**
**செங்கை நான்கும் திருமறு மார்பமும்**
**பங்க யாலயப் பாவையும் கூடவே.**

சிவந்த நான்கு கைகளிலும், நிலவைப் போல் விளங்கும் வெண் சங்கும், சூரியன் போல் ஒளி விடும் சக்கரமும், தண்டாயுதமும், சாரங்கம் என்ற வில்லும் திருமகள் பொருந்திய மார்பும், தாமரைப் பூவினை ஆலயமாகக் கொண்ட பாவையான திருமகளும் இலங்கிட,

14. **சுட்ட பொன்னினும் தூய்ஒளி ஆய்ஒளி**
**விட்டு இலங்கினன் விட்டுவி ளங்குஒளி**
**மட்டம் அன்றிய மண்டலத் தால்வெளிப்**
**பட்ட னன்நரன் ஆய்வந்த பான்மையான்.**

காய்ச்சிய பொன்னைக் காட்டிலும் மிக்க ஒளி வடிவமாக விளங்கினான் முன்னே வியாச முனியாய் எழுந்தருளி வந்த தன்மையை உடையவன். விளங்கிய ஒளி வடிவாகத் தாழ்வுயர்வு இல்லாத பரிபூரணமாகத் தோன்றினான்.

15. **அரிஉருவு கண்டுஅகம்ம கிழ்ந்தஅள விற்கே**
**பெரியபரி வோடுபிறை சூடியபி ரான்முன்**
**சுருதி முடிவு ஓதுபொருள் சொல்லுதல் துணிந்தே**
**கருதஅரி யான்முனிவர் கண்ணில்வெளி நின்றான்**

திருமாலின் திருவடி கண்டு மகிழ்ச்சி கொண்ட அப்பொழுதே என்னுதற்கு இயலாதவனும், பிறை மதியைச் சடையில் அணிந்தவனும் ஆகிய சிவபிரான் மிகுந்த அன்புடன் முதன்மையான வேத முடிவில் சொல்லியுள்ள பொருளைச் சொல்லத் துணிந்து முனிவர்களின் கண்ணுக்குத் தோன்றும் படியாக நின்றான்.

**16.** **செயசெய தேவர் போற்றும்**
**தேவமா தேவ போற்றி**
**அயம்அற முனிவர் போற்றும்**
**அம்பிகா பதியே போற்றி**
**நயம்உறு அன்பால் அன்றி**
**நணுகுதற்கு அரியாய் போற்றி**
**செயல்அற இருந்த யோகில்**
**திகழ்ந்திடும் சிவனே போற்றி.**

தேவர்கள் துதிக்கும் பரமசிவனே. உமக்குச் செயம் உண்டாகுக. மகாதேவா வணக்கம். ஐயம் நீங்க முனிவர்கள் துதிக்கும் அம்பிகா பதியே போற்றி. விரும்பத் தகுந்த பக்தியால் அல்லாமல் அடைதற்கு அரியவனே போற்றி. செயலற்று யோக நிலையில் விளங்கிடும் பரமசிவனே போற்றி.

**17.** **கம்தரை கனல்கால் நீரால்**
**கலந்துஇங்ஙன் கட்டப் பட்ட**
**எந்திரம் வல்லாய் போற்றி**
**இயங்கிட அளிப்பாய் போற்றி**
**அந்தமும் செய்வாய் போற்றி**
**ஆனந்த உருவே போற்றி**
**பந்தனை அறுப்பாய் போற்றி**
**பரமகா ரணனே போற்றி**

வானம், பூமி, நீர், காற்று, தீ ஆகிய பஞ்ச பூதங்களையும் கலந்து கட்டப்பட்ட இவ்வுலகமாகிய இயந்திரத்தைச் செய்ய வல்ல திறமை உடையவனே. உனக்கு வணக்கம். அவ்வுலக இயந்திரம் இயங்கும்படி காப்பவனே வணக்கம். அதனை அழிக்கவும் செய்பவனே போற்றி. ஆனந்த வடிவே போற்றி. உலக பந்தத்தினை நாசம் செய்பவனே போற்றி எல்லாவற்றிற்கும் மேலான காரணமாய் உள்ளவனே போற்றி.

**18.** **வெல்க பூதபதி வெல்க சீவபதி**
**வெல்க யோகபதி வெல்கவே**
**பல்கு பேர்உருவு கண்கை கால்முடிப**
**கர்ந்தி டற்குஅரிய பான்மை...,**

**தொல்லை நாம்றையி னாலும் உன்இயல்பு**
**சொல்லல் ஆகும்அளவு அல்லவால்**
**வல்ல ஆறுசில சொல்லி யாம்உனைவ**
**ழுத்து கோம்எனவ ணங்கினார்.**

பூதங்களுக்குத் தலைவனே வெற்றி உண்டாகுக. உயிர்களுக்குத் தலைவனே உமக்கு வெற்றி உண்டாகுக. நிறைந்த பேருருவத்தில் அநேகக் கண்களும் அநேகக் கால்களும், அநேகக் கைகளும், அநேகக் தலைகளும் கொண்டு இத்தன்மையவன் என்று கூற இயலாத தன்மையுடையவனே. பழமையாயுள்ள நான்கு வேதங்களினாலும் உம்முடைய அளவைத் சொல்லிட இயலாத் தன்மை படைத்தவனே. நாங்கள் உன்னை எம் புத்திக்கு எட்டிய அளவு சில சொல்லி வணங்குவோம் என்று கூறி வணங்கினார்.

**19.** **துதித்தமா முனிவர் தலைகளால் வணங்கித்**
**தொழுதகை யினர்களாய் நிற்பக்**
**கொதித்தவான் புலத்துக் கொண்டல்வந்து உதவிற்று**
**ஒப்பவே கொடியவெம் கூற்றை**
**உதைத்ததாள் உடையான் உலகம்உண்டு உமிழ்ந்த**
**ஒருவனைத் தழுவிஇங்கு இவர்கள்**
**பதைத்தகா ரணம்என் செய்யவேண் டுவதுஎன்**
**பகர்எனப் பவளவாய் மலர்ந்தான்.**

தன்னை வணங்கிய மாமுனிவர்கள் தலைமீது கூப்பிய கையினராய் வணங்கி நிற்கின்ற பொழுது, வெம்மை பொருந்திய செவ்வானத்தின்கண் சூல் கொண்ட மேகமானது வந்த சேர்ந்தது போல விளங்கிய கொடிய எமனை மார்க்கண்டேயருக்காக உதைத்துத் தள்ளிய பாதங்களை உடைய பரமசிவன், உலகை உண்டு தன்னுள் அடக்கிப் பின் வெளிக் காட்டிய ஒப்பற்ற திருமாலைத் தழுவி, இங்கு இவர்கள் பதைத்து இருக்கும் காரணம் யாது? யான் என்ன செய்ய வேண்டும்? என்பதைக் கூறுவீர்களாக என்று பவள இதழ் கொண்ட பரமசிவன் திருவாய் மலர்ந்தான்.

**20.** **அந்தமால் இறைவன் அருள்செய்வா சகத்தைக்**
**கேட்டுஅலர் அருந்தவ எரியால்**
**வெந்தபா வத்தால் விமலபா வத்தால்**
**மெய்ப்பொருள் விளங்குவான் வேண்டி,**

**எந்தையே எனையே அடைந்தனர் இவர்கட்கு**
**இரங்கியான் கேட்டுடன் இருப்பப்**
**பந்தவேர் அறுக்கும் பரமஞா னத்தைப்**
**பகர்ந்துஅருள் செய்கஎனப் பகர்ந்தான்.**

அந்தத் திருமாலானவர், இறைவனாகிய பரமசிவன் திருவாய் மலர்ந்தருளிய வாசகம் கேட்டு, எந்தையே, முனிவர்கள் அரிய தவ நெருப்பினால் வெந்த பாவம் உடைமையால், குற்றமற்ற தன்மையினால், சத்தியப் பொருளை அறிய வேண்டி என்னைச் சரண் அடைந்தனர். இம்முனிவர்களுக்காக அருள் கூர்ந்து யான் கூடவே இருந்து கேட்க, உலக பந்தங்களின் வேரை அறுக்கும் ஞானம் பற்றி எமக்குக் கூறுக என்று கேட்டுக் கொண்டான்.

**21.** **உன்னைநீ உணர்தி அல்லது வேறுஆர்**
**உணர்வார் உனதுபேர் அருளால்**
**தன்னையே தன்னால் தான்அறி அறிவு**
**சங்கரா இவர்க்குஅருள் என்று**
**பின்னர்மா முனிவர் தங்களை நோக்கிப்**
**பிஞ்ஞகன் பெருகிய அருளால்**
**என்னைநீர் வினவும் அரும்பொருள் வினவி**
**எய்துவீர் எனஅவர்க்கு இசைந்தான்.**

சங்கரனே உன் வடிவை நீயே அறிந்துள்ளாய். அல்லாமல் வேறு யார் உணர்வார்கள்? உம்முடைய பெருங் கருணையினால் தன்னை ஆத்மாவால் உணரும் அறிவினை இம்முனிவர்களுக்கு அருள்வீர் என்று திருமால் கேட்டுக் கொண்டு, பின் முனிவர்களைப் பார்த்துப் பரமசிவன் மிகுந்த கருணையால், என்னை நீங்கள் கேட்கும் அந்த அரிய பொருளைப் பரமனிடம் கேட்டு அறிக எனக் கூறினான்.

**22.** **கேசவன் உரைத்த மாற்றம்**
**கேட்டுஅவர் பணிந்து பின்னும்**
**ஈசனை வினவும் எல்லை**
**இருவிசும்பு இடையே தெய்வ**
**ஆசனம் வந்தது ஆங்கே**
**அரியொடும் அளவுஇ றந்த**
**தேசினால் அகிலம் எல்லாம்**
**திகழவீற்று இருந்தான் தேவன்.**

திருமால் கூறிய சொற்களை முனிவர்கள் கேட்டு, மீண்டும் பரம சிவனைப் பணிந்து கேட்கும் சமயத்தில் பெரிய வானிலிருந்து தேவாசனம் ஒன்று அங்கு வந்து சேர்ந்தது. பரமசிவன் திருமாலொடும் அளவிட இயலாத ஒளியுடன் உலகமனைத்தும் விளங்க வீற்றிருந்தான்.

**23.** **யாதுஒன் றில்அடங் கவிளைந் தஎலாம்**
**யாதுஒன் றிடைநின் றுஅதுஒடுங் குவதுஅப்**
**பூதங் களின்நா தன்ஓர்பொன் அணைமேல்**
**ஏதம் கெடஏ றிஇருந்த தனனால்.**

பூதங்கள் அனைத்தும் எவரிடத்து உண்டாயினவோ, அனைத்தும் எதனிடத்து நிலைபெற்றுப் பின் அவை ஒடுங்குகின்றனவோ, அந்தப் பூதங்களின் தலைவன் ஒப்பற்ற பொன்னாசனத்தின் மீது வீற்று இருந்தான்.

**24.** **வானே முதல்யா வையும்மன் இடமாய்த்**
**தானே முழுதுஆ கியதத் துவமாம்**
**கோனே இவர்கண் டுகொளும் படியா,**
**தானே அரியோ டும்ஓர்ஆ தனமேல்.**

வான் முதலிய அனைத்தையும் பொருந்துதற்கு இடமாய்த் தானே முழுமையாய்த் தத்துவங்களாயுள்ள தலைவன், இந்த முனிவர்கள் கண்டு கொள்ளும்படி திருமாலொடும் ஓர் ஆசனத்தில் அமர்ந்து இருந்தனன்.

**25.** **ஓவா மைஉளத்து இடையோ குசெய்வார்**
**பாஆ லயம்மே வுபரம் பொருளைத்**
**தேவா திபர்தே டுசிவன் தனையே**
**ஆஆ அவர்கண் டனர்ஆ தனம்மேல்.**

மனத்தின்கண் இடையறாது தியானிப்பவர்கள், பாக்கள் பாடுகின்ற ஆலயம் ஆகிய இதயத்தின்கண் பொருந்தியுள்ள மேலான பொருளை, தேவர்களுக்கு எல்லாம் தலைவனாலும் தேடிக் காண இயலாத சிவனை, ஓர் ஆசனத்தின் மீது கண்டனர்.

**26.** **அளவு இறந்தஅன்பு ஆகிய**
**அருந்தவர்க்கு அமலன்**
**முளரி அம்கண்வண் துழாய்முடி**
**முகுந்தனை நோக்கி**

**வளம்மி குந்தமெய்ஞ் ஞானம்நான்**
**மற்றுஉமக்கு உரைப்ப**
**உளம்ஒ ருங்கிஅன் போடுகேட்டு**
**உணர்மின்என்று உரைத்தான்.**

குற்றம் அற்றவன் ஆகிய பரமசிவன், அளவிட இயலாத பக்தி கொண்ட அருந்தவ முனிவர்களுக்கு, தாமரை மலர் போன்ற அழகிய கண்களையும், வளமான துளசி மாலை தரித்த கிரீடத்தினையும் உடைய திருமாலை நோக்கிச் சிறப்புடைய ஆத்ம ஞானத்தினை நான் உங்களுக்குச் சொல்லுகின்றேன். நீங்கள் அன்போடும் ஒருமித்த மனத்தோடும் கேட்டு அறியுங்கள் என்று திருவாய் மலர்ந்து அருளினான்.

## இருடிகள் வினவும் அத்தியாயம் நிறைவுற்றது

# 2.சாங்கிய யோக அத்தியாயம்

1. மறைபயில் முனிவர் கேட்ப
மாமறை முடிவி னாலும்
அறிவுஅரும் அறிவுஆ நந்தம்
அருள்உரு அமலன் தன்பால்
பிறிதரும் பேதம் நீத்துப்
பெயர்வுஇலாது ஒன்றுஆய் எங்கும்
செறிதரும் தன்னை ஈசன்
தெரிதர இயம்பல் உற்றான்.

வேதங்களைப் பயின்ற முனிவர்கள் கவனமுடன் கேட்க, பெருமை சான்ற வேத முடிவாக உள்ள உபநிடதங்களாலும் அறிதற்கு அருமையான அறிவு ஆனந்தமே. அருள் வடிவாக உள்ள பரமசிவனிடத்து வேறுபாடு தருகின்ற பேதத்தை விளக்கி நிலையான ஒன்றாய் எங்கும் நிறைந்துள்ள தன்னை உணரும்படி பரமசிவன் சொல்லத் தொடங்கினான்.

2. அறைவதுஅன்று இந்த ஞானம்
யாவரும் அறியார் ஆனால்
மறைவுறச் செய்வது ஒன்றாய்
மன்னியே உள்ளது என்றும்
திறலுடை இயமம் ஆதி
செய்தசீர் மறையோ ராலும்
அறிவுஅரும் பொருளை நீங்கள்
அறிமின்என்று அருளிச் செய்தான்.

இந்த இறையறிவு பிறர்க்குச் சொல்லத் தக்கது அன்று. எல்லோரும் இதனை அறிய மாட்டார். ஆதலால் மறைவாக வைக்கத் தக்கது. ஒன்றாய்ப் பொருந்தி உள்ளது. எப்பொழுதும் திடமாக உள்ள இயமம் முதலான எட்டு யோகங்களையும் செய்துள்ள தேவர்களாலும் அறிதற்கு அருமையான பொருளை நீங்கள் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள் என்று திருவாய் மலர்ந்தருளினான்.

**3.** **இந்த ஞானத்தை எய்திய இன்பத்தார்**
**அந்தம் இல்பிர மத்துஉரு ஆயினோர்**
**பந்தம் மேவிடார் பண்டும்இன் றும்என்றே,**
**எந்தை ஈறுஇலி ஈசன் இயம்பினான்.**

இந்த இறையறிவை அடைந்த இன்பம் உடையார் முடிவில்லாத இறைவடிவம் ஆனவர்கள். எனவே முன்பும் இன்றும் பந்தம் அடைய மாட்டார்கள் என்று அழிவற்றவன் ஆகிய எந்தை ஈசன் கூறினான்.

**4.** **மறைவுஉறும் பொருள்களினும்**
**அமைவுஉறும் பொருள்மிகவும்**
**அமைவுஉறும் படிசெயலை**
**அறஇருந் திடஉளது**
**செறியும்அன்பு உடைமையொடு**
**திகழ்தரும் தவமுனிகள்**
**அறிவுஉறும் படிஇதனை**
**அறைவன்என்று அருளும்இறை.**

மறை பொருளாயுள்ள பொருள்களிலும் அதிக மறை பொருளாயுள்ள பொருள் சொல்லும் படியான செயல் இன்றி இருந்திடத் தக்கது. நெருங்கிய அன்புடன் விளங்குகின்ற தவமுனிகள் உணரும்படி இந்த மறைபொருளைச் சொல்லுவேன் என்று ஈசன் அருளினான்.

**5.** **அறிவுஎன உரைக்கப் பட்டது**
**அவனுடை உருவு தன்நேர்**
**உறைவுஇலா நிமலன் சாந்தன்**
**நுண்ணியன் என்றும் உள்ளோன்**
**செறியும்எப் பொருட்கும் உள்ளாய்ச்**
**சின்மயம் ஆயே சான்றாய்ப்**
**பிறிதரும் அவித்தைக்கு எட்டாப்**
**பெற்றியன் என்றான் ஈசன்.**

ஆத்மா எனச் சொல்லப் படுவது நேராயுள்ள அவனுடைய வடிவம். தொடர்பு அற்ற மலமற்றவன். சாந்த வடிவினன். நுண்மையானவன். முக்காலத்தும் இங்கு இருப்பவன்.

நிறைந்துள்ள எப்பொருட்கும் உள்ளே நின்று அறிவு வடிவாய்ச் சாட்சியாய்ப் பல கூறுபாடுகள் உள்ள மாயைக்கு அகப்படாத தன்மையன் என்று கூறினான் ஈசன்.

**6. யாதொரு பொருட்கும் உள்ளாய்**
**இருந்துஉள அறிவு தன்னை**
**மேதகு புருடன் என்றும்**
**உயிர்என்றும் ஈசன் என்றும்**
**பேதம்இல் காலம் என்றும்**
**மனமொடுஅவ் வியத்தம் என்றும்**
**ஓதிடும் மறைகள் என்றே**
**உரைத்தனன் ஒழிவுஇல் ஈசன்.**

எல்லாப் பொருள்கட்கும் உள்ளே இருக்கப்பட்ட அறிவை மேன்மையான புருடன் என்றும், உயிர் என்றும், ஈசன் என்றும், வேறுபாடற்ற காலம் என்றும் மனம் என்றும், வெளிப்படாத் தன்மையுடைய அவ்வியத்தம் என்றும் மறைகள் கூறும் என நித்தியமாய் உள்ள பரமசிவன் முனிவர்களுக்கு உரைத்தனன்.

**7. ஆங்குஅவன்பால் ஆவஎலாம்**
**அவனிடையே ஓவதுவும்**
**ஓங்கியமா மாயையினை**
**உடையநான்அதில் ஆர்ப்புண்ணான்**
**பாங்குஉறநா னாஉடலம்**
**பண்ணியிடும் ஆயிடினும்**
**ஈங்குஇவைதன் இடைத்தோயாது**
**இவைநடத்தும் இயல்பும்இலான்.**

எல்லாம் உண்டாவதும், அவனிடத்து லயத்தை அடைவதும், அவனால்தான் பெரு மாயையினை உடைய நான் அதில் சம்பந்தப் படேன். வளமான பல உடல்களைச் செய்யினும் இங்கு இவ்வுடல்களிடத்துத் தொடர்பு படாமல் இவைகளை நடத்திடும் தன்மையனும் அல்லேன்.

**8. பந்தம்அதில் ஒருக்காலும் பற்றுணான் அப்பந்தம்**
**சிந்தைசெய்தும் தான்செய்யான் செய்வானா யேநிற்கும்**

**முந்தியவான் காற்றுஅனல்நீர் மண்அல்லன் முழுதுமாய்**
**அந்தம்இலா ஆனந்த அறிவுஉருவே அவன்வடிவம்.**

பந்தத்தில் ஒரு பொழுதும் பற்றில்லாதவன், அப்பந்தத்தைச் சிந்தித்தும் தான் செய்பவன் அல்லன். செய்பவனைப் போல இருக்கும் முதன்தையான வானம், காற்று, நெருப்பு, நீர், மண் ஆகிய ஐந்து பூதங்களும் அல்லன். எல்லாமாய் முடிவு இல்லாத அறிவானந்த வடிவமே அவன் வடிவம்.

9. **உயிரி னோடுமனம் அவ்வி யத்தம்உறு**
**கந்தம் ஆதிபுலன் ஐந்துஅலான்**
**அயர்வின் ஆகிஅகம்என்று நின்றுஅறியும்**
**அந்த நற்கரண மும்இலான்**
**பெயர்வுஇ லாதுசொலும் வாக்கி னோடுமுதல்**
**ஐந்தும் ஆய்விடய மும்இலான்**
**உயர்வது ஆய்அறி வேத னக்குஉருவம்**
**என்று உரைக்கும்ஒளி மேனியோன்.**

உயிருடன் மனமும், மாயையும் மணம், சுவை, வடிவம், தொடு உணர்ச்சி, ஒலி ஆகிய ஐம்புலன்களுக்கு ஏதுவாகிய செய்திகளும் அல்லாதவன். அறியாமையால் நான் என்று இருந்து அறியும் அகங்காரம் இல்லாதவன். ஒய்வின்றிச் சொல்லுகின்ற வாக்குடன் ஐந்து கன்மேந்திரியங்கள் ஆகிய செய்திகளும் இல்லாதவன். மேன்மையான அறிவே தனக்கு வடிவம் என்று ஒளி உருவினனான பரமசிவன் கூறினான்.

10. **அயில்கின்ற அவைமுதலாம் போகம்நுகர் பவன்அல்லன்**
**உயிர்அல்லன் உயிர்க்குஉயிராம் புருடன்எனும் அவன்அல்லன்**
**மயல்ஒன்றி உளமாயை அதுஅல்லன் மற்றுஎல்லாம்**
**அயர்வுஇன்றி அறிகின்ற அறிவுஉருஎன் றேஅறிக.**

புசிக்கின்ற முற்கூறிய கருமவழி வருவதான ஞாநேந்திரிய, கன்மேந்திரியத் தொடர்புடைய இன்ப துன்ப வடிவான செயல்லகள் யாவும் அனுபவிப்பவன் ஆகிய கர்த்தா அல்லன். உயிர் அல்லன். உயிர்க்கு உயிராகிய புருடனுமல்லன். மயக்கம் பொருந்தியுள்ள மாயையும் அல்லன். எல்லாவற்றையும் மறைப்பின்றி உணர்கின்ற அறிவு வடிவமே எனது வடிவம் என்று அறிக.

11. **இருளுடன் ஏர்ஒளி ஆவதுஎவ் வண்ணம்**
**அருவல் இலாஅவை மற்றுஅது போல**
**விரிவுஉளது ஆயச கம்தனின் ஒடும்**
**பொருவல் இலாதப ரன்புணர்வு எய்தான்.**

இருளுடன் அழகிய ஒளியானது எப்படிச் சம்பந்தப்பட மாட்டாதோ, அவை போலச் சமானம் இல்லாத பரமேசுவரன் விரிவாய்ப் பொருந்தியுள்ள உலகத்தோடும் சம்பந்தப்பட மாட்டான்.

12. **உலகினில் எவ்வணம் ஒள்நிழல் தன்னோடு**
**இலகவெ யில்கல வாதுஅது போல**
**நிலைஇலது ஆயச கத்தொடு நில்லான்**
**உலவல் இலாதுஒளிர் கின்றப ரன்தான்.**

உலகினில் எப்படி நிழலுடன் ஒளி பொருந்திய சூரியக் கதிர் சம்பந்தப்பட மாட்டாதோ, அதுபோல அழிவின்றி ஒளி விடுகின்ற பரமேசுவரன் ஆனவன் நிலையற்றதாகிய உலகினோடு சம்பந்தப் படான்.

13. **அறிவினோடு ஒன்றி நிற்கும்**
**தமத்தொடு விகாரம் ஆங்கே**
**அறிவினில் கலக்கும் என்றும்**
**அணைந்துஉடன் நிற்கும் ஆகில்**
**அறிவினுக்கு அநந்த கோடி**
**கற்பம்வந்து இறந்திட் டாலும்**
**பிறிவதற்கு ஆகும் முத்தி**
**இல்லையே பேசில் என்றும்**

உயிருடன் இணைந்து நிற்கும் மறைப்பினுடன் மாறுபாடானது, உயிருடன் கலக்கும் என்றும், தொடர்பு கொள்ளும் என்றும், அப்படித் தொடர்பு கொண்டு கூடவே இருக்குமாயின் அநேக கோடி யுகங்கள் உண்டாகி அழியினும் ஆத்மாவிற்கு வேறுபடுவதற்காகச் செய்கின்ற வீடு பேறு பற்றிப் பேசினால் அது எக்காலத்திலும் இல்லை.

14. **முத்தியை அடைந்து உயர்ந்த**
**நித்தம்நல் முனிவர் என்றும்**

**ஒத்தபேர் அறிவே தன்பால்**
**உளதுஅவி காரம் என்றும்**
**சுத்தம்முன் சுகதுக் கங்கள்**
**தொடர்புஇல் ஆனந்த ரூபம்**
**நித்தம்என் றிடவும்காண்பர்**
**என்றனன் நிகரில் ஈசன்.**

தனக்குச் சமானம் இல்லாத வீடு பேற்றினை அடைந்து உயர்ந்த நிலையில் உள்ள நல்ல முனிவர்கள், எப்பொழுதும் சமமாயுள்ள பேரறிவே ஆத்மாவிடம் இருக்கிறது, ஆகையால் விகாரம் அற்றது எனவும், சுத்தம் ஆனது எனவும், முன்பு உண்டான சுகதுக்கங்களின் தொடர்பு இல்லாதது எனவும், ஆனந்த வடிவம் எனவும் நாசமற்றது எனவும் அறிவார்கள் என்று கூறினான்.

**15.** **யானே செய்கின் றனன்எவையும்**
**சுகதுக் கங்கள் என்செயலே**
**ஊனே வாடி இடல்தடித்தல்**
**உடையோன் நான்என்று உரைத்திடுவோர்**
**ஆனா அறிவின் தன்மேலே**
**ஆங்கா ரத்தை இடுதலினால்**
**நானே எல்லாம் என்றுஇருப்பர்**
**ஞானம் இல்லார் எனஅறிக.**

எல்லாச் செயல்களையும் நானே செய்கின்றனன். விருப்பு வெறுப்புக்கள் என்னுடையவையே. நான் தசை மயமான உடல் சுருங்குதல், பெருத்தலும் உடையவன் என்று கூறுபவர்கள் சமமான ஆன்மாவின் மீது ஆங்காரத்தை ஏற்றிச் சொல்வதால் யாவும் நானே என்று இருப்பவர் ஞானம் அற்றவர் என்பதை நீங்கள் அறிவீர்களாக.

**16.** **அறிவினை உடையர் ஆகி**
**அருமறை முடிவு கண்டோர்**
**செறியும்எப் பொருட்கும் சான்றாய்ச்**
**சின்மயம் ஆயே தன்னில்**
**பிறிதரும் அவித்தைக்கு எட்டாப்**
**பெற்றியோடு எங்கும் நிற்கும்**
**அறிவுஎன உரைப்பர் அல்லது**
**அயல்ஒன்றும் இன்மை கண்டே.**

அறிவுடையவர்களாய் அரிய வேதங்களின் முடிவை உணர்ந்தவர்கள் நெருங்கியுள்ள எல்லாப் பொருள்களுக்கும் சாட்சியாகி ஆத்மாவிற்கு வேறாய் உள்ள மாயையினால் அறிய முடியாத தன்மையுடன் எங்கும் ஆத்மா இருக்கும் என்று ஆத்மாவை அன்றி அந்நியமாக ஒன்றும் இல்லாமை கண்டு சொல்லுவார்கள்.

**17.** **இன்பமொடு துன்பமது இன்றியொர்வி காரம்**
**தன்கண் அது இலாஅறிவு சார்வதுஇலை பந்தம்**
**பின்புஅதுஉளன் ஆவதுஅறி யாமைமுத லால்என்று**
**என்பதுஉளது ஆகும்உட லோடுஇயைய என்றும்**

தன்னிடத்துச் சுகமும் துக்கமும் இல்லாமல், ஒரு வேறுபாடும் இல்லாத ஆன்மா தொடர்பினை அடைவது இல்லை. எப்பொழுதும் உடலோடு தொடர்புடைய பின்னர் அந்தச் சுக துக்கமான செய்திகள் உண்டாவது அறியாமை முதலியவற்றினால்தான் என்று கூறப்படும்.

**18.** **எப்பொழுதும் நின்றுஉதயம் ஆனஒளி தானே**
**மெய்ப்படஇ ருந்துஅறிவுஅது ஆகிஎவ்இ டத்தும்**
**ஒப்புஇல்பரன் ஆகுபுரு டன்அகம்அ ணைந்தே**
**செப்புஅரிய வேறுபல செய்வன்எனும் நின்றே.**

எப்பொழுதும் நிலையாய் இருக்கின்ற ஒளி, தானே சத்தியப் பொருளாய் நின்று, எவ்விடத்தும் உணர்வதாகி ஒப்பில்லாத இறையாய் இருக்கும். உயிர் நான் என்று அகங்கார அறியாமை பொருந்திச் சொல்லரிய பல்வேறு செயல்களையும் செய்வேன் என்று கூறும்.

**19.** **இத்தன்மையது ஆகும்அவ்வி யத்தமொடு கூடும்அறிவு**
**எத்தனையும் உட்புறம்இ ருந்துஅறியு மேனும்**
**சத்தம்அது ஆயதனது உண்மைஅறி யாதே**
**அத்தன்மையது ஆயஉரு வாய்அழியும் அன்றே.**

இப்படிப்பட்ட தன்மையுடையது ஆகி அறியாமையோடு கூடிய ஆன்மா எவ்வளவு உள்ளிருந்து அறியுமாயினும், சுத்தம் ஆகிய தன்னுடைய உண்மையினை உணர மாட்டாது அறியாமையின் வடிவமாகவே அழியும்.

**20.** **தான்அலாது ஒன்றைத் தானாய்**
**அறிந்திடும் அதனால் என்றும்**
**ஆனதுஆம் சுகதுக் கங்கள்**
**யாரையும் வெறுப்புஉண் டாக்கும்**
**ஈனம்ஆம் அயலோடு ஒன்றி**
**இருந்திடும் உடலம் கொண்டே**
**யான்அதாய் அழியும் என்றும்**
**அறியாமை முதலாய்க் கொண்டே.**

தனது வடிவல்லாத ஒரு பொருளைத் தன் வடிவமாக உணரும் அத்தன்மையினால் எப்பொழுதும் சுக துக்கங்கள் உண்டாகின்றனவாம். எப்படிப் பட்டவர்களையும் வெறுப்பு அடையச் செய்யும் எனவும் அறியாமையை முதன்மையாய்க் கொண்டு இருக்கின்ற உடலுடன் சேர்ந்த இழிவாகிய மயக்கத்தை அடைந்து தானாய் அழியும்.

**21.** **கருமம்செய இடர்வந்துஉறும் அதுபுண்ணிய பாவம்**
**தரும்என்றுஉரை செயும்மாமறை அவைஆகிய வசமே**
**உருவம்தரும் முழுதும்உளது ஆகும்என ஒழியா**
**அருள்தந்திடும் ஒளிமேனிஅது அறிகஎன்றுஅருள் செயுமால்.**

கருமங்களைச் செய்யத் துன்பங்கள் வந்து சேரும். அது புண்ணிய பாவங்களைக் கொடுக்கும் என்று பெருமையுடைய வேதங்கள் சொல்லும். அந்தப் புண்ணிய பாவங்களுக்கு ஈடாகவே உடல்கள் உண்டாகும். அந்த ஒளி கொண்ட மேனியில் ஆத்மா எங்கும் நிறைந்து நிலையான அருளைக் கொடுக்கும் என்று அறிக என அருளினான்.

**22.** **அழியாது எங்கும் உளதுஆகி**
**அனைத்துஉள் புறம்பும் தான்நிரம்பி**
**ஒழியா அறிவாய் ஒருகுற்றம்**
**உரைத்தற்கு அரியது ஒருபொருளே**
**கழியா மாயை அதனாலே**
**காணப் பலவாய்த் தோன்றியிடும்**
**அழிவுஆ யினஎன்று ஒன்றும்இலாது**
**இருக்கும் அதுவே இயல்புஎன்றான்.**

அழியாமல் எங்கும் நிலைபெற்று இருப்பதாய், எல்லாவற்றிலும் உள்ளும் புறமும் இருந்து நீங்காத அறிவாகி, ஒருவிதமான குற்றமும் கூற இயலாத ஒரு பொருளே. இறையறிவாலன்றி நிவர்த்தியாகாத மாயையினால் பார்க்கப் பலவகையாய்த் தோன்றும். எக்காலத்தும் அம்மாயை அழிவை அடையத் தக்கது. செயலற்று இருக்கின்ற தன்மையே இறையறிவின் இயல்பு என்று கூறினான்.

**23.** **ஆதலால் முனிகள் உண்மை**
**ஒன்றுஎன உரைப்பர் வேறுஆம்**
**பேதம்அவ் வியத்தத் தால்ஆம்**
**என்றனர் அதுவும் என்றும்**
**ஓதிய மாயை தன்னை**
**ஆசரித்து இருந்தே செய்யும்**
**நீதிஅது என்று கொண்டே**
**நிகழ்த்தினன் நிகர்இல் ஈசன்.**

ஆன்மா நித்தியமானது. ஆதலால் முனிவர்கள் உண்மை என்று சொல்லுவர். பல கூறுபாடுகளை உடைய இலக்கணத்தன்மை அறியாமையினால் தோன்றும் என்பர். அந்தப் பிரமமும் எப்போதும் கூறிய மாயையினை அனுசரித்து இருக்கும் தன்மை கொண்டு பல செயல்களைச் செய்யும் என்று தனக்குச் சமானம் இல்லாத ஈசன் முனிவர்களுக்குக் கூறினான்.

**24.** **யாதுஓர்படி தூமமொடு தூளிஒளி ஆய**
**நீதிஉடை வானைமறை யாதவண மேபோல்**
**ஓதுபுல னோடுகர ணம்உறுப எல்லாம்**
**போதமுடன் ஒன்றிஅவை நின்றுபுண ராவால்.**

எப்படிப் புகையும் தூசும் ஒளி பொருந்திய தன்மையுடைய வானத்தை மறைக்காத நிலை போலச் சொல்லப்படுமோ அதுபோல இந்திரியங்களோடு பொருந்தும் அந்தக் கரணம் யாவும் அறிவுடன் சேர்ந்து இருந்து தொடர்பு கொள்ள மாட்டாது.

**25.** **அடுத்தநிறம் எத்தனைஅது ஆயபடி கம்வேறு**
**அடுத்திடஇ லாதுதனது ஆயஒளி யேபோல்**
**அடுத்துஅகம்அது ஆகிஅணை யாதஅறிவு என்றும்**
**விடுத்துஇருளை மிக்குஒளிய தாய்விரியும் அன்றே.**

படிகம் தன்னை எவ்வளவு வண்ணங்கள் சார்ந்தாலும் அவ்வளவு வண்ணங்களையும் பொருந்திப் பின் அவை நீங்கியதும் தன் இயல்பான வெண்மை நிறத்துடன் இருப்பது போல ஆன்மா எக்காலத்தும் அஞ்ஞானத்தை நீக்கி மிகுந்த ஒளியுடையதாகவே இருக்கும்.

**26.** **நல்லறிவு உளோர்உலகை ஞானவடிவு என்றே**
**சொல்லுவார்கள் அவ்அறிவு இலார்தொழிலில் வேறாம்**
**பல்வகைய தேபொருள்அது என்று அறிதல் கொண்டே**
**நில்லதுஇல தாம்உலகு கண்டிடுவர் நின்றே**

நல்ல அறிவுடையோர் இவ்வுலகை அறிவின் வடிவம் என்பர். அவ்வறிவு இலார் செயலினால் பல்வகையாக இருக்கின்றது என அறிந்து கொண்டு இரந்து அழியும் இவ்வுலகத்தைப் பொருள் வடிவமானது என்று கண்டிடுவார்.

**27.** **யாதுஒரு பொருட்கும் உள்ளாய்க்**
**குணம்இன்றி எங்கும் தானாய்ச்**
**சேதனன் ஆயே என்றும்**
**திகழ்ந்திடும் பரிசு காணார்**
**ஏதம்ஆம் மயக்கம் தன்னால்**
**யாவையும் இருந்த வண்ணம்**
**பேதமாய்க் காணா நிற்பர்**
**என்றனன் பிறவி நாசன்.**

எந்த ஒரு பொருளுக்கும் உள்ளாய்க் குணமின்றி எங்கும் நிறைந்ததாய் அறிவு வடிவமாய் எப்பொழுதும் விளங்கிக் கொண்டு இருக்கின்ற தன்மையை அறிவு அற்றார் அறியார். அறிவின்மை என்ற கற்றம் தரும் மயக்கத்தால் எல்லாப் பொருள்களையும் இருந்தபடியே அந்தந்தப் பொருள் வடிவமாகவே காண்பர் எனத் திருவாய் மலர்ந்தருளினான் பிறவியைப் போக்குபவனான பரமசிவன்.

**28.** **படிகந்தனின் இடையேபல நிறம்வைகஅவ் உருவாய்**
**வடிவம்தனது எனநின்றிடும் அதுபோலஅறிவு உருவாய்**
**முடிவுஒன்றும்இல் பொருள்எங்கணும் முழுதும்ஒளி யாயே**
**வடிவம்தொறும் வடிவம்தொறும் வேறாய்வரும் வகையே.**

படிகத்தின்பால் பல நிறங்கள் பொருந்த அந்த வகையில் இருப்பினும் வடிவு தன்னுடையதாகவே இருக்கும். அது போல் ஒரு முடிவுமில்லாத ஆன்ம வடிவம் பொருள்கள் தோறும் நிறைந்த ஒளியாய் வடிவங்கள் தோறும் அந்தந்தப் பொருள்களிடத்தும் அப்படியே பலவாகத் தோன்றும்.

**29.** **ஆதலால் அழியா நித்த**
**சுத்தமாய் எங்கும் தன்னைப்**
**பேதம்இல் அறிவு தன்னைப்**
**பெரியவர் பேசக் கேட்டும்**
**ஓதியும் நினைந்தும் நாளும்**
**அருச்சனை செய்ய வேண்டும்**
**ஏதம்இல் வீடே எய்தற்கு**
**இச்சையே உடையோர் தம்மால்.**

ஆகையால் குற்றமில்லாத சொர்க்கத்தை அடைவதற்கு விருப்பமுடைய முனிவர்களால் கெடாது நிலையாய், சுத்தமாய் எங்கும் நிறைந்துள்ள, வேறுபடுத்திச் சொல்ல முடியாத அறிவாகிய பிரமத்தைச் சான்றோர் சொல்லக் கேட்டும் ஓதியும், சிந்தித்தும் தினந்தோறும் வழிபாடு செய்ய வேண்டும்.

**30.** **யாதொரு பொழுது யோக**
**மனத்திடை எங்கும் நின்ற**
**சோதியாய் இலங்கு போதம்**
**சோகத்தால் இடைவி டாத**
**நீதியா நிகழ்ந்துஎப் போது**
**நின்றிடில் தானே தன்னின்**
**ஓதிய பரிச நின்றான்.**
**என்றனன் உமையோர் கூறன்.**

எப்போதும் யோகமுடைய இதயத்தின்கண் எங்கும் நிறைந்து நின்று சோதியாய் விளங்கும் அறிவு, முறையாக விளங்கி எப்பொழுதும் துன்பத்தினால் இடையீடின்றி, உயிரே தன்னிடத்து நின்றிடில் முற் கூறிய தன்மைப்படி அறிவு வடிவாகவே இருக்கின்றனன் என்று கூறினான் உமையொரு பாகனாகிய பரம சிவன்.

**31.** **பூதங்கள் எவையும் தன்பால்**
**புணர்ந்திட நிற்றல் கண்டே**
**பூதங்கள் எவற்றின் உள்ளும்**
**புறம்பும்தான் நிற்றல் கண்டோன்**
**பேதங்கள் அனைத்தும் இல்லாப்**
**பிரமமே அடைந்து வேறாம்**
**ஏதங்கள் அனைத்தும் விட்டோன்**
**என்றிடல் ஆகும் அன்றே.**

அனைத்துப் பொருள்களும் தன்னிடத்துப் பொருந்தி இருக்கும் தன்மையை உணர்ந்து, அவற்றின் உள்ளிலும், வெளியிலும் தான் பொருந்தி இருத்தலைப் பார்த்தவனாய் வேறுபாடுகள் ஏதும் இன்றிப் பிரமத்தினையே பொருந்திக் குற்றங்கள் அனைத்தும் நீங்கியவன் என்று சொல்லப்படும்.

**32.** **யாதொரு பொழுது யோகம்**
**தன்னையே இயற்றி இன்பம்**
**மேதகு சமாதி தன்னை**
**அடைந்துவேறு ஆகி நின்ற**
**பூதம்யாது ஒன்றும் காணாது**
**இருந்தவன் எங்கும் நின்ற**
**சோதியாம் தன்னில் தன்னைச்**
**சோர்வின்றிக் கண்டே நின்றான்.**

எப்பொழுதும் யோகம் இயற்றி ஆனந்தம் மிகுதியாகத் தரும் சமாதி நிலையில் பொருந்தி, அந்நியமாய் இருக்கின்ற ஒரு பொருளையும் காணாது இருந்தவன் எங்கும் நிறைந்துள்ள ஒளி வடிவான அறிவைத் தன்னுள்ளே துன்பம் இன்றி அறிந்தவனாவான்.

**33.** **யாவன் யாதொரு போது இதயத்தே**
**மேவிய ஆசை லாம்அற விட்டான்**
**ஏவுஅரும் இன்அமிர்து ஆயவன் அப்போது**
**ஓவல் இலாதுஒளிர் வீடுஅடைவு உற்றான்.**

எவன் எப்பொழுது இதயத்தில் பொருந்திய அனைத்து ஆசைகளையும் விட்டானோ, அத்தகைய குற்றமற்ற இன்னமுது போன்றவனாகிய அவன் அப்பொழுதே ஒளி பொருந்திய வீடு பேற்றினை அடைந்தவன் ஆகின்றான்.

34. பூதங்கள் உடைத்தாய் உள்ள
வேறுஎலாம் ஒன்றின் கண்ணே
ஏதங்கள் இன்றிக் கண்டும்
அதினின்றும் எல்லம் ஆய
பேதங்கள் அனைத்தும் காணாது
அன்றுஇவன் பிரமம் என்று
வேதங்கள் அனைத்தும் ஓதும்
மெய்அறிவு அடைந்து நின்றான்.

பொருள்களோடு பொருந்தியுள்ள அந்நியமான அனைத்தையும் ஒரு வடிவாய் உள்ள இறையினிடம் குற்றமறப் பார்த்தும் அப்பிரமத்தினின்றும் எல்லாம் ஆகிய வேறுபாடுகள் அனைத்தையும் காணாது அப்பொழுதே இவன் பிரம வடிவம் என்று வேதங்கள் யாவும் ஓதும் மெய்யறிவை அடைந்தவனாய் ஆகின்றான்.

35. யாவன் ஒருவன் அறிவுஉருவாம்
தனையே கண்டு மற்றஒன்றுஆய்
மேவல் இன்றி வேறுபடக்
காணான் விளங்க அப்பொழுது
நீவுஇல் நிலையாய் உலகஅனைத்தும்
மாயை தானே எனக்கண்டு
மேவல் அரிதாம் வீடு அடைந்தான்
என்றே விளம்பி யிடல்ஆகும்.

எவன் ஆன்ம வடிவாகிய தன்னையே பார்த்தும், வேறு ஒன்றாய்ப் பொருந்துதல் இன்றி விளங்கும்படி பேதமாய்ப் பார்ப்பது இல்லையோ, அப்போது பொருந்தாத அழிவை அடைகின்ற அனைத்து உலகங்களையும் மாயையே என்று கண்டும், அடைவதற்கு அரிதாய வீடுபேற்றினை அடைந்தான் என்று சொல்லப்படும்.

36. பிறப்பினொடு இறப்பும்இடை துன்பம்அடைவு என்னாது
அறப்பரிவு செய்வதொர் மருந்துளது ஆய்வது
இறப்புஇல்பரம் ஆயபிர மம்அதனை எய்தும்
சிறப்புடையர் ஆனபொழு தேசிவம்அது ஆவார்.

பிறப்புடன் இறப்பு நிகழ்கையில் அவை இரண்டுக்கும் இடையில் துன்பம் உண்டாகும் என்று கருதாது முடிவான இன்பம் தருவதான ஒரு மருந்துள்ளது. அதனை ஆராய்ந்து

அழிவில்லாத மேலான பிரமத்தினை அடையும் சிறப்பு உடையவர்களான அப்பொழுதே அவர்கள் சிவவடிவம் ஆவார்கள்.

**37.** **ஆறுபல கூடிஉலகத்துஅலைக டற்கே**
**வேறுஅறஉள் மேவிஉடன் ஆகும்விளை வேபோல்**
**ஈறுஇல்பரம் ஆய்அருவது ஆயபிர மத்தோடு**
**ஆறும்அறிவு ஆனவைஅ டங்கியிடும் அன்றே.**

அநேக ஆறுகள் கூடி, உலகத்தில் அலையோடு கூடிய கடலுக்கள் வேறுபாடு இன்றி மேவி, உடன் கடலின் வடிவமாவது போல அழிவின்றி மேலாயுள்ள, உருவம் அற்ற நுண்மையான பிரமத்துடன் சாந்தமான சீவன் உடையவர்கள் கடவுள் நிலையடைவர்.

**38.** **ஆதலால் எல்லாம் ஆகி**
**நின்றதும் அறிவே வேறொன்று**
**ஓதிடக் கண்டது இல்லை**
**உள்ளபேர் அறிவை நீக்கி**
**ஏதம்ஆம் பந்த மோடுஇவ்**
**உலகமும் இலையே பார்க்கில்**
**ஆதிஆம் அறிவை மூடி**
**அறியாமை மயக்கும் அன்றே.**

ஆகையினால் எல்லாம் ஆகி நின்றதும் ஆன்மாவே. அந்நியமாக ஒன்றும் செய்யக் கண்டது இல்லை. இயல்பாயுள்ள முழுமையான ஒளியை நீக்கிப் பார்த்தால் குற்றம் பொருந்திய தொடர்போடு இவ்வுலகம் இல்லை. எனவே முதன்மையான ஆன்மாவை மறந்து அஞ்ஞானம் மயக்கத்தினைச் செய்யும்.

**39.** **அவ்வண்ணம் உரைத்த ஞானம்**
**அமலம் ஆய் நுண்ணிது ஆகி**
**மெய்வண்ணம் விகாரம் இன்றி**
**வேறுஒன்றோடு அணைதல் இன்றி**
**மைவண்ண விருத்தி இன்றி**
**வளர்ஒளி யாயே நிற்கும்**
**இவ்வண்ணம் அல்லாத எல்லாம்**
**இருளுடை அறிவாம் அன்றே.**

அவ்வாறு கூறிய ஞானமானது குற்றம் அற்றதாய், நுண்ணியதாய் உண்மையான வேறுபாடின்றி, மற்றொன்றொடு தொடர்பின்றி, மயக்கத்தோடு கூடியதாக இல்லாது, வளர்கின்ற மிக்க ஒளியுடையதாய் இருக்கும். இவ்வண்ணம் அல்லாத யாவும் அஞ்ஞானமாகும்.

**40.** **ஓங்கிய முனிகாள் உங்கட்கு**
**உரைத்தவே தாந்த சாரம்**
**சாங்கிய ஞானம் என்றே**
**சாற்றிடும் தன்மை ஆகும்**
**ஈங்குஇனி யோகம் ஆவது**
**இறைஇன்றி விடயம் எல்லாம்**
**நீங்கியே என்ற னோடு**
**நிலைபெற நிற்றல் சித்தம்.**

சிறப்புடைய சௌனகாதி முனிகளே. உங்களுக்க உபதேசித்த வேதத்தின் முடிவான சாரமானது சாங்கிய ஞானம் என்று சொல்லப்படுவது. இனி யோகமாவது, மனம் அனைத்துச் செய்திகளையும் அணுவளவும் இல்லாமல் நீங்கி என்னுடன் ஒன்றுபட்டு இருப்பதாம்.

**41.** **யோகம்செய ஞானம் ஆகும்அத னாலே**
**ஆகும்மித யோகம்பினை அதுவேசெயல் உறுவோன்**
**சோகம்உறு பயன்ஆம்அவை எய்தாதுஅளவு இல்லாப்**
**போகம்முழுது எல்லாம்புணர் கின்றான்இவ னேயாம்.**

யோகப் பயிற்சி செய்ய இறையறிவு உண்டாகும். அதனாலே மிதமான யோகம் உண்டாகும். பின்னர் அந்த ஞானத்தினை அடைந்தவன் துன்பம் பொருந்திய பயன்களை அடையாது அளவற்ற அனைத்து இன்பங்களையும் இவனே அடைந்தவன் ஆகின்றான்.

**42.** **யாதுஒன்றினை யோகம்செய்து பெறுவார்அவர் பயனைப்**
**பேதம்இல ஞானம்தனை அறிவோர்பெற இசைவார்**
**ஏதம்இலது ஆகும்வணம் ஒன்றுஆயிடல் கண்டோர்**
**பேதம்உறு பரம்ஆகிய பொருள்கண்டவர் ஆவார்.**

எதனை யோகம் செய்து பெறுவார்களோ, அவ்வாறு பெறுகின்றவர் அடையும் பயனை, பேதமற்ற அறிவை உயர்ந்தவர்கள் அடைய விரும்புவர். ஒரு குற்றமும் இன்றி

ஒன்றாய் இருப்பதைக் கண்டவர்கள் ஞானமுடைய மேலான பரம்பொருளான பிரமத்தை அறிந்தவர்கள் ஆவார்.

**43. யோகம்செய்து நின்றுஒன்றுகை விட்டேவிட யம்மேல்**
**மோகம்செல விழுமால்அவர் முடிவில்இடர் உறுவார்**
**சோகம்ஒழி விக்கும்பரம் எய்தார்தமை அடையார்**
**ஆகம்மறை முழுதும்அது தனையேஅறை தருமால்.**

யோகம் செய்து ஞானத்தைக் கை விட்டு உலக விஷயங்களின் மேல் மயக்கம் கொண்டோர் அளவற்ற துக்கத்தை அடைவர். சோகத்தைப் போக்கும் இறையை அடைய மாட்டார். ஆன்மாவை உணர மாட்டார்கள். வேதங்கள் யாவும் அதனையே சொல்லும்.

**44. அறையும்அவ் வியத்தம் சீவன்**
**மாயையால் அகிலம் செய்யும்**
**இறைவன்ஆம் ஈசன் என்றும்**
**இயம்பிடும் மறைகள் என்னை**
**முறைமையால் உயிர்கட்கு எல்லாம்**
**ஆகியே முழுதும் கண்டே**
**சிறைஇறந்து ஒங்கி எங்கும்**
**திகழ்தரு ஒளியும் நானே.**

பரமேசுவரன் ஆகிய என்னை வெளிப்படாத் தன்மை கண்டு அவ்வியத்தம் என்று சொல்லும், மேலும் வீடுபேறு அடையும்வரை உயிர் வாழ்ந்து கொண்டு இருப்பதால் சீவன் என்றும், மாயையினால் உலகைப் படைக்கும் தலைவனாம் ஈசன் என்றும் வேதங்கள் கூறும். இக்காரணத்தினால் உயிர்களுக்கு யாவும் ஆகி, எல்லாவற்றையும் முழுதுணர்ந்து பந்தங்களினின்றும் விடுபட்டு மேலான தன்மை அடைந்து, எங்கும் ஒளிவிடும் நிறைவான ஒளியும் நானாகின்றேன்.

**45. எல்லாரும் ஆசை உறுகின்ற யாவும்**
**இரதங்கள் கந்தம் எனிலே**
**நில்லாது இறந்து வரும்ஆறு இலாது**
**நிலையாகி நின்ற எனிலே**
**பல்ஆர்மெய் கைக ளொடுகால்கள் எண்ணில்**
**பலஆய அவற்றின் அறிவாய்**

**நில்லாது நின்று நிகழ்கின்றது என்றும்**
**உளனாய் விளங்கும் எனிலே.**

அனைத்தும் சர்வ நாசம் அடைந்து, மீண்டும் உண்டாகும்படி இன்றி நிலையாய் இருக்கும் என்னிடத்தில் யாவரும் ஆசை கொள்ளும் அனைத்து இரசகந்தங்களும் என்னிடத்தில் உண்டாகின்றன. எப்பொழுதும் உள்ளவனாய் உள்ள என்னிடம் பலவாகப் பொருந்திய உடல்களும், கைகளும், கால்களும் அளவு அற்றதாய், அவற்றின் ஞானங்களாய் நிலையின்றி இருந்து விளங்கிக் கொண்டு இருக்கின்றன.

**46.** **கண்இன்றி எல்லாம் காண்பன்**
**கால்இன்றி எங்கும் செல்வன்**
**விண்நின்ற ஓசை எல்லாம்**
**செவிஇன்றி விரைந்து கேட்பன்**
**பண்நின்ற கையது இன்றிப்**
**பற்றுவன் விடுவன் என்றே**
**அண்ணல்நன் முனிவர் தங்கட்கு**
**அருளினன் அறியும் வண்ணம்.**

பெருமை பொருந்திய பரமசிவன் நல்லவர்களாகிய சௌனகாதி முனிவர்களுக்குக் கண் இன்றி எல்லாவற்றையும் காண்பேன், கால் இன்றி எங்கும் நடப்பேன், காதில்லாமல் வானிலிருந்து வரும் ஒலி அனைத்தையும் விரைந்து கேட்பேன், அழகிய கைகள் இல்லாமல் அனைத்தையும் பிடிப்பேன் என்ற அறியும்படி திருவாய் மலர்ந்து அருளினான்.

**47.** **எல்லா ரையும்நான் அறிந்துஇருப்பன்**
**என்னை அறிவார் யாரும்இலை**
**நல்லார் உண்மை எனக்கண்டோர்**
**நாடி நின்றே அறிந்தபடி**
**அல்லாது இல்லாது அளவுஇல்பரம்**
**புருடன் எனவும் அறிவுஇன்றி**
**எல்லாம் ஆகி அல்லாத**
**ஏகம் எனவும் இயம்புவரால்.**

பரமசிவன் ஆகிய நான் அனைத்து உயிர்களையும் அறிந்து இருக்கின்றேன். என்னை உணருபவர்கள் ஒருவரும் இல்லை. சத்தியம் என்று கண்ட நல்லோர் விரும்பி நின்று உணர்ந்தபடி அல்லாமல், எல்லையில்லாப் பரம்பொருள் எனவும், புருடன் எனவும் அறிவின்றி அனைத்துமாய், அல்லாதனவுமாய் ஒன்றே எனவும் கூறுவர்.

**48.** **பார்த்துள முனிவர் என்னைப்**
**பரமஎன்று பண்டும் இன்றும்**
**நீத்துஉள குணத்தோன் என்றும்**
**நின்மல ரூபன் என்றும்**
**ஆத்துமப் பொருள்ஈது என்றும்**
**அலர்தலை உலகுக்கு உண்மை**
**ஆய்த்தும்இவ் அறிவே என்பர்**
**அல்லவர் அறியார் என்றும்.**

என் வடிவத்தை உணர்ந்து இருக்கின்ற முனிவர்கள், பிரமம் என்றும், முன்னேயும், இப்பொழுதும் குணம் குறி இல்லாதவன் என்றும், இது ஆத்மப் பொருள் என்றும், இந்த அறிவே விரிந்த இடமுடைய உலகுக்குச் சத்தியப் பொருளாய் இருப்பது என்றும் கூறுவர். அதனை அறியாத அஞ்ஞானிகள் எப்பொழுதும் உணர மாட்டார்கள்.

**49.** **யாதுஒன்றை அமரர் தம்மால் அறிவுஅரிதுஆகும் என்றன்**
**ஓதிய மாயை மூட மோகத்தால் உணர்வது இன்றி**
**ஏதுஒன்று இசையா என்றன் உண்மையாம் அறிவைக் காணார்**
**ஈதுஎன முனிகட்கு எல்லாம் இயம்பினன் இமையோர்க்கு ஈசன்.**

எதனைத் தேவர்களால் உணர முடியாது என்று சொல்லப்பட்ட எனது மாயை மறைத்த மயக்கத்தினால், ஞான உணர்வின்றி, எந்த ஒரு காரணத்தினாலும் அழிக்க இயலாத எனது சக்தி மயமாகிய ஞானத்தை அறிந்திட மாட்டார். தேவர்களுக்கும் கடவுளாகிய பரமசிவன் என்று சௌனகாதி முனிவர் அனைவருக்கும் உபதேசித்தனர்.

**50.** **நானே மாயை தனைக்கடந்து**
**நிற்பேன் ஞாலம் தனைஇயற்றேன்**
**ஏனை யனவும் எனைஒழிய**
**யாதோர் செயலும் இல்லதனால்**
**நானே சுகத்தை நடத்திடும்**
**நாதன் என்று நடுவுஎன்றும்**
**ஆனா அறிவோர் அறிந்திடுவர்**
**என்றே அருளிச் செய்தனனால்.**

உண்மை ஞானம் உடையோர், நான் மாயம் அற்றவனாய் இருப்பேன், உலகத்தைப் படைக்க மாட்டேன். மற்றவையையும், எச்செயலும் என்னையின்றி நடவாது. ஆகையால்

நானே உலகத்தை நடத்துவிக்கும் தலைவன் எனவும், நடுநிலைமை உடையவன் எனவும் உணர்வார்கள் என்று அருளிச் செய்தனன்.

**51.** **எங்கும் தானாய் யாவையுமாய்**
**நின்றே ஒன்றாய் அழிவின்றி**
**அங்கம் ஒன்றுஇன்று அறிவேயாய்**
**நுண்ணிது ஆய அருள்வடிவைத்**
**தங்கு ஞான யோகத்தால்**
**முன்பு ஆசரித்துப் பினைவந்துஎன்**
**அங்கம் ஆன பேர்ஒளியோடு**
**ஒன்றி யான் ஆய் அடங்கிடுவார்.**

தான் எங்கும் நிறைந்தவனாய், எல்லாப் பொருள்களுமாய் அழிவின்றி, யாதொரு உடலும் இல்லாமல் அறிவேயாகி, நுட்பமாய் உள்ள ஞான வடிவைப் பொருந்திய ஞான யோகத்தினால் முன்னர்க் கடைப்பிடித்துப் பின் வந்து, என் வடிவமான நிறைந்த ஒளியொடு பொருந்தி நானாக எனக்குள் ஒன்றாவார்.

**52.** **ஆங்குஅவர்கள் என்னுடைய மாயையைவ சித்து**
**நீங்கியபின் நின்மலமது ஆயஉரு ஆவர்**
**ஈங்குஇதுசெய் யாதவர்கள் என்றும்எனை எய்தார்**
**ஓங்கிவரு பந்தம்அதில் நின்றுடன் உழைப்பார்.**

ஞான யோகம் பயின்றவர்கள் என் மாயையை வசமாக்கி, மாயை அற்றவர்களானபின்பு குற்றமற்ற வடிவினர் ஆவர். இங்கு ஞான யோகப் பயிற்சியில் ஈடுபட்டு மாயையை வசம் செய்யாதவர்கள் எப்பொழுதும் என்னை அடைய மாட்டார். வளர்ந்து வருகின்ற தொடர்பிருந்தும் கூடவே துன்பம் அடைவர்.

**53.** **சுத்தனாய் ஒன்றாய் என்னைக்**
**கூடிடும் தொன்மை யோர்கள்**
**எத்தனை நூறு கோடி**
**கற்பங்கள் தாம்சென் றாலும்**
**மெய்த்தக மீளார் என்றன்**
**விளங்குமெய் அருளால் என்றே**
**இத்தகைத்து எனவே வேதம்**
**இயம்பிடும் என்றான் ஈசன்.**

தூய்மை உடையவராய், ஒன்றாய் என்னை அடைகின்ற பழைய சான்றோர், எத்தனை கோடி காலங்கள் போயினும், விளங்கும் என் உண்மை அறிவால் சத்தியமாய்ப் பிறவியை அடையார்கள் என இந்தப்படி வேதங்கள் முழங்கும் என்று ஈசன் திருவாய் மலர்ந்து அருளினான்.

**54. என்னால் உங்கட்கு இயம்பியஇஞ்**
**ஞானம் ஞான யோகிகட்கும்**
**பின்ஆம் உமது புத்திரர்க்கும்**
**பேணும் யோக சாங்கியர்க்கும்**
**சொன்னால் ஆகும் அல்லாரைத்**
**தூர ஒழிப்பது இதுஎன்றே**
**தன்நேர் அனையான் ஆம்ஈசன்**
**தானே சாற்றி அருளினான்.**

என்னால் உங்கட்கு உரைத்தருளப் பட்ட, விருப்பம் தரும் சாங்கிய யோகம் எனும் இந்த ஞானத்தை, இதனைப் பின் பற்றும் யோகிகட்கும், பின்வரும் உமது புதல்வருக்கும் உரைத்தால் பயன்படும், ஞானயோகம் இன்றிப் பக்குவம் அடையாதவர்களை இது தள்ளத் தக்கது என்று, தனக்கு நேர் ஒப்பில்லாத பரம சிவன் தானே உரைத்தருளினான்.

**55. அன்றுஅரி ஆமை ஆகி**
**அருள்செய்த புராணம் தன்னின்**
**முன்திகழ் பிறவி தீர**
**முனிகளுக்கு ஈசன் சொன்னான்**
**குன்றிடா மறையின் ஈறுஆம்**
**கீதையின் இரண்டாம் அத்தை**
**இன்றுஎலாம் அறியும் வண்ணம்**
**இயன்றவாறு உரைத்தது அன்றே.**

முன்னர் திருமால் ஆமை வடிவினராய் அருள் செய்த கூர்ம புராணத்தில் முன்னே உள்ள பிறவி தீரச் சௌனகாதி முனிவர்களுக்கு ஈசன் திருவாய் மலர்ந்தனன். அழியாத முடிவான கீதை வாக்கியத்தின் இரண்டாம் அத்தியாயத்தை இப்பொழுது யாவரும் உணரும்படி என் புத்திக்கு எட்டிய அளவு கூறினேன்.

## இரண்டாவது அத்தியாயமான சாங்கிய யோகம் நிறைவுற்றது

# 3. சம்பிரதாய அத்தியாயம்

1. **முன்னம் நான்மறை ஓதிமு டிந்ததை**
**உன்னும்ஆறு அரிது ஆகிய ஒன்றினை**
**ஞன்னு ஞானமும் ஞேயமும் அல்லதை**
**இன்னம் கேண்மின்என்று ஈசன்இயம் பினான்.**

முன்னர் நான்கு வேதங்களும் உபதேசித்ததை மனத்தினால் சிந்திக்க, அரிய தாயுள்ள பிரமத்தினைக் கருதிநின்ற ஞானமும், அதனைப் பற்றிய செய்திகளும் அல்லாதவற்றை இன்னும் பயில்வீர்களாக என்று பரமசிவன் திருவாய் மலர்ந்து அருளினான்.

2. **நன்றுஆய் ஞான கனம்ஆகி**
**நானா எல்லாம் பிறப்புஇடம்ஆய்**
**ஒன்றுஆய் வேறுஓர் பொருள்இன்றி**
**ஒளியாய் ஒன்றோடு உவமிப்பது**
**அன்றாய் அகில சராசரங்கட்கு**
**ஆதா ரம்தான் ஆய்என்றும்**
**பொன்றா ததுஅதுஆய் அவிகாரப்**
**பொருளாய்ப் புலனாய்ப் புணர்ப்புஅரிதாய்.**

நல்ல திரண்ட அறிவாகி, யாவும் உண்டாவதற்குக் காரணமாகி, ஒன்றாய்த் தனக்கு வேறான பொருளின்றி ஒளிமயமாய், வேறு ஒன்றுடன் உவமித்துச் சொல்லுதற்கு இயலாமல் அனைத்துலகிற்கும் தானே ஆதாரம் ஆகி என்றும் அழியாததாய், வேறுபாடில்லாத பொருளாய், ஐம்புலன்களோடும் தொடர்பு இல்லாததாய்.

3. **இரண்டுஆவது இலாது அளவைகளால்**
**எட்டா ததுஆய் எங்குஎங்கும்**
**சிரம்கால் கைககள் முகம்உடைத்தாய்த்**
**தெரியப் படாததுஆய்த் திரமாகி**
**இரும்பார் நீர்தீ கால்வானம்**
**எல்லாம் இருத்தற்கு இடமாகும்**
**பரம்தான் உணர்ந்தோர் நிர்க்குணம்ஆம்**
**பரம வியோமம் என்பர்களால்.**

இரண்டின்றி அளவைகளால் அறியக் கூடாததாய், எல்லா இடங்களிலும் தலை, கால்கள், கைகள், கண்கள், முகங்கள் உடையதாய், யாவராலும் உணர முடியாததாய், நிலையாகி, பெரிய பூமியும், நீர், தீ, வானம் ஆகியன இருத்தற்கு இடமாகிய பிரமத்தினை அறிந்தவர்கள் குணமற்ற மேலான ஆகாயம் என்று கூறுவார்கள்.

4. **அரிதுஆய் அறியா அறிவேயாம்**
**அனைத்து ஆருயிர்க்கும் உயிர்அந்தப்**
**பெரிதுஆய் அகமும் புறமுமாம்**
**பிரமம் நானே பிறர்க்குஎன்றும்**
**தெரியாது என்னா லேபரம்பி**
**என்பால் இருந்துஇந்தச் சகம்எல்லாம்**
**சரியா நின்றது என்றுஅறிவான்**
**சகல வேதங்க ளும்அறிவான்.**

அடைதற்கு அரியதாய், உணர இயலாத ஞானம் அனைத்து உயிர்கட்கும் உயிராய், அவ்வளவு மகத்தானதாய், அகத்திலும், புறத்திலும் பிரமமான நான் இருக்கின்றேன். அந்நியர்களால் அறிய இயலாத இந்த உலகங்கள் யாவும் என்னாலே விரிந்து, என்னிடத்தில் இருந்து அலைந்துக் கொண்டிருக்கிறது என்று உணருபவன் அனைத்து வேதங்களையும் உணர்ந்தவன் ஆகின்றான்.

5. **ஒருதான் ஆய பரம்பொருளை**
**உணரப் படாத இயல்புஅதனால்**
**தெரியா மைஎனப் படும்அந்தத்**
**தெரியா மையிலே திகழ்காலம்**
**பிரதா னம்தான் புமான்பிறந்த**
**அவற்றால் முழுதும் பிறத்தலினால்**
**நிருபா திகமாம் பிரமமய**
**நிகழ்வே இந்த நிகழ்வுஎல்லாம்**

ஒப்பற்ற தானாகிய பரம்பொருளை அறிய இயலாத தன்மையினால் தெரியாமை என்று சொல்லப்படும் அந்தத் தெரியாமையினின்றும் விளங்கும் காலமும், புருடனும் உண்டாயின. அந்த மூன்றாலும் அனைத்தும் உண்டாயினமையால், இங்கு தோன்றுவன யாவும் வேறுபாடற்ற பிரம வடிவத்தின் தோற்றமே ஆகும்.

6. **சொன்ன காலம் பகுதிபுமான்**
**தோற்றம் என்பால் இரண்டிற்கும்**

**முன்னர் ஆகும் காலம்இவை**
**மூன்றும் என்பா லேமுடியும்**
**அன்ன தன்மை யால்ஆதி**
**அந்தம் இன்றி அந்நியமாய்**
**என்னில் வேறாய் இன்மையினால்**
**என்னது உருவே என்பர்களால்.**

முற் கூறிய காலமும், பிரகிருதியும், புருடனும் என்னிடத்திருந்து உண்டாயின. காலமானது பிரகிருதி, புருடன் ஆகிய இரண்டிற்கும் முன்னர் உண்டாயிற்று. என்னிடத்திலேயே இவை மூன்றும் முடிவை அடையும். அந்தக் காரணத்தினால் முதலும் முடிவுமில்லாமல் எனக்கு அந்நியமாக வேறு பொருள் இன்மையினால் அவை என்னுடைய வடிவமே என்று சொல்வார்கள்.

**7.** **மகம்முதல் ஆக விசேடம்ஈறு ஆக**
**மன்னும்இச் சகத்துஎலாம் தந்து**
**சகலஆர் உயிர்க்கும் மோகமே செய்யும்**
**சத்தியைப் பகுதியா கவும் அப்**
**பகுதியில் ஆங்கா ரத்துடன் புணர்பால்**
**பஞ்சவிஞ் சகன்எனப் பட்டுச்**
**சகமொடு துக்கம் துய்ப்பவன் புருடன்**
**ஆகவும் துணிந்தனர் தொல்லோர்**

மக தத்துவம் முதலாக விசேடம் இறுதியாக விலை பெற்றுள்ள இவ்வுலகம் யாவையும் படைத்து, அனைத்து உயிர்க்கும் மயக்கம் தரும் சத்தியினைப் பகுதியாகவும், அந்தப் பகுதியில் அகங்கார தத்துவத்தின் தொடர்பால் இருபத்தைந்து தத்துவத்தினை உடையவன் என்று சொல்லப்பட்டுச் சுக துக்கங்களை அனுபவிப்பவன் சீவான்மா (புருடன்) எனவும், தொன்று தொட்டு வரும் பெரியோர்கள் உறுதி செய்தனர்.

**8.** **ஆதி விகாரப் பகுதியின் மான்ஆம்**
**அறிதலில் விஞ்ஞா தாவும் அவன்பேர்**
**ஏத அகங்கா ரம்என மான்ஆம்**
**ஒருவனுமே அங்கு இருபெயர் உற்றான்**
**தீதுஉறு தேகம் கொண்டு நடத்தும்**
**சீவனும் ஆகச் செப்புதல் உற்றான்**
**ஆதலின் எந்தப் பிறவியும் இன்ப**
**துன்பமும் ஆங்கா ரத்தவ னாலே**

முதல்வேறுபாட்டை அடைகின்ற பகுதியினின்று மகதத்துவம் உண்டானது. அதனை அறிகின்ற படியால் விஞ்ஞாதாவும் (மேலான அறிவுடையவன்) அவன் பெயராகும். அந்த மக தத்துவத்தினின்றும் குற்றம்பொருந்திய அகங்காரம் என ஒன்று உண்டாயிற்று. அவ்விடத்தில் மக தத்துவம் ஒருவனே மக தத்துவம் என்றும், அகங்கார தத்துவம் என்றும் இரு பெயரடைந்தான். குற்றம் பொருந்திய உடலைப் பெற்று நடத்துகின்ற உயிர் என்று சொல்லலாயினன். ஆகையினால் எப்படிப்பட்ட பிறவியும் சுக துக்கங்களும் அகங்கார தத்துவத்திலிருப்பவனால் உண்டாகின்றன.

**9.** **கோலம் அறிவே சீவனுக்கும்**
**கொண்டு துய்க்கும் கருவிமனம்**
**சாலும் அதனால் அவிவேகம்**
**அதனால் துன்பம் சாருமால்**
**மாலும் பகுதி யில்புருடன்**
**வைத்த பற்றால் மற்றுஅந்தக்**
**காலம் செய்யும் பிறப்புஇறப்புக்கு**
**அதுவே என்றும் காரணமாம்.**

அழகுடைய அறிவு வடிவான உயிருக்கும், அது கொண்டு அனுபவிக்கும் சாதனம் மனமாகும். அம்மனத்தால் அறியாமை வந்து பொருந்தும். அதனால் துன்பம் உண்டாகின்றது. மயக்கம் தருகின்ற பகுதியில் சீவான்மா (புருடன்) வைத்த பற்றால் அந்தக் கால தத்துவம் செய்கின்ற பிறப்பு இறப்புக்கு அப் பகுதியைச் சார்ந்த புருடனாகிய சீவான்மாவே காரணமாகும்.

**10.** **படைப்பதும் காலம் தானே**
**படைத்தவை யாவும் நேராய்த்**
**துடைப்பதும் காலம் தானே**
**தொல்லைஈறு இல்லாக் காலத்து**
**இடைப்படத் தோன்றி மாயும்**
**யாவையும் யாவ ரேனும்**
**கடப்பவர் இல்லைக் காலம்**
**காலமே கடந்து நிற்கும்.**

காலமே அனைத்தையும் படைக்கின்றது. அக்காலமே படைத்த அனைத்தையும் நேரே அழிப்பதும் ஆகும். தொன்று தொட்டு முடிவில்லாத காலத்தின் இடையில் தோன்றி அழிகின்ற அனைத்துப் பொருள்களையும் கொண்டு எப்படிப்பட்ட பெரியவரேனும் காலத்தைக் கடந்தவர்கள் இல்லை. காலமே அனைத்தையும் கடந்து நிற்கும்.

**11.** **நிகில உலகும் நடக்கும்வகை**
**நேரே நியமிக் கின்றதுஅது**
**சகல உயிர்க்கும் உயிரும்அது**
**தானே உள்ஆய் இருக்கும்அது**
**அகில அறிவும் உடையதுஅது**
**ஆத லால்மற்று அக்காலம்**
**பகர உறுவர் சநாத னன்ஆம்**
**பகவான் புருடோத் தமன்ஆக.**

அந்தக் காலமே அனைத்து உலகங்களையும் நடக்கும் வகையாய் நேரே நின்று நியமனம் செய்கின்றது. அந்தக் காலமே அனைத்துயிர்க்கும் உயிராக உள்ளது. அந்தக் காலமே அனைத்து உயிர்களுக்கும் ஆதாரமாய் இருக்கும். அந்தக் காலமே அனைத்தறிவும் உடையதாயிருக்கும். ஆகையினால் அந்தக் காலத்தை நிலையாக உள்ள நற்குணங்களையுடைய பகவானாகக் கூறுவர்.

**12.** **இந்தியங்களில் பரம்மனம் மனத்தில்ஆங் காரம்**
**அந்தம் ஆனஆங் காரத்தில் பரமஅவ்வி யத்தம்**
**பந்தம் ஆம்அதில் புமான்பரம் அதில்பரம காலம்**
**இந்த யாவைக்கும் உயிர்இதுஇங்கு இதனினால் எல்லாம்.**

இந்திரியங்கட்கும் ஆதாரமாய் உள்ளது மனம் ஆகும். மனத்திலும் வந்து ஆங்காரம் குடி கொண்டுள்ளது. முடிவான அகங்காரத்திலும் அறியாமை குடி கொண்டுள்ளது. தொடர்பாக வரும் அறியாமையில் சீவான்மா நிலைபெற்று உள்ளது. அந்தச் சீவான்மாவிலும் இங்கு கூறிய இந்திரியம், மனம், அகங்காரம், அறியாமை, சீவான்மா ஆகிய எல்லாவற்றிற்கும் உயிராய் ஆதாரமாய் உள்ளது கால தத்துவமாகும். இந்தக் கால தத்துவத்தினாலேயே எல்லாம் உண்டாகின்றன.

**13.** **சகத்தின் உயிராம் காலபரம்**
**தன்னில் வியோமம் பரம்அதனை**
**மிகத்து நின்ற இயல்புஅதனால்**
**வியோமா தீத னாய்எல்லாம்**
**தெகித்த அதனால் அனல்என்று**
**செப்பப் பட்ட யான்ஆகும்**
**பகுப்புஒன்று இல்லாப் பரப்பிரமம்**
**என்னில் வேறுஓர் பரம்இல்லை.**

உலகிற்கு உயிராயுள்ள கால தத்துவம் பரமாக உள்ளது. அதில் ஆகாயம் அடங்கியுள்ளது. அவ்வாகாயத்தையும் கடந்து நிற்கின்ற தன்மையினால் இறை ஆகாயத்தைக் கடந்தவனாய் இருந்து யாவற்றையும் எரிப்பதால் தீ என்று சொல்லப் பட்டதும் யானேயாகும். பிரித்திட வேறொன்றும் இல்லாமையால் மேலான எனக்கு அந்நியமாக ஓர் ஆதாரமான பொருளுமில்லை.

**14.** **பரமாய் எல்லாப் பொருளுக்கும்**
**பரமாய் உள்ள எனைஅறிந்த**
**வரமா முனிவன் தான்என்றும்**
**மரியான் பிறவான் மன்னுசரா**
**சரமாம் உலகம் எனைஒழியத்**
**தான்உண் டாகாது ஒருகாலும்**
**திரம்ஆம் நானே உலகுஅனைத்தும்**
**செய்கின் றேனும் சிதைப்பேனும்.**

மேலான எல்லாப் பொருளுக்கும் மேலாய் இருக்கின்ற என்னை அறிந்த சிறந்த முனிவன் எப்பொழுதும் மரணத்தை அடையான். நிலையாயுள்ள சராசரங்கள் யாவும் என்னையின்றி ஒரு பொழுதும் தோன்ற மாட்டாது. நிலையாயுள்ள நானே அனைத்து உலகங்களையும் படைக்கின்றவனும் அழிக்கின்றவனும் ஆவேன்.

**15.** **ஏகம்ஆய் நின்ற என்றன்**
**ஏவலால் எல்லை இல்லா**
**மோகம்ஆம் சகத்தை என்றன்**
**முன்னரே நின்று காலம்**
**பாகமாய்ப் பண்ணும் என்று**
**பரம்பரன் அருளி ஈதே**
**ஆகும்வே தங்கள் எல்லாம்**
**அறைந்ததுஎன்று அருளிச் செய்தான்.**

ஒன்றாய் இருக்கின்ற என்னுடைய ஆணையினால் அளவிட இயலாத மயக்கத்திற்குக் காரணமாயுள்ள உலகத்தை என் முன்னேயே இருந்து கால தத்துவமானது பக்குவமாகச் செய்யும் எனப் பரத்துக்கு எல்லாம்மேலான பரமசிவன் இவ்வாறு உபதேசித்தான் என எல்லாமும் ஆகிய வேதங்கள் கூறுகின்றன என்று திருவாய் மலர்ந்தருளினான்.

**சம்பிரதாய அத்தியாயம் நிறைவுற்றது**

## 4. பத்திமை அத்தியாயம்

1. **விரிந்ததஇங்கு ஏவனால் விண்மு தற்பொருள்**
**பெருந்தகை ஆம்அவன் பெருமை பேசிடப்**
**பரந்துஎழு சிந்தையை ஒருக்கிப் பத்தியால்**
**அரும்தவர் கேண்மின்என்று அருளிச் செய்குவான்.**

இவ்விடத்து எந்தப் பரமேசுவரனால் வானம் முதலான அனைத்துப் பொருள்களும் உண்டாயினவோ, மேன்மை பொருந்திய அந்தப் பரமேசுவரனது பெருமையைச் சொல்ல, விரிவாகச் செல்லும் சிந்தனையைப் பக்தியால் வசமாக்கி, அரிய தவமுடைய சௌனகாதி முனிவர்களே கேட்பீர்களாக என்று சொல்லத் தொடங்கினான்.

2. **சகத்தளோர் யாவர்க்கும் சான்றுஆகி யான்என்று**
**மகத்துளே நின்றாலும் பழகியபத் தியின்அன்றி**
**மகத்தினால் தானத்தால் மாதவத்தால் மற்றும்ஒரு**
**முகத்தினால் ஒருவர்க்கும் முன்னிற்கும் அவன்அல்லேன்.**

நான் உலகிலுள்ள அனைவருக்கும் சாட்சியாக எப்பொழுதும் மனத்துள்ளே இருப்பினும், நீண்ட காலமாக வழிபட்ட பத்தியினால் அல்லாமல், வேள்வியினாலும், கொடையாலும், பெருந்தவத்தாலும், வேறு சில வழிகளினாலும் எப்படிப் பட்டவர்க்கும் முன்னிற்கும் அவன் அல்லேன்.

3. **ஈங்குஎனது உள்ஆய் இருக்கஎப் பொருளும்**
**எதுக்கும்உள் ஆகியான் இருப்பன்**
**தாங்குவன் முழுதும் தருகுவன் எல்லாம்**
**சகலமும் அழிவதுஎன் தன்னால்**
**ஓங்கிய முனிவர் பிதிரர்மற்று உம்பர்**
**ஒளிமிகும் பிரமர்இந் திரர்வேறு**
**ஆங்குஒளி மிகுத்தோர் யாவரே யாக**
**அவரும்என் உண்மையை அறியார்.**

இவ்விடத்து எப்பொருளும் என்னிடத்து இருக்கவும் நான் எல்லாவற்றிற்கும் உள்ளாகி இருப்பன். எல்லாவற்றையும் உண்டாக்குவேன். பரமேசுவரன் ஆகிய என்னாலேயே எல்லாம் நாசத்தை அடையும். சிறப்புடைய முனிவர்களும் முன்னோர்களும், தேவர்களும். ஒளி மிக்க பிரமர்களும், இந்திரர்களும், வேறு ஒளி மிகுந்தோர் எவராயினும்அவர்களும் என் இயல்பான வடிவினை உணர மாட்டார்.

**4. சந்ததம் வேதம் யாவையும் பரமாச்**
**சாற்றவும் படுவதிங்கு எனையே**
**அந்தணர் எல்லாம் வேள்வியி னாலும்**
**அங்கியில் போற்றுவது எனையே**
**எந்தலோ கத்தும் பிதாமகன் முதலாம்**
**யாவரும் இறைஞ்சுவது எனையே**
**சிந்தையை ஒருக்கி யோகிகள் உளத்தே**
**தியானம்உற்று இருப்பதும் எனையே.**

இவ்விடத்து, பரமேசுவரன் ஆகிய என்னையே சதா காலமும் வேதங்கள் எல்லாம் உயர்வாகச் சொல்லும், என்னையே அந்தணர்கள் எல்லோரும் வேள்வி மூலம் அக்கினியில் மந்திரங்களைச் சொல்லி வணங்குவர். எல்லா உலகங்களிலும் நான்முகன் முதலிய அனைவரும் என்னையே வணங்குவர். யோகிகள் சித்தத்தை வசமாக்கி மனத்தின்கண் என்னையே வணங்கிக் கொண்டிருப்பர்.

**5. ஏகன் ஆகி நிற்கின்ற**
**யானே எல்லா இமையவர்க்கும்**
**தேகம் பண்ணி அவற்றுள்ளே**
**திதனாய் நிற்ற லாய்ச்செய்யும்**
**யாகம் எல்லாம் எனைக்குறித்தே**
**இயற்று கின்றார் அவற்றில்அவிர்ப்**
**பாகம் கொள்வேன் நான் அவற்றின்**
**பயனும் கொடுக்கப் படுவேன்நான்.**

ஒன்றாய் நிற்கின்ற நானே எல்லாத் தேவர்களுக்கும் உடலை உண்டாக்கி, அந்த உடலுள் நிலையாய் நிற்கும்படி செய்கின்றவன். என்னைக் குறித்தே எல்லா வேள்விகளையும் செய்கின்றார்கள். அந்த வேள்விகளில் அவிர்ப் பாகம் கொள்கின்றவனும் நானே. அவற்றிற்கான பயன்களைக் கொடுப்பவனும் நானே.

6. **பத்தியினால் யாவர்சிலர் பரவிஎனைப் பணிகின்றார்**
**சத்தியமே அவர்களுக்குச் சந்நிதிபண் ணாநிற்பன்**
**நித்தமும்முன்ஆம் நால்வேத நிட்டர்களாய் அறநெறிசேர்**
**உத்தமராம் அவர்எனினும் ஒழிவுஅறவே உணர்கில்லார்.**

பரமேசுவரன் ஆகிய என்னை வாக்கால் போற்றி வழிபடுபவர் எவரோ அவர்களுக்கு சதா காலமும் உண்மையாகவே விளங்கிக் கொண்டிருப்பேன். நித்தமும், அநாதியாயுமுள்ள நான்கு வேதங்களையும் தியானித்து கொண்டிருப்பவர்களாய் அறவழியினைச் சேர்ந்த உத்தமர்கள் எவராயினும் இடையீடு இன்றி என்னை அறிய மாட்டார். ஏகதேசம் அறிவார்கள்.

7. **மறையவர் அரசர் மாதவம் சிறந்த**
**வணிகர்தாம் மனத்தினால் வணங்கில்**
**குறைவுஅறு பரமா னந்தமாம் பதத்தைக்**
**கொடுப்பன்நான் குலம்இலா எந்தக்**
**கறைஉறும் குலத்தோர் ஆயினும் அதனைக்**
**காலபா கத்திலே பெறுவர்**
**இறைஎன எனையே பத்தியால் மலர்இட்டு**
**இடைவிடாது இறைஞ்சுவர் ஆகில்.**

அந்தணர்களும், அரசர்களும், பெருஞ் சிறப்புடைய வணிகர்களும் மனத்தால் வணங்கினால் குறைவற்ற பேரானந்தமான பேற்றினைப் பரமேசுவரன் ஆகிய நான் கொடுப்பேன். குலமில்லாத தாழ்ந்த குலத்தவராயினும் என்னையே இறையெனப் பத்தியால் மலரிட்டு வணங்குவர் ஆகில் அந்தப் பேரின்பப் பேற்றினைப் பக்குவமான காலத்திலே அடைவார்கள்.

8. **பழுதுஇல்அவர் என்னுடைய பத்தர்ஒரு காலும்**
**அழிவுஇலர்கள் என்றுஅடியி லேஅறைதல் உற்றேன்**
**தொழுதவர் என்அன்பனை எனைத்தொழுதல் உற்றோர்**
**ஒழியஇகழ் வாரும்எனை யேஇகழ்தல் உற்றார்.**

பரிசுத்தம் ஆனவர்களும், என்னுடைய பத்தர்களும் ஒரு பொழுதும் அழிய மாட்டார்கள் என (இரண்டாவது அத்தியாயத்திலேயே) கூறியுள்ளேன். என் அன்பனை வணங்கியவர்கள் என்னைத் தொழுதவர்கள் ஆகின்றனர். தான் அழியும் காலம் வந்துற்றமையினால் என் அன்பனை இகழ்ந்தவர் என்னையே இகழ்ந்தவர் ஆகின்றார்.

9. **கலையாளர் யாவரினம் காய் ஆதல் மலர்ஆதல்**
**இலைஆதல் நீர்ஆதல் இயன்றதுகொண்டு என்பாலே**
**நிலையாய பத்தியினால் நித்தம்எனை வழிபடுவான்**
**தலைஆய அன்பன்எனக்கு யாவரினும் தான்இனியான்.**

எப்படிப்பட்ட கலையறிந்தோர் ஆயினும் காய்களைக் கொண்டோ, மலர்கள் கொண்டோ, பத்திரம் கொண்டோ, நீர் கொண்டோ அல்லது தம் சக்திக்கு இயன்றது கொண்டோ என்னிடத்தே கொண்ட நிலையான அன்பினால் நித்தம் என்னை வழிபடுபவன் எனக்குத் தலையாய அன்பன் ஆவான். இவனே எல்லோரினும் விரும்பத் தகுந்தவன்.

10. **படைத்தவனைப் படைத்துஅவர்க்குப்**
**பண்டையே மறைஅனைத்தும்**
**கொடுத்தவன்நான் ஆதலில்எக்**
**குரவர்க்கும் குருபரன்நான்**
**துடைப்பவன்நான் அசுரர்களைத்**
**தொல்அறத்தில் நின்றோரை**
**இடர்ப்படுமாறு ஒழித்துஅவர்கட்கு**
**இன்பம்அளித் திடுபவன்நான்.**

முன்னமேயே இவ்வுலகைப் படைத்த அந்த பிரமாவுக்குப் பரமேசுவரன் ஆகிய நானே உபதேசித்தவன். ஆகையினால் எல்லா ஆசிரியர்க்கும் நானே குரு ஆவேன். தேவர்கட்குத் துன்பம் தரும் அசுரர்களை அழிப்பவனும் நானே. தொன்று தொட்டு வரும் தருமங்களை விடாது கடைப்பிடிப்பவர்க்கு வரும் துன்பம் தரும் அரசர்களை அழிப்பவனும் நானே. தொன்று தொட்டு வரும் தருமங்களை விடாது கடைப்பிடிப்பவர்க்கு வரும் துன்பங்களை நீக்கி அவர்களுக்கு இன்பம் தருபவனும் நான் ஆவேன்.

11. **ஓதும் யோகியர்கள் தங்கள் உற்பவம்**
**ஒழிப்பன் நான்உறு பிறப்பினுக்கு**
**ஏதுநான் ஒருபி றப்பு இறப்பும்இலன்**
**அவன்நான் இவ்அகி லத்தினுக்கு**
**ஆதிநான் அதுது டைப்பன் நான்அதுபு**
**ரப்பன் நான்முழுதும் அளிப்பன்நான்**
**நீதிதான் நினையல் அற்ற மாயைசெய்து**
**நித்தன் ஆய்மறைய நிற்பன்நான்.**

புகழ்ந்து சொல்லப்படும் யோகிகளுடைய பிறப்பினை நானே அழிப்பவன். கர்ம வினையால் வரும் பிறப்புக்கு நானே காரணமாய் உள்ளேன். நான் இங்கு பிறப்பு, இறப்பு இல்லாதவன். நானே இவ்வுலகிற்கு முதன்மையானவன். அந்த உலகை அழிப்பவனும் நானே. எல்லாவற்றையும் காப்பவனும் நானே. முறையாக உணர இயலாத மாயையினைச் செய்து நிலைபெற்ற பரமேசுவரன் ஆகிய நான் அதில் மறைந்து நிற்பேன்.

**12.** **வஞ்ச மாயைஒரு சத்தி என்தனது**
**மற்று யாரையும் மயக்கமாம்**
**விஞ்சை ஆகுமொரு சக்தி மற்றஎனது**
**வில யோமபுணர் வார்கள்தம்**
**நெஞ்சின் மேவியத னால்அம் மாயையினை**
**நீக்கி யேநிகழு கிற்பன்நான்**
**அஞ்சி டாதுஎனை அநந்த சக்திகளும்**
**யான்நி னைத்தவணம் ஆகுமால்.**

என்னுடையதும் வஞ்சகத் தன்மையோடு கூடியதுமான மாயையாகிய ஒரு சத்தி எப்படிப் பட்டவர்களையும் மோகம் அடையச் செய்யும். என்னுடைய வித்தையாகிய ஒரு சத்தியானது குற்மற்ற யோகம் செய்வார் மனத்தில் பொருந்தி இருத்தலால் அம் மாயையினை ஒழித்து நான் விளங்குமாறு நிற்பேன். நான் எண்ணுகின்றபடி அஞ்சாது என்னிடத்தில் அநேக சக்திகளும் உண்டாகும்.

**13.** **ஆலம் பனம்ஆம் சக்திகளுக்கு**
**ஆலம் பனன்நான் அடங்கவும்என்**
**பால்அங்கு இருக்கும் முத்தியும்என்**
**பாலே எவர்க்கும் உள்ஆம்என்**
**மால்ஒன் றியமா யைஅடைந்து**
**மலரோன் வடிவு கொண்டுஒன்று**
**ஞாலம் தன்னை உண்டாகப்**
**பண்ணும் நானா விதமாக.**

பற்றுக்கோடான சத்திகளுக்கு நான் பற்றுக் கோடாய் இருப்பவன். என்னிடம் யாவும் அடங்கியிருக்கும். என்னிடத்திலேயே வீடு பேறுண்டாகும். எல்லார்க்கும் பற்றுகேடாய் இருக்கும் என்னுடைய மயக்கம் தரும் மாயையை அடைந்த ஒரு சத்தி பிரமன் வடிவெடுத்து இவ்வுலகை அநேக வகையில் உண்டாக்கும்.

14. **ஓது யாவையும் தான்ஆய் உயிர்க்குஎலாம்**
**நாதன் ஆகிய நாரா யணன்எனும்**
**தீது இலாதஎன் சத்திதி தித்தலால்**
**ஈது எலாம்நிலை பெற்றே இலங்குமால்.**

வேதம் சொல்லுகின்ற எல்லாம் தன் வடிவமாக, அனைத்து உயிர்க்கும் தலைவனாக விளங்கும் நாராயணன் என்னும் குற்றமற்ற என்னுடைய மற்றொரு சத்தியானது காப்பதால் இந்த உலகங்கள் யாவும் நிலைபெற்று விளங்கும்.

15. **மூன்றா வதுஉருத் திரமூர்த் தியதுஆய்த்**
**தோன்றா வகைநின் றுதுடைப் பதனைச்**
**சான்றோர் பலர்தா மதகா லம்என**
**ஊன்றா எனதுஆ கஉரைப் பர்களால்.**

மூன்றாவதாக உள்ள தமோ குண சத்தியை உருத்திர மூர்த்தியாக மறைந்து இருந்து அனைத்தையும் அழிப்பதனைப் பல பெரியோர்கள் தாமத கால தத்துவம் என்று நிலைபெற்ற என்னுடையதாகச் சொல்வார்கள்.

16. **நித்தநிய மத்துடனே நெறிஉறப்பாப் பார்கள்சிலர்**
**பத்தியால் பார்ப்பர்சிலர் பாவனையால் பார்ப்பர்சிலர்**
**சத்மியமா ஞானத்தால் பார்ப்பர்சிலர் சாற்றுகின்ற**
**எத்திரத்தா ரினும்இவனே எனைஉணரும் மெய்ஞ்ஞானி**

முறையாகப் பொருந்திய நித்தியக் கடமைகளோடு சிலர் பரமேசுவரனாகிய என்னை உணர்வார்கள். சிலபேர் பக்தியினாலே உணர்வார்கள். சிலர் பாவனையால் உணர்வார்கள். சிலர் மெய்ஞ் ஞானத்தால் உணர்வார்கள். இப்போது கூறிய ஆத்ம ஞானியே முன்னர்க் கூறியவர் எல்லோரினும் என்னை அறிந்திருக்கும் மெய்ஞ் ஞானியாவான்.

17. **அறிவால் வழிபாடு உறுவான்**
**எவன்மற்று அவன்என்னில்**
**பிறிவான் அவன்யான் எனவே**
**நினைமின் பிறர்தாமும்**
**உறவால் வழிபாடு உடையார்**
**அடையார் ஒருகாலம்**

**பிறஆ ழியிடைப் பிறிவாய்**
**எனையே பெறுகின்றார்.**

எவன் ஞானத்தினால் வழிபடுகின்றானோ, அந்த ஞானியானவன் என்னில் வேறு ஆக மாட்டான். அவனே நான் என்று உணருங்கள். வேறு தெய்வங்களின் தொடர்பால் பக்தி செய்பவர்களும் ஒரு காலத்தும் பிறவியாகிய கடலில் விழமாட்டார்கள். அன்புடன் என்னையே அடைகின்றார்கள்.

**18.** **எல்லா உலகங் களும்என்**
**பாலே என்னாலே**
**செல்லா நின்றும் செயல்ஒன்று**
**இலன்நான் சிவயோகி**
**அல்லால் நடவாது எனவும்**
**அந்தச் செயல்என்பால்**
**இல்லாது அமையும் அறிவான்**
**என்றும் பிறிவானால்.**

என்னிடத்திலேயே எல்லா உலகங்களும் உண்டாகின்றன. அனைத்துலகங்களையும் நானே நடத்துபவனாய் இருந்தும் நான் ஒரு செய்கையும் இல்லாதவனாவேன். சிவயோகியாகிய நான் இல்லாது நடவாது எனவும். அந்தத் தொழில் என்பால் இல்லாது இருப்பதையும் எப்பொழுதும் தெரிந்திருப்பவன் என்பால் அன்புடையவன் ஆவான்.

**19.** **காலம் ஆகிய பரம்செயும் முழுவதும்**
**கண்டுகொண்டு இருப்பேன்நான்**
**நூலி னாலும் நுண் உணர்வினால் பிறிதினால்**
**நுவன்றிடப் படுவேன்நான்**
**மால்இ லாதமா யோகிமா தேவன்நான்**
**மகத்துவம் எனக்குஉண்டாம்**
**மூலம் ஆகிய பரத்தினில் பரமம்ஆம்**
**முறைமையால் மொழிகின்றேன்.**

கால தத்துவமாகிய கடவுள் செய்கின்ற எல்லாவற்றையும் நான் பார்த்துக் கொண்டு இருப்பேன். சாத்திரங்களினாலும், சூட்சும புத்தியினாலும் மற்றையவற்றாலும் பரமேசுவரன் ஆகிய நான் சொல்லப் படுவேன். மயக்கம் இல்லாத மகா யோகியும் மகாதேவனும் நானே

ஆகின்றேன். பரமேசுவரன் ஆகிய எனக்குப் பெருந்தன்மைகள் இருக்கின்றன. எல்லாவற்றிற்கும் காரணம் ஆகிய மேலானவற்றைப் பார்க்கிலும் பற்றுக்கோடாகிய தன்மையினால் சொல்கின்றேன்.

**20.** **படைப்பவன்நான் எப்பொழுதும் பரம்பரயோ கிக்குஇருந்து**
**நடத்துவன்நான் நனவுஒடுக்கம் இலாஞான யோகத்தால்**
**கிடைத்திடும்என் தனைஆகக் கெழுமியயே கானந்தத்து**
**இடைப்படலால் நடம்செய்வேன் எல்லைஇல்பேர் இன்பத்தால்.**

நான்முகன் வடிவாய் இருந்து எல்லாவற்றையும் படைப்பவன் நானே. என்றும் மேலான பிரம யோகிகளின் இதயத்திலிருந்து நடத்துப்வனும் நானாகின்றேன். தோற்றமும் அழிவும் இல்லாத ஞான யோகத்தினால் அடைகின்ற என்னுடைய வடிவம் யோகானந்தத்தில் விளங்குதலால் அளவிலாத பேரின்பத்தில் நடம் செய்து கொண்டிருப்பேன்.

**21.** **யான்ஆடும் இயல்புஅறிவான் எல்லாவே தமும்அறிவான்**
**வான்நாடர் மாமறைகள் அறைகின்ற மறைவுஇதனைத்**
**தான்நாளும் பெறஉரியான் தவம்உடையான் நிசம்உடையான்**
**ஆனாத அன்புடையான் ஆகிதஅ னலம்உடையான்**

யான் இதயத்திலிருந்து நடம் செய்யும் தன்மையை அறிபவன் அனைத்து வேதங்களையும் உணர்ந்தவன் ஆகின்றான். தேவர்கள் விரும்பும் பெருமை பொருந்திய வேதங்கள் சொல்லுகின்ற இந்த மறைபொருளை நாளும் அடையத் தக்கவன் ஆகின்றான். நல்ல தவம் உடையவன் ஆகின்றான். உண்மை உடையவன் ஆகின்றான். உணர்ந்த பக்தியுடையவன் ஆகின்றான். உண்டாக்கப் பட்ட நெருப்பை வணங்குபவனும் ஆகின்றான்.

## பத்திமை அத்தியாயம் நிறைவுற்றது

## 5. விசுவ ரூப அத்தியாயம்

1. **இவ்அளவு தான்அருளி இன்பமுடன் அன்பர்க்கு**
**அவ்அளவு இலாதிரு மேனியத னாலே**
**எவ்ஒளியும் ஆனவன் இலங்கியவர் உள்ளே**
**செவ்ஒளி விளங்கநடம் நின்றுசெயல் உற்றான்.**

சௌனகாதி முனிவர்கட்கு அன்போடு பரமேசுவரன் இந்த அளவு பக்தியை உபதேசித்து அளவிட இயலாத மங்களத் திருமேனியுடன் அந்த முனிவர்களின் இதயத்துள் ஒளி வடிவாய் விளங்கி நடம் செய்ய ஆரம்பித்தான்.

2. **எண்ணமது இறந்தபர யோகஇத யத்தே**
**வண்ணமது இலாதபரம் ஆகியம கேசன்**
**விண்ணின் இடையேவிம லன்ஆனஅரி யோடும்**
**கண்ணின் எதிர்நின்றுநடம் ஆடஅவர் கண்டார்.**

எண்ணத்தை எல்லாம் கடந்து மேலான யோகம் பயின்றவர் இதயத்தில் தனக்கு என ஒரு நிறமும் இல்லாத மேலான மகேசன் வானில் நிர்மலமான திருமாலோடும் சௌனகாதி முனிவர்களது கண்களுக்கு முன்னர் நின்று ஆனந்த நடனம் செய்தைக் கண்டார்கள்.

3. **ஏவன் மாயை இந்தஉலகு எல்லாம் ஆகி இருப்பதுவாம்**
**ஏவ னாலே நடக்கின்றது ஏவன் பதங்கள் சிந்தித்தே**
**பாவம் ஆன அஞ்ஞானம் தன்னால் உண்டாம் பயம்போகம்**
**ஆஆ அந்தப் பரம்பொருள்நின்று ஆடக் கண்டார் அன்போடும்.**

எந்தப் பரமேசுவரனது மாயையினின்றும் இந்த உலகங்கள் அனைத்தும் உண்டாகி இருக்கின்றனவோ, எவனால் இந்த உலகங்கள் நடத்தப் படுகின்றனவோ, எந்தப் பரமேசுவரனது திருவடிகளைத் தியானிக்கப் பாவமாகிய அஞ்ஞானத்தால் உண்டாகும் அச்சமானது போகுமோ, ஆச்சரியம் ஆச்சரியம் அந்தப்பரம்பொருள் இருந்து ஆனந்த நடனம் செய்யப் பக்தியுடன் கண்டனர் சௌனகாதி முனிவர்கள்.

4. **நித்திரை உறாதஅதில் வாயுவைநி றுத்திப்**
**பத்தியொடு சாந்தியை அடைந்தபர யோகத்து**
**உத்தமர்கள் ஆதல்உத யாத்தமனம் இல்லாச்**
**சுத்தஒளி யோடுஅவ்ஒளி கண்டனர்கள் தூயோர்.**

விழித்துக் கொண்டு இருக்கும் பொருளில் உயிர்க் காற்றைக் கட்டுப் படுத்திப் பத்தியுடன் சாந்தியடைந்த மேலான யோகத்தின்கண் உத்தமர்களாய் உள்ளவர்கள் உணரும், பிறப்பு இல்லாத தூய ஒளியோடு அந்தப் பரமேசுவரனைத் தூயவர் ஆகிய சௌனகாதி முனிவர்கள் கண்டனர்.

5. **கணமாத் திரையில் கழல்கை தொழுவோர்**
**உணரா மைஅழிக் கும்உருத் திரனை**
**அணம்நாடு அறியானை அம்மா முனிவர்**
**கணமா வெளிகண் டனர்கம் மிசையே.**

திருவடிகளை வணங்குவோரது அஞ்ஞானத்தினைக் கணப்பொழுதில் நீக்கும் உருத்திரனை வாக்கினால் நாட முடியாதவனை அந்தச் சௌனகாதி முனிவர் வானின் மீது கூட்டமாக நேரே நின்று பார்த்தார்கள்.

6. **சிரங்கள் ஆயிரம் சேவடி ஆயிரம்**
**கரங்கள் ஆயிர மாய்க்கரத்து ஏந்திய**
**உரம்கொள் தண்டமும் ஓங்கிய சூலமும்**
**பரந்த வேணியும் பால்மதிக் கண்ணியும்**

ஆயிரம் தலைகளும், ஆயிரம் திருவடிகளும், ஆயிரம் கைகளுமாகக் கரத்தில் ஏந்திய வலிய தண்டாயுதமும், ஒளிமிகு சூலாயுதமும், விரிந்த சடை முடியும், அதில் மூன்றாம் பிறையும், பூ மாலையும்.

7. **புண்டரிக உரிஉடையும் பொன்ஒளியால் பூமகன்பேர்**
**அண்டம்எலாம் ஆவரித்த அனல்இரவி மதிஎன்னக்**
**கொண்டுஇலகு முக்கண்ணும் கூர்எயிறும் கோடிபெயர்**
**உண்டுஅருக்கர் எறிக்கின்றார் எனத்திகழும் ஓர்உருவும்.**

புலித்தோல் ஆடையும், நான்முகனால் படைக்கப்பட்ட பேருலகங்கள் யாவும் பொன் ஒளியால் மூடப்பட்டிருக்கின்றது என்று சொல்லும்படியான சந்திரன், சூரியன், நெருப்பு, ஆகியன ஒளிவிடும் முக்கண்களும், கூரிய பற்களும் கோடிச் சூரியர்கள் ப்ரகாசிக்கின்றார்களோ என்று சொல்லும்படியான ஒளியோடு கூடிய உருவும்.

8. **தனதுஆன திருஉருவில் சகம்எலாம் பிறந்துதனது**
**அனலாலே அழியமிக அதிசயமாம் படிகாட்டி**
**இனம்ஆனது இல்லாத இந்தவடி வம்தானே**
**அனையாநின்று ஆகாசம் தனில்ஆடி அருளினனால்**

தனக்கே உரித்தான திருவுருவில் உலகங்கள் அனைத்தும் உண்டாகித் தனது நெருப்பினாலே அழிய, மிகவும் வியப்புத் தோன்றக் காட்டித் தொடர்பில்லாத இந்த வடிவமே அத்தன்மையதாக இருந்து வானின் கண்ணே நடனம் செய்து காட்டினான்.

9. **ஞாலம்எலாம் செய்கின்ற நாதனைஞா னச்சுடரைக்**
**காலஉரு வனைக்கலைகள் யாவையுமாம் காரணனை**
**ஆலம்அமர் களத்தனைஇவ் அனைத்துயிர்க்கும் அதிபதியைச்**
**சீலம்மிக யோகிகள்தம் சிந்தனையில் திகழ்தேசை.**

உலகனைத்தும் படைக்கின்ற நாதனை, ஞானச் சுடரை, காலன் வடிவானவனை கலைகள் அனைத்திற்கும் காரணம் ஆனவனை, ஆல கால நஞ்சுடைய கண்டத்தனை, அனைத்துயிர்க்கும் தலைவனை, ஒழுக்கமுள்ள யோகிகளின் சிந்தனையில் ஒளி வடிவாகத் திகழ்கின்றவனை,

10. **உற்பவநோய் உற்றவர்கள் ஒழிப்பதனுக்கு ஒருமருந்தாம்**
**கற்பகத்தை யோகிகள்தம் காரணத்தை ஆரணம்தேர்**
**தற்பதத்தைப் பரம்ஆன சத்திகட்குச் சத்தியாம்**
**அற்புதஆ தாரத்தை அமரேசர் தொழும்அரசை.**

பிறவிப் பிணியை அடைந்தவர்கள் அதனை ஒழித்திட விரும்பும் ஒப்பற்ற மருந்தை, கற்பக மரத்தை யோகிகளின் இதயத்தின்கண் காரணமாய் இருப்பவனை, வேதங்கள் நாடுகின்ற தற்பதத்தை, மேலான சத்திகளுக்குச் சத்தியாகிய அற்புத ஆதாரத்தை அமரேசனாகிய இந்திரன் வணங்கும் கடவுளை,

11. **ஆகாது அழியாது இருந்தபர மானந்**
**தத்தை அகிலத்துக்கு**
**ஏகா திபனை எத்தேவும் எல்லா**
**முனிவர்களும் இறைஞ்சி**
**நீகா என்னும் நின்மலனை நித்யத்**
**துவத்தை நிரந்தரமாம்**

**யோகால் அடையும் உயர்பதியை ஒளிகட்கு**
**எல்லாம் உள்ஒளியை.**

தோற்றமும் முடிவும் இல்லாத பிரமானந்தத்தினை, உலகிற்கே ஒன்றாயுள்ள கடவுளை, எல்லாத் தெய்வங்களும், அனைத்து முனிவர்களும் வணங்கி எங்களை நீர் காப்பீராக என்று வணங்கும் தன்மை வாய்ந்த குற்றமற்ற வடிவினை, நித்தியமாய் உள்ள கடவுளை, இடையீடின்றி வணங்குகின்ற பயில்கின்ற யோகத்தால் அடைகின்ற மேலான கடவுளை அனைத்து ஒளிகட்கும் ஆதாரமாய் உள்ள பேரொளியினை,

**12.** **துறவினர் அறிவிடைத் தோன்றும் சோதியை**
**உறவினில் அறிபவர்க்கு எளிய உண்மையைப்**
**பிறிவினில் அறிவுஅரிது ஆய பெற்றியை**
**அறிவினை அறிபவர்க்கு அருளும் அண்ணலை.**

துறவியரது அறிவின்கண் விளங்கும் ஒளியினை பக்தியினால் உணர்பவர்க்கு எளியதான சத்தியப் பொருளை, வேறுபாட்டால் உணர இயலாத தன்மையை, ஆத்மாவை, உணருபவர்க்கு அருள் செய்யும் அண்ணலாகிய பரமசிவனை,

**13.** **மாதா இலிஆ கியகருணை**
**மாதே வனைமா மாதவத்தின்**
**ஆதா ரத்தை ஒருகாலும்**
**அழியாச் செல்வம் அளிப்பவனைப்**
**பேதா பேதம் அற்றுஎல்லாம்**
**தானாய் இருந்த பிரமத்தை**
**ஓதாது உணரும் யோகத்தை**
**அளித்தற்கு உரிய ஒண்சுடரை.**

தாயில்லாதவன் ஆகிய கருணை வடிவான மகா தேவனை, பெருந் தவத்தினுக்கு ஆதாரமாய் உள்ளவனை, ஒரு பொழுதும் அழியாத செல்வங்கள் கொடுப்பவனை, பேதா பேதங்களைக் கடந்து அனைத்தும் தன் வடிவமாகக் காட்டும் பிரமத்தினை, சொல்லால் சொல்லிக் காட்ட இயலாத, யோகத்தைக் கொடுக்கக் கூடிய ஒளி பொருந்திய சுடரை,

**14.** **உருவோஇங்கு அருவோஎன்று உம்பர்க்கும் உணர்வுஅரிதாய்க்**
**கருவாகி நின்றபெரும் கண்ஆன காரணனைச்**

**சொரூபானந் தனைத் தனது சோதிஉளத் தேதோன்றக்**
**குருஆகும் திருமேனி கொண்டாடக் கண்டார்கள்.**

இங்கு உருவமோ, அருவமோ என்று தேவர்களும் அறிய முடியாததாய், மூலமாகி விளங்கும் பெருந்தகைமை உடையவனை, அதற்குக் காரணமாய் விளங்கும் வடிவுடையவனை, சொரூபானந்த சுவாமிகளை, தன் ஒளியானது உள்ளத்தே விளங்க, மனத்தில் குருவின் திருமேனி கொண்டு நடமாடக் கண்டு மகிழ்ந்தனர் சௌனகாதி முனிவர்கள்.

**15.** **கண்டு மாயையைஅ தற்கு ளேஒருவர்**
**காண்ஒ ணாவகைக் கரந்துதான்**
**அண்டர் மாயையை மறைத்து மீண்டுவெளி**
**ஆகி ஆடியருள் அண்ணலை**
**வண்து ழாய்முடியன் ஆன அச்சகல**
**லோக யோனியைஇ டத்திலே**
**கொண்ட கோலமொடு கண்டு மாமுனிவர்**
**கூறுஒ ணாஉவகை கூடினார்.**

அவ்வாறு தரிசனம் செய்தும், மாயையின் உள்ளே, ஒருவரும் அறிய முடியாதபடி தான் மறைத்து தேவர்கள் மாயையை மூடியும், மறுபடி வெளிப் படவும் தோன்றி ஆடி அருளும் அண்ணல் ஆகிய பரமசிவனை, வளம் பொருந்திய துளசி மாலைகளை முடியில் அணிதுள்ளவனும் அனைத்துலகங்களையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருப்பவனும் ஆகிய திருமாலை இடப் பக்கத்திலே கொண்ட கோலத்தோடு சௌனகாதி முனிவர்கள் கண்டு சொல்ல முடியாத மகிழ்வினை அடைந்தனர்.

**16.** **குரம்பையின்உள் ளேஇதயக்**
**குகையில்மறைந்து இருக்கின்ற**
**பரம்பொருளைக் கண்ணாலே**
**பார்த்துப்பல் கால்பணிந்து**
**கரம்தலையில் குவித்துத்தம்**
**காதல்கரை அழிவுஉறநின்று**
**உரம்தரஓங் காரத்தை**
**உச்சரித்துஅங்கு உபநிடதத்தால்.**

உடம்பினுள்ளே இதயம் ஆகின்ற குகையில் மறைந்து இருக்கும் பரம் பொருளைக் கண்ணினால் கண்டு, பலமுறை வணங்கித் தலையில் கைகூப்பித் தம்முடைய அன்பாகிய அணை உடையும்படி நெக்குருகி நின்று உபநிடதச் சொல்லால் ஓம் என்னும் பிரணவத்தை அழுத்தமாக உச்சரித்து.

**17.** **பழுதுஇல் ஈசன்முன் பாவகன் கண்டதுஓர்**
**இழுது போலஇ தயம்எ லாம்உக**
**அழுதும் அன்பினொடு ஆடியும் பாடியும்**
**தொழுது தோத்திரம் செய்யத்தொ டங்கினார்.**

நெருப்பின் முன் வைக்கப்பட்டு உருகும் ஒப்பற்ற நெய்யைப் போலக் குற்றமற்ற ஈசனது சந்நிதானத்தில் மனமானது நெக்குருக ஆனந்தக் கண்ணீர் சோர அழுதும், அன்பினோடு ஆடியும், பாடியும், நாமங்கள் சொல்லியும் வணங்கத் தொடங்கினார்.

**18.** **ஆகம்உறும் ஆர்உயிர்நீ அவ்உயிர்க்கும் அதிபதிநீ**
**யோகம்நுகர் புருடனும்நீ நுகர்விக்கும் புராதனிநீ**
**யோகிநீ உணர்பவன்நீ உளம்தொறும்நின்று உணர்கின்ற**
**ஏகன்நீ நின்மலமாய் யாவையும்ஆம் பரமபொருள்நீ**

உடலில் பொருந்திய உயிரும் நீயே. அவ்வுயிர்க்குத் தலைவனும் நீயே. இன்பங்களை அனுபவிக்கின்ற சீவான்மாவும் நீ. அனுபவிக்கச் செய்யும் புராதனனும் நீ. யோகி நீ. எல்லாவற்றையும் அறிபவன் நீ. உள்ளந் தோறும் இருந்து அறிகின்ற ஏகனும் நீ. குற்றமில்லாத எல்லாம் ஆகிய பரம் பொருளும் நீயே.

**19.** **கரணம் எல்லாம் ஒடுங்கினவர்**
**காயத்து உள்ளே கதிஆகிப்**
**பிரம யோனி யாய்உள்ள**
**பெரும என்றும் பிறவாதாய்**
**மரணம் இல்லா நின்செம்பொன்**
**வடிவே பரமாய் மற்றுஎதிலும்**
**பரமம் ஆகி உயிர்க்குஉயிராய்**
**நிற்கும் பரமாய்ப் பார்க்கின்றோம்.**

அகக் கருவிகள் யாவும் ஒடுங்கினவர் உடலுக்குள் இருப்பவனாய், இறைத் தோற்றத்திற்குக் காரணமாய் இருக்கின்ற தலைவனே. என்றும் பிறப்பு இல்லாதவனே.

மரணமில்லாத நின் செம்பொன் வடிவமே எல்லாவற்றிற்கும் மேல் ஆகி, உயிர்க்கு உயிராய் இருக்கின்ற பிரம வடிவமாய்ப் பார்க்கின்றோம்.

**20.** **பரமா ணுவினது உருவாகிப்**
**படைப்பாய் நீபல் உலகுகளும்**
**திரம்ஆம் முன்னா லேஉண்டாம்**
**சிறிதில் சிறிதுஆய் மிகப்பெரிதில்**
**பெரிதுஅய் நின்னில் வேறுஇல்லாப்**
**பெருமை காணும் பெருந்தகைமைக்கு**
**உரியார் எல்லாம் ஒருநீயே**
**வேறுஒன்று இலதுஎன்று உரைப்பர்களால்.**

நீ நுட்பமான அணு வடிவாயிருந்து அனைத்துலகையும் படைக்கின்றாய். அவை நிலையாய் உள்ள உன்னாலேயே உண்டாகின்றன. நுண்மையில் நுண்மையாய், மிகப் பெரிதில் மிகப் பெரியதாய் நின்னிலிருந்தும் வேறுபடாத பெருமையை உணரும் பெருந்தன்மைக்கு உரித்தானவர்கள் எல்லாரும் ஒரு நீயாகிய உன்னைத் தவிர அந்நியமாய் ஒன்றுமில்லலை என்று கூறுவார்கள்.

**21.** **போதன் ஆகிய புராணன்ஆம்**
**புருடனைப் பொருட்குஎலாம் உயிராக**
**ஆதி நாள்படைத்து அனையவன்**
**படைத்தனன் அகிலமும் அந்நாளே**
**வேதம் யாவையும் விரித்தனை**
**உன்னிலே மீளவும் அனைத்திற்கும்**
**ஏது பூதன்ஆய் உளந்தொறும்**
**இலங்குநின் இயல்புகண் டனம்எந்தாய்.**

எமது தந்தையே, பிரமாவாகிய பழமையான புருடனை எல்லாப் பொருட்கும் உயிராக முன்னாளில் படைத்தனை. அந்தப் பிரமதேவன் எல்லாவற்றையும் படைத்தான். நீ அக்காலத்திலேயே வேதம் அனைத்தையும் உண்டாக்கினாய். அவை மறுபடியும் உன்னிடத்திலேயே அடங்குகின்றன. அனைத்திற்கும் காரணனாக அகக்கருவிகள் தோறும் ஒளிவிடும் உன்தன்மையை அறிந்தோம்.

**22.** **இப்பிரம சக்கரம் இயங்குவதும் உன்பால்**
**அப்பெரிய மாயைஉடை யாய் அமல நீயே**

**சிற்பரம யோகபதி திவ்யநட னாநின்**
**பத்மசர ணங்கள்சரண் என்றுபணி கின்றோம்.**

நீ பாபமற்றவன். அறிவாகி இறைவடிவான யோகத்திற்குத் தலைவனே. ஆனந்த நடனம் செய்பவனே. இந்தப் பிரம வடிவான சக்கரம் இயங்குவதும் உன்னிடத்திலேயாம். அப்படிப்பட்ட மகத்தான மாயையை உடையவனே. உன்னுடைய தாமரை மலர் போன்ற திருவடிகளை அடைக்கலம் என்று கருதி வணங்குகின்றோம்.

**23.** **எந்தைநீ பரமா காசத்து**
**இடைஉறு நிருத்தம் கண்டோம்**
**இந்தஎப் பொருளும் ஆனாய்**
**ஏகம்நீ ஆகி நின்ற**
**அந்தநின் மகிமா வைக்கண்டு**
**அதிசயம் ஆக உன்ன**
**அந்தம்இல் பரமா னந்தம**
**அனுபவித்து அனுப வித்தோம்.**

எம் தந்தையே. நீ இந்த அறிவு வெளியான வானின்கண் பொருந்தி ஆடும் ஆனந்த தாண்டவத்தைக் கண்டோம். இங்கு தோன்றிய எல்லாப் பொருள்களும் நீயே ஆனாய். ஏகமாய் இருக்கின்ற நின் பெருமையைக் கண்டு அதை ஆச்சரியமாகக் கருதி உன்னுடைய அழிவில்லாத பிரமானந்தத்தினை அனுபவித்தோம்.

**24.** **உன்னுரையாம் ஓங்காரம் உயர்முத்திக்கு ஒருவிதைநீ**
**துன்னிஉடல் தோறும்நீ தோன்றாமை மறைந்துஇருத்தி**
**நின்னிடைஎல் லாம்மாய நீமாயாய் நின்ஒழிய**
**அன்னியமாய் உள்ளஎல்லாம் அசத்தியம்என்று அறைவர்களால்.**

உன் உரையாகிய ஓம் என்னும் பிரணவமானது உயர்ந்த வீடு பேற்றிற்கு ஒரு விதையாகும். நீ உடல்தோறும் பொருந்தித் தோன்றாமல் மறைந்திருக்கின்றீர். நின்னிடத்திலே எல்லாம் அழிய நீ மட்டும் அழியாது இருக்கின்றாய். உன்னை அன்றி அன்னியமாய் உள்ள எல்லாப் பொருள்களையும் பொய் என்று சொல்வார்கள்.

**25.** **தொழுதுஅரு மறைஎலாம் துதிப்பது உன்னையே**
**பழுதுஅறு முனிவர்கள் பணிவது உன்னையே**

**ஒழிவுஅற உணர்பவர் உணர்வது உன்னையே**
**அழிவுஅற நினைபவர் அடைவது உன்னையே**

வணங்குதற்குரிய வேதங்கள் யாவும் வணங்குவது உன்னையே. பாவமற்ற முனிவர்கள் பணிவதும் உன்னையே. இடையீடின்றி உணர்பவர் அறிவதும் உன்னையே. அழிவின்றி இருத்தற் பொருட்டு நினைப்பவர் அடைவதும் உன்னையே.

**26.** **ஒருமறை அனந்த சாகை**
**கொண்டுஉனது உருவம் ஒன்றின்**
**அருமையை அறிவிக் கின்ற**
**அப்படி அறிய உன்றன்**
**பெருமையை அறிவார் சாந்தி**
**பெறுபவர் பெறாதார் எல்லாம்**
**கருமயல் உறுவார் சாந்தி**
**கனவிலும் காண மாட்டார்.**

ஒரு வேதமானது அநேகப் பகுதிகளால் உன் உருவத்தின் அருமையினைச் சொல்லுகின்றன. அப்படி அவ்வாறு அறியக் கூடிய நின் பெருமையினை உணர்ந்தவர்கள் சாந்தி பெறுவர். அவ்வாறு உணராதார் யாவரும் இருள் மயமான மயக்கத்தினை அடைவார்கள். கனவிலும் அவர் சாந்தி காணமாட்டார்.

**27.** **ஆதி தேவன் நீஉலகு அனைத்தும் உயிர்க்கு ஆதியாய்**
**ஈது எலாம்அு மைக்கும் அண்ணல் எல்லை அற்ற இன்பம்எப்**
**போது மேவி என்று ஐம்பு லப்படாது இருப்பதோர்**
**சோதி ஆகி நித்தம் முத்த சத்தன் ஆய்இ ருக்குமால்.**

நீயே முதற் கடவுள். எல்லா உலகங்கட்கும், எல்லா உயிர்கட்கும் முன்னிருந்து இவை எல்லாவற்றையும் உண்டாக்குகின்ற பெருமையில் சிறந்த கடவுள். எப்போதும் அளவிட இயலாத ஆனந்தத்தைப் பொருந்தி என்றும் ஐம்புல வசப்படாது இருப்பதும் ஆன ஒப்பற்ற ஓர் ஒளியாயும் நிலைபெற்றும் விடுபட்டதாயும் சுத்தமாயும் இருக்கின்றீர்.

**28.** **படைத்தி நீஅ ளித்தி நீப**
**டைத்த யாவும் உன்னிலே**

**உடைத்தி நீஒ ருத்தனே**
**உணர்ந்து கொண்டு இருத்திநீ**
**அடைத்தி நீஉ ளத்தி லேநின்**
**அன்பை யேஒ ளிக்குமா**
**தடைப்படாமல் என்று நின்ச**
**ரண்ப ணிந்து சாருகோம்.**

நீ எல்லாவற்றையும் உண்டாக்கினாய். நீயே எல்லாவற்றையும் காத்தாய். உன்னால் உண்டாக்கப் பட்ட யாவும் உன்னிடத்திலேயே இருக்கின்றன. நீ ஒருவனே எல்லாவற்றையும் அறிந்து கொண்டிருக்கின்றாய். உன் இதயத்திலே எல்லாவற்றையும் வைத்துக் கொண்டிருக்கின்றாய். நின் அன்பு ஒளிரும்படி தடையின்றி எப்பொழுதும் உன் திருவடியை வணங்கி அடைகின்றேன்.

**29.** **யோகி ஆகி உயிர்ஆகி**
**உணர்வான் ஆகி இணைஇல்லா**
**ஏகன் ஆகி இந்திரனும்**
**அரியும் அயனும் ஈசனும்ஆம்**
**சேகி தாவும் தாதாவும்**
**தீயும் மதியும் தினகரனும்**
**ஆகி வெவ்வேறு அனைத்து**
**உருவும் ஆனாய் எனவே**

யோகி ஆகவும், உயிராகவும் ஆகி, எல்லாவற்றையும் அறிபவானாகவும் ஆகி இணையில்லாத ஏகனாகி, இந்திரன் ஆகியும், திருமால் ஆகியும், நான்முகன் ஆகியும், ஈசுவரன் ஆகியும், சேகிதா என்னும் தேவதை ஆகியும், தாதா என்னும் தேவதை ஆகியும், தீயாகியும், சந்திரன் ஆகியும், சூரியன் ஆகியும் வேறு பல வடிவமாகியும் இருக்கின்றாய் என்று பெரியோர் சொல்லுவர்.

**30.** **அகில உலகம் இருப்பிடம்நீ அறிய வேண்டம் அக்கரம்நீ**
**சகல தருமங் களும்வளர்க்கும் தாய்நீ புருடோத் தமன்தான்நீ**
**புகலும் அரிநீ பூமகன்நீ புராரி நீஎப் பொருளுக்கும்**
**பகுதி நீநீ ஒழிவின்றி நிலையாய் நிற்குபரம்பரம்நீ.**

அனைத்துலகங்களுக்கும் நீயே இருப்பிடம். உணரத் தக்க அட்சர வடிவாகவும் நீ இருக்கிறாய். எல்லாத் தர்மங்களையும் வளர்க்கின்ற தாயாகவும் நீ இருக்கின்றாய். ஆடவர்களில் உத்தமனாகவும் இருக்கின்றாய். போற்றத் தக்க திருமாலாகவும் நீயே இருக்கின்றாய். பூமியைப் படைக்கும் பிரமனாகவும் நீ இருக்கின்றாய். திரிபுரம் எரித்த சிவனாகவும் நீயே இருக்கின்றாய். எல்லாப் பொருள்களுக்கும் மூலமாக நீயே இருக்கின்றாய். இடையீடின்றி நிலையாய் இருக்கின்ற பரம்பொருளுக்கு எல்லாம் மேலான பரம்பொருள் நீயே.

**31. கரணம் யாவையும் கடந்துஇருள் கடந்துஉனைக் கண்டவர் ஆதித்த
வருணம் ஆனசின் மாத்திரம் நேத்திர முதல்புலன் மனம்செல்லாப்
பிரம மேகமாம் புருடன்ஓர் பிறிதுஇலாப் பெருமையால் பேச்சுஅற்ற
பரம வான்முதல் பகுதிநிர்க் குணம்வெறும் பாழ்என நிகழ்கின்றார்.**

அகக்கருவிகள் எல்லாவற்றையும் சூரிய வர்ணமான அறிவாகாய வடிவம் என்கிறார்கள். கண் முதலிய உறுப்புக்களால் பார்க்க முடியாததாயும் மனத்தினால் சிந்திக்க முடியாததாயும் உள்ள பிரமமானது ஒரே வடிவம் என்கின்றனர். ஒப்பற்ற புருடன் என்கின்றனர். வேறுபாடற்ற பெருந்தன்மையால் சொல்லுக்கு அடங்காத மேலான வானம் முதலிய பகுதி என்றும், நிர்க்குணம் என்றும், வெறும் சூனியம் என்றும் சொல்லுகின்றார்கள்.

**32. ஓதும் ஒலிஊறு உருச்சுவைநாற் றம்தனக்குஅற்று
ஆதி முடிவுஇல்பரம் ஆய்அசிந் திதம்ஆய்
பூதம் அனைத்தினுக் கும்உள்ளாய்ப் புறம்புமாம்
சோதி நினைஅறிந்தார் துஞ்சார் பிறவாரால்.**

தனக்கு என்று சொல்லப்பட்ட ஒலி, ஊறு, உரு, சுவை, நாற்றம், ஓசை, தொடுதல், உருவம், ரசம், மணம் ஆகியன இன்றி, தோற்றமும் முடிவும் இல்லாத பிரமமாய், சிந்திக்க முடியாததாய், எல்லாப் பூதங்கட்கும் உள்ளாகியும் வெளியாகியும் உள்ள சோதியாகிய நின்னை உணர்ந்தவர்கள் பிறப்பு, இறப்பு இன்றி இருப்பார்கள்.

**33. எந்த யோகிகளும் நாடு கின்றபர
யோகி நின்அடிஇ றைஞ்சுகோம்
அந்தம் ஆதியில் அனந்த சத்தியுடை
அண்ணல் நின்அடிஇ றைஞ்சுகோம்**

**சாந்தம் இன்னதுஎன நாடும் ஆறுஅரிய**
**சம்பு சேவடிஇ றைஞ்சுகோம்**
**பந்தம் ஒன்றுஇல்பரி சுத்த நற்பரம**
**பாத பங்கயம் இறைஞ்சுகோம்.**

எப்படிப்பட்ட யோகிகளும் நாடி வணங்குகின்ற மேலான யோகியே. நினது திருவடியை வணங்குகின்றோம். தோற்றமும் முடிவும் இல்லாத அநேக சத்திகளையுடைய அண்ணலே. பரமசிவனே உன்னடியை வணங்குகின்றோம். சந்தங்கள் இப்படிப்பட்டன என்று கருதுதற்கு அருமையான கடவுளே. உன் திருவடியை வணங்குகின்றோம். யாதொரு தொடர்பும் இல்லாத தூய்மையான உயர்ந்த பரமசிவனே உமது திருவடித் தாமரைகளை வணங்குகின்றோம்.

**34.** **கூடுநின்று உருகும் இறைவநின் ஞானக்**
**கூத்தினைக் கண்டுகும் பிட்டே**
**நாடும்எம் கண்க ளுன்திரு மேனி**
**அன்றிமற்று ஒன்றையும் நாடா**
**ஓடும்இம் மனமும் ஒழிவுஅற நிறைந்த**
**உனைஅலது ஒருபொருள் உணராப்**
**பீடுஉறு கமல மலர்ப்பாதம் பணிந்துஎம்**
**பிறவிவேர் அறுத்தனம் பிரானே.**

பரமசிவனே. நின் ஆனந்தத் தாண்டவத்தினைக் கண்டு வணங்கி உடல் உருகும்படி வணங்குகின்றோம். உன் வடிவை விரும்பிப் பார்க்கும் என்கண்கள் உன் திருமேனியன்றி வேறு ஒன்றையும் பார்க்காது. உலக விசயங்களில் செல்கின்ற இந்த மனமும் இடையீடின்றி முழுமையாய் உள்ள உன்னையன்றி வேறு ஒரு பொருளையும் உணர மாட்டாது. பரமசிவனே. பெருமை பொருந்தியநின் திருவடித் தாமரைகளைப் பணிந்து எம்முடைய பிறவி வேரினை அறுத்தோம்.

**35.** **பவனே நின்னடி பணிகோம்**
**பவோற் பவனேஅடி பணிகோம்**
**தவனே நின்அடி பணிகோம்**
**சங்கர னேஅடி பணிகோம்**
**இவனே என்றிட இங்ஙன்**
**எழுந்துஅரு ளும்பேர் அருளே**
**சிவனே எத்தே குவர்க்கும்**
**தேவே நின்னடி பணிகோம்.**

மேலானவனே. உன் திருவடியை வணங்குகின்றோம். பிறவியைத் தருபவனேயுன் திருவடி வணங்குகின்றோம். தவமுடையவனே நின் திருவடி பணிகின்றோம். சங்கரனே உன் திருவடி பணிகின்றோம். இவனே என்று சொல்லும்படியாக இவ்விடத்தில் எழுந்தருளியுள்ள அருட்கடவுளே. பரம சிவனே. எத்தேவர்க்கும் தேவனாய் உள்ளவனே. உன் திருவடியைப் பணிகின்றோம்.

**36.** **காமன் நீறுசெய் கண்ணைவ ணங்குதும்**
**காலன்நூறிய காலைவ ணங்குதும்**
**சாம கீதனை நாளும்வ ணங்குதும்**
**தாளில் எந்தலை ஆரவ ணங்குதும்**
**நாமம் ரூபம்அது இன்றிஅ னைத்துமாம்**
**நாம ரூபனை நாளும்வ ணங்குதும்**
**சேமம் ஆகிய வீடுஅருள் எந்தையாம்**
**சிவப்பிர காசனை என்றும் வணங்குதும்.**

மன்மதனைச் சாம்பல் ஆக்கிய நெற்றிக் கண்ணை வணங்குகின்றோம். எமனை உதைத்த திருவடியை வணங்குகின்றோம். சாம கீதப் பிரியனை நாளும் வணங்குகின்றோம். திருவடியில் தலை பொருந்த வணங்குகின்றோம். ஒரு நாமம் ஒருருவம் இன்றி எல்லாம் ஆகிய பெயரும் வடிவமும் உடைய கடவுளை நாளும் வணங்குகின்றோம். உயர்வான வீடுபேற்றினை அருள்கின்ற எம் தந்தையாகிய சிவப்பிரகாச சுவாமிகளைத் தினமும் வணங்குகின்றோம்.

**37.** **உருப்பு அநேகவிதம் ஆகி ஓர்உருவன்**
**ஆம்உ ருத்திரநின் உள்குவார்**
**விருப்ப னேஅவர்கள் தன்பெ ரும்பிறவி**
**வெந்து நீறுஎழவி ழிப்பதுஓர்**
**நெருப்ப னேநினைவு உறப் டாஒருநி**
**ருத்த னேநிமல நெஞ்சகத்து**
**இருப்ப னேஇறைவ னேசி வாயநம**
**என்று சேவடி இறைஞ்சினார்.**

உருவங்கள் பலவிருந்தும் ஒப்பற்ற ஒரு வடிவுடைய உருத்திர மூர்த்தியே. நின்னை நினைப்பவர் பால் விருப்பமுடையவனே. அவர்கள்தம் பெரும் பிறவி வெந்து பொடியாகும்படி விழிக்கின்ற ஒப்பிலா நெருப்பாகிய நெற்றிக் கண்ணுடைய சிந்தனைக்கு எட்டாத ஒப்பிலா ஆனந்த நடனம் செய்பவனே. குற்றம் இல்லாத நெஞ்சில் இருப்பவனே.

இறைவனாகிய சிவனே வணக்கம் என்று சொல்லித் துதித்துப் பெருமை பொருந்திய திருவடியை வணங்கினர்.

**38. எந்தைஅளவு அற்றதிரு மேனியைஇ றைஞ்சிச்
சிந்தைகளி கூரும்அள வில்சிவனை நேரே
அந்தம்அறு தன்னைஅருள் செய்யஅரு ளாலே
வந்ததிரு மேனியினை மாலினொடு கண்டார்.**

எம் தந்தையாகிய பரமேசுவரனது எண்ணுதற்கு எட்டாத திருமேனியை வணங்கி மனம் மகிழ்கின்ற சமயத்தில், பரமசிவனை, நேரே நிலையாய் உள்ள தனது வடிவத்தைக் காணுமாறு அருள் செய்ய அருளுடன் எழுந்து வந்த திருமேனியைத் திருமாலுடன் தரிசித்தார்கள்.

**39. அளவு இறந்தவன் அளவுபட்டு இருந்தஅவ் அருள்கண்டு
உளம்வி யந்துநின் ஒப்பிலா உருவுகண்டு உய்ந்தோம்
களவுஒ ழிந்துஉளம் காதலிக் கின்றதுஉள் கரைதீர்
வளமை இன்னமும் கேட்கஎன்று அடிவணங் கிணரால்.**

எவ்விதத்தாலும் அளந்தறிய இயலாத பரமசிவன், அளவோடு கூடியிருந்த அந்தக் கருணையைக் கண்டு மனமகிழ்ந்து நின் ஒப்பிலாத வடிவத்தைக் கண்டு வணங்கி ஈடேறினோம். உள்ளமானது கள்ளத்தை மறந்து உமது அளவிட முடியாத வளமையை மேலும் கேட்டு மகிழ விரும்புகின்றது என விண்ணப்பம் செய்து அடி வணங்கினர் சௌனகாதி முனிவர்கள்.

**40. மேல தானதன் பெருமையைக் கேட்கமேன் மேலும்
சால தாம்தவம்செயத்தகு தபோதனர் தமக்குக்
கால காலன்எக் கடவுளும் தொழுதுஎழும் கடவுள்
மூல மாதவன் தன்முகம் பார்த்துமேல் மொழிவான்.**

உயர்வாயுள்ள தன் பெருமையைக் கேட்க மீண்டும் மீண்டும் மிகுந்த தவம் செய்கின்ற தவமே தனமாகக் கொண்ட சௌனகாதி முனிவர்கட்குக் கால காலனும், எல்லாக் கடவுளரும் தொழுது வணங்குகின்றவனும் ஆகிய பரமசிவன் எல்லாவற்றிற்கும் மூலமாகிய திருமாலின் முகம் பார்த்து மேலே சொல்லத் தொடங்கினான்.

## விசுவ ரூப அத்தியாயம் நிறைவுற்றது

## 6. சிவ சத்தியின் செயலுரைத்த அத்தியாயம்.

1. காத லால்முனிவர் கேண்மின் என்பெருமை
காணும் ஆறுஅருமை கண்டுதான்
ஓத லால்மறைஎன் உள்ள ஆறுஅறியும்
உற்ப விப்பதுஉலகு என்தனால்
ஈது எலாமும்நிலை பெற்று இயங்குவதும்
என்தனால் அழிவும் என்தனால்
ஆத லால்அழிவு இலாது அழப்பழையன்
ஆன நான் முழுதும் ஆகுவேன்.

சௌனகாதி முனிவர்களே அன்புடன் கேட்பீர்களாக. வேதங்களானது என் அருமையை உணர்ந்து பெருமை தோன்றும்படி சொல்லுதலினால், என்னை உள்ளபடி உணரும் இந்த உலகை உண்டாக்குவதும் என்னாலேயாம். இந்த உலகமானது நிலைபெற்று இயங்குவதும் என்னாலேயாம். அது அழிவதும் என்னாலேயாம். ஆகையினால் அழிவிலாத மிகப் பழையவனாகிய நான் எல்லாமாய் இருக்கின்றேன்.

2. அகிலபூ தங்க ளுக்கும் அந்தரி யாமி யாய்நான்
சகலபூ தமும்என் உள்ளே சாரனான் தாங்கி நிற்பன்
நிகிலமும் அதில்எங் கண்ணும் நிற்பவன் எனவும் என்னைப்
புகலவும் படாதே என்னில் பொருள்பிறிது இன்மை யாலே.

அனைத்துப் பூதங்களுக்கும் உள்ளே இருந்து அசைபவனாக நான் இருக்கின்றேன். என்னிடத்தில் எல்லாப் பூதங்களும் பொருந்துதலினால் நான் அவற்றிற்கு ஆதாரமாய் இருக்கின்றேன். எல்லாப் பொருள்களிலும் எல்லா இடங்களிலும் பொருந்தி இருப்பவன் என்று என்னைச் சொல்லக் கூடாது. என்னைத் தவிர வேறு பொருள்கள் இல்லாமையால் என்னிடத்தில் அவைகள் இருக்கின்றன. நான் அவைகளிடத்தில் இல்லை.

3. செப்பிடஒ ணாதுஎதிர்தெ ரிந்திடவும் உங்கட்கு
எப்படிநி கழ்ந்தது என்னுடைய மேனி
அப்படி இருந்தஎனை மாயைஅத னாலே
ஒப்பிடநி னைந்திடுவ ரேஉணர்விஇ லாதார்.

உங்களுக்கு வாக்கினாலே உரைக்க இயலாது. நேரே தரிசிக்க எப்படி விளங்கியதோ அதுவே என்னுடைய மேனி. அவ்வாறான என்னை அறிவு இல்லாதார் மாயையினாலே சமமாக எண்ணுகிறார்கள்.

4. **மேவியா தினும்உளனாய் வியன்உலகை நடத்துவன்நான்**
**தாவுஇலா என்னாலே சகலகலை களும்நடக்கும்**
**ஓவுஇலா ஒருகூற்றால் உண்டாகும் உலகுஅனைத்தும்**
**மாய்வதுஆம் மற்றுஒன்றால் இருமையும்என் மாயைஅதால்.**

எல்லாப் பொருள்களிலும் பொருந்தி இருப்பவனாய் வியக்கத்தக்க உலகை நான் நடத்துகின்றேன். அழிவில்லாத என்னாலேயே சகல கலைகளும் நடக்கும். ஒழிவில்லாத ஒரு சத்தியினால் அனைத்து உலகங்களும் உண்டாகின்றன. வேறு ஒரு சத்தியினால் சகலமும் அழிகின்றன. என்னுடைய மாயையினாலேயே தோற்றமும் அழிவும் ஆகிய இரண்டும் உண்டாகின்றன.

5. **ஈங்குஆதி இடைமுடிவுஅற்று இருப்பேன்என் மாயையினால்**
**பாங்காகப் பத்திபுமான் பண்ணினன்முன் பவத்துஆம்மான்**
**ஆங்காரம் முதலாக அனைத்தும்விரிந் தனஅதனால்**
**ஓங்காரப் பொருளாம் என் ஒளியின்விரிவு உலகுஎல்லாம்.**

இங்கு, தோற்றம், திதி, அழிவு, இல்லாதவனாக இருப்பேன். என் மாயா சத்தியினால் படைப்புக்கு முன்னர் ஆதாரம், சீவான்மா ஆகிய இரண்டையும் உண்டாக்கினேன். அதனின்றும் மகதத்துவம், அகங்கார தத்துவம் முதலான அனைத்தும் உண்டாயின. இந்த உலகம் யாவும் ஓங்காரப் பொருள் ஆகிய என் ஒளியின் விரிவேயாகும்.

6. **கரியதாய் நின்றுஇவ் உலகினுக்கு எல்லாம்**
**கலசக் கரம்தனை நடத்தும்**
**இரணிய கருப்பன் ஆகும்மார்த் தாண்டன்**
**என்னிடைத் தோன்றினன் என்றால்**
**புரியும்வே தங்கள் நான்கையும் ஒன்றுஆய்ப்**
**பொருளதுஆய்ப் புராணமாய்ப் புணர்தற்கு**
**அரியதில் அரிதுஆய் ஞானயோ கத்தையும்**
**அடியிலே அவர்க்குஅளித் தனன்ஆல்.**

இந்த உலகம் முழுமைக்கும் சாட்சியாக இருந்து காலமாகிய சக்கரத்தினை நடத்துகின்ற இரணிய கருப்பன் ஆகிய சூரியன் ஆனவன் என்னிடமிருந்து

உண்டாயினான். அந்தச் சூரியனுக்கு என்னால் செய்யப்பட்ட நான்கு வேதங்களையும், பழமையான அடைதற்கு அரியதான ஞான யோகத்தினையும் முதலிலே உபதேசித்தேன்.

**7.** **எந்த நாளும்எனை யேநி னைந்தஇயல்**
**பாலே என்அருளி னால்அயன்**
**சந்தம் நாடுஅரிய திவ்ய மாம்எனது**
**தன்மை தான்அவத ரிக்கிறான்**
**அந்தம் ஆதியில்என் ஏவ லால் அவன்இவ்**
**அகில லோகமும் அமைக்கிறான்**
**இந்த நராணன் அளிக்கும்ஆறும்இவன்**
**என்னில் வேறுஎனஇ லாமையால்.**

எப்பொழுதும் பரமேசுவரனாகிய என்னையே நினைக்கின்ற தன்மையால் நான்முகன் என் அருளினால் சதா காலமும் கருதுதற்கு அருமையான தெய்வத் தன்மை வாய்ந்தவென் தன்மையினால் தோன்றுகின்றான். தோற்றமும் முடிவும் இல்லாத என்னுடைய ஏவலினால் நான்முகன் அனைத்துலகத்தையும் படைக்கின்றான். இந்த திருமால் எனக்கு வேறாக இல்லாமையால் இவன் இதனை முறையுடன் காக்கின்றான்.

**8.** **கடையுகம் அதில்கடிய காலஅனல் ஆய்நின்று**
**அடையவும் உருத்திரன் அழிப்பதும்என் னாலே**
**உடையவலி யால்உலவும் ஊதைஉடல் உய்த்தே**
**நடையைமுத லானவைந டத்துவதும்என்னால்.**

யுகத்தின் முடிவில் கடுமையான காலாக்கினி வடிவாய் இருந்து உருத்திரன் அழிப்பதும் என்னாலேயாம். உள்ள வலிவினால் உலவும் காற்றுவடிவாயிருந்து உடலின்கண் பொருந்திநடப்பன முதலியவற்றை நடத்துவதும் என்னாலேயாம்.

**9.** **தெய்வங் களுக்கும் பிதிரர்க்கும்**
**செய்யும் பூசை ஆகின்ற**
**அவியம் கவியம் பாகம்செய்த**
**அனலோன் அளிப்பது என்னாலே**
**உய்வந் திடும்ஆறு உதரத்தீ**
**ஆகும் அவன்உண் டனஎல்லாம்**
**மெய்வெந் திடாமல் என்நியமத்**
**தாலே வேவித் திடுகின்றான்.**

தெய்வங்களுக்கும், மூதாதையர்கட்கும் செய்யப்பட்ட பூசை ஆகிய அவிசும், பஞ்ச கவ்வியமும் பக்குவம் செய்து அக்கினி கொடுப்பதும் என்னாலேயாம். புசிக்கப்பட்ட யாவும் வாழும் படியாக உதரத் தீ வடிவம் ஆனவனுடைய உடல் வெந்திடாமல் என் கட்டளையினாலேயே பக்குவம் செய்கின்றான்.

10. **வருணன்எனும் அகிலசல பதியும்மழை வரஉதவும்**
**அருணன்எனும்உலகுதிகழ் வதுசெய்அம லனும்அமிர்த**
**கிரணன்எனும் உயிர்மகிழ்வு கெழுமஅருள் பவனும்எம**
**பரணம்என இவர்எனது பணிவகைசெய்து ஒழுகும்அவர்.**

மழை வர உதவும் வருணன் எனும் தெய்வமும், அனைத்து நீர்களுக்குத் தலைவனும், கிழக்குத் திசையிலுள்ள ஈசானனனும் நாள்தோறும் சாதுக்களுக்கு நன்மை உண்டாகக் கொடுப்பதும் என்னுடைய ஏவலினாலேயாம். மற்றவர்க்குச் சொல்ல வேண்டுவது என்ன இருக்கிறது?

11. **மிகப்ப யம்செயும்அ ரக்கர் கோன்நிருதி**
**ஆகும் விண்ணவனும் வெவ்விதுஆம்**
**அகப்ப யன்தனைஅ ளிக்கும் அந்தகனும்**
**ஆடக ஆதிஅளவு அற்றதுஓர்**
**சுகப்ப யன்செய்அள கேச னாம்எனது**
**தோழ னும்சுருதி சொன்னஆறு**
**மகப்ப யன்தனைஅ ளிக்கும் இந்திரனும்**
**மற்றுஎன் ஏவல்செய்து வாழ்வரால்.**

மிகுதியான அச்சத்தைத் தரும் இராக்கதர் தலைவனாகிய நிருதி திக்கில் வசிக்கின்ற தேவனும், கொடிதாகிய பாவத்திற்குத் தகுந்த துன்பத்தினைக் கொடுக்கும் இயமனும், அளவிட இயலாத ஒப்பற்ற பொன் முதலிய சுகப் பயன்களைக் கொடுக்கின்ற குபேரன் ஆகிய என் நண்பனும், வேதத்தில்கூறியபடி, யாகத்திற்குத் தக்க பயன் கொடுக்கின்ற இந்திரனும் என்னால் ஏவப்பட்ட தொழிலைச்செய்து வாழ்கின்றான்.

12. **பொல்லாத பேய்களுக்கும் பூதங்கள் அனைத்தினுக்கும்**
**அல்லாத கணங்களுக்கும் அதிபதி ஆகியஈசன்**
**நல்லார்க்கு நன்மைபெற நல்குவதும் நாள்தொறும்என்**
**சொல்லாலே மற்றவர்க்குச் சொல்லவேண் டுவதுஉண்டோ.**

பொல்லாத பேய்களுக்கும், எல்லாப் பூதங்களுக்கும், இவையல்லாத கணங்களுக்கும் தலைவனாகிய ஈசான திக்கிலுள்ள ஈசானன் நாள் தோறும் சாதுக்களுக்கு நன்மை உண்டாகும்படி கொடுப்பதுவும் என்னுடைய ஏவுதலினாலேயே. அப்படியிருக்க ஏனையோர்க்குச் சொல்ல வேண்டுவதுண்டோ?

**13.** **அருத்திசெய்து அங்கிரா அடிவ ணங்குவோன்**
**உருத்திர கணத்தில்உத் தமன் யோகிகள்**
**வருத்தமது ஒழித்துவாழ் வாம தேவனும்**
**திருத்தமாய் என்னுடைய ஏவல் செய்குவார்.**

பக்தியுடன் அங்கிரா முனியின் திருவடியை வணங்குபவனாயும், உருத்திர கணங்களில் உத்தமனாகியும், யோகிகளது துன்பங்களை ஒழித்து வாழ்கின்றவரும் ஆகிய வாமதேவ முனிவரும் செவ்வையாக நான் ஏவிய பணிவிடைகளைச் செய்வார்.

**14.** **தக்ககரு மங்களிலே நடத்துவதும் சார்பிலர்பால்**
**விக்கம்அளித் திடுவதும் விநாயகன்என் ஏவலினால்**
**செக்கநிறத்து அமரர்கள்சே னாபதியாய் ஞானத்தால்**
**முக்கியமாம் அறுமுகன்என் ஏவலையே முயல்கின்றான்.**

நேர்மையான செயல்களை இருந்து நடத்திவைப்பதும், பக்தி இல்லதாவர்க்கு, துன்பங்கள் செய்வதும் பரமேசுவரன் ஆகிய என்னடைய ஏவலின்படியே நடக்கின்றது. சிவந்த நிறமுடைய தேவர்களது சேனாபதியாகவும் ஞானத்தினால் முதன்மையானவனாயும் உள்ளஅறுமுகக்கடவுள் நானிட்ட பணிகளையே செய்ய முயல்கின்றான்.

**15.** **மதியி னால்மிகும் மரீசியே**
**ஆதியாய் மன்னுயிர் அனைத்திற்கும்**
**பதிகள் ஆகிய பதின்மரும்**
**உலகுஎலாம் படைப்பதுஎன் பணியாலே**
**திதிசெய் நாரணன் தேவிஆ**
**கியதிரு செல்வம்நல் குவதுஎன்றன்**
**விதியி னால்என்றன் பணியினால்**
**கலைமகள் விமலவாக்கு அளிக்கின்றாள்.**

புத்தியில் சிறந்த மரீசி முதலிய நிலைபெற்ற மக்கள் அனைவருக்கும் தலைவர்களாகிய பத்துப் பேர்களும் உலகங்களை என்னுடைய பணியினாலேயே

படைக்கின்றார்கள். காத்தல் தொழில் செய்யும் திருமாலினது தேவியாகிய திருமகள் என் கட்டளையினாலேயே செல்வங்களைக் கொடுக்கின்றாள். என்னுடைய கட்டளைப்படி சரசுவதி குற்றமற்ற சொல்வளத்தைத் தருகின்றாள்.

16. **வேம்எரி நரகின் உள்ளே**
**வீழ்பவர் தம்மை அந்தத்**
**தீமையின் நின்று சதவித்**
**திரிஎடுப் பதுவும் என்னால்**
**ஓம்எனும் பொருளை ஞான**
**யோகியர்க்கு உமைஆம் விஞ்சை**
**ஆம்மகள் அருளும் ஆறும்**
**அலகுஇல்என் அருளி னாலே.**

வெம்மைதரும் எரி நரகினுள் விழுபவர்களை அந்தத் துயரினின்றும் சாவித்திரி தேவியானவள் காப்பாற்றுவதும் என் ஆணைப்படியே. ஞான யோகிகளுக்கு ஓம் எனும் பிரணவப் பொருளை உமையாகிய வித்தியா தேவியானவர் அருள் செய்வதும் அளவிறந்த என் அருளினால்தான்.

17. **படஅரவு அரசுஎன் ஏவலால் உலகம்**
**பரிப்பதும் பரவையுள் நின்று**
**வடவைஉண் பதும்என் ஏவலால் பதின்நான்**
**மனுக்கள்பால் அனம்உற்று என்னால்**
**சுடர்உடை அருக்கர் உருத்திரர் வசுக்கள்**
**தொன்மருத் துக்கள்அச் சுநிகள்**
**திடம்உற மற்றும் தேவர்கள் தத்தம்**
**தேவைஎன் ஏவலால் செய்வார்.**

படங்கொண்ட அரவசரன் ஆகிய ஆதிசேடன் உலகத்தைத் தாங்கி நிற்பதும் என் ஏவலினாலே ஆகும். வடவைத் தீயானது சமுத்திரத்தினுள் இருந்து நீரை வற்றச் செய்வதும் என் ஏவலினாலேயே நடக்கின்றது. ஒரு நான்முகனது ஒரு நாளில் உலகத்தை ஆட்சி செய்து போகின்ற பதினான்கு மக்களது பரிபாலனமும் என் ஆணைப்படியே நடக்கின்றது. சுடர் கொண்ட பன்னிரண்டு சூரியர்களும், எட்டு வசுக்களும், அசுவிநி தேவர்களும், வலிமை பொருந்திய பிற தேவர்களும் தமக்குத் தேவையானவற்றை என் ஏவலினாலேயே செய்கின்றனர்.

**18.** **பொருவுஇல் கின்னரர் கருடர்கிம் புருடர்சா ரணர்கந்**
**தருவர் சாத்தியர் சித்தர்விச் சாதரர் இயக்கர்**
**வெருவ வந்திடும் அரக்கர்வே தாளபூ தங்கள்**
**ஒருவர் இங்குஒழி யாமல்நான் விதித்தஆறு உறைவார்.**

ஒப்பில்லாத கின்னரர்கள் பதினெண் கணத்தவருள் ஒருவராகிய கருடர், கிம்புருடர்கள், சாரணர்கள், கந்தருவர்கள், சாத்தியர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள், இயக்கர்கள் ஆகியோர் அஞ்சும்படி வருகின்ற இராக்கதர்கள், வேதாள பூதங்கள் இவ்விடத்து ஒருவர் தவிராமல் நான் ஆணையிட்டபடி இருப்பார்கள்.

**19.** **நிகழ்ந்திடும கலைகள் காட்டைகள் நிமிடம்**
**நீதிசெய் சாந்திநாள் முகூர்த்தம்**
**பகர்ந்திடும் இருது ஆண்டுமா தங்கள்**
**பக்கங்கள் என்விதிப் படியே**
**யுகங்களும் மனுக்கட்கு உள்ளஎல் லைகளும்**
**உரைத்திடு பராபரார்த் தங்கள்**
**நிகழ்ந்திடும் கால பேதம் யாவையும் நான்**
**நியமித்த படியிலே நிலையாம்.**

தோன்றிய விநாடிகளும், கால நுட்பங்களும், நிமிடங்களும், முறையாயுள்ள பகலும், நாளும், முகூர்த்தமும், ஆறு பருவங்களும் அறுபதான ஆண்டுகளும் சித்திரை முதலான பன்னிருமாதங்களும், கிருட்டின சுக்கிலபட்சங்களும் என் ஆணைப்படியே நடக்கும். யுகங்களும், மனுக்களுக்கு உரியனவான ஆட்சி எல்லைகளும், பிரமாவின் ஐம்பது ஆண்டுகளாகிய கர்ப்பமும், கால வேற்றுமைகள் ஆன யாவும் நான் கட்டளை இட்டபடியே நடக்கும்.

**20.** **உற்பவச ராசரவி யோனிஒரு நாலும்**
**பற்பலவது ஆகமொழி பாதலம் அனைத்தும்**
**எப்புவன மும்பிரமர் அண்டம்அவை யாவும்**
**இப்படி இருக்கும்அது என்றன்நிய மத்தால்**

உற்பத்தியான அசையும் பொருள்களும், அசையாப் பொருள்களும் ஆகிய சராயுசம், அண்டசம், சுவேதசம், உத்பிசம் ஆகிய நாலு யோனிகளும் அநேக விதமாகச் சொல்லப் பட்டகீழ் ஏழ் உலகங்களும், மேல் ஏழ் உலகங்களும் பெரிய அண்டங்களும் ஆகிய

அவையனைத்தும் என் ஆணையினால் இப்படி இருக்கும் என நான் நியமித்த வண்ணமே இருக்கும்.

**21.** **அந்நியம் இன்றி என்னிலே தோன்றும்**
**அனந்தபின்ன ஆன்மகம் ஆய்என்**
**தன்னிடை நிகழும் பிரமர்அண் டங்கள்**
**தனக்கொரு முடிவுதான் இலதான்**
**முன்இறத் தனவும் முடிவுஇலை என்பால்**
**முளைத்திடப் படுவதுஅப் படியே**
**என்நிய மத்தால் தோற்றமும் நிலையும்**
**இறுதியும் பெறுவதுஇங்கு எல்லாம்**

என்னில் வேறாக இல்லாமல் என்னிடத்திலே உண்டாகின்ற கோடிக்கணக்கான வேறுபாடுடைய பேரண்டங்கள் ஆகிய அவையனைத்தும் என்னிடத்திலேயே விளங்கும். அவற்றிற்கு ஒரு முடிவும் இல்லாமையால் முன்னே இறந்தன அளவற்றவை. என்னிடத்தில் தோன்றப் படுவதும் அது போலவே ஆகும். என் கட்டளையினால் இவ்விடத்து யாவும் உண்டாகி, நிலை பெற்றும் பின் அழிவதும் அது போலவே.

**22.** **பூதம் ஐந்தி னொடுமனமும் புத்தி மமதை பூதஆதி**
**ஆதிப் பகுதி என்நியமத் தாலே என்பால் ஆய்இருக்கும்**
**ஓதி வந்த அனைத்திற்கும் யோனி ஆகி உளமாயை**
**பேதம் செய்வது என்ஏவ லாலே அன்றிப் பிறிதுஇல்லை.**

மண், நீர் காற்று, வானம், நெருப்பு எனப்பட்ட ஐம்பூதங்களோடு மனமும் புத்தியும் அகங்காரமும், பூதத்திற்கு ஆதியான மகத்ததுவமும், முன்னருண்டான மூலமும் என் ஆணைப்படி என்னிடத்திலேயே இருக்கும். இங்கு கூறிவந்த அனைத்திற்கும் காரணமான மாயை வேறுபடுத்துவது என் ஆணை இல்லாமல் வேறில்லை.

**23.** **ஆகம்எடுத்து அவர்க்குஎல்லாம் அதிபதிஆம் ஆன்மாஆம்**
**போகம்நுகர் பரமபுருடன் என்ஏவல் புரிகின்றான்**
**மோகம்எலாம் அறமாற்றி முடிவுஇல் பரமானந்த**
**ஏகஎனைத் தரும்விஞ்சை என்அருளால் இயங்குவாள்.**

உடல் எடுத்தவர்க்கு எல்லாம் தலைவனாகிய ஆன்மாவாயுள்ள போகங்களை நுகர்கின்ற மேலான புருடன் என் ஆணையினைச் செய்கின்றான். அஞ்ஞானம் கெட

அனைத்தையும் மாற்றி நிலையாயுள்ள பேரானந்த ஏக வடிவினனான என்னை உபதேசிக்கின்ற வித்தியா தேவியானவள் என் அருளாலே இயங்கிக் கொண்டு இருக்கின்றாள்.

**24. பலவுரை செய்குவதுஎன் பலபர சத்தியினால்**
**உலகம்எ லாம்எனிலே ஒழுகஎன் உள்ஒழியத்**
**துலகுப ரப்பிரமம் ஆகிய சோதியதாய்**
**இலகுவன் நான்எனில்வேறு இல்லையோர் அந்நியமே.**

அநேக வகையாகச் சொல்லப் படுவதால் என்ன பயன்? அநேக பராசக்தியினால் அனைத்துலகும் என்னிடத்திலேயே உண்டாகின்றன. விளங்கி நிற்கும் இறைவடிவமான சோதியாய் நான் என்னிடத்திலேயே விளங்கிக் கொண்டு இருப்பேன். என்னுள்ளேயே என்னைத் தவிர வேறு ஓர் அந்நியமும் இல்லை.

**26. தொல்லை உள்ளஎன் சோதியைச் சத்தமாம்**
**நல்ல அன்பொடு நான்உமக்கு ஓதினேன்**
**ஒல்லை உண்மை உணர்ந்தவர்க்கு உய்பவம்**
**இல்லை இல்லைஎன்று ஈசன் இயம்பினான்.**

பழமையாக உள்ள என் சோதி வடிவத்தைத் தூய்மையான நல்ல அன்போடும் பரமேசுவரன் ஆகிய நான் உங்களக்கு ஓதினேன். பழமையான இந்த உண்மையை உணர்ந்தவர்க்குப் பிறப்பு என்பது இல்லவே இல்லை என்று ஈசன் சௌனகாதி முனிவர்களுக்கு உபதேசித்தான்.

## சிவ சத்தியின் செயலுரைத்த அத்தியாயம் நிறைவுற்றது

# 7. தத்துவ நிசம் விபூதி அத்தியாயம்

1. **அநியம் ஆனதுஅற்று அறிகு வார்கள்பின்
செநிஉ றாதஆறு திகழும் தேவனாம
தனியன் ஆனஎன் தன்மை ஓதநான்
முனிவர் கேண்ம்எனா முதல்வன் ஓதுவான்.**

தனக்கு அன்னியமாக உள்ள வேறுபாடுகள் யாவும் நீங்கி உணர்ந்தவர்கள் மீண்டும் பிறப்படையாதபடி விளங்குகின்ற கடவுளாயும் தனியனாயும் உள்ள என் பெருமையை நான் சொல்லிடச் சௌனகாதி முனிவர்களே கேளுங்கள் என்று பரமேசுவரன் சொல்லத் தொடங்கினான்.

2. **சிரந்தனம் ஆய்மிகத் திரம்ஆய் சித்சுகம்
தரம்தன் உருவாயவி காரம் ஆய்ச்சதா
நிரந்தரம் ஆகிநிட் களம்ஆய் நித்தம்ஆய்
பரம்பரம் ஆனதுஎன் பழைய தாமமால்.**

மிகப் பழைமையாகி, நிலையாகி, சித்தத்தைத் தரும் தன் வடிவமாய், எப்பொழுதும் வேறுபாடற்றதாய், நிரந்தரமாய்க் களங்கம் அற்றதாய், நித்தியமாய் மேன்மைக்கு எல்லாம் மேன்மையாய் உள்ளது. அது என்னுடைய பழைமையான இடமாகும்.

3. **சங்கரன்ஆம் உருத்திரரில் யோகிகளில் சம்புநான்
பங்கம்இல்சீர் வசுக்கள்தமில் பாவகன்ஆ கின்றேன்நான்
மங்கையரில் மலைமகள்நான் வலியவரில் வாயுவும்நான்
சிங்கமிரு கங்களில்நான் தினகரரில் விண்டுவும்நான்**

பன்னிரண்டு உருத்திரர்களில் நான் சங்கரன் என்னும் உருத்திரன். யோகிகளிலே நான் சம்பு என்ற யோகி. குற்றமில்லாச் சிறப்புடைய எட்டு வசுக்களில் அக்கினி என்னும் வசு நான். மங்கையரில் நான் இமயமலை அரசனின் மகள். வலிமை வாய்ந்தவர்களில் காற்று நான். விலங்குகளில் நான் சிங்கம் ஆவேன். பன்னிரு சூரியர்களில் திருமால் எனும் சூரியன் நான்.

4. **இந்திரன்நான் இமையவரில் இயக்கரில்வச் சிரவணன்நான்
சந்திரன்நான் தாரகையில் விரதத்தில் சத்தியம்நான்**

**எந்திரத்தில் வில்லுநான் இலங்கியசா வித்திரியாம்**
**மந்திரம்நான் மந்திரத்தின் மாதவரில் வசிட்டன்நான்.**

தேவர்களில் நான் இந்திரன். இயக்கர்களில் வச்சிரவணன் என்னும் இயக்கன் நான். விண்மீன்களில் நான் சந்திர விண்மீன். விரதங்களில் சத்திய விரதம் நான். எந்திரங்களில் வில்லாகிய எந்திரம் நான். விளங்கும் மந்திரங்களில் சாவித்திரி மந்திரம் நான். பெருந்தவ முனிவர்களில் நான் வசிட்டன்.

5. **ஞானம்அதில் என்னுடைய ஞானம்நான் நன்றுஆன**
**யானைஅயி ராவதம்நான் ஆச்சிரமத்து இல்லறம்நான்**
**கானம்உறு பறவைகளில் கருடன்நான் கதிஅதனில்**
**ஈனம்இலா முத்திநான் இராக்ககதரில் நிருதிநான்.**

நான் அறிவில் என்னுடைய ஞானம் ஆகின்றேன். சிறந்த யானைகளில் ஐராவதம் என்ற யானை நான். ஆச்சிரமங்களிலே இல்லற ஆச்சிரமம் நான். காட்டுப் பறவைகளில் கருடன் நான். அடையத் தக்க கதிகளில் உயர்வான வீடுபேறு நான். இராக்கதர்களில் நிருதி என்ற இராக்கதன் நான்.

6. **எண்ணுமதில் காலம்நான் எல்லைஇலா மாயைபல**
**பண்ணும்அவர் களில்அரிநான் பாசத்தின் மாயையும் நான்**
**புண்ணியமாம் தீவுகளில் புட்கரம்நான் பூதத்தில்**
**விண்ணுநான் தத்துவத்தின் மிருத்தியும் நான் ஆகின்றேன்.**

எண்ணிக்கைகளில் காலமாகிய எண்ணிக்கை நான். அளவிட இயலாத மாயை செய்பவர்களில் திருமாலாகிய மாயாவி நான். பந்தத்தில் மாயையாகிய பந்தம் நான். புண்ணியத் தீவுகளில் புட்கரம் என்னும் தீவு நான். பூதங்களில் வானமாகிய பூதம் நான். தத்துவங்களில் மிருத்தி தத்துவம் நான்.

7. **சித்தர்களில் கபிலன்நான் தேசங்கள் தனில்பிரமம்**
**அத்தன்ஆம் ஈசர்களில் மகேசன்நான் மறைகள்தமில்**
**உத்தமஓங் காரம்நான் ஊர்களில்வா ரணாசிநான்**
**தத்துவஞா னிகள்தம்மில் சதுர்முகன்நான் ஆகின்றேன்.**

சித்தர்களில் கபிலர் என்னும் சித்தன் நான். தேசங்களில் பிரமதேசம் நான். அனைத்தையும் உண்டிருப்போன் ஆகிய ஈசர்களில் மகேசுவரன் நான். உத்தம வேதங்களில் ஓங்காரப் பொருள் நான். ஊர்களில் காசித் தலம் நான். தத்துவ ஞானிகளில் நான்முகன் நான்.

**8. கர்ப்பங் களில்மா கர்ப்பம்நான் கணேசர் களிலே விநாயகன்நான்**
**சர்ப்பங் களிலே அனந்தன்நான் சாயம் பவுநான் மனுக்களிலே**
**வெற்புக் களில்மா மேருநான் விசுவ கர்மா நான்எனலாம்**
**சிற்பம் செய்ய வல்லவரில் சேனா பதிகளில் குகன்நான்.**

கர்ப்பங்களில் பெரிய கர்ப்பம் நானே. கணேசரில் விநாயகராக இருப்பவன் நானே. பாம்புகளில் அனந்தன் என்ற பாம்பும் நானே. மனுக்களில் சுவாயம்பு என்ற மனு நான். மலைகளில் மகாமேரு மலையாக இருப்பதும் நானே. சிற்பங்கள் செய்ய வல்லவரில் நான் விசுவகர்மா. புகழ்ந்து சொல்லப்படும் சேனைத் தலைவர்களில் நான் முருகனாக இருக்கின்றேன்.

**9. ஏவ லாளர்களில் இராமன் நான்அசுரர்**
**தங்களில் பிரக லாதன்நான்**
**மேவ லார்அகல வெல்லும் வீரர்களில்**
**வேளும் வீரபத் திரனும்நான்**
**தாவுஇல் சாமமறை தன்னில் அத்தின்மிகு**
**சேட்ட சாமமது தானும்நான்**
**ஓவுஇ லாதுஅடைவி லேசு ழன்றிடும்உ**
**கங்க ளில்கிருத யுகமும்நான்.**

வில்வித்தையில் சிறந்தவர்களில் நான் இராமனாக இருக்கின்றேன். அசுரரில் நான் பிரகலாதனாக இருக்கின்றேன். பகைவர்கள் புறமுதுகு காட்டி ஓடும்படி வெல்லும் வீரர்களில் நான் முருகனாகவும், வீரபத்திரனாகவும் இருக்கின்றேன். அழிவற்ற சாம வேதத்தில் மிகுந்த சிறப்புடைய சாமமும் நானே. இடையறாது முறையாகச் சுழன்று வருகின்ற யுகங்களிலே நான் கிருதயுகம்.

**10. தக்க பிரசா பதிதம்மில்**
**தக்கன் நான்எக் கணங்களினும்**
**விக்கி னவிநா யகன்நான்**
**வியாதன் நான்மெய் முனிவர்களில்**
**தொக்க சூத்தங் களில்புருட**
**சூத்தம் ஆவேன் நான்சோதி**
**மிக்க விஞ்சை யாவையினும்**
**தன்னை அறியும் விஞ்சைநான்.**

தகுதி வாய்ந்த பிரசாபதிகளில் நானே தட்சப் பிரசாபதி. அனைத்துக் கணங்களிலும் விக்கின விநாயகன் நான். உண்மையான முனிவர்களில் வியாச மகா முனிவன் நான். சூத்தம் என்ற தொகுதிகளில் புருட சூத்தம் நானாவேன். ஒளி மிக்க வித்தைகள் யாவிலும் தன்னை உணரும் வித்தையாக நான் இருக்கின்றேன்.

**11. ஒன்ன லர்த்தெறும் ஆயு தங்களில் ஓங்கு வச்சிரம்ஆவன்நான்**
**பன்னும் எவ்வுல கங்க ளில்பர மேச ரில்பர மேசன்நான்**
**இன்னும் இங்குஉல கில்சி றந்தனயாவை மற்றுஅவை என்னதுஆம்**
**மன்னு சோதியில் வந்துஉ தித்தன என்ன வேமனம் வைம்மின்நீர்.**

பகைவர்களை வெல்கின்ற ஆயுதங்களில் சிறந்த வச்சிராயுதம் நானாவேன். எல்லா உலகங்களிலும் வழங்கும் பரமேசுவரர்களில் நான் பரமேசுவரனாக இருக்கின்றேன். மேலும் இவ்வுலகத்தில் சிறப்புப் பொருந்தியுள்ளன எவையோ அவைகள் எல்லாம் என்னுடையதாகிய நிலைபெற்ற ஒளி வடிவத்தில் தோன்றி உண்டாயின என்பதைச் சௌனகாதி முனிவர்களாகிய நீங்கள் மனம் கொள்க.

**12. எந்தப் பிராணி களும்பசுக்கள் என்னப் படும்இங்கு அதிபதியான்**
**பந்தப் படுக்கும் என்மாயா பாசம் அதனால் பசுபதியாய்த்**
**தொந்திப் பதுவீழ்ப் பதுஆம்இத் தொழில்என் விளையாட்டு எனைஅன்றி**
**இந்தப் பசுக்கள் கட்டுனர்கள் இல்லை அவிழ்ப்பார் களும்இலதால்.**

எல்லாப் பிராணிகளும் பசுக்கள் என்று சொல்லப்படும். இவைகளுக்கு எல்லாம் தலைவன் நான். பந்தத்தினை உண்டாக்கும் என்னுடைய மாயா பாசத்தினால் பசுபதியாய்ப் பந்தப் படுத்துவதும் அதிலிருந்து விடுபடச் செய்வதுமான தொழில் என்னுடைய விளையாட்டு ஆகும். என்னைத் தவிர இந்தப் பசுக்களைக் கட்டுகின்றவர்களும் இல்லை. விடுவிப்பவர்களும் இல்லை.

**13. ஊறதுஆம் போகமே ஊட்டி விட்டிடப்**
**பேறதுஆய் உயிர்களைப் பிணித்த மாயைதன்**
**கூறதுஆம் கணங்களால் கூறப் பட்டநால்**
**ஆறதுஆம் பாசம்அது அறியக் கூறுவாம்**

துயர்தருகின்ற போகங்களைப் புசிக்கும்படி செய்யும்பயனுடையதாகி, உயிர்களைப் பற்றிய மாயையின் பாகுபாடாகிய கூட்டங்களால் சொல்லப்பட்ட இருபத்து நான்காகிய பாசத்தினை உங்களுக்குத் தெரியும் படியாகச் செல்லுகின்றோம்.

**14.** **மனம்புத்தி மமத்துவம்வான் வளிதீநீர் மண்எட்டு**
**முனைஉற்ற பகுதிகளாம் மூக்குவிழி செவிநாமெய்**
**பனவுஉற்ற வாய்கைகால் பாயுருஉபத் தம்சத்தம்**
**தனுஉற்றல் உருச்சுவைநாற் றங்கள்எனும் தத்துவம்**

மனம், புத்தி, அகங்காரம், வான், காற்று, நெருப்பு, நீர், மண் ஆகிய எட்டும் முன் தோன்றிய மூலங்கள் ஆகும். மூக்கு, விழி, செவி, நா, மெய், சொல்லப்படுகின்ற வாய், கை, கால், பாயுரு, உபத்தம், ஒலி, உடலில் பொருந்தியுள்ள தொடுஉணர்ச்சி, வடிவு, சுவை, நாற்றங்கள் என்று சொல்லப்பட்ட இருபத்து மூன்று தத்துவமும் உறுதல்.

**15.** **ஆகஇவை இருபத்து மூன்றுஇவற்றுக்கு ஆதிதான்**
**ஆகிஅநா தியதுஆகி அகிலத்தின் காரணமாய்**
**மோகசமு சயகுணமாய் முதற்பகுதி தெரியாமை**
**ஏகமுமாம் தத்துவங்கள் இருபத்துடன் ஈர்இரண்டாம்.**

முன் கூறிய எட்டு மூலங்கள், ஞானேந்திரிய கன்மேந்திரிய ஐம்பூதங்கள் ஆகிய இருபத்து மூன்றும், இவற்றுக்கு முதன்மையாய் அநாதியாய் உள்ள எல்லாவற்றிற்கும் காரணமாய், மோகம், ஐயம், முதலிய குணமுடையதாய், முதல் பகுதி அறியாமையும் எனத் தத்துவங்கள் இருபத்து நான்காகும்.

**16.** **ஒத்தமுக் குணங்களாம் பகுதி உத்தமம்**
**சத்துவ ஞானமாம் தமம்அஞ் ஞானமாம்**
**மத்திமம் கலப்பதுஆம் மற்றுஇம் மூன்றையும்**
**புத்தியின் விகாரமே புலப்ப டுத்துமால்**

முக்குணங்களும் சமமாகப் பொருந்தியுள்ளது பிருகிருதியாகும். அதனது சுத்த சத்துவ குணமானது ஞான வடிவமாம். தமோ குணமானது அஞ்ஞானமாம். இரஜோ குணமானது சத்துவ குணம், தமோ குணம் ஆகிய இரண்டனையும் சேர்ந்திருக்கும். இம்மூன்று குணங்களையும் புத்தியின் வேறுபாடுகளே தோற்றுவிக்கும்.

**17.** **தரும பாவம் இரண்டுஉள தப்புதற்கு**
**அருமை ஆகிய பாசமது ஆகிலும்**
**இருமை ஆதரவு இன்றிஎ னக்குநேர்**
**கரும முத்தியின் காரணம் ஆகுமால்.**

புண்ணிய பாவம் என இரண்டு இருக்கின்றது. பிறப்பிலிருந்து மீள்வதற்கு அது ஒரு அருமையான பந்தமாகும். பாவ புண்ணியம் என்ற இரண்டினிடத்தும் விருப்பின்றி பரமேசுவரனாகிய எனக்கு விருப்பின்றிச் செய்யும் செயல் வீடுபேற்றிற்குக் காரணமாகும்.

**18. அறியாமை காமம்வெறுப்பு ஆம்ஆசை அகம்செறிதல்**
**பொறியாகப் புகுந்துஒருவர் போக்கஅரிய பாசம்இவை**
**முறியாத வினைத்தளையால் முடிச்சிட்டே என்மாயை**
**பிறியாதுஎன் பால்உளதுஆம் பிறவிகளுக்கு அடியாக.**

அறியாமை, காமம், வெறுப்பு, ஆசை, அகம்செறிதல் ஆகிய இவ்வைந்தும் இந்திரியங்களில் வழியாகச் சென்று ஒருவராலும் போக்க இயலாத பாசங்கள் அழியாத பாவ புண்ணியம் என்ற வினைத் தளைகளால் முடிச்சுப்போட்டுப் பிறவிக்குக் காரணமாகிய என்னுடைய மாயையானது நீங்காமல் என்னிடத்திலேயே இருக்கின்றது.

**19. பின்னிய பகுதியாம் பிரதான மாயையும்**
**மன்னிய புருடனும் மானும் ஆதியாய்த்**
**துன்னிய விகாரமும் தொல்லை ஈசனில்**
**அன்னியம் இன்மையால் அவனே ஆகுமால்**

ஒன்றோடு ஒன்று முடிச்சாக உள்ள மூலமாகிய முதன்மையான மாயையும் பொருந்திய புருடனும், மகதத்துவம் முதலாகப் பொருந்திய விகாரங்களும் (16) அநாதியான ஈசுவரனைக் காட்டிலும் வேறு ஆகாமையால் அது அந்தப் பரமேசுவரனே ஆகும்.

**20. அவனே பாசம் அவனேகட்டுண்டு அவனே கட்டும் அதிபதியும்**
**அவனே பசுக்கள் ஆகின்றான் அனைத்தும் ஆகி உள்ளானும்**
**அவனே அவனை ஒருவர்களும் அறிவார் இல்லை அனைத்திற்கும்**
**அவனே அநாதி புருடன்என அவனை அறிவார் அறைகுவரால்.**

அவனே பாசமாக, அவனே கட்டப்பட்டு, அவனே கட்டுகின்ற அதிபதியும் ஆவான். அவனே உயிர்களாக இருக்கின்றான். அவனே அனைத்துமாகி இருக்கின்றான். அந்தப் பரமசிவனை உணர்பவர்கள் ஒருவரும் இல்லை. அவனை உணர்ந்தவர்கள் அனைத்துலகிற்கும் அவனே அநாதி புருடன்என்று சொல்லுவார்கள்.

## தத்துவம் நிசம் விபூதி நிறைவுற்றது

# 8. பிரபஞ்ச சர்வ காரண புராண புருஷப் பிரதிபாதந அத்தியாயம்.

**1.** **வருந்தியும் மறைகள்ஈறு அறியும்மன்உயிர்**
**இரும்பவக் கடல்கடந்து ஏற உய்ப்பதாம்**
**திருந்திய ஊர்வது செப்ப இன்னமும்**
**அருந்தவர் கேண்மின்என்று அருளிச் செய்குவான்.**

வேதத்தின் முடிவுகளை மனத்தினாலும் பயிற்சியாலும் வருத்தமுற்றுக் கற்று உணரும் நிலையான உயிர்கள், பெரிய பிறவிக் கடலைத் தாண்டிச் செல்லச் செலுத்துகின்ற ஓடமாகிற நேர்மையான ஞானத்தினை, மேலும் உங்களுக்கு நான் சொல்ல, அரிய தவமுடைய சௌனகாதி முனிவர்களே கேளுங்கள் என்று சொல்லத் தொடங்கினார்.

**2.** **பகருபரம் ஈசன் வெறும்ஒருவன் ஈறுஇல்**
**பரமன்எனும் ஆதி பகவன்நான்**
**நிகரில்அழி யாத பிரமமயம் ஆகி**
**நிமலநிலை யோஎன் ஒழிவுஉறாக்**
**ககனவடி வான பிரமம்எனில் யோனி**
**கருவைஉற மேவி விடுவன்நான்**
**அகிலசகம் ஆக அறிவுஅரும்என் மாயை**
**எனைஇதயன் ஆகி அமருமால்.**

சொல்லப்படும் பரமேசுவரனாயும், கேவலனாயும், ஏகனாயும், அழியாத பரமன் ஆகியும் உள்ள முதற் கடவுள் நானாகின்றேன். சமமில்லாத நிலையான இறை வடிவமாய் கற்றம் இல்லாத தன்மையே எனது இடையறாத அறிவு வெளி வடிவமான பிரமமாம். என்னிடத்தில் நான் அனைத்து உலகங்களுமாக கருவினைப் பொருந்த உண்டு பண்ணுவேன். அறிய இயலாத என்னுடைய மாயையானது என்னுடைய இதயமாகப் பொருந்தி இருக்கும்.

**3.** **சென்மஆ தியதுஆம் பகுதிபுமான்**
**சிறந்த மான்பூ தாதிமனம்**

**தன்மாத் திரைகள் பூதங்கள்**
**இந்தி யங்கள் சமைத்ததனால்**
**பொன்மால் இரவி பலகோடி**
**போலும் அண்டம்**
**என்மா சத்தி எல்லைஇலா**
**உயிரும் உளதாய் இழைத்திடுமால்.**

தோற்றத்தினை முதன்மையாக உடைய பகுதியும், புருடனும், சிறப்பினை உடைய மகதத்துவமும், அகங்கார தத்துவமும், மனமும், தன் மாத்திரைகளும், பூதங்களும், ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும் ஆகிய இருபத்தைந்து தத்துவங்களும் உண்டாக்கிய தன்மையினால் பலகோடிப் பொன்னிறச் சூரியர்களைப் போலும் பேரண்டத்தைப் பிரமாவுடன் என் மாயா சத்தியானது அளவில்லாத உயிர் உள்ளதாய்ப் படைத்திடும்.

4. **எந்தயோ னியில்பிறப்பார் யார்க்கும்தாய் என்மாயை**
**தந்தையான் எனஅறிவார் சனனவினை தப்புவரால்**
**எந்தையான் எனைஅறியாது இருப்பவர்என் மாயையினால்**
**பந்தமாம் யோனிதொறும்உற் பவித்துஇறந்து பதைப்பர்களால்.**

நால்வகை யோனி எழுவகைத் தோற்றமாய் உள்ளவைகளில் பிறக்கின்ற எல்லா உயிர்க்கும் என் சத்தியானது தாயாகும். பரமேசுவரனாகிய நான் தந்தை ஆவேன். இதனை உணருபவர்கள் புண்ணிய பாவங்களால் உண்டாகும் பிறவியிலிருந்து மீளுவர். என்னைத் தந்தையென உணராது இருப்பவர்கள் எனது மாயா சத்தியினால் பாசமாகிய நால்வகை யோனிகள்தோறும் பிறந்து இறந்து துன்பத்தை அடைவார்கள்.

5. **பாங்காய விச்சைகட்கும் பகர்பூதம் அனைத்தினுக்கும்**
**ஈங்குஆரும் இலர்இறைவர் என்னைஅலால் யானேஆம்**
**நீங்காத அதிபதியாய் நின்றுஉலகம் படைக்கின்ற**
**ஓங்கார உருவான பிரமன்என உள்ளேனும்.**

உயர்வான வித்தைகளுக்கும், சொல்லப்படும் பூதங்கள் எல்லாவற்றிற்கும் இவ்விடம் என்னைத் தவிர்த்து ஒருவரும் தலைவர் இல்லை. நானே எல்லாவற்றிற்கும் தலைவன் ஆகின்றேன். இவைகளை விட்டு நீங்காத தலைவனாக இருந்து உலகத்தைப் படைக்கின்ற பிரணவ வடிவமான பிரமாவாக இருக்கின்றவனும் நானே.

**6.** **பொன்றுகின்ற பொருள்கள்தொறும் பொன்றாதே புரையறநான்**
**நின்றதுஅறிந்து அவன்என்னை நேராக அறிகின்றான்**
**அன்றியும்இங்கு அவன்தன்னைத் தன்னாலே அறிந்துஅழியாது**
**என்றும்உள பரமபத இன்பம்அடைந் திடுகின்றான்.**

அழிகின்ற பொருள்கள் தோறும் நிலையாகக் குற்றமின்றிப் பரமேசுவரனாகிய நான் பொருந்தியிருப்பதை அறிந்தவன் என்னை நேராய் உணர்ந்தவன் ஆகின்றான். அல்லாமலும் இங்கு உயிராலே தன்னை உணர்ந்த ஆன்மா எப்பொழுதும் நித்தியமாயுள்ள பரமபத இன்பத்தினை அனுபவிக்கின்றான்.

**7.** **சங்கைஅறத் தத்துவங்கள் தன்னுடைய நுண்மையும்என்**
**அங்கம்என மொழிகின்ற ஆறினையும் அகிலத்தின்**
**பங்கம்அறு பகுதியும்அப் பகுதிவிநி யோகமும்என்று**
**இங்குஎனது நிலைஅறிந்தான் என்னைஅடைந் திடுகின்றான்.**

ஐயமின்றித் தத்துவங்களுடைய நுட்பங்களையும் என் அங்கமாய்ச் சொல்லுகின்ற ஆறையும், உலகத்தில் அழியாத பகுதியும், அப்பகுதியின் வினியோகமும் இவ்விடத்து என்னுடைய தன்மையை உணர்ந்தவன் என்னை அடைந்தவனாகின்றான்.

**8.** **இறைவனுக்கு அனாதியாய் இலங்கு போதமும்**
**அறிவது முழுதையும் அனந்த சத்தியும்**
**நிறைவொடு சுதந்தர நித்த சத்திஎன்று**
**அறைவர்கள் அறிபவர் ஆறும் அங்கமாய்.**

இறைவனுக்கு விளங்குகின்ற முழுதறிவதும், அனந்த சத்தியும், நிறைவும் திருப்தியும், சர்வ சுதந்தரமும், நித்திய சத்தியும் என்ற ஆறும் உணர்ந்தவர்கள் அவற்றைப் பரமேசுவரனது அங்கமாய்ச் சொல்லுவார்கள்.

**9.** **நுண்ணியதத் துவங்கள்என நுவல்வனதான் நுகர்சீவன்**
**வண்ணம்இலா மனமொடுதன் மாத்திரைகள் மற்றுஎதுக்கும்**
**எண்ணுவதாம் இவைஅடியாம் யாதினுக்கும் காரணமாய்ப்**
**பண்ணுவது பகுதிஅதன் வினியோகம் பந்தமதாம்.**

நுண்ணிய தத்துவங்கள் ஏழு என்று சொல்லுவன கருமத்தால் வருவனவற்றை அனுபவிக்கின்ற உயிரும் இவ்வண்ணம் என்று சொல்ல முடியாத மனமும் ஏழு தன்

மாத்திரைகளுமாம். கருதுவன எல்லாவற்றிற்கும் இவையே காரணம். எல்லாவற்றிற்கும் காரணமாக செய்வது பகுதியாம். அந்தப் பகுதியின் வினியோகம் பந்தமாகும்.

**10.** **ஆரணம் அந்த உண்மையில் கரப்பது**
**ஆகும்என்று அரைந்திடப் பட்ட**
**ஒரண இன்றி உள்ளஎப் பொருட்கும்**
**யோனியாது ஒன்றுஅதிஇவ் உலகின்**
**காரணம் அந்தப் பகுதியில் அதனைக்**
**கடந்துமேல் ஆகும்ஒன்று ஆன**
**பூரணம் ஆன மகேசன்என்று உரைக்கும்**
**பொய்மைதீர் பரமன்ஆம் புருடன்.**

வேதமானது அந்தச் சத்தியத்தின் வயப்பட்டு இருப்பதாகும் என்று சொல்லப்பட்ட சம்பந்தமின்றி உள்ள எல்லாப் பொருள்களுக்கும் கருவாக உள்ளது யாதோ அது இவ்வுலகிற்கு முதன்மையாம். அந்தப் பகுதியில் அதைத் தாண்டி மேலாயுள்ள முழுமையான மகேசுவரன் என்று சொல்லும் நிலையாக இறை ஆகிய ஆன்மா ஒருவன் உளன்.

**11.** **மோகம்ஆம் உலகம் முற்றி னுக்கும்ஒரு**
**மூலம் ஆனதெரி யாமையும்**
**போகும் ஆசெயும்வி ருத்தி யும்பொருள்**
**அனைத்தை யும்தருபு ராணனாய்**
**ஏகன் ஆகிஇறை ஆகி வானம்என**
**எங்கும் உள்ளபரம் ஈசன்ஆம்**
**யோகி யாய்உளஒ ருத்தனே எனஒ**
**ருக்கி மாமறைஉ ரைக்குமால்.**

மயக்கம் பொருந்திய அனைத்து உலகங்களுக்கும் ஒப்பற்ற காரணமான அறியாமையும் நிவிர்த்தியாகச் செய்கின்ற விருத்தியாகியும், அனைத்துப் பொருள்களையும் உண்டாக்கும் பழையோனாகியும் ஒருவனாகிய தலைவன் ஆகியும், வானம் போல எங்கும் பரந்துள்ள பெரிய ஈசுவரன் ஆகியும் யோகியாய் உள்ளவன் ஒருவனே என்று பெருமை பொருந்திய வேதங்கள் உறுதியாகச் சொல்லும்.

**12.** **பாகம் என்பர்ப குதிப்ப ரமனோடு**
**ஏகம் என்பர்சி லர்அணு வுக்குஅணு**
**ஆகிமற்றதும் அப்படி ஆம்என்பர்**
**யோகி உள்ளது எலாம்என்பது உண்மையாம்.**

பகுதி பிரமத்தோடு பின்னம் என்று சொல்லுவர். சிலபேர் ஏகம் என்பர். அணுவுக்கு அணுவாகி மற்று அப்படியே மகத்துக்கும் ஆகியிருக்கிறது என்பர். எல்லாம் இருப்பதே சத்தியமானது என்று சொல்லுவர் யோகிகள்.

**13.** **என்னைஉற நினைப்பவரில் எங்கேனும் ஒருவன்அவன்**
**தன்மதியைக் கடந்துஅருளால் தன்இதயக் குகைதன்னில்**
**பொன்மயமாய்ப் புராணமாம் புருடனாய்ப் பொருந்தும்எனில்**
**அந்நியமது அறஅறிவான் அவன்பரமத் திடையடைவான்.**

பரமேசுவரனாகிய என்னை அடைய விருப்பம் உள்ளவர்களில் எவ்விடத்து ஆயினும் ஒரு ஆன்மா தன் புத்தியைத் தாண்டி, என் அருளால் தன்னுடைய இதயமாகிய குகையில் பொன்மயமானவனாய், பழைமையான ஆன்மாவாய் இருக்கின்ற என்னிடத்தில் வேறுபாடின்றி அறிகின்றவன் எவனோ அவன் பிரமத்தினை அடைந்தவன் ஆகின்றான்.

## பிரபஞ்ச சர்வ காரண புராண புருஷப் பிரதிபாதன அத்தியாயம் நிறைவுற்றது

# 9. மாயா விகார அத்தியாயம்

1. **நின்மலமாய் அவிகாரி வேறுபடா நிட்களனாய்ச்**
**சின்மயனாய் நித்தன்ஆம் சிவனேநீ செகத்தான**
**தன்மையினை அருள்என்னத் தபோதனர்ஓர் தனைஒழிய**
**இன்மையினால் அப்பரிசை இன்னம்அவர்க்கு எடுத்துரைப்பான்.**

குற்றம் அற்றதாய், வேறுபாடு அற்றதாய், பின்னமில்லாத களங்கமற்றவனாய் அறிவின் வடிவனாய், நித்தியனாய் உள்ள பரமசிவனே. நீர் பிரபஞ்ச வடிவமான காரணத்தை திருவாய் மலர்ந்து அருள வேண்டுமென்று சௌனகாதி முனிவர்கள் சொல்லத் தனையொழியத் தனக்கு நிகரில்லாத பரமேசுவரன் தனக்கு அந்நியமாக உலகம் இன்மையினால் அந்தத் தன்மையினை மீண்டும் அந்த முனிவர்களுக்குச் சொல்லத் தொடங்கினார்.

2. **என்ஒழிய இல்லைசகம் யான்அவ்உரு அல்லேன்**
**உன்னில்ஒரு மாயைஉல குக்குமுதல் ஆகும்**
**ஞன்உருவம் ஆனஎனை அன்றிஅது நாளும்**
**தன்இயல்பி னால்நிகழ்வு உறத்தகுவது அன்றால்**

என்னைத் தவிர உலகம் இல்லை. நான் இந்த உலகத்தின் வடிவம் அல்லேன். ஆராய்ந்து பார்த்தால் ஒப்பற்ற மாயை உலகுக்கு முதற் காரணமாகும். ஞான வடிவாயுள்ள என்னை அன்றி அந்த மாயையானது எப்பொழுதும் தனது இயல்பில் விளங்குவது அன்று.

3. **யாதுஒன்று ஒருவ ராலேனும் அறியப் படாத இயல்புஆம்என்**
**ஆதி முடிவுஇன் றியசத்தி அந்த மாயை அதனாலே**
**பேத உலகம் உண்டாகிப் பிறங்கும் அதனால் பிறர்க்குஎன்றும்**
**போதப் படாத என்னால்ஆய் உள்ள பொருள்இப் பொருள்எல்லாம்.**

எந்தப் பொருளானது ஒருவராலும் உணரமுடியாத இயல்புடன் இருக்கின்றதோ அது எனதுதோற்றமும் முடிவும் இல்லாத சத்தியாம். அந்த மாயா சத்தியினாலே பல கூறுபாடுகளை உடைய உலகம் உண்டாகி விளங்குகின்றது. அத்தன்மையினால் பிறரால் எப்பொழுதும் உணரமுடியாத இந்தப் பொருள்கள் யாவும் என்னால் உண்டாக்கப் பட்ட பொருள்களே.

4. **சோதிஆ னந்தம் ஆகும் தோன்றிடா வேறே தொல்லை**
**ஆதிகா ரணமாம் என்றே அறைவர்கள் அறிய ஒன்றுஆய்**
**நீதியாய்ப் பரமா னந்த மிலமாம் பிரமம் நானே**
**போதியா என்னில் வேறுஉண்டு ஆவது பிறிதுஒன்று இல்லை.**

ஒளி வடிவமே ஆனந்த வடிவமாம். அந்நியமாக ஒன்றும் தோன்றாது. முதன்மையான தோற்றத்திற்கு அதுவே காரணம் என்று கூறுவார்கள். அறிய ஒரு வடிவமாய் முறையதாக உள்ள மேலான ஆனந்தமாய் இறை நான் ஆகின்றேன்.

5. **அன்றி இன்மை அறிந்தவர் ஆதலால்**
**என்றும் இச்சகம் தானதும் யான்என**
**ஒன்றும் ஆகிஉ லப்புஇல அனைத்தும் ஆய்**
**நிற்றல் கண்டுஇவர் நிச்சயித் தார்களால்**

பரமேசுவரனாகிய என்னையன்றி வேறு இல்லாமையை உணர்ந்தவர்கள் ஆன படியினால் என்றும் இவ்வுலகை வடிவமாய் இருப்பதுடன், யானே ஒன்றாகியும் அழிவில்லாத அனைத்தும் ஆகி நிற்றல் கண்டு இந்த முனிவர்கள் நிச்சயம் செய்தார்கள்.

6 . **சின்ம யானந்த மாய்த்திகழ் கின்றதுஓர்**
**தன்மை யாய்ப்பரம் ஆகிய சாந்தம்ஆய்த்**
**தொன்மை ஆனசு டரால்வி காரம்ஒன்று**
**இன்மை யாம்எனக்கு ஏதம்ஒன்று இல்லையால்**

அறிவு வடிவான ஆனந்தமாய் விளங்குகின்ற ஒரே தன்மையானவனாக மேலான சாந்தமாய்ப் பழமையாக உள்ள அறிவொளியினால் ஒரு வேறுபாடும் இல்லாதவன் ஆகிய எனக்கு ஒரு குற்றமும் இல்லை.

7. **என்அந்தம் அற்ற ஏக மேனி**
**எண்ணில் பேதம் ஆக்கவற்று**
**அனந்த சத்தி என்னி லேஅ**
**வற்றில் மாயை ஆதியா**
**வனந்த அந்த மாயை ஆன**
**வானி லேம னத்தினால்**
**நினைந் திடப்ப டாத அவ்வி**
**யத்தம் ஆகி நிற்பன்நான்.**

என்னுடைய முடிவற்ற ஒரே உடலில் அளவற்ற பல வேறுபாடுகளாகப் பிரிந்து என்னிடத்தில்அநேக சத்திகள் பொருந்த, அவற்றில் மாயை முதலியனவாகச் செய்த, அந்த மாயையான வானிலே மனத்தால் கருத முடியாத அறியாமை வடிவாகி நான் இருப்பேன்.

**8. சத்திஒன் றாலே யான்ஆம் தக்கசா யுச்சம் ஆன
முத்திஉண் டாகும் ஒன்றால் முழுதுசெல் வும்உண் டாகும்
சித்தியா நிற்பதுஎல்லாம் சிதையும்ஒன் றாலே எல்லாம்
நித்தியம் ஆக என்றன் நியமத்தால் நிகழும்அன்றோ.**

ஒரு சத்தியினாலே எனது வடிவமாகிய தகுந்த சாயுச்சம் ஆன வீடுபேறு உண்டாகும். மற்றொரு சத்தியினால் எல்லாச் செல்வங்களும் உண்டாகும். வேறு ஒரு சத்தியினால் எல்லாம் கிடைப்பதாகும். வேறொரு சத்தியினால் கிடைத்த யாவும் அழியும். என் ஆணை வழியே அனைத்துப் பொருள்களும் முறைப்படி உண்டாகும்.

**9. மத்தியமாய்ப் பரஞ்சுடர்ஆம் மண்டலத்தால் மண்டிதம்ஆய்
அத்தகும்அக் கரம்ஆகி அறிவுஅரிதுஆம் அநாதிஆம்
வித்தகம்ஆம் விட்டுவின்மெய்ப் பரமபதம் விச்சைஎனும்
சத்தியினால் நிகழும்இது தக்கோர்கள் அறிவர்களால்.**

இடைப்பட்டதாய், மேலான ஒளி மண்டலங்களினால் அலங்கரிக்கப்பட்டதாயுள்ள தகுதியான பிரணவ வடிவமாய் உணர முடியாததாயுள்ள முதன்மையான வித்தையாகிய திருமாலின் உண்மையான பரமபதம் வித்தை என்கின்ற எனது சத்தியினாலே உண்டாகும். இதனைத் தகுதியானவர்கள் உணர்வார்கள்.

**10. உடுக்கும் ஆடை யினைப்போல உலகம் யாதுஒன் றில்குருக்கு
நெடுக்கும் ஆகும் நிகிலமும்ஆய் நினைத்தற்கு அரிதுஆம் யாதுஒன்றின்
மடக்கும் வாக்கும் மனம்செல்ல மாட்டா மையினால் பவக்கடலைக்
கடக்கும் பிரம ஆனந்தம் கண்டான் நடுக்கம் காணானால்**

கட்டிக் கொள்ளுகின்ற ஆடையில் நூல் குறுக்கும் நெடுக்குமாய் உள்ளது போல இந்த உலகமானது எந்தப் பிரமத்தில் குறுக்கும் நெடுக்குமாக இருக்கின்றதோ அது அனைத்துப் பொருள்களாய் மனத்தினால் நினைக்க முடியாத எந்தப் பொருளிடத்தில் வாக்கும் மனமும் செல்ல மாட்டாமையினால் மீண்டும் திரும்பிப் பிறவியாகிய கடலைக் கடக்கும் பேரானந்தத்தை அடைந்தவன் அந்தப் பிறவி கண்டு நடுங்க மாட்டான்.

11. **ஈனம் செய்யும் அஞ்ஞான இருளைக் கடந்து மேலான**
**பானம் தனக்கே உளதுஆன பரம ஒளியாம் பரம்பரனை**
**ஞானம் தன்னால் வேறுஅறவே நான்என்று அறிந்த நல்லோன்அவ்**
**ஆனந் தம்அதாம் பிரமமயம் ஆகி வீடே அடைகின்றான்.**

இழிவைத் தருகின்ற அஞ்ஞான இருளைத் தாண்டித் தனக்கே உயர்வான விளக்கும் தன்மை உடைய இறையொளியான பரத்துக்கு எல்லாம் பரமாய் உள்ளவனை ஆத்ம ஞானத்தினால், வேறின்றி நான் என்று உணர்ந்த நல்லோன் அவ்லானந்தமாகிய இறை வடிவமாகி வீடுபேற்றினையே அடைகின்றான்.

12. **ஒப்பதுமிக் கதுகுறைந்த ஒன்றுதனை ஒழித்துஇல்லாது**
**எப்பொருள்எவ் ஒளிகட்கும் எவ்வளிதான் ஒளிஆகும்**
**சிற்பரமஆ காயத்தே திகழ்கின்ற அதுதெளிந்த**
**அப்பெரியோன் ஆனந்த மாய்ப்பிரமம் ஆகின்றான்.**

தன்னையன்றி ஒரு பொருள் சமமும், உயர்வும், தாழ்வுமில்லாத எப்பொருள் எல்லா ஒளிகட்கும் மேலாக ஒளி விடுகின்றதோ, அறிவு வெளியான வானிலே அதனைத் தெளிவாக உணர்ந்துள்ள பெரியோன் ஆனந்த வடிவம் ஆகின்றான்.

13. **உலகங்கள் முழுதும்தன் உளதுஎன்ன உளதாய்**
**அலகுஇன்றி அழிவுஇன்றி அமிர்துஆய்**
**எலைஒன்றும் அறநின்ற பரஇன்பம் இதிலே**
**நிலைநின்ற அவன்நின்ற நிலைஎன்றும் அழியான்**

உலகங்கள் எல்லாம் தன்னிடத்திலே இருக்கின்றன என்றும் உள்ளதாய், குறைவு இன்றி, அழிவு இன்றி, இது எனச் சுட்டியறியும் அமுதமாய் ஓர் எல்லையும் இல்லாதிருக்கின்ற பேரின்பத்திலே இலயித்து இருக்கப் பட்டவன் இருக்கும் தன்மையிலிருந்து எப்பொழுதும் நாசமடையான்.

14. **புன்மய கோசம்உள் புக்குஒ ளிக்குஉளே**
**நன்மையது ஆகிய ஞானக் கண்ணினால்**
**சின்மய மாய்த்திகழ் தேசை நோக்கிய**
**தன்மையால் வியோமநல் தாமம் காண்பரால்**

இழிவான அன்னமய கோசத்தினுள் பொருந்திய ஒளியில் நன்மைதரும் ஞானக் கண்ணினால் அறிவு வடிவாய் விளங்குகின்ற ஒளியினைப் பார்த்த தன்மையால் பரம ஆகாயமாகிய இடத்தைப் பார்ப்பார்கள்.

15. **அப்பரம் தன்னைத் தன்பால் அனுபவித்து அனுப வித்தார்**
**எப்படிக் கண்டார் உள்ளத்து இலங்குமா முனிவர் அந்தச்**
**செப்பஅரும் இன்பம் ஆய்த்தன் தேசினால் திகழ்ந்து தன்னோடு**
**ஒப்புஅறும் அவனே யார்க்கும் உம்பன்என்று உணரப் பட்டான்.**

சிறந்து விளங்கும் சௌனகாதி முனிகள் அந்தப் பரம்பொருளை எப்படி மனத்தில் கண்டார் எனில் எப்படி எப்படிப் பார்த்தார்களே அப்படி அப்படித் தன்னிடத்தில் அனுபவித்து அனுபவித்தார்கள். அவ்வாறு சொல்லுதற்கரிய ஆனந்தமாய்த் தன் ஒளி வடிவுடன் விளங்கித் தனக்கு வேறு யாரும் ஒப்பின்றித் தனக்குத் தான் சமமாய் உள்ளவனே தலைவன் என்று உணரப் பட்டான்.

16. **எங்கும்உளன் ஆய்இறைஆய் ஏகன்ஆய் எல்லாப்பூ**
**தங்கள்தொறும் மறைந்துஇருக்கும் தன்மையன்ஆய்ச்**
**சராசரங்கட்கு**
**இங்குஉயிராய் உள்ஆகும் இறைவன்ஒரு வனையும்அறிந்து**
**அங்குஅடைவார் சாந்தியினை அடைவர்அல்லா தவர்அடையார்.**

எங்கும் நிறைந்துள்ளவனாய், தலைவனாய், ஏகனாய், அனைத்துப் பூதங்களிலும் மறைந்து இருக்கின்ற தன்மையுடைவனாய்ச் சராசரங்களுக்கும் உயிராய் ஆதாரமாய் இருக்கின்ற தன்மையுடையவனாய் ஆதாரமாய் இருக்கின்ற பரமேசுவரனே என்று அந்த ஒருவனை உணர்ந்து அதனை அடைந்தவர்கள் சாந்தி அடைவர். அதனை அடையாதார் சாந்தியடையார்.

17. **முகமொடு கிரிவம்தன் முடிபதம் முடிவுஇன்றாய்க்**
**குகைமுழு தினும்நின்றே குறைவுஅற உலகுஎல்லாம்**
**அகம்ஒடு புறம்மேவுற்று அழிவுஅறும் நிலைஆகும்**
**பகவனில் அயல்ஆகப் படுவதுஓர் பொருளின்றால்.**

முகமொடு கழுத்தும் பாதங்களும் அளவு இல்லாததாய் எல்லா உடல்களிலும் இருந்து முழுமையாய் எல்லா உலகங்களிலும் உள்ளும் புறமும் பொருந்தி நிலையான தன்மையுடைய பரமேசுவரனுக்கு அந்நியமாக ஒரு பொருளும் இல்லவே இல்லை.

18. **மாசுடை மனத்தர் தம்மில் மறைப்பதுஆய் மாசி லாத**
**தேசடை யோகி கட்கும் தெரிந்திடப் படாத தான**
**ஈசன்நான் எனதுஆம் ஞானம் இப்படி அருளி னாலே**
**பேசினன் உங்கட்கு என்று பெருந்தகை அருளிச் செய்தான்.**

பாவமாகிய குற்றமுடைய மனமுடையவரிடத்து அறிய முடியாத இரகசியம் உள்ளதாய்க் குற்றமிலாத ஒளி பொருந்திய யோகிகளும் அறிய இயலாததாய் உள்ள பரமேசுவரனாகிய நான் என்னுடைய ஞானத்தினை அருளினாலே உங்களுக்கு உபதேசித்தேன் எனப் பெருமை பொருந்திய பரமேசுவரன் அருளிச் செய்தான்.

**மாயா விகார அத்தியாயம் நிறைவுற்றது**

## 10. தத்துவ தரிசன அத்தியாயம்

1. **துக்கரம் குறியில்குறி சூக்கசூ சனைதெரியில்**
**அக்கணம் சகலஉல கத்தின்அங் குரமும்அதுஅவ்**
**அக்கரம் பரமபதம் அப்பரஞ் சுடர்பிரமம்**
**நிர்க்குணம் பரவெளியில் நிச்சயம் பெறநிகழும்**

அங்கம் அல்லாத குறியிலும், அவ்வியத்த இலிங்கத்திலும் ஆராய்ந்து பார்க்கில் அப்பொழுது அவ்வியத்த லிங்கமானது அனைத்துலகத்தினது மூலமும் ஆகும். அந்த எழுத்து வடிவ மூலமானது மேலான பதமும் ஆகும். அந்தப் பரஞ்சுடர் பிரமமும் ஆகும். நிர்க்குணமும் மேலான வான்வெளியில் நிச்சயமாக நிகழும்.

2. **ஒப்புஅ ரும்பர தத்துவத்து ஒப்பி டும்சுரு திக்கலை**
**கப்புஅ றும்படி புத்தியில் கற்பி தங்கள்க ழற்றிமெய்த்**
**தப்புஅ ரும்தவர் சித்தம்மெய் தற்ப ரம்தனில் அற்றதுஇங்**
**அப் ரம்பிர மத்தினுக்கு அத்தை லிங்கம் எனப்படும்.**

ஒப்பில்லாத பிரம தத்துவத்தில் சமமாகச் சொல்லுகின்ற வேதங்களும், கலைகளும், பலவேறுபாடுகளும் அழியும்படி புத்தியிலுள்ள பாவனைகளை நீக்கி மெய்த்தவம் உடையோர்களால் மனமானது சத்தியமான அந்தப் பிரமத்தில் பொருந்தியுள்ள அதனை அந்தப் பரப்பிரமத்திற்கு அடையாளம் என்று சொல்லப்படும்.

3. **அறிவினில் பிறிதுஎல்லாம் அறிவுஎனல் அறிவுஆகும்**
**பெறஅரிது இதில்அல்லால் பிறிதினிலே வெளிநில்லேன்**
**பிறவியது அறுஞானம் பெறஅரிது அதனாலே**
**மறவியது உறும்மாயா மயல்அலது இலைஎல்லாம்.**

ஆத்மாவில் வேறாய் உள்ள யாவும் ஆத்மாவே என்று கருதுதல் ஆத்ம ஞானமாம். இந்த ஞானம் உண்டாவது மிக அரிது. இந்த ஆத்ம ஞானத்தினால் அல்லாமல் மற்றவற்றில் வெளியாக நான் உணரப்படேன். பிறவியைப் போக்கும் ஞானத்தினை அடைவதும் மிக அருமையாகும். ஆகையினாலே யாவும் அஞ்ஞானம் பொருந்திய மாயையின் மயக்கமே. அதுவன்றி வேறில்லை.

4. **நிம்லம் ஆகிநி ரஞ்சன மாய்வேறு**
**இன்மையது ஆயவி காரம்இ தாம்இத்**
**தொன்மையதுஅகீய சூக்கும ஞானம்**
**என்மலம் இல்உரு என்பர்அ றிந்தோர்**

ஆத்ம ஞானத்தினை உணர்ந்தவர்கள் குற்றமற்றதாய்க் களங்கம் அற்றதாய் யாதொரு வேறுபாடும் இல்லாததாய் இருக்கின்ற அநாதியான நுட்பமான பிரம ஞானம் எனது குற்றமற்ற வடிவமாம் என்று கூறுவர்.

5. **யோகினில் உளம்என்பால் ஒருபடி உறவைத்தே**
**ஏகஎன் நிலைகண்டார் வர்எனது இயல்கண்டார்**
**பாகமது அறும்ஒன்று பலஉருவமும் நானே**
**ஆகவும் எனைஅன்பால் அறிஞரும் அயல்அன்றால்**

யோகத்தில் என்பால் மனத்தை ஒருபடியாய்ப் பொருந்தச் செய்து ஒன்றான வடிவுடைய என் தன்மையைக்கண்டவர் எவரோ அவர் என் இயல்பான வடிவைக் கண்டார். வேறுபாடுடையதாய் ஒன்றாயும், பலவாயும் உள்ள உருவமாய் நானே இருக்கின்றேன். ஈசனாகிய என்னை அன்பால் வழிபடும் ஞானிகளும் எனக்கு அன்னியமானவர்கள் அல்லர்.

6. **பேறுஉறு பிரமானந் தமும்அது பெறுதாமும்**
**வேறுஉற அறிகின்றார் அவர்விழி மறைகின்றார்**
**கூறுஅற அவிகாரம் கூடிய இறைதாம்ஆய்**
**ஊறுஅற உணர்கின்றார் உண்மையை உணர்கின்றார்.**

பயன்தரத்தக்க பேரானந்தத்தையும், அதனை அடைகின்ற தம்மையும் வேறாக உணர்கின்றவர்கள் யாவரோ அவர்கள் அறிவிலிகள் ஆகின்றார்கள். வேறுபாடுகள் நீங்கி, நிர்விகாரத்தினைப் பொருந்திய பரமேசுவரன் தானாகக் குற்றம் யாவும் நீங்கி அறிந்தவர்கள் யாவரோ அவர்கள் சத்தியமாயுள்ள இறையினை அறிகின்றார்கள்.

7. **பங்கம்இல்சீர் பரனுடையது ஆதித்தன் பான்மையினை**
**இங்குஒருவர்க்கு அறிவுஅரியது ஆகியதுஅவ் வியத்ததை**
**எங்கும்உளது ஆய்த்தம்பால் இலங்கியபேர் இன்பத்தைத்**
**தங்களிலே நிலைபெற்ற சாந்தர்அடைந்து இருப்பர்களால்**

குற்றமிலாத சிறப்புடைய இறையினுடையதான சூரியனது தன்மையினை இவ்விடத்தில் ஒருவரும் அறிய முடியாததான அவ்வித்த வடிவத்தை எங்கும் நிறைந்துள்ளதாய்த் தம்மிடத்து விளங்குகின்ற பேரானந்தத்தைத் தம்மிடம் நிலைபெற்ற மகான்கள் அடைந்து இருப்பார்கள்.

**8.** **மெய்த்தக வீடுஇது விமல மாய்ப்பரி**
**சுத்தம்அது ஆகிநிர்த் தொந்த மாய்ஒரு**
**பெத்தம்இல் பிரமரூ பத்தில் பேதியா**
**உத்தமம் எனதுசா யுச்சம் என்பரால்**

இந்த ஆத்ம ஞானமானது உண்மையான வீடாகும். குற்றம் அற்றதாய்ப் பரிசுத்தமாய் சுக துங்கங்கள் என்னும் தொடர்பற்றதாய் இறை வடிவத்தில் வேறுபடாத உத்தமமாய் உள்ளது என்னுடைய சாயுச்ச பதவி என்று சொல்வார்கள்.

**9.** **ஆதியும் நடுவும்அந் தமும்இ லதாதுஒன்று**
**ஏதுஇது எனில்பரம் ஈசன் ஆனநான்**
**நீதியில் எனைஅறி நின்மல நித்தன்ஆம்**
**பேதம்இல் எனைப்பெறும் பிறவி பின்பெறான்**

தோற்றமும், திதியும், இறுதியும் இல்லாதிருப்பது ஒரு பொருள். அது யாது எனக் கேட்கில் பரமேசுவரனாகிய நானேயாவேன். முறையாக என்னை உணர்கின்றவன் குற்றம் இல்லாதவனாயும் நிலையானவனாயும் வேறுபாடற்றவனாயும் உள்ள என்னை அடைபவன் பின்னர் பிறவியை அடையான்.

**10.** **தபனன்ஒளி பெருகுஇரவி சசிஉடுமின் அடையச்**
**சிவன்நிகழ்வுஇல் நிகழ்வுபெறச் சிறிதும்இவர் நிகழார்**
**அவனுடைய ஒளிகொடுஒரு ஒளிதிகழும் அசையா**
**இவனதுஒளி சிறிதுபெறில் இவர்நிகழ்வு பெறுவர்**

அக்கினி, ஒளியுடைய சூரியன், சந்திரன், விண்மீன்கள், மின்னல் ஆகிய இவைகள் பரமேசுவரனுடைய விளக்கம் இல்லாமல் விளங்கும் படியாக ஒளி தர மாட்டார்கள். அப்பரமேசுவரனது ஒளியைக் கொண்டே ஒவ்வொன்றிற்கும் ஒளியுண்டு. சலனமில்லாத இப்பரமேசுவரனது ஒளியைக் கொஞ்சமேனும் இவர்கள் பெற்றால் விளக்கத்தினை அடைவார்கள்.

11. **உதியாமல் என்றும் ஒழியாமை நின்ற**
**ஒளிஆகி என்றும் உளதுஆய்த்**
**திதிஆய் நிறைந்து தெளிவுஆகி அங்குஓர்**
**செயல்ஆனது இன்றி அருளான்**
**மதியாளர் தங்கள் அகம்ஏய அகண்ட**
**வடிவாய் நிகழ்ந்த வடிவே**
**பதிஆகி என்றும் அழியாமை நின்ற**
**படிஆகி நின்ற பரன்நான்**

தோன்றாமல் எப்பொழுதும் அழியாதிருக்கின்ற ஒளியுடன் எப்பொழுதும் இருப்பதாய் நிலையாகி முழுமையாய் விளக்கம் உடையதாய் ஒருவிதச் செயலுமின்றி அருளால் புத்திமான்களது மனத்தில் பொருந்திய அகண்ட வடிவமாக விளங்குகின்ற வடிவமே தலைவனாகி எப்பொழுதும் அறியாது இருந்தபடியே இருக்கும் பரமேசுவரன் நானாகின்றேன்.

12. **நித்தம் அனந்த நிட்கள இன்பம் நிமலம்சற்**
**சித்துஅமு தம்தற் சிவம்எனும் வேதத் திரள்எல்லாம்**
**சுத்தனை அந்தச் சுருதியின் அந்தத் துணிநெஞ்சத்து**
**உத்தமர் தம்தம் உளமது உணர்ந்தார் ஓம்என்றே**

நித்தியம், அனந்தம், நிட்களம், இன்பம், நின்மலம், சச்சிதானந்தம் அது என்றும் மங்கள வடிவம் என்றும் வேதத்தின் தொகுதிகள் யாவும் பரிசுத்தன் ஆன பரமேசுவரனை, முன் சொல்லப்பட்ட வேதத்தின் முடிவினை நிச்சயித்த மனமுடைய முனிவர்கள் தங்களது உள்ளத்தின் கண்ணும் அது ஒங்கார வடிவம் என்று அறிந்தனர்.

13. **தார்ஆ காயம் பவனம்புத் தம்அனல் அல்லன்நீர் ஆதாரன்**
**ஓராது ஆனபி ராணாதி எல்லாம் வாயுவின் உருஅல்லன்**
**ஓர்ஆ காசன் மனம்புத் திஉறும்ஒரு சேதனம் அவன்அல்லன்**
**பார்ஆ காச யோகத்தில் கேவலன் ஆகும் பரம்ஈசன்.**

மண், வானம், காற்று, எல்லாவற்றையும் எரிக்கும் அனல், நீர் ஆகிய பஞ்ச பூதங்களும் யான் அல்லன். இந்த ஐம்பூதங்களுக்கும் ஆதாரமாய் உள்ளவன். பிராணன் முதலான எல்லா வாயுக்களினது உருவமும் அல்லன். ஒப்பற்ற மேலான ஆகாய வடிவுடையவன். மனமும் புத்தியும் பொருந்திய ஒப்பற்ற அறிவுடைய பொருளும் அவன் அல்லன். மேலான ஆகாச யோகத்தின்கண் கேவல வடிவமுடைய பரமேசுவரன் நானாகின்றேன்.

**14.** **எல்லாவே தத்தும்மறைந்து இருப்பதுவாய் யாவர்க்கும்
சொல்லாத பரஞானம் உங்களுக்குச் சொன்னேன்நான்
நல்லான்இப் பரயோக ஞானத்தாலே நலிவுஒன்று
இல்லாத இடத்தஅடைவான் எனஇயம்பி அருளினான்.**

நான்கு வேதங்களிலும் மறைந்து இருப்பதாய் எப்படிப் பட்டவர்க்கும் சொல்லக் கூடாததாகிய பிரம ஞானத்தாலே ஒருவிதத் துன்பமும் இல்லாத இடத்தை அடைவான் என இயம்பி அருளினான்.

## தத்துவ தரிசன அத்தியாயம் நிறைவுற்றது

# 11. யோக அத்தியாயம்

1. **இடர்ப்படு பிறவி தீர்க்கும் யார்க்கும்எட் டாதது ஆகி**
**உடைத்தனது ஒளியி னாலே ஒளிர்வதுஆய் உள்ள ஞானச்**
**சுடர்த்திரு உருவம் ஆன சொரூபனை யாதுஒன் றாலே**
**கிடைத்திடும் அந்த யோகம் கேண்மின்என்று அருளிச் செய்தான்.**

துயரில் மூழ்கி இருக்கும் பிறவியினைப் போக்குவதாயும், எப்படிப் பட்டவரும் அறிய முடியாத இயல்புடையதாயும் உள்ள தன்னுடைய ஒளியினாலே விளங்கிக் கொண்டிருக்கின்ற ஞான ஒளியுடைய திருவுருவமான சொரூபானந்த சுவாமிகளென்னும் அறிவு வடிவத்தை எந்த ஞானத்தினாலே அடைய வேண்டுமோ அந்த யோகத்தினைக் கேட்பீர்களாக எனப் பரமேசுவரன் சௌனகாதி முனிவாகளுக்கு அருளிச் செய்தான்.

2. **யோக எரிஓர் இமைப்பிலே யாது வினையும்எரிப்பதாம்**
**தேகம் ஒழியும்இம் முத்தியே சேரும் உணர்வு சனிப்பதாம்**
**யோகம் உணர்வை ஒழித்துஉறா யோகம் ஒழியவும் உணர்ச்சிதான்**
**ஆகுது அலஈது உளத்துளான் யாவன் அவனை அளிப்பன்நான்.**

யோக நெருப்பானது ஒரு நொடியிலே எப்படிப்பட்ட பாவ புண்ணியச் செய்லகளையும் எரிப்பதாம். அதனால் உடல் அழியும் இந்த வீடுபேற்றை அடைய விரும்பும் ஞானமானது உண்டாகும். யோகமானது ஞானத்தை ஒழித்துவிட்டு இராது. இவ்விரண்டையும் மனத்தின்கண் அறிந்திருப்பவன் எவனோ அவனை நான் காப்பேன்.

3. **ஒருகால் இருகால் முக்கால்மற்று உள்ள காலம் உள்ளத்தை**
**வருகா தலினால் யோகத்தே வைப்பார் மகேசேர் எனப்படுவார்**
**அரிதுஆம் இதனை மாயோகம் அபாவ யோகம் எனஅறிஞர்**
**இருபா லாக இயம்புவர்அவ் இரண்டும் இருக்கும் படிகேண்மோ**

உண்டாகும் ஆசையினால் ஒரு காலமாகிலும், இரு காலமாகிலும், மூன்று காலமாகிலும் மற்றுள்ள காலத்திலும் உள்ளத்தை யோக நிலையில் வைப்பவர் மகேசுவரர் என்று சொல்லப்படுவார்கள். அருமையான இந்த யோகத்தினை மகாயோகம் என்று

அபாவ யோகம் என்றும் அறிஞர்கள் இரு பிரிவாகக் கூறுவர். அவ்விரு யோகமும் இருக்கின்ற தன்மையைக் கேட்பீர்களாக.

**4. தான்நினையும் ஆறுஅரிய தத்துவம் யாதுஒன்றால்**
**நிகழ்வது ஆகும்அது அபாவம் எனும்யோகம்**
**வான்இயல்அது ஆகிஒரு வத்துவும் இலாதாம்**
**சூனியம்அது ஆகஅறி கின்றனர்கள் தூயோர்.**

தான் நினைத்த வண்ணம் அரிய தத்துவமானது எந்தப் பொருளினால் ஏக பாவனையினால் நிகழ்கின்றதோ அதனை அபாவ யோகம் என்று சொல்லுவர். வானம் போன்ற வடிவுடையதாய் யாதொரு பொருளும் இல்லாததாய்ச் சூனியமாய்ப் பரிசுத்தமான ஞானிகள் உணருகின்றார்கள்.

**5. மயல்இலா யாதில்ஒரு மலம்இலாது ஆனசுக வடிவதுஆம் மாசுஇல் ஒளியாம்**
**அயல்இலா ஏகஎனை அயல்எனாது ஏகம்என அறிகைமா யோகம் அதுஆம்**
**முயலும்ஆறு ஆசைஎன முடிவுஇலா நூல்கள்பல மொழியும் யோகா டவிஎலாம்**
**இயல்உறா தாம்அரிய இதனில்சோடசியும் இசைஉறாது ஆகும் இயல்பால்.**

மயக்கம் இல்லாத எதனாலும் உண்டாகும் ஒருவிதக் குற்றமும் இல்லாத ஆனந்த வடிவமாய் மாசில்லாத ஒளியாய் அந்நியமின்றி ஏகமான என்னை அந்நியமாகக் கருதாது ஒரே வடிவாய் உணர்தலே மகாயோகம் எனப்படும். விருப்பத்தோடு முயற்சி செய்யும்படியாக அளவற்ற யோக நூல்கள் பலவாய்க் கூறும். இந்த யோக சாத்திரக் கூட்டங்கள் யாவும் அரியதான அந்த ஞானத்திற்கு மேலாகப் பொருந்தாத தன்மையினால் இதற்குப் பதினாறில் ஒரு பாகத்தையும் சமமாகச் சொல்ல முடியாது.

**6. சுத்தம்ஆய் என்னைக் கண்டுஎத் தோற்றமும் தோன்றாது ஆன**
**உத்தம யோகம் எல்லா யோகிலும்பரம யோகம்**
**அத்திரம் இன்றி என்னை ஆயிரம் கோடி காலம்**
**சித்தமது ஒருக்கி நாளும் சிந்தையில் திகழக் காணார்.**

பரமேசுவரனாகிய என்னைப் பரிசுத்தமாய்ப் பார்த்து, எப்படிப்பட்ட தோற்றமும் உண்டாகாத உத்தமமான யோகம் எல்லா விதமான யோகத்திலும் மேலான யோகமாம். அவ்வாறு உணராது என்னை ஆயிரம் கோடிக் காலம் நினைத்து நாளும் மனத்தை அடக்கினாலும் சித்தத்தின்கண் தெரியும்படி காண மாட்டார்கள்.

7. **அயர்வுஅறு யோகுஅலாது அறிகை ஆதனம்**
**மயல்அற இந்தியம் அடக்கல் வாயுவுன்**
**சயம்மிகு தியானம்தா ரணைச மாதியும்**
**இயமமும் நியமமும் எட்டும் அங்கமாம்**

துக்கம் இல்லாத யோகம் அன்றி ஞானத்தை அடைதற்குச் சாதனம் ஆசனமும், இந்திரியம் அடக்கலும் , காற்றடக்கலும், தியானமும், புலனடக்கலும், சமாதியும், இயமமும் (அட்டாக்க யோகத்தொன்று) நியமமும் ஆகிய எட்டும் ஞான சாதனங்களாம்.

8. **தருக்கு இலாதபி ரமச்சரி யம்மெய்**
**உரைக்கை கள்ளம்ஒ ழிகைஇன் னாசெயாது**
**இருக்கை யாதுஒன்றும் ஏறாமை என்றுஇவை**
**சுருக்கம் ஆகய மம்என்று சொல்வரால்**

யாராலும் மறுத்துரைக்க இயலாத பிரம்மச்சரியமும், சத்தியம் உரைத்தலும் கள்ளம் நீக்குதலும், பிறர்க்குத் துன்பம் செய்யாமையும், யாதொன்றையும் வெறுக்காமையும் என்று சொல்லப் பட்ட இவ்வைந்தையும் சுருக்கமாக இயமம் என்று சொல்லுவார்கள்.

9. **மனத்தால் வாக்கால் காயத்தால் வாதையாவது யாதேனும்**
**அனைத்துஆர் உயிர்க்கும் செய்யாதது அகிம்சை ஆக அறிகஇது**
**தனில்தான் பரம்ஆம் தருமம்இலை சாரும் இன்பம் தானும்இலை**
**எனைத்துஆம் விதியில் உயிர்க்குஇன்னா செயினும் அதுவும்இனிதேயாம்**

மனத்தினாலும், வாக்கினாலும், உடலினாலும் ஏதேனும் துன்பத்தை நிறைந்த அனைத்து உயிர்களுக்கும் செய்யாது இருப்பதுவே அகிம்சையாகும் என்று நீ உணர்வாயாக. இதைப் பார்க்கிலும் மேலான தருமம் இல்லை. அடைகின்ற ஆனந்தமும் வேறு இல்லை. உயிர்க்கு விதிப்படி எப்படிப்பட்ட துன்பம் செய்தாலும் அதுவும் இனிதேயாம்.

10. **உளஆறுஉரை செயல்தான்உரை செயும்ஆறுஒழு குதல்தான்**
**வளவாய்மைஅது எனநாடினர் மதியால்மிகு முதியார்**
**அளவுஆர்அகி லமும்வாய்மை யில்உளதுஆதலின் அதுதான்**
**உளவாசக வினையால்உடை யவன்யாவையும் உடையான்.**

சத்தியமாகச் சொல்லுதலும், சொல்லியபடி நடந்து வருதலும், வளமான சத்தியம் என்று புத்திமிக்க பெரியோர் கருதினார்கள். பிரமாணங்களினால் நிறைந்துள்ள

அனைத்துலகங்களும் சத்தியத்திலேயே இருக்கின்றன. ஆதலால் சத்தியத்தில் உள்ள வாக்கின் செயலினாலே உடையவன் எல்லாவற்றையும் உடையவன்.

11. **மறைவினில் ஆகினும் வலியினில் ஆகினும்**
**பிறர்பொருள் வவ்வுதல் பெரிய கள்ளமாம்**
**கறைஉறும் அரிவையர் திறம்க னாவிலும்**
**பிறழ்வுஅற மறப்பது பிரம சாரமாம்.**

காணாமலும், தன் வலிமையினாலும், பிறர் பொருளை அபகரித்துக்கொள்ளுதல் பெரிய கள்ளத் தனமாகும். குற்றம் உள்ள பெண்களின் தன்மையினைக் கனவிலும் மீண்டும் மீண்டும் பிறட்சியின்றி மறந்து விடுவது பிரமசரியமாகும்.

12. **அரந்தைமுழுந் திடஆபத்து அடைந்திடினும் அன்பாலே**
**இரந்துஒருவன் ஈந்திடினும் ஏராமை ஏராமை**
**வருந்திமனத்து ஆசைஅற மடக்குவான் மாசுஅற்ற**
**நிரந்தரமாம் இயமம்இவை நியமம்இனி நிகழ்த்திடுவாம்.**

துன்பத்தில் மூழ்கும் படியான தரித்திரத்தினை உடையவனாய் இருந்தாலும் ஒருவன் அன்பால் விரும்பிக் கொடுப்பினும் அப்பொருளை வாங்காதிருத்தல் நன்றாம். வருத்தமுற்று மனத்தின்கண் ஆசையின்றித் தன் வயமாக்குதல் பொருட்டுக் குற்றமற்ற அதனை இடையின்றிச் செய்தல் இயமம் எனப்படும். இனிமேல் நியமத்தினைப் பற்றிச் சொல்லுவோம்.

13. **படர்தவம் வேதநூல் பயிறல் பத்தியால்**
**கடவுளை வழிபடல் கருதி நெஞ்சினோடு**
**உடல்உறு தூய்மைசந் தோடம் ஓங்கிய**
**சுடர்மிகு நியமமாய்ச் சுருங்கச் சொல்வரால்.**

விரிவாய் உள்ள தவமும், வேதநூற் பயிற்சியும், பத்தியினால் கடவுளை வழிபடுதல, நினைக்கின்ற மனமும், உடலினது தூய்மையும், எப்பொழுதும் உள்ள மகிழ்ச்சியும் ஆகிய ஒளி பொருந்திய இவ்வைத்தும் நியமம் எனச் சுருங்கச் சொல்லுவார்கள்.

14. **பவம்ஆர் நோவு கெடநோன்பு பலவால் ஆக்கை மெலிவிக்கை**
**தவம்ஆ குவது வேதாந்தம் சதருத் திரியம் தாரகம்ஆம்**
**சிவம்ஆ கியமந் திரம்லவின் செபம்அத் தியாயம் சிறந்துள்ள**
**அவம்ஆ னதுஇலா அதன்பேதம் அறிவார் அறையும் படிகேண்மோ.**

பிறவிப் பிணி நாசமடைய அநேக விரதங்களினால் உடலைச் சுருங்கச் செய்தல் தவம் என்பர். வேதாந்த நூற்களையும், சத ருத்திரீயம் எனப்பட்ட ருத்திரத்தையும், பிறவியைக் கடத்துதற்கு ஏதுவான பிரணவம், சிவம், ஐந்தெழுத்து ஆகிய மந்திரங்களையும் பலமுறை சொல்லுதல் அத்தியயனமாம். சிறந்த, மேன்மையான கெடுதல் இல்லாத அந்தச் செபத்தில் உள்ள வேறுபாட்டை உணர்ந்தார் சொல்லுகின்ற வண்ணம் யான் கூற நீங்கள் கேட்பீர்களாக.

**15.** **வாசிகம் உபாஞ்சு மானதம் என்றும்**
**அதில்ஓர்ஒவ் ஒன்றினுக்கு ஒன்று**
**தேசுஉடைத்து என்று செப்பினர் பிறர்க்குத்**
**தெரியவே செபித்திடும் செபம்தான்**
**வாசிகம் உபாஞ்சு வாயிதழ் அடித்தல்**
**மாத்திரம் மானதம் அடங்கி**
**ஆசுஅறச் சிந்தை செய்தல்ஒன் றினுக்குஒன்று**
**ஆயிரம் அடங்குநல் லனவாம்.**

வாக்கால் சொல்லப்படுவது என்றும், உபாஞ்சு என்றும், மனத்தாற் செபித்தல் என்றும் மூன்று விதமான பேதமுடன் சொல்லுவர். அம்மூன்றில் ஒன்றினுக்கொன்று உயர்வுடையது என்று சொன்னார்கள். பக்கத்தில் உள்ளவர்களுக் கேட்கும்படியாக உச்சரித்தல் வாசிகம் என்று சொல்லப்படும். உதடுகள்ஒன்றுபடச் செபித்தல் உபாஞ்சு எனப்படும். குற்றமின்றி மனத்துள் செபித்தல் மானத செபம் என்று சொல்லப்படும். வாசிகத்தை விட உபாஞ்சு உயர்ந்தது. அதனைக் காட்டிலும் மானதம் உயர்வுடையது. இப்படி ஒன்றினுக்கு ஒன்று ஆயிரம் மடங்கு சிறப்புடையது.

**16.** **கூடின கொண்டுஅலம் பாவம் கூடல்சந்**
**தோடம்என்று அறிஞரால் சொல்லப் பட்டதால்**
**ஆடுஉறு தூய்மைதான் அகம்பு றம்புஉள**
**தோடமது இரண்டையும் துடைத்தல் என்பரால்**

விதிவசத்தால் கிடைத்தது கொண்டு போதும் என்னும் திருப்தியோடிருத்தல் மகிழ்ச்சி என்று புத்திமான்களால் சொல்லப்பட்டுள்ளது. மனம், உடல் ஆகிய இரண்டிலும் உள்ள வியர்வை துர்நாற்றம் முதலியவைகளையும் போக்குதல் பெருமை பெற்ற தூய்மை என்று சொல்லுவர்.

**17.** **தோயமும் மண்ணுமாக் கொண்டு சுத்தமாக்**
**காயம்மே வியமலம் கழுவப் பட்டதாம்**
**வாய்மைய முதலதுஆம் மனத்தி னால்செயும்**
**தூய்மையை உள்ளநல் தூய்மை என்பரால்.**

உடலில் பொருந்திய மலத்தை நீரும் மண்ணும் கொண்டு தூய்மை செய்தல் உடல் தூய்மை. சத்தியம் முதலியன கொண்டு மனத்தால் செய்யும் தூய்மை நல்ல மனத்தூய்மை என்று சொல்லுவர்.

**18.** **கந்தம்நல் மலர்கொடு காய பூசனை**
**வந்தனை செயல்புகழ் வாக்கின் பூசனை**
**பந்தனை அறநம் பத்தி யால்செயும்**
**சிந்தனை நியதமும் சிவன்தன் பூசையே.**

மணம் பொருந்திய நல்ல மலர்களைக் கொண்டு காயத்தால் செய்யப்படும் காய பூசையும், தோத்திரம், வழிபாடு ஆகிய இவற்றால் புகழ்ந்து செய்யும் வாக்கின் பூசையும், பத்தியினாலே மனமானது தினமும் சிந்தித்துக் கொண்டு இருக்கும் மாநத பூசையும் ஆகிய இவைகள் சினுக்குரிய பூசையே.

**19.** **புராதனர்ஓ தியஇயம நியமங்கள் புகன்றனமேல்**
**பிராணனதின் யாமமது பேசுபிரா ணாயாமம்**
**விராவிஉடல் உறும்வாயு விளம்புவர்கள் பிராணன்என**
**நிரோதனமே செயல்அதனை நித்தலும்மா யாமந்தான்.**

முதியோர்கள் கூறிய இயமம் ஐந்து விதமெனவும், நியமம் ஐந்து விதம் எனவும் முன்னர்ச் சொன்னோம். இனிப் பிராணனின் முடிவு சொல்லப்படும் பிராணாயாமமாம். உடல் முழுவதும் பரவியுள்ள வாயுவைச் சதா காலமும் அடக்குதல் செய்வது ஆயாமம் (நீட்சி) என்று சொல்லப்படும்.

**20.** **மந்தம் உத்தமம் மத்திமம் என்றும்இங்கு**
**அந்த நல்உயிர் யாமம் அறிபவர்**
**சந்தம் உற்றச கற்பஅ கற்பம்ஆய்ச்**
**சிந்தை உற்றுஇரண்டு ஆகவும் செப்பினார்**

மந்தப் பிராணாயாமம் என்றும், உத்தமப் பிராணாயாமம் என்றும், மத்திமப் பிராணாயாமம் என்றும் இங்கு சிறப்புடைய பிராணாயாமத்தை உணர்ந்தவர் ஒன்றாகக் கூறினர். சதா காலமும் பொருந்திய சகற்ப பிராணாயாமம் என்றும் அகற்பப் பிராணாயாமம் என்றும் சித்தத்தினால் அறிந்து இரண்டாகச் சொன்னார்கள்.

**21. மந்தம் ஆறுஇரு மாத்திரை மத்திமோத் தமங்கள்**
**அந்த எல்இரட்டு இரண்டுடன் மாத்திரை அடக்கல்**
**கந்தம் வேர்ப்புஉறும் கம்பனம் கிளம்புகை இவைஆ**
**னந்த மாச்செயும் இன்றினுக்கு ஒன்றுநன் மையதாம்.**

பனிரெண்டு மாத்திரை அளவு உச்சரித்து அடக்குதல் மந்தப் பிராணாயாமம் என்று சொல்லப்படும். அந்தப் பனிரெண்டு மாத்திரை அளவிலிருந்து இரட்டிப்பாகிய இருபத்து நான்கு மாத்திரை அளவு உச்சரித்து அடக்குதல் மத்திமப் பிராணாயாமம் என்று சொல்லப்படும். முப்பத்தியாறு மாத்திரை அளவு உச்சரித்து அடக்குதல் உத்தமப் பிராணாயாமம் எனப்படும். மந்தப் பிராணாயாமத்தினால் கழுத்தடி வியர்வை உண்டாகும். அதனால் உடல் நடுக்கம் உண்டாகும். உத்தமப் பிராணாயாமத்தின் மூலம் மேல் எழும்புதல் உண்டாகும். இவை ஆனந்தம் உண்டாக்கும். மேலும் ஒன்றுக்கொன்று நன்மை உடையனவாம்.

**22. அகற்பம் அல்லதுஆம் மந்திரம் அகத்திலே**
**ஆனஆ யாமம்தான்**
**சகற்ப மாம்வியா கிருதியோங் காரம்சா**
**சித்திரி தனைமுக்கால்**
**வகிக்கும் எல்லைஆம் இடம்வலம் வழங்கிய**
**வாயுவை வலமாக**
**முகக்க என்றுஅறிந் தவர்யோ கத்திலே**
**முயன்றிட மொழிந்தாரால்.**

பிரணவம் முதலிய மந்திர செபம் அற்றதாகிய அகல்ப பிராணாயாமம் மந்திரத்தினால் மனத்தின்கண் உண்டான முடிவே சகற்பப் பிராணாயாமம் என்று சொல்லப்படும். மாறுபாட்டோடும், பிரணவத்தினோடும் சாவித்திரி மந்திரத்தை மூன்று முறை செபிக்கும் எல்லையாகக் கூறியிருக்கின்ற இடம் வலமாக வழங்குகின்ற பிராணனைக் கட்டுக என்று பிராணாயாமத்தை உணர்ந்தவர்கள் யோகத்தின் மூலம் பயிற்சி செய்யும்படி கூறினார்கள்.

23. **ஏசது உறாமல் இடத்தில்வ ழங்குகை**
**மாசது உறாமல்வ லத்தினில் வாங்குகை**
**ஆசுஅது அறத்திதி யாகஅ டக்குகை**
**ரேசக பூரக கும்பகம் என்றார்.**

எவ்விதக் குற்றமும் இன்றி இடது நாசியில் பிராணனை விடுதல் ரேசகப் பிராணாயாமம். குற்றமின்றி வலது நாசியில் இடது நாசியில் விட்ட பிராணனனை இழுத்தல் பூரகம். குற்றம் நீங்க நிலையாக அடக்குதல் கும்பகம் என்று கூறினர்.

24. **இந்தியம் மீட்சி தானே இசைந்திடும் பிரத்யா காரம்**
**சுந்தரம் இதயம் நெற்றி கபாலம்நா பிகளில் ஒன்றில்**
**சந்ததம் சிந்தை வைக்கத் தாரணை தரித்தது ஏக**
**சிந்தனை ஒழுங்குஒன் றோடே சேர்ந்தது தியானம் ஆமே.**

இந்திரியங்களை உலக இன்பங்களில் செல்ல ஒட்டாது திருப்புதலே பிரத்யாகாரம் என்று சொல்லப்படும். கழுத்திலாவது, இதயத்திலாவது, நெற்றியிலாவது தலை உச்சியிலாவது நாபியிலாவது ஓர் இலட்சியத்தில் சதா காலமும் சிந்தை வைத்துப் பொருந்தி இருத்தல் தாரணை (வாயுவைக் கட்டுதல்) என்று சொல்லப்படும். முறையாக ஒரே பொருளைச் சிந்தித்து ஒன்றியிருத்தல் தியானம் என்று சொல்லப்படும்.

25. **ஓதும்ஆ லம்பனம் ஒன்றும் இன்றியே**
**போதமும் போதகப் பொருளும் என்றுஉணர்**
**பேதமது அன்றியே இருந்த பெற்றிநல்**
**சாதனம் ஆகி சமாதி என்பரால்**

சொல்லப்படும் பற்றுக் கோடும் இல்லாது ஞானமும் ஞானத்திற்கு உரிய பொருளும் என்று அறிகின்ற வேறுபாடு இன்றி இருக்கும் தன்மையை சிறப்பான சாதனம் ஆகிய சமாதி என்று சொல்லுவார்கள்.

26. **தாரணை ஆயா மத்தில் தகுதிபன் னிரும டங்குஆம்**
**தாரணை தன்னில் தியானம் தானும்அப் படியே நன்றாம்**
**தாரணி தன்னில் ஞான சாதனம் ஆம்ச மாதி**
**ஏர்அணி தியானம் தன்னில் ஏற்றம்இப் பரிசே என்பர்.**

தாரணையானது ஆயாமத்தைக் காட்டிலும் பன்னிரு பங்கு உயர்வுடையது. தாரணையைக் காட்டிலும் தியானமும் அப்படியே பன்னிரு பங்கு உயர்வு உடையது. பூமியில் ஞானத்திற்குச் சாதனமான சமாதி உயர்வான தியானத்தினைப் பார்க்கிலும் இவ்வாறே பன்னிரு பங்கு உயர்வுடையது என்று சொல்லுவார்கள்.

**27. விவத்தி தம்பெற்று இருக்கைவி ரைந்துஎழும்**
**கவற்றி தீர்வுஉறக் கற்பித்த ஆதனம்**
**அவற்றின் எல்லைஅ றைவுஅரிது அந்தநல்**
**சுவத்தி கம்பத்மம் யாதினும் துய்யவாம்.**

விவஸ்தையாகப் பொருந்தியிருந்து அதிவிரைவாய் உண்டாகின்ற சலனங்கள் தீரும்படி கற்பிக்கப் பட்டுள்ள ஆசனங்களாம். அவற்றின் அளவைச் சொல்ல முடியாது ஆகையால் அந்த ஆசனங்களில் உயாந்த சுவத்திகாசனம், பத்மாசனம் என்னும் இவை எல்லா ஆசனங்களிலும் பரிசுத்தமானதாம்.

**28. இரு துடைமேல்ஈர் அடியேனும்**
**பரம இருப்பது பதுமமது ஆகும்**
**ஒருபதம் மேலே ஒருபதம் வைக்க**
**அருவ இருப்பது மத்திமம் ஆகும்.**

இரண்டு துடைகள் மீதும் இரண்டு பாதங்களையும் ஏறவைத்துப் பொருந்தியிருத்தல் பத்மாசனம் என்று சொல்லப்படும். ஒரு பாதத்தின்மீது மற்றொரு பாதத்தினை வைத்துப் பொருந்தி இருப்பது அரை ஆசனம் என்று சொல்லப்படும்.

**29. தடித்த ஊருசா னுக்களின் சந்துஉற**
**மடித்த அந்தரத்து உள்ளேம றைவைத்து**
**அடித்த லங்கள்செவ் வேசெல ஆங்குஉறத்**
**தொடுத்து இருத்தல்சு வத்திகம் ஆவதே.**

பருமனான தொடை, முழங்கால்களினது இடம் இருக்கும்படியாக மடித்து அந்தரத்திலுள்ள பாதங்கள் நன்றாய் மறைய வைத்து அவ்விடம் அமர்ந்து இருத்தல் சுவத்திகாசனம் என்று சொல்லப்படும்.

**30.** **நீரினால் செழும்பது ஆனஅவ் விடங்கள்**
**நெருப்பினால் வெந்தஅவ் விடங்கள்**
**ஊருசெந் துக்கள் துற்சனர் துராலர்**
**உதிர்ந்திடு சருகுபுற்று இடங்கள்**
**கோரமாம் பயங்கள் உள்இடம் இடிந்த**
**கோயில்நால் சந்திகள் மயானம்**
**ஆரவா ரங்கள் உள்இடம் அசுத்தம்**
**அலக்கண்ஆம் மனத்தினுக்கு அதனால்.**

நீரினாலே செழுமையாக உள்ள அவ்விடத்திலும், நெருப்பினால் வெந்த அவ்விடத்திலும் சதா ஊர்ந்து திரியும் பாம்பு, தேள் முதலிய உயிர்கள் உள்ள இடத்திலும் துர்க்குணம் கொண்டோர் வசிக்கும் இடத்திலும், துரும்புகள் குவிந்துள்ள இடத்திலும் உதிர்ந்து கிடக்கின்ற சருகுகள் உள்ள இடத்திலும், பாம்புப் புற்றுக்கள் இருக்கின்ற இடத்திலும், கோர வடிவுள்ள புலி, கரடி, சிங்கம் முதலிய அச்சம் தரும் விலங்குகள் உள்ள இடத்திலும் கோயில்கள் இடிந்து பாழ்பட்டுக் கிடக்கும் இடத்திலும் நான்கு பாதைகள் சேரும் இடத்திலும், மயனத்திலும், ஆரவாரம் நிறைந்த இடத்திலும் யோகம் செய்தால் அவவ்வாறு செய்வது செய்வோர் மனத்திற்குத் துன்பத்தை உண்டாக்கும்.

**31.** **வருத்தம்ஆய் உடலம் வாதையைப் பற்றும்**
**மனமது நடுநடுங் கிட்டுப்**
**பொருப்பி–னில் குகைகள் புண்ணிய தேசம்**
**கோயில்கள் நதிகளின் கரைகள்**
**இருப்புஅறும் மனைதான் ஊர்வது கடிப்பது**
**இன்றிஏ காந்தமாய் உள்ள**
**ஒருத்தரும் அறியா இடத்திலே என்னை**
**உன்னுவான் மனன்ஒருப் படுவான்.**

உடல் வருத்தத்தோடு துன்பம் அடைவதும், மனமானது நடுநடுங்கிப் பயம் அடைதலும் சமாதிக்குத் தக்கதன்று. மலைகளிலும், குகைகளிலும், புண்ணிய பூமிகளிலும், ஆலயங்களிலும், நதிக்கரைகளிலும், ஒருவரும் குடியிருக்காத தனி வீட்டிலும், கரையான் எறும்புகள் இல்லாத இடங்களிலும் பன்றி, நாய், நரி முதலிய கடிக்கும் விலங்குகள் இல்லாத இடத்திலும், ஏகாந்தமாய் உள்ள இடத்திலும், ஒருவரும் பார்க்க இயலாத இடத்திலும் பரமேசுவரனாகிய என்னை மனத்தால் ஒருமுகப் பட்டுத் தியானிப்பவன் சமாதியை அடைவான்.

**32.** **உன்னஅரும் யோகம்ஒருப் படுவன் முன்னரே**
**என்அருள் பெற்றயோ கீசர் தம்மையும்**
**சென்னியால் விநாயகன் தனையும் தேசிகன்**
**தன்னையும் என்னையும் வணங்கிச் சாருவான்.**

மனத்தாலும் கருதமுடியாத யோகத்தில் மனம் ஒருப்படுபவன் முதலில் என்னருள் பெற்றுள்ள யோகீசர்களையும், விநாயகனையும், தனது குருவையும் பரமேசுவரனாகிய என்னையும் தலை மீது இரு கைகளையும் கூப்பி வணங்கி வழிபடத் தொடங்குவான்.

**33.** **தனியில் இருந்து பயம்இன்றிச் சாந்தன் ஆகித் தனக்குஇசையும்**
**முனிவர் மொழியும் ஆதனங்கள் மூன்றில் ஒன்றி லேமூக்கின்**
**நுனியைச் சிறிதே கண்விழித்து நோக்கி யாதும் நோக்காதே**
**இனிய தன் பாலேஇருந்த என்னைப் பாவிப் பதுயோகம்.**

தனியே இருந்து பயம் இல்லாதவனாய், மனத்தில் சாந்தி உடையவனாய், முனிவர்களால் சொல்லப்பட்ட பத்மாசனம், சுவத்திகாசனம், அர்த்தாசனம் ஆகிய மூன்றில் தனக்குப் பொருந்திய ஒர் ஆசனத்தில் அமர்ந்து, சிறிது கண்களைத் திறந்து, மூக்கின் நுனியை நோக்கி மற்றவற்றை நோக்காது ஆனந்த வடிவுடைய என்னிடத்து இருக்கும் என்னைத் தியானிப்பது யோகம் என்று சொல்லப்படும்.

**34.** **பங்கயம் தலைக்கு மேலே பன்னிரு விரலில் கற்பித்து**
**அங்குஅதற்கு அறம்என் மூலம் அறிவுஅது நாளம் ஆகும்**
**தங்கிடும் செல்வம் எட்டுத் தளம்நிறம் தவளம் ஆகும்**
**இங்குதன் வலிவை ராக்யம் எனப்படும் தாதுஇ தன்கண்.**

தலைக்கு மேலே பன்னிரண்டு அங்குல அளவில் தாமரைப் பூவைக் கற்பனை செய்க. அதற்கு அறமே கிழங்கு ஆகும். ஞானமே அதனுடைய கொடியாகும். புண்ணிய வசத்தால் கிடைத்த செல்வம் எட்டுத் தளங்கள் கொண்ட இதழ்களாகும். அதன் வண்ணம் வெண்மையாகும். வலிமையான வைராக்யம் அதனுடைய தாதுவாகும்.

**35.** **சகலசத் தியும்உ டைத்தாய்த் தமனிய மயமாய்த் தாரம்**
**புகலும்எப் பொருளாய் என்றும் பொன்றுறாது ஆகி எங்கும்**
**திகழ் ஒளித் திரளாய் உள்ள தெய்வமாய்த் தெரிக்கொ ணாதாய்**
**நிகழுதற் பரத்தின் நேரே நித்தலும் நெஞ்சை வைப்பான்.**

சகல சத்திகளையும் உடையதாய், பொன்னிறமாய்ப் பிரணவத்தில் சொல்லும் அனைத்துப் பொருளாகவும் என்றும் அழியாததாய்த் திகழும் ஒளிக் கூட்டத்தின்

வடிவாயுள்ள செல்வமாய், அறிவிலிகளால் அறிய முடியாததாய் விளங்கும் அந்தப் பிரமத்தினிடத்தில் நாள்தோறும் நேரே மனம்வைத்துச் சிந்திப்பான்.

**36.** **மிக்கபரஞ் சுடர்ஆன விமலனையும் விளம்புற்ற**
**அக்கமலத் தேதனையும் அயல்ஆகா வகைநினைவான்**
**அக்கரம்ஆம் பரமாகா சத்துவனைத் தான்எங்கும்**
**ஒக்கநினைந் தேபின்னை ஒன்றும்நினை யாதுஒழிவான்.**

முன் கூறிய அந்தத் தாமரை மலரில் மிக்க உயர்வுடைய, முழுமையான ஒளியுடைய பிரமத்தினையும் தன்னையும் வேறுபாடின்றி நினைப்பவன் ஆகிய அட்சர வடிவுடைய சிதாகாச வடிவனை எல்லா இடங்களிலும் நிறைந்திருக்கக் கண்டு பின் யாது ஒன்றையும் நினையாது அதிலேயே இலயித்து இருப்பான்.

**37.** **யாவரும் அறிவுஅரிது ஆய பாவனை**
**மேவுற விளம்பினேன் வேறும் இன்னம்ஓர்**
**பாவனை கேண்மின்முன் பன்னு பங்கயப்**
**பூவினை உன்னிஅப் பூவின் உள்ளதுஆம்.**

ஒருவராலும் உணர முடியாத பாவனையை நன்கு பொருந்த உங்களுக்குக் கூறினேன். மேலும் வேறு ஒரு பாவனையை யான் கூறக் கேளுங்கள். முன் கூறிய அந்தத் தாமரை மலரில் உள்ளது.

**38.** **அன்னியம் அறஅன லோனைக் காட்டிய**
**பன்னிய புருடனாம் பஞ்ச விஞ்சகன்**
**தன்னையே சகலகர்த் தாவாத் தன்உரு**
**வன்னியின் சிகையதா மதித்து நோக்குவான்.**

வேறுபாடு நீங்க நெருப்பு வடிவாய்க் காட்டிய முன் கூறிய புருடனாகிய இருபத்தைந்தாவது தத்துவமாகிய தன்னையே அனைத்திற்கும் மூலமாகக் காட்டித் தன் வடிவத்தை நெருப்பின் சிகையாக மதித்துப் பார்ப்பான்.

**39.** **அவம்அறு புருடன்தன் அகம்உற அறநன்றுஆய்ச்**
**சிவம்அம லமதுஆகித் திகழ்தரு பரமான்மா**
**உவமைஇல் பரன்ஆம்என் உரையினில்உணரும்தத்**
**துவநிலை குலையாஅச் சுதம்என மனம்வைப்பான்.**

குற்றமற்ற இறையின் மனத்தில் பொருந்தி மிக நன்றாய்ச் சிவமானது, நின் மலமாய் விளங்குகின்ற பரமான்மாவானது உவமையில்லாத பரமேசுவரன் ஆகி என் உரையில் அறிந்துள்ள தத்துவத்தின் தன்மை கெடாத அச்சுதம் என்று மனத்தில் சிந்தித்துக் கொண்டிருப்பான்.

**40. அப்பர மான்மா உள்ளே அதனுக்கு ஆதாரம் ஆகி**
**நிற்பதாய்ப் பரமம் ஆகி நிரஞ்சனம் ஆகி உள்ள**
**ஒப்புஅரும் மகேசன் ஏக உருவனாய் உன்னி அந்தத்**
**தற்பரம் தன்னோடு ஒன்றும் தன்மையன் ஆகிச் சார்வான்.**

அந்தப் பரமான்மாவானது உள்ளே அந்த உயிருக்கு ஆதாரமாகி இருந்து உயர்வுடையதாய்க் களங்கம் இன்றி இருக்கின்ற ஒப்பில்லாத பரமேசுவரனை ஒரு வடிவுடையவனாகச் சிந்தித்து, அந்தப் பிரமத்தைத் தன்னோடு ஒன்று சேர்த்துக் கொள்ளும் தன்மையுடையவனாய் ஐக்கியமாவான்.

**41. சொன்னதத் துவங்கள் எல்லாம் சோதனை பண்ணிப் பின்னைப்**
**பின்னதத் துவம்ஒன்று, இல்லாப் பிரமம்நான் எனநி னைந்து**
**பன்னரும் ஓங்கா ரத்தால் பரமம்ஆம் பரமாய் உள்ள**
**என்னிலே தன்னை வைத்துஇங்கு என்மயம் ஆகி உள்ளான்.**

கூறிய தத்துவங்கள் யாவற்றையும் பிரித்து ஆராய்ந்து பார்த்துப் பின்னர் ஒரு பின்ன தத்துவம் இல்லாத பிரமமே நான் எனக் கருதிச் சொல்லரிய பிரணவத்தினால், மேலுக்கு எல்லாம் மேலாய் உள்ள என்னில் தன்னை ஐக்கியப் படுத்தி இங்கு என் வடிவமாய் இருப்பான்.

**42. நலங்கொள் ஞானநீர் ஆடிநல் ஆகுதி**
**துலங்க நீற்றைஉத் தூளித்து மந்திரம்**
**இலங்கும் அங்கிமு தல்நினைந்து ஈசனைப்**
**புலங்கொள் சோதியின் புஞ்சமாய் உன்னுவான்.**

நன்மை தரும் ஞானமாகிய தீர்த்தத்தில் நீராடி, நல்ல வேள்வியில் விளங்குகின்ற திருநீற்றை அக்கினி முதலான மந்திரங்களைச் சொல்லி மேனி முழுதும் உத்தூளனமாகப் பூசிப் பரமேசுவரனை அறிவிற்குப் புலனாகும் படியான ஒளிக் கூட்ட வடிவில் நினைப்பான்.

43. **ஆசிரமம் மேல்இல்அதி ஆசிரமம் ஆகத்**
**தேசுதரு மாமறையின் ஈறுகள்தெ ரிந்தே**
**பாசுபத யோகுபசு பாசம்அற நேரே**
**பேசினன்இது ஆரும்அறி யப்பெறும்அது அன்றால்.**

இதற்கு மேல் ஆசிரமம் இல்லாத அதி ஆசிரமமாய், ஒளி பொருந்திய பெரிய வேதங்களினது முடிவுகளால் அறிந்து, பாசுபத யோகத்தினால் உயிர்க்கு உள்ள பாசமெலாம் நீங்க நேரே உரைத்தேன். இது எவரும் அறியத் தக்கது அன்றாம்.

44. **பிறிதும்அறும் எனதுசா யுச்சம் பேறுஅதுஆம்**
**மறைபொருள்கேவலம் வழங்கி டார்இது**
**அறம்முயல் அந்தணர் தம்மில் அன்பரில்**
**துறவுஉறு பிரமசா ரிகட்கும் சொல்லலாம்.**

வேறுபாடுகள் நீங்கிய என்னுடைய சாயுச்சமாகிய பயன் இரகசியமான பொருளாம். கேவலம் எல்லோருக்கும் சொல்ல மாட்டார்கள். இதனை அறம் செய்ய முயலும் அந்தனர்க்கும், என் அடியவர்க்கும், துறவு நிலையிலுள்ள பிரமசாரிகட்கும் உபதேசிக்கலாம்.

45. **பரியும் அகிம்சைப் பழிதீர் பிரம**
**சரியம் தவம்தரு சந்தோடம் உண்மை**
**உரியபொ றைதூய்மை உண்டுஎன்று இருக்கை**
**அரியவி ரதத்துக்கு அங்கங்கள் ஆமால்**

விரும்பத் தக்க அகிம்சையும், பிரமசரியமும், தவமும், உண்டாகின்ற சந்தோடமும், சத்தியமும், உரியதான பொறுமையும், தூய்மையும், உண்டு என்று இருக்கின்ற தவமும் ஆகிய இவை அருமையான தவத்திற்கு அங்கங்களாம்.

46. **எண்ணிய இவற்றில்ஒன்று ஈனன் ஆனவன்**
**தண்ணியன் ஆதலால் தன்ந மூவினான்**
**புண்ணிய வினையினோர் பொருந்த என்னையே**
**கண்ணிய விதம்எஞ் சாமல் கைக்கொள்வார்.**

கருதப்பட்ட இவ்வொன்பதில் ஒன்று குறைந்தவன் தாழ்ந்தவன். ஆகவே இவ்விரதத்தை அடையாதவன் ஆகின்றான். மிகுந்த புண்ணியம் உடையவர்

பரமேசுவரனாகிய என்னை முன் சொல்லிய ஒன்பது சாதனங்களை உடைய வராய்க் கண்ணிமான தவத்தினை குறைவின்றிக் கைக் கொள்வார்கள்.

**47. ஏசுஇல் இந்தவிவ் யோகால் எனைஅடைந்து**
**ஆசை கோபம்ப யம்அற்ற ஆன்மராய்ப்**
**பாசம்அற்றுஎனைப் பாவித்த பாவத்தால்**
**ஆசுஇல் என்யம் ஆனார்அ நேகரால்.**

குற்றம் இல்லாத இந்த யோகத்தினால் என்னை அடைந்து, ஆசையும், கோபமும், பயமும் அற்றவர்களாய்ப் பந்தம் நீக்கி என்னைப் பாவித்த பாவத்தினால் குற்றமற்ற என் வடிவமாகவே அநேகர் ஆயினர்.

**48. எப்படி யார்நினைந்து அடையவர் யான்அவர்க்கு**
**அப்படி யான்நிகழ்ந் திடுவன் ஆதலால்**
**ஒப்புஅரம் ஞானமெய் யோகு உளத்துஎனைத்**
**தப்புஅரும் பூசனை செயவே தக்கதாம்.**

பரமேசுவரன் ஆகிய என்னையார் எப்படி நினைத்து அடைவார்களோ அப்படி அவ்வாறே யான் அவர்களுக்கு விளங்குவேன். ஆகையால் ஒப்பற்ற உண்மை ஞானமாகிய யோகத்தினை உடைய மனத்தில் என்னைக் குற்றம் இல்லாதவாறு பூசை செய்யலாம்.

**49. பொய்யில் பத்தி யால்துறவால் போதம் பொருந்தும் புந்தியினால்**
**செய்யும் பூசை யேபூசை செய்யும் தொழில்கள் எல்லாம்விட்டு**
**ஐயம்பண்ணி உண்டுஒன்றும் ஆசைப் படாதார் எனைஅடையும்**
**உய்யும் பரிசு மறைந்த பொருள் உங்கட்கு இரங்கி**
**உரைத்தனனால்.**

உண்மையான பத்தியினாலும் துறவினாலும், ஞானமுடைய புத்தியினாலும் செய்கின்ற பூசையே ஞான பூசையாகும். மனம், வாக்கு, உடல் ஆகியவற்றால் செய்யப்படும் எல்லாச் செயல்களையும் விட்டொழித்துக் கைகளினால் பிச்சை ஏற்றுப் புசித்து ஒன்றிலும் ஆசைப்படாதவர்களே என்னை அடைவார்கள். இந்த மறைபொருளைக் கருணையுடன் நீங்கள் வீடுபேறு அடையும்பொருட்டு உங்களுக்கு உபதேசித்தேன்.

50. **பத்தியைஎன் பால்உடையான் எவ்உயிர்க்கும் பரிவுஉடையான்**
**ஒத்தநலம் தீங்குஅடையான் ஒடுங்கியஉள் எமதுஉடையான்**
**புத்திமனம் என்பாலே பொருந்தியபா வனைஉடையான்**
**எத்தனையும் பொறைஉடையான் யாவனினும் எனக்குஇனியான்**

பரமேசுவரனாகிய என்னிடம் பத்தியை உடையவனும், அனைத்துயிர்கள் பால் பிரியம் உடையவனும், ஒத்து வரும் சுக துக்கங்களை அடையாதவனும், அடக்கத்தோடு கூடிய மனமுடையவனும், என்பால் பொருந்திய பாவனை உடையவனும், பொறுமை உடையவனும் யாவனோ அவன் எல்லாரிலும் எனக்கு இனியவன் ஆவான்.

51. **பன்னியயோகு ஒழிவுஇல்லான் பற்றுஇலான் பாவகத்துஓர்**
**இன்னலினால் ஆரம்பித் திடுவதூஉம் ஒழிவதுஇலான்**
**தன்னைவெரு வுதல்ஒன்றால் தான்வெருவல் தான்இல்லான்**
**என்னதுயான் எனஇல்லான் என்றும்எ னக்குஇனியான்.**

கூறிய யோகத்தை நிரந்தரம் பயில்பவனும். எந்தவிதப் பற்றிலாதவனும், புண்ணியமுடையவனும், ஒரு துன்பமில்லாதவனும், ஒன்றைத் தொடங்குபவனும், தொடங்கிச் செய்யாதிருப்பவனும் ஒரு பொருளால் தான் அஞ்சுவதும். தன்னால் ஒருபொருளை அஞ்ச செய்வதும் ஆகியன இல்லாதவனும் யான் எனது என்ற அகந்தை இல்லாதவனும் ஆகியோர் எப்பொழுதும் எனக்கு இனியவர்கள்.

52. **துயர்உ றாதசந் தோடம் மேவியே**
**செயல்எ லாம்உதா சீனன் ஆகியே**
**அயலர் ஆயினார் அன்பர் இன்றிவாழ்**
**இயல்பி னான்எனக்கு இனியன் ஆயினான்.**

துன்பம் இல்லாத மகிழ்ச்சியை அடைந்து எல்லாச் செயல்களிலும் உதாசீனத் தன்மை உடையவனாகி அன்பாய்த் தனக்கு அந்நியமாயுடையவர்கள் இல்லாது வாழுகின்ற தன்மையை உடையவன் யாவனோ அவன் எனக்கு இனியவன் ஆவான்.

53. **துதியில் நிந்தையில் துல்லியன் ஆய்எனில்**
**திதிஅு டைந்துசி னம்செருக்கு இன்றியே**
**மதியின் ஒன்றினும் வாஞ்சைஉ றாதுஉள**
**அதிக வான்எனக்கு என்றும்மெய் அன்பினான்.**

புகழ்ச்சியிலும், நிந்தனையிலும் சமம் உடையவனாயும், பரமேசுவரனாகிய என்னிடம் )லைபெற்றுக் கோபமும் செருக்கும் இல்லாதவனாயும், புத்தியால் ஒரு பொருளிடத்து ிருப்பம் இன்றி உள்ளனவாயும் உள்ளவன் எவனோ அந்த மேன்மை பொருந்தியவனே ானக்கு மெய்யன்பினன் ஆவான்.

**;4. வாடல்இல் முகமுது மலர்ச்சியும் மவுனம்நல்
பீடுஉறு வித்தகம் பெற்ற தோடுஅலம்
கூடுதல் இனியவை கூறலின் யாவரும்
நாடுஅரும் நிலைஉடை யாவர்க்கு நல்லன்நான்.**

முகமானது வாட்டமின்றி மகிழ்ச்சியுடையவன் ஆகியும், பெருமை பெற்ற நல்ல ஞானம் உடையவன் ஆகியும், கிடைத்ததைக் கொண்டு திருப்தியோடு இருப்பவன் ஆகியும், இன்சொல் பேசுபவன் ஆகியும், எப்படிப் பட்டவரும் எண்ணரிய தன்மை உடையவருமாய் உள்ளவர் எவரோ அவருக்கு நான் மிக நல்லவன் ஆவேன்.

**55. எத்தொழில்க ளும்செயினும் என்அருளி னால்என்
பத்தர்பர மப்பதம்அ டைந்திடுவ ராலே
தத்துவமும் வைத்துஎனில் எனைச்சரணம் ஆக
நித்தமும்நி ராசையைஅ டைந்துநினை கிற்பார்.**

என்னுடைய பத்தர்கள் பரமேசுவரனாகிய என்னிடத்தில் நிலையான புத்தியினை வைத்து என்னைச் சரணம் என அடைந்து, நாள்தோறும் ஒன்றிலும் ஆசை அற்றவராய் இருந்து என்னைத் தியானிப்பவர்கள் எத்தகைய செயல்களைச் செய்தாராயினும் என் அருளினால் வீடுபேறு அடைவார்கள்.

**56. அடங்கு மனன்ஆய்ப் பயன்ஒன்றில் ஆசைப் படாதான் அளவுஅற்ற
விடம்கொள் வினைகள் செய்தாலும் வீடே எய்தும் ஆதலினால்
உடம்பு காணா நல்யோகி உண்டாம் வினையால் ஒருகாலும்
இடும்பை அடையான் ஆசைப்பாடு இல்லான் எனையே அடைந்திடுமால்.**

ஒடுங்கிய மனமுடையவனாய்ச் செய்த செயல்களின் பயன்களைச் செய்திட்டாலும் வீட்டுலகையே அடைவான். ஆதலினால் உடலின் மேல் விருப்பமில்லாத யோகியானவன் உண்டான பாவ புண்ணிய வினைகளால் ஒரு பொழுதும் துன்பத்தை அடையான். ஆசையற்றவனாய் என்னையே அடைவான்.

**57.** **துற்றுவரு தொந்துவம யக்குஅவைது டைத்துப்
பெற்றதொடு அமைந்துஎன்அருள் பேறுஉறநி னைந்தே
உற்றகரு மங்கள்வினை என்னஉரை செய்யார்
கற்றவர்கள் வீடுஅதுஎன வேகருது கின்றார்.**

ஒன்றோடொன்று தொடர்புற்று வருகின்ற சுக துக்கம், பாவ புண்ணியம் பிறப்பு, இறப்புஎன இரண்டு இரண்டாக வரும் மயக்கங்களைத் துடைத்து, அதோடு கிடைப்பதைப் பெற்றுத் திருப்தி அடைபவனாய் என்னுடைய அருளாகிய பயனை நினைந்து அதை வணங்கிச் செய்யப்பட்ட செயல்களை வினை என்று கற்றவர்கள் சொல்ல மாட்டார்கள்.

**58.** **என்னை யேநினைந்து எனைப்பணிந்து எனைஅருச் சித்துஎன்
தன்னை யேஅறிந்து அவன்எனை அன்றியே சாரான்
பின்னி யாதுஅப் பெருந்தகை இருந்துஇடம் தனில்என்
சென்னி யால்சுமந்து அவர்க்குவேண் டுவதுசெய் குவனால்**

மனத்தால் என்னைத் தியானித்து, உடலால் எனை வணங்கி, வாக்கால் எனக்கு அருச்சனை செய்து என் இறைவடிவை உணர்ந்தவன் பரமேசுவரனாகிய எனையன்றி வேறு தெய்வங்களைச் சேரான். பின் அம்மேன்மை பொருந்திய மகானிருக்கும் இடத்திலேயே அந்த ஞானிக்கு வேண்டுவன அனைத்தையும் என் தலையில் தாங்கிக் கொண்டு போய்ச் செய்து கொடுப்பேன்.

**59.** **என்ப தத்தைவிட்டு இதரதே வதைகளைக் காமித்து
இன்பம் வேண்டுனர் தாமும்இங்கு இதனைஎய் துவரால்
அன்பி னால்அருள் மூர்த்திவேண் டுனர்களும் அவர்பால்
பின்பு வந்துஎனை அறிந்துநல் முத்தியே பெறுவார்.**

என்னுடைய சாயுச்ச பதவியை விட்டு, இதர தேவதைகளை விரும்பி வழிபாடு செய்து இன்பம் வேண்டுகின்றவர்களும், சுகத்தை வேண்டுகின்றவர்களும் இவ்விடத்து இந்தச் சுகத்தை அடைவர்கள். பத்தியால் அத் தேவதைகளிடம் இருந்து அருளை விரும்பியவர்கள் அதனை அவர்பால் இருந்து அடையாவிடின் பின் என்னைப் பணிந்து, என் வடிவத்தை உணர்ந்து உயர்வான வீடு பேற்றையே அடைவார்கள்.

**60.** **சாமவர் எந்தக் கடவுள ரும்சாவு இல்லாதுஎன்
தாமமது ஆம்என்று என்னை ஒழிந்தார் தமைவிட்டுஅன்**

**பாம்மகவு ஆதிச் சுற்றமும் விட்டுஎன் என்பால்அன்பு**
**ஆய்மர ணாந்தத்து அளவும் இலிங்கத்து அருச்சிப்பான்.**

எல்லாத் தெய்வங்களும் காலம் செல்லச் செல்ல அழிவார்கள். என்னுடைய பழமையான தானமானது அழிவில்லாதது ஆகும் என உணர்ந்து பரமனாகிய எனக்கு வேறாயுள்ள அந்நிய தேவதைகளை விட்டு, அன்பான பிள்ளை முதலான சுற்றத்தையும் விட்டு, என்பால், பத்தியோடு இலிங்கத்தில் ஏற்படும் மரணமாகிய இறுதிநாள் வரையும் வழிபட்டவன் என் பதவியை அடைவான்.

**61.** **எந்தப் பதமும் காதல் இலாதே லிங்கத்தே**
**வந்திப் பவன்ஞா னாத்மகம் ஆகிம யலற்றோன்**
**சிந்தைக்கு உளதுஆய் எங்கும் தான்ஆம் சிவலிங்கம்**
**அந்தச் செனனம் தனிலே அறிவால் அடைகின்றான்.**

எப்படிப்பட்ட உயர்ந்த பதவியினையும் விரும்பாது என் இலிங்கத்தை மனோ வாக்குக் காயத்தால் வழிபாடு செய்பவன் ஞான வடிவாய் மயக்கம் நீங்கியவன் ஆவான். அவனது சிந்தைக்குள் உள்ளதாய் எங்கும் தன்வடிவான சிவலிங்கத்தை அந்தப் பிறவியிலேயே ஞானத்தினால் அடைகின்றான்.

**62.** **பங்கம்இல் பத்தி யோகுமற்று எவரும்**
**பாவனை யால்இலிங் கத்தே**
**இங்குஎனை இறைஞ்சி இன்பமெய்ஞ் ஞானம்**
**எங்கும்ஆம் இலிங்கம் எய்துவரால்**
**அங்கியில் புனலில் அம்பரம் தன்னில்**
**அருக்கனில் இனிலன் இந்துவினில்**
**இங்குஇவை இலிங்கம் ஆரணஆ தியிலே**
**எனைநினைந்து இறைஞ்சிடப் படுவான்.**

குற்றமற்ற பத்தியினோடு யாவரும் பாவனையால் இங்கு பரமசிவனாகிய என்னை இலிங்க வடிவில் வழிபாடு செய்தால் ஆனந்தத்தையும் மெய்ஞ்ஞானத்தினையும் அடைவார்கள். எங்கும் நிறைந்துள்ள இலிங்கமாகிய என்னைத் தீயிலும், வானிலும், சூரியனிலும், காற்றினிலும், சந்திரனிலும், வேதம் முதலியவற்றிலே சொல்லியிருத்தலின் இவைகளை இலிங்கம் என நினைத்து பாவனையினால் வணங்கிடுவான்.

**63.** **ஈது எலாம்வெறும் லிங்கம யமதாம்**
**ஈது எலாம்லிங் கத்துஉள் இருப்பதாம்**
**ஆத லால் அந்த லிங்கம்எங் கேயங்கே**
**காத லால்தொழ வேகடன் ஆகுமால்.**

இப்பொழுது கூறிய யாவும் கேவலம் இலிங்க வடிவமாகும். இந்த உலகம் யாவும் எனது லிங்கத்தினுள்ளே இருப்பதாகும். ஆகையால் அந்த லிங்கம் எங்கே காணப் படுகின்றதோ அங்கு அன்போடு வணங்குவதே கடமையாகும்.

**64.** **கருத்துஇலா மூடர் காட்டம் ஆதிகளில்**
**காண்பவர்கற் றவர்கள்ஆ காயத்து**
**அருக்கனில் புனலில் காண்பர் ஆகுதியில்**
**அருச்சனை செய்யும் அவ்வந்தணர்அவ்**
**எரிக்கணே காண்பர் எங்கும்ஆய் நின்ற**
**எனதுலிங் கத்தினை நேரே**
**ஒருக்கிய பரம யோகிகள் என்றும்**
**ஒழிவுஅறக் காண்பர்தம் உளத்தே**

எங்கும் நிறைந்துள்ள என் இலிங்கத்தினைக் கருத்து அறியா மூடர்கள் மரம் முதலியவற்றில் பார்ப்பார்கள். கற்றவர்கள் வானிலும் சூரியனிடத்தும் நீரிலும் காண்பார்கள். வேள்வியில் அருச்சனை செய்யும் அந்தணர்கள் அந்த வேள்வித் தீயின்கண்ணே காண்பார்கள். மனத்தை அடக்கிய மேலான யோகிகள் எப்பொழுதும் தம் இதயத்திலே நீக்கமறக் காண்பார்கள்.

**65.** **நீங்காத காதலினால் நின்மலபோ தம்பயக்கும்**
**ஓங்காரம் ஆதலின்நல் உருத்திரியம் தான்ஆதல்**
**பாங்காக அத்தியயன வான்ஆகிப் பரித்தஉடல்**
**போங்காலத்து அளவுநிரந் தரயோகம் புரிந்திடுவான்.**

மாறாத பக்தியினால் குற்றமில்லாத ஞானத்தைக் கொடுக்கின்ற பிரணவம் ஆனபடியால் அது சிறப்பான ஏகாதச ருத்திரியம் ஆதல் உயர்வாகிய பயிற்சியை உடையவனாய், தாங்கப் பட்ட உடல் உயிர் போகம் காலம் வரை இடையீடின்றி யோகம் புரிவான்.

**66.** **காமரம் எங்கும் காமர் அகன்றார் காசிக்கே**
**யாம்மர ணாந்தத்து அளவும் இருப்பார் அங்குஆவி**
**போம்அளவு உற்றார் போய்வர உற்றார் புரைஅற்றோர்**
**காமரை வென்றார் தாமரை வென்றார் கழல்கண்டே.**

எவ்விடங்களிலும் சோலைகள் விரிவாயுள்ள அழகு பொருந்திய காசிப் பதியில் உண்டாகும் மரணம் வருமளவும் அக்காசியிலேயே வசிப்பவர்களும், அங்கு போய்த் திரும்பியவர்களும் குற்றமற்றவராய் இருந்து, தாமரை மலரை வென்ற பரமசிவனது திருவடியைக் கண்டு மன்மதனை வென்றார்கள்.

**67.** **பொல்லா தவரும் அங்குஆவி**
**போகில் என்னை விடப்போகார்**
**நல்லார் என்னை அடைவர்என**
**நவில வேண்டுவதும்உண்டோ**
**எல்லா உயிர்க்கும் வீடுஅளிப்பன்**
**என்றால் வினையால் இரங்காத**
**அல்லா வகைகூ டினும்உயிர்விட்டு**
**அகல்வான் அல்லன் அறிவுடையான்.**

பாவிகளின் உயிர் அங்கு நீங்கினாலும் அவர்கள் என்னை விட்டுப் போகார். என்னையே அடைவார்கள். அப்படியாயின் புண்ணியம் செய்தோர் என்னை அடைவர் என்பதையும் சொல்ல வேண்டுமோ. அனைத்து உயிர்க்கும் வீடுபேறு அளிப்பேன் என்றால் கருமத்தினால் இரக்கமின்றிச் செய்யக் கூடாத துன்பத்தை உயிர்களுக்குச் செய்தான் ஆயினும் ஞானி உயிரை விட்டு நீங்குபவனல்லன். (உயிர் போனபின் வேறு உடல் அடையான்)

**68.** **அரிய மறையில் அரியமறை**
**ஆகும் பொருள்ஈது அறிஞர்களால்**
**தெரிய நினைந்த படிஎவர்க்கும்**
**செப்பப் படாது செய்தவத்தால்**
**உரிய விரதன் ஆய்அறம் அற்று**
**ஒடுங்கும் உள்ளத் தொடுபிரம**
**சரியம் உடைய பத்தனுக்கு**
**நேரே சாற்றத் தகுவதாம்.**

இது பொருள் என அறிய இயலாத வேதங்களில் அரிய மறைப் பொருளாய் மறைந்து இருப்பதாம். அறிஞர்கள் நினைத்தபடி எவர்க்கும் சொல்லக் கூடாத பூர்வ புண்ணியத்தால் உரிய விரதங்கள் பலவற்றைக் கடைப்பிடிப்பவனாய், தர்மம் உடையவனாய், ஒடுங்கிய உள்ளமுடைய பிரமசாரியாய் உள்ள பக்தனுக்கு நேரே உரைக்கத் தக்கதாம்.

**69.** **இவணமே தனது யோகம் இயம்பித்தன் இடத்து இருந்த**
**உவணகே தனனை நோக்கி உத்தமர்க்கு உரைத்த யோகம்**
**இவண்உரை செய்யத் தக்கது இலங்கிய சாந்தி நெஞ்சில்**
**சிவணிய புதல்வர்க்கு என்றே சிவன்அருள் செய்யல் உற்றான்.**

இந்தப்படி தன் யோகத்தை உரைத்துத் தன் பக்கத்தில் அமர்ந்து இருந்த கருடக் கொடியோனான திருமாலை நோக்கி, உத்தமர்களாகிய சௌனகாதி முனிவர்கட்டு உரைத்த யோகத்தினை, விளங்கிய உப சாந்தியை மனத்தில் பொருந்தியுள்ள உங்கள் புதல்வர்களாகிய மாணாக்கர்கட்கு இந்தப்படி உரைக்கத் தக்கது எனப் பரமசிவன் அருள் செய்யலுற்றான்.

**70.** **முனிவரே உங்கட்கு எல்லாம் மொழிந்திடப் பட்ட ஞானம்**
**புனிதராய்ப் புதல்வர்க்கு ஆகப் பூசுரர் ஆனோர் கேட்ப**
**இனியநும் வாயி னாலே இப்படி இறப்பும் மீண்டு**
**செனியமும் ஒழிய நீரும் செப்பும் என்று அருளிச் செய்தான்.**

சௌனகாதி முனிவர்களே. எங்களுக்கு உபதேசிக்கப் பட்ட பிரம ஞானத்தைப் பரிசுத்தமான அந்தணர்களாய் மாணாக்கரான புதல்வர்கட்கு உரைக்கும் பொருட்டு உம் சாக்கினாலே யாம் இப்படி உரைத்த பிரகாரம் இறப்பும் மறுபடி வரும் பிறப்பும் நீங்க நீங்களும் உபதேசியுங்கள் என்று அருளிச் செய்தான்.

**71.** **இந்த நாரணன் ஈசன் ஆகிய என்னில் வேறுஅலன் என்றுதம்**
**சிந்தை யால்நினை வார்க ளுக்குஉரை செய்த யோகுஇது செப்பலாம்**
**எந்த ஆர்உயிர் கட்கும் இன்உயிர் ஆகும் நாரணன் என்பதுஓர்**
**அந்தம் ஆதிஇ லாள னக்குஅருள் ஆனது ஓர்வடிவு ஆகுமால்.**

இந்த நாரணன் பரமசிவனாகிய என்னில் பேதமல்லன். தம் சிந்தையால் நினைப்பவர்கட்கு ஈசனால் சொல்லப்பட்ட இந்த யோகத்தைச் சொல்லலாகும். எத்தகைய

உயிர்கட்கும் விரும்பத் தக்க நாராயணன் என்று சொல்லுவது தோற்றமும் முடிவும் இல்லாத எனக்கு அருளுடைய ஒரு வடிவமாகும்.

**72. ஆதலில் அருச்சிமின்இவ் ஆதிஅரி யான்ஆய்க்**
**காதலொடு காண்மின்மயல் ஆகிஅயல் காண்பார்**
**தீதுதரு மாநரகு சேர்வுறுவர் தீதுஆம்**
**நீதிஉறு நீசர்இடை யானும்வெளி நில்லேன்.**

ஆகையினால் இந்த முதன்மையான திருமாலை ஈசுவரனாகிய எனது வடிவாகவே அருச்சனை செய்யுங்கள். அன்புடன் கண்ணால் பாருங்கள். அஞ்ஞானத்தால் மயக்கம் அடைந்து அன்னியமாகக் காண்பார் துன்பம் தருகின்ற பெரிய நரகத்தை அடைவர். குற்முள்ள தன்மையுடைய நீசர்களிடத்து ஈசனாகிய நானும் வெளிப்பட வல்லேன்.

**73. நான்மறை அந்தணர் நாய்வதை செய்துஅதன்**
**ஊன்மிசை கின்றவர் ஓதினர் மூடப்**
**பான்மைய ரும்அரி யைப்பழி யாதுஅும்**
**மேன்மைசெய் பத்தரை வீடுறு விப்பன்**

நான்கு வேதங்களை உணர்ந்த அந்தணர்களும் நாயைக் கொன்று அதன் மாமிசத்தை உண்பவரும், படித்தவர்களும், மூடத் தன்மை உடையவர்களும் திருமாலை நிந்திக்காது, மேன்மை செய்கின்ற அடியவரை வீட்டுலகில் சேர்ப்பேன்.

**74. மருவற்கு என்னை மனம்வைத்தோன் மாலாம் இவன்என் வடிவுஎன்றே**
**பரவிப் பணிவான் என்றேசெம் பவளத் திருவாய் மலர்ந்துஅருளி**
**அரவில் துயில்அச் சுதன்ஆகம் அழுந்தத் தழுவ அவ்விடத்தே**
**கரவுற்று அருள அதிசயமாய்க் கண்டார் மேனி கண்டிலரால்.**

பரமேசுவரனாகிய என்னை அடைதற்கு மனம் வைத்த திருமாலாம் இவனை என் வடிவம் என்று பரவிப் பணிவேன் என்று செம்பவள வாய் கொண்ட பரமசிவன் சொல்லி பாம்பிலே தூங்கும் திருமாலினது மேனியை அழுந்தத் தழுவிட ஆச்சரியத்துடன் பார்த்தவர்கள் அவர்கள்தம் திருமேனியைக் காண வில்லை.

**75. தன்ப ராபரம் ஆகிய வடிவினைத் தவிர்ந்துஒரு தவன் ஆகி**
**முன்பு தோன்றிய வடிவதுஆய் முகுந்தனும் முனிவரை முகம்நோக்கித்**
**துன்ப வேர்அற அருளினால் உமக்குஇறை சொன்னஇச் சுடர்ஞானம்**
**அன்பராய்அறம் அறிபுதல் வார்க்குஅறி வியும்என அருள்செய்தான்.**

இடைவிடாத நல்ல கரும யோகத்தினால் பரமசிவனை வழிபாடு செய்யும் என மாமுனிவராகிய வியாச பகவான் சொல்லச் சௌனகாதி முனிவர்கள் வேதப் பொருள் உபதேசித்த வியாச பகவானை அம்முக்கண் இறையே எனக் களிப்புடன் கீழே விழுந்து பணிந்து மிக்க மகிழ்வுடன் கை கூப்பி

**84. ஓதம் பற்றியோகு உணர்ந்துஉறங்கு அமலநீ உன்திரு அருளாலே**
**போதம் பெற்றவா னவர்களும் பெறல்அரும் புராணபூர ணன்செம்பொன்**
**பாதம் பற்றிஅப் பவக்கடல் கடக்கநல் பத்திபெற் றனம்ஆற்றால்**
**ஏதும்பெற்றனம் பெறாததுஒன்று இல்லைஎன்று இணையடி பணிவுற்றார்.**

கடல் பொருந்திய கடவுளே. யோகத்தை அறிந்து யோக நித்திரை செய்யும் அமலனே. உம் திருவருளினாலே ஞானம் பெற்ற தேவர்களும், அடைதற்கு அருமையான பரமசிவனது செம்பொற் பாதங்களை அடைந்து பிறவிக்கடல் தாண்டும் நல்ல பக்தியைப் பெற்றோம். அதனால் அனைத்தையும் அடைந்து விட்டோம். இனி அடைய வேண்டுவது யாதொன்றும் இல்லை எனக் கூறி இரு திருவடிகளையும் வணங்கினர்.

**85. தீதுஇல் முத்தியைச் சேரவேண் டினர்சிவன் அடிக்கே**
**ஆதில் மர்ச்சனை செய்தனர் அந்தஎல் லைஇலாப்**
**போதம் உற்றநல் கருமயோ கினைப்புதல் வர்களாய்**
**ஆத ரிப்பவர்க்கு உரைமின்என்று அருள்முனி பணித்தான்.**

குற்றமிலா வீடுபேற்றை அடைய விரும்பியர்வகள் பரமசிவன் திருவடிக்கு முதலில் அருச்சனை செய்தனர். அளவிட முடியாத அந்த நல்ல கரும யோகத்தை மாணாக்கர்களாய் இருந்து கேட்க விரும்புவோர்க்கு உரைப்பீர் என்று அருளுடைய வியாச முனிவர் கட்டளையிட்டார்.

**86. மாமறையின் மெய்ப்பொருளை மாலொடுச நற்கு**
**மாரன்முத லார்க்குஇறைவ ழங்குதிரு வார்த்தை**
**ஆமைவடி வைக்கொள்அரி அமுதமத னத்தன்**
**அருமுனிவர் கட்குஅருளும் அறிவுதனை அன்பால்**
**தாமதம்இல் சௌனகனை ஆதிமுனி வர்க்குத்**
**தந்தருளு கென்றுதலை யால்உறவ ணங்கித்**
**தோம்இல்முனி சூதனுரை செய்யஅவர் கட்குச்**
**சுருதிகள் தெ ரிந்தமுனி சொன்னபரிசு ஈதால்.**

பெரிய வேதங்களின் மெய்ப்பொருளைத் திருமாலொடு சனத்குமாரன் முதலியவர்கட்குப் பரமசிவன் உரைத்த அழகிய உரைகளை, ஆமை வடிவு எடுத்து அமுதம் கடைய மத்தாக இருந்த திருமால் அப்பொழுது முனிகளுக்கு உரைத்த ஞானத்தினை அன்பாக விரைவுடன் சௌகாதி முனிவர்களுக்கு உபதேசிப்பீராக எனத் தலையால் வணங்கிச் சூதமுனி கேட்டுக் கொள்ள அம் முனிவர்களுக்கு வேதம் உணர்ந்த வியாச பகவான் உபதேசம் செய்த தன்மை இதுவாம்.

**87. மூவர் தேடுஇறைச னற்கு மாரன்முதல் முனிவர் கட்குமொழி கீதைஇங்கு**
**யாவர் ஓதினர்இ தன்பொ ருள்துணிவர் யாவர் கேட்பவர் யாவர்தம்**
**பாவம் வேரொடுப றிந்து நல்பர மப்பதம் பெறுவர் ஆதலால்**
**மேவும் அன்பினொடு மோதம் மீளுதல்இல் வீடு வேண்டினன்வி ரும்புவான்**

நான்முகன் திருமால் சிவன் ஆகிய மும்மூர்த்திகளுக்கும் மேலான பரமசிவன் சனத்குமாரன் முதலிய முனிவர்களுக்கு உபதேசித்த ஈசுவர கீதையினை இங்கு எவர் படித்தார்களோ, எவர் இதன் பொருளை நிச்சயம் செய்தார்களோ, எவர் இதைப் பாராயணம் செய்தார்களோ, அவர்தம் பாவங்கள் அனைத்தும் வேருடன் நாசமாகிச் சிறப்பான பரமபதம் அடைவார்கள். எனவே அன்புடன் முயன்று திரும்ப இயலாத வீடுபேற்றை அடைய நினைப்பவன் இதனைப் பாராயணம் செய்ய விரும்புவான்.

## யோக அத்தியாயம் நிறைவுற்றது

## சிவப்பிரகாசம் (எ) ஈசுவர கீதைப் பொருள் நிறைவுற்றது.

